ஸ்ரீ

# தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரம்

## (மாநஸோல்லாஸத்தோடு)

தமிழ் மொழிபெயர்ப்பு (விளக்கவுரையுடன்)

**மேல்மங்கலம் த. சுந்தரராஜசர்மா**

2014

**ஸ்ரீ ஞானானந்த நிகேதன்**

தபோவனம் அஞ்சல் – 605 756

விழுப்புரம் மாவட்டம்

தமிழ்நாடு

ஸ்ரீ

# தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரம்

(மாநஸோல்லாஸத்தோடு)

த. சுந்தரராஜசர்மா

பரிசோதித்து மொழிபெயர்த்தது

வெளியிடுபவர்

ஸ்ரீ ஞானானந்த நிகேதன்

தபோவனம் அஞ்சல் – 605 756

விழுப்புரம் மாவட்டம்

தமிழ்நாடு

2014

श्रीमुखम्

# श्री शृङ्गेरी जगद्गुरु महासंस्थानम् शारदापीठम्

शृङ्गेरी - कडुर् , मैसूर् स्टेट्

## SRI SRINGERI JAGADGURU MAHASAMSTHANAM

Sharada Pitham Sringeri - Kadur

श्रीशंकरभगवत्पाद-प्रणीतानि बहूनि देवतास्तोत्राणि सन्ति । एतैः स्तोत्रैः स्तुताः देवताः प्रसन्नाः स्तोतॄणां पापान्यपोह्य अभीप्सितं प्रयच्छन्तीति आस्तिकानां प्रत्यक्षम् । तानि स्तोत्राणि भगवतः सगुणस्य कल्याणगुणगणं सम्यगवगमयन्ति, भक्तिं च दृढं वन्धुरयन्ति ।

तेषु च श्रीदक्षिणामूर्तिस्तोत्रमिदं अध्यात्ममार्गगामिनां मुमुक्षूणां परमोपकारकमास्ते । अस्मिन् स्तोत्रे औपनिषदाः प्रमेयाः संग्रहेण निरूपिताः । स्तोत्रस्यास्य मननेन वेदान्तार्थावगतिः प्रशान्तिश्च स्पष्टमेव भवतः । उपासकाः संन्यासिनः इदं स्तोत्रं श्रद्धया भक्त्या च प्रत्यहं पठन्ति । अयं च सम्प्रदायः ।

अस्य स्तोत्रस्य गरिमाणमाकलयद्भिः श्रीमच्छंकर-शिष्यचतुष्टयवरिष्ठैः उपनिषद्भाष्यवार्तिककृद्भिः श्रीमत्सुरेश्वराचार्यैः मानसोल्लासनामकं सुलभावगाहं वार्तिकं व्यधायि । अत्र प्रतिपक्षस्वरूपनिरूपण-पूर्वक खण्डनमभिधाय वेदान्तानां शुद्धबुद्धमुक्तस्वभावे प्रत्यगभिन्ने चैतन्य एव तात्पर्यमित्येतत् अतिसरलया सरण्या प्रतिपादितम् ।

श्रीसुन्दरराजनामानः श्रोत्रियाः अधीतवेदान्ताः कृतोपास्तयः द्रविडभाषया मानसोल्लासमिमं सविवरणं अनूद्य लोकानां महती-मुपकृति-मतन्वन् ।

तदेतत्रितयं सम्यक् मुद्रापितं सत् अस्मद्दृष्टिपथमुपनीतम् । त्रयमप्यवलोकितम् । ग्रन्थस्यास्य प्रकाशयितारः द्रविणलाभचिन्तामपहाय मुमुक्षुजनानां तत्त्वजिज्ञासूनां च करपल्लवानि पुस्तकमिदं अनायासमधिरोपयितुं कृतोत्साहा इत्यवगत्य नितरां मोदामहे ।

१८ - ५ - १९६५ }
ईरोडु }

इति नारायणस्मृतिः
विद्यातीर्थः

# ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த ஸ்வாமிகள்

ஸ்ரீசிருங்கேரி ஜகத்குரு மஹாஸம்ஸ்தானம் சாரதாபீடம்
சிருங்கேரி – கடூர் – மைசூர் ஸ்டேட்

ஸ்ரீ சங்கர பகவத்பாதர்களால் இயற்றப்பெற்ற தேவதா ஸ்தோத்திரங்கள் பலவுள. இந்த ஸ்தோத்திரங்களால் துதிக்கப் பெற்ற தேவதைகள் மனமுவந்து துதிப்பவர்களின் பாவங்களைப் போக்கி விருப்பத்தை விளைவிக்கின்றன என்பது ஆஸ்திகர்களின் அநுபவம். அந்த ஸ்தோத்திரங்கள் ஸகுணமான பகவானுடைய பல கல்யாண குணங்களை நன்கு அறிவிக்கின்றன; பக்தியையும் திடப்படுத்துகின்றன.

அவற்றுள் இந்த ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரம் அத்யாத்ம மார்க்கத்தில் செல்லுகின்ற முமுக்ஷுக்களுக்குப் பெரிதும் துணைபுரிவதாகும். இந்த ஸ்தோத்திரத்தில் உபநிஷத் சம்பந்தமான சித்தாந்தங்கள் சுருக்கமாக நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. இந்த ஸ்தோத்திரத்தை மனனம் செய்வதால் வேதாந்தக் கருத்துக்களின் அறிவும், அமைதியும் நிச்சயமாக ஏற்படுகின்றன. உபாஸகர்களான ஸந்யாஸிகள் இந்த ஸ்தோத்திரத்தை சிரத்தையுடனும் பக்தியுடனும் நாடோறும் படிக்கிறார்கள். இது வரன்முறை.

இந்த ஸ்தோத்திரத்தின் பெருமையையுணர்ந்தவர்களும், ஸ்ரீமத் சங்கரரின் நான்கு சிஷ்யர்களுள் தலைசிறந்தவர்களும், உபநிஷத் பாஷ்ய வார்த்திகங்களை அருளிச் செய்தவர்களுமான ஸ்ரீமத் சுரேச்வராசார்யர்களால் எளிதில் புரிந்து கொள்ளக் கூடிய 'மாநஸோல்லாஸம்' என்ற வார்த்திகம் இயற்றப் பெற்றது. இதில் பிறமதக் கொள்கைகளை நிரூபிப்பதன் மூலம் மறுப்பும் எடுத்துரைக்கப்பட்டிருப்பதுடன் ''வேதாந்தங்களுக்கு, சுத்த புத்த முக்த ஸ்வபாவமான பிரத்ய கபின்ன சைதந்யத்திலேயே கருத்து'' என்ற இப்பொருள் மிக எளிய நடையில் உணர்த்தப் பட்டிருக்கிறது.

வேத வேதாந்தங்களைக் கற்றவரும் உபாஸனாபரருமான ஸ்ரீ சுந்தர ராஜ சர்மா என்பவர் இந்த மாநஸோல்லாஸத்தை விளக்கங்களுடன் தமிழ் மொழியில் மொழிபெயர்த்துப் பேருதவி புரிந்தார்கள்.

இம்மூன்றும் சேர்ந்து நன்கு அச்சிடப்பட்டு நம் பார்வைக்குக் கொண்டு வரப்பட்டுப் பார்வையிடப் பெற்றது. இந்த நூலை வெளியிடுபவர்கள், பொருள் லாபத்தைக் கருதாமல், மோக்ஷத்தை விரும்புவோர், தத்வத்தை அறிய இச்சையுள்ளோர் ஆகியோரின் தளிர்க்கைகளில் இந்த நூல் முயற்சியின்றியே கிடைப்பதற்கான செயல்களை மேற்கொண்டிருக்கிறார்கள் என்றறிந்து பெரிதும் மகிழ்வுறுகின்றோம்.

28–05–1965
ஈரோடு (முகாம்)

நாராயணஸ்மிருதி
வித்யாதீர்த்தர்

# श्रीमुखम्

श्रीमत्परमहंस परिव्राजकाचार्यवर्य
श्रीमच्छंकर भगवत्पादप्रतिष्ठित
श्रीकाञ्ची कामकोटि पीठाधिप जगद्गुरु
श्रीमच्चन्द्रशेखरेन्द्र सरस्वती श्रीपादादेशानुसारेण

## श्रीमज्जयेन्द्रसरस्वती श्रीपादैः

क्रियते नारायण स्मृतिः

परममङ्गलनिःश्रेयसकामानां अज्ञानान्धकारावृतानां मर्त्यानां मौनेनैव चिन्मुद्रया सनकाद्यपदेशेन आत्मतत्त्वज्ञानं उपदिशन्तं गुरुपरम्परायामादिमगुरुत्वेन पूज्यमानं श्रीदक्षिणामूर्तिरूपिणमीश्वरं विशदीकृतवेदवेदान्तषण्मतप्रतिष्ठापकाचार्याः श्रीभगवत्पादाचार्याः अष्टभिः श्लोकैः ललितपदगुम्फितैः अस्तुवन् । दक्षिणामूर्त्यष्टकमिति प्रथिते अस्मिन् स्तोत्रतल्लजे श्रीभगवत्पादाः "ब्रह्म सत्यं, जगन्मिथ्या" इत्यद्वैतसिद्धान्तं करतलामलकवत् विशदयन्ति ।

अस्य स्तोत्ररत्नस्य विवरणात्मकं मानसोल्लासाख्यं वार्तिकं श्रीभगवत्पादशिष्य-तल्लजैः तैत्तिरीय-बृहदारण्यकवार्तिककृद्भिः श्रीसुरेश्वराचार्यैः अन्वग्राहि । इदं वार्तिकं एतत्स्तुतिगतान् श्लोकान् एकैकशः सावतरणिकं देहेन्द्रियाद्यात्मत्वपक्षनिरूपण-तन्निरसनपूर्वकनिष्कृष्टात्मतत्त्वसिद्धान्त -स्थापन-परत्वेन मनोरञ्जकैः पञ्चषष्ट्युत्तरत्रिशतश्लोकैः विवृणोति ।

अस्योत्तमस्तोत्रस्य मेल्मङ्गलाभिजनेन श्रीसुन्दरराजशर्मेति विख्यातेन गार्हस्थ्ये स्थितवताऽपि उत्तमसंन्यासिमनोभावभरितेन पुरुषेण द्रविडभाषायां प्रणीतः प्रतिपदार्थानुवादः टिप्पणीयुतः विशदया शैल्या तत्तद्विषयान् प्रतिपादयन् द्रविडभाषाभिज्ञानां अद्वैतजिज्ञासूनां महते उपकाराय प्रभवति ।

पञ्चाशद्वर्षेभ्यः पूर्वं दक्षिणात्यग्रन्थलिप्यां मुद्रापितस्य तल्लिपिज्ञेषु प्रसिद्धस्यास्य ग्रन्थस्याधुना दुर्लभत्वम्, अधिकप्रचारसौलभ्यं च विचिन्त्य अनुवादकृतः बन्धुः शिष्यश्च बृहत्तटाकनगराभिजनः श्रीनागेश्वरार्यः स्वकीयद्रविणव्ययेन, स्वबन्धोः श्रीशर्मप्रियशिष्यस्य च श्री परमेश्वरार्यस्य सहयोगेन च देवनागरीलिप्यां पुनर्मुद्रापणे प्रवृत्तिमान् , मुद्रणानन्तरं अस्य ग्रन्थस्य द्रविडभाषाभिज्ञेभ्यो मुमुक्षुभ्यः निरपेक्षं वितरणे उत्साहवांश्च वर्तते इति विदित्वा मोमुद्यामहे ।

यात्रास्थानम्
एलुम्बूर् (मद्रास्) }
विश्वावसुचैत्रबहुलदशमी

नारायणस्मृतिः



ஸ்ரீ:

## ஸ்ரீமுகம்

# காஞ்சி காமகோடிபீடம் ஸ்ரீ சந்திரசேகேரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள்

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகவர்யர்களான ஸ்ரீமத்சங்கரபகவத்பாதர்களினால் பிரதிஷ்டை செய்யப்பெற்ற ஸ்ரீ காஞ்சிகாமகோடி பீடாதீச்வரர்களான ஜகத்குரு ஸ்ரீமத் சந்திரசேகரேந்திர ஸரஸ்வதீ ஸ்ரீபாதர்களின் அருளிப்பாட்டிற்கிணங்க ஸ்ரீமத்ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்ரீபாதர்களால் நாராயண ஸ்மரணம் செய்யப்படுகின்றது.

வேத வேதாந்தங்களைத் தெளிவுறவிளக்கி ஆறு மதங்களையும் ஸ்தாபித்த ஆசார்யர்களான ஸ்ரீபகவத்பாதாசார்யர்கள், மௌன நிலையிலேயிருந்து சின்முத்ரை காட்டி ஸநகாதி வ்யாஜத்தால் அஞ்ஞாந இருளால் சூழப்பட்டவர்களும் பரம மங்களமான மோக்ஷத்தை விரும்புவர்களுமான மக்களுக்கு ஆத்மதத்வ ஞாநத்தை உபதேசித்துக் கொண்டிருப்பவரும், குருபரம்பரையில் முதல் குருவாகப் பூஜிக்கப்படுபவரும், தக்ஷிணாமூர்த்தியுமான ஈச்வரனை எளிய சொற்செறிவுள்ள எட்டு ச்லோகங்களால் துதித்தார்கள். ''பிரம்ஹ ஸத்யம், ஜகத்மித்யை'' என்ற அத்வைத ஸித்தாந்தத்தை ''உள்ளங்கை நெல்லிக் கனியென'' விளக்குகிறார்கள்.

ஸ்ரீபகவத்பாதர்களின் சிஷ்யர்களுட் சிறந்தவர்களும், தைத்திரீய, பிருகதாரண்யக வார்த்திகங்களை அருளிச் செய்தவர்களும் ஆகிய ஸ்ரீ சுரேச்வராசார்யர்களால் இந்த ஸ்தோத்திரத்தின் விளக்கவடிவான 'மாநஸோல்லாஸம்', என்ற பெயருடைய வார்த்திகம் அநுக்ரஹிக்கப்பட்டது. இந்த வார்த்திகம், இந்த ஸ்தோத்திரத்திலடங்கிய சுலோகங்கள் ஒவ்வொன்றையும் அவதாரிகையுடன் தேகம், இந்திரியம் முதலானவைகளே ஆத்மா என்ற பக்ஷங்களை நிரூபித்து அவற்றை மறுப்பதன் வாயிலாகத் தீர்மானித்த ஆத்ம தத்வ ஸித்தாந்தத்தை நிலை நாட்டும் மேலான நோக்கங்கொண்டு மனதை மகிழ்விக்கும் 365 சுலோகங்களால் விளக்குகிறது.

இந்த உத்தமமான நூலுக்கு மேல்மங்கலத்தில் தோன்றியவரும், ஸ்ரீ சுந்தரராஜ சர்மா எனப்புகழ் பெற்றவரும், இல்லறத்திலிருந்தும் உயர்ந்த துறவிகளுக்குரிய பண்புகளால் நிறைந்தவரு (பிரம்மநிஷ்டரு) மான ஆண்டகையால் தமிழ் மொழியில் இயற்றப்பெற்ற, விளக்கக்குறிப்புடன் கூடிய சொல்வாரியான மொழிபெயர்ப்பு, தெளிவான நடையில் அந்தந்தக் கருத்துக்களை விளக்கிக் கொண்டு அத்வைதத்தை அறியவிரும்பும் தமிழறிஞர்கட்குப் பேருதவிபுரிய வல்லதாகும்.

ஐம்பது ஆண்டுகட்குமுன் தென்னிந்திய கிரந்த எழுத்தில் அச்சிடப்பெற்று அவ்வெழுத்தறிந்தவர்களுக்கிடையே விளங்கிய இந்நூல் இக்காலத்தில் கிடைத்ததற்கு அருமையையும், எளிதில் யாவருக்கும் பரவிப்பயனிளித்தலையும் கருதி மொழி பெயர்ப்பாளரின் உறவினரும் சிஷ்யருமான பெரியகுள நகரைச் சேர்ந்த ஸ்ரீ நாகேச்வரய்யர் தன் பொருட்செலவினாலும், தன் உறவினரும் ஸ்ரீ சர்மாவின் சிஷ்யருமாகிய ஸ்ரீ பரமேச்வரய்யருடைய உடனுழைப்பினாலும் தேவநாகரி எழுத்தில் மீண்டும் அச்சிடுவதற்கு முயல்வதோடு அச்சிட்ட பின்னர் முமுக்ஷுக்களான தமிழ் மொழி வித்தகர்கட்கு விலையின்றியே வழங்குவதில் பேருக்கமுடையவராயிருக்கிறார் என அறிந்து மகிழ்வுறுகின்றோம்.

யாத்ராஸ்தானம்,
எழும்பூர் (மதராஸ்)
விசுவாவசு சைத்ர பகுளதசமீ

நாராயணஸ்மிருதி



MESSAGE FROM DR. S. RADHAKRISHNAN,
PRESIDENT OF INDIA.
( राष्ट्रपतिः )



RASHTRAPATI BHAVAN,
NEW DELHI-4
राष्ट्रपति भवन,
नई दिल्ली-4।

March 14, 1965.

Dear Shri Parameswara Ayyar,

Thank you for your letter of the 9th of March 1965.

I wish your publication success and hope the book will be widely read.

Yours sincerely,

(S. Radhakrishnan)

Shri M. Parameswara Ayyar,
'Loyal House',
107, T.P. Koil Street,
Triplicane, Madras-5.

ಲ

# INTRODUCTION
# BY
# Dr. C. P. Ramaswami Ayyar

Sri Sureswaracharya was, until recently, identified with the Mimamsaka, Mandana Misra, who is reputed to have had a famous disputation with Adi Sankaracharya. It has been believed without question that as a result of the philosophical debate, he and his wife who were both celebrated scholars became disciples of Sri Sankara and that Mandana Misra was given the name of Sureswara by the Guru. A reputable scholar like Professor Kuppuswami Sastri, in his Introduction to Mandana Misra's 'Brahma Siddhi' comes to the conclusion that Mandana Misra cannot be identified with Sureswara. In any case, Sureswara's personality and his acknowledged philosophical profundity are beyond question.

One of his main works, Manasollasa is a comprehensive exposition and commentary on Sankara's famous Dakshinamurti Stotram. Another celebrated work of Sureswara is his Vartika on Sankara's commentary on the Brihadaranyaka Upanishad.

Sri D. Sundararaja Sarma, owing to his dedicated life and by reason of his widely recognised personal emancipation from worldly contacts and ties, enjoyed the esteem and reverence of all who came across him including the foremost religious dignitaries. In 1910, he published an edition of Dakshinamurti Stotram along with Sureswara's exposition entitled 'Manasollasa', with most valuable comments. Sri A. Mahadeva Sastri who was Director of the Adyar Library has also published under the title of "Vedanta Doctrine of Sri Sankaracharya", the Dakshinamurti Stotram and an abstract of the commentary of Sureswara (the Manasollasa).

It is familiar knowledge to all students of Indian philosophy that the Dakshinamurti Stotram is a concise but a brilliantly illuminating exposition of the fundamental truths of the Advaita Vedanta. The teaching contained in these hymns is not addressed to any particular community, caste or religious order. Sureswara's Manasollasa, on the other hand, is an exhaustive treatise which refers to various philosophical systems and controverts rival doctrines. especially the Charvaka (or Atheistic) philosophy and systematises and seeks to establish point by point the fundamentals of the Advaita system. Sri Mahadeva Sastri has elaborately discussed, in an Introductory Essay, the main ideas of the Manasollasa.

One of the main points that must be kept in view in such a survey is that a mere intellectual assent does not amount to the realisation of the ineffable 'experience of identification of the individual with the Supreme Self. Sureswara seeks to establish the

non-duality of the Atman by adverting to the four well-known Mahavakyas and affirming that the universe is an external expression of the One Ultimate Entity. What is called Maya or Avidya is explained at length by Sureswara and, in his own words, the phenomenon of Maya cannot be said either to exist or not to exist. Everyone is conscious and must be conscious of Maya because it comes home to our consciousness though only for the time being and it disappears in the light of true knowledge. It is in this sense alone that the external universe is spoken of as unreal or impermanent as opposed to the Atman. Sureswara very carefully considers and criticises the various darsanas and seeks, in the light of the Dakshinamurti Stotram, to establish the basic ideals of Sankara's philosophy.

Nothing can so vividly demonstrate the inspired wisdom and gifts of concise descriptive analysis of Adi Sankaracharya as the following stanzas of the Dakshinamurti Stotram which, in effect, contains all that Sureswara and the present commentator, Sundararaja Sarma, have sought to convey to their readers in their several brilliant ways.

बीजस्यान्तरिवाङ्कुरो जगदिदं प्राङ्निर्विकल्पं पुनः
मायाकल्पित देशकालकलना वैचित्र्य चित्रीकृतम् ।
मायावीव विजृम्भयत्यपि महायोगीव यः स्वेच्छया
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥

"Who, like a magician or like a Yogi, manifests, by His own will, this universe which at the beginning was undifferentiated like the sprout latent in the seed but which subsequently became differentiated under the various conditions of space and time induced by illusion,—to that Teacher incarnate, the Lord facing the south, be this bow."

यस्यैव स्फुरणं सदात्मकमसत्कल्पार्थगं भासते
साक्षात्तत्त्वमसीति वेदवचसा योबोधयत्याश्रितान् ।
यत्साक्षात्करणाद्भवेन्न पुनरावृत्तिर्भवाम्भोनिधौ
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥

"Whose light alone that is the reality shines in things that resemble non-entities; Who directly awakens His devotees by virtue of the Vedic maxim "That thou art"; and Who being realised, there is no more coming back in this ocean of Samsara,—to that Teacher incarnate, the Lord facing the south, be this bow."

C P Ramaswami Aiyar
4. 6. 65

ஓம் ஸ்ரீகுருப்யோ நம:

# ஸ்ரீதக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திர மாநஸோல்லாஸத்

## தமிழ் மொழிபெயர்ப்பின் தனிச்சிறப்பு

(வித்துவான் கு.வே. சேஷாசல சர்மா எழுதியது )

அத்வைத மதஸ்தாபகரான ஸ்ரீமத் சங்கரபகவத்பாதாசார்யர் உலகம் உய்யக் கருதி அருளிச் செய்த அரிய பெரிய நூல்கள் அளவிறந்தன. அவற்றைப் பாஷ்யக்ரந்தங்கள், பிரகரணக்ரந்தங்கள், ஸ்தோத்திரக்ரந்தங்கள் என்று வகைப்படுத்துவோமாயின், ஸகல வேத ஸாரமெனக் கருதப்படும் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரம் மோக்ஷமடைய விரும்புவோர்க்கு முழுப்பயனளிக்கவல்லதோர் ஸ்தோத்திரமாகும் என்பர் பெரியோர். பிரகரண க்ரந்தங்களுள் பிறமதக் கொள்கைகளை நிரூபித்துக் கண்டித்து அத்வைத ஸித்தாந்தத்தை நிலைநாட்டுவதில் ஒப்புயர்வற்ற நூல் என்றும் உயர்ந்தோர் எடுத்துரைப்பர். எட்டு ச்லோகங்களைக் கொண்டதெனப் பொருள்படுமாறு 'ஸ்ரீ தக்ஷிணாமூர்த்யஷ்டகம்' என்றே இந்நூல் பெரிதும் வழங்கப்பெறுமாயினும் ஈச்வரனது உருவ வழிபாட்டினை உணர்த்துவதும், இந்நூலைப் படிப்பதாலுண்டாம் பயனைப் புலப்படுத்துவதுமாகிய இரண்டு ச்லோகங்களைச் சேர்த்துப் பத்து ச்லோகங்களைக் கொண்டதாகும்.

மிக மிக நுட்பமான அத்வைத ஸித்தாந்தக் கருத்துக்களை ஆலமரவித்திற்கு ஒப்பச் சுருங்கக் கூறும் இந்நூற் பொருளை யாவரும் உணர்ந்து கொள்வதற்காகப் பாஷ்யகாரரான பகவத்பாதரின் சிஷ்யர்களில் தலைசிறந்தவரும், ஸ்ரீசிருங்கேரி குருபரம்பரையில் ஸ்ரீசாரதாபீடத்தை முதன்முதலாக அலங்கரித்தவரும், வார்த்திககாரர் என்றே வழங்கப்பெற்றவருமான ஸ்ரீசுரேச்வராசார்யர் இந்நூலுக்கு 'மாநஸோல்லாஸம்' எனப் பெயரிய உரையினை ஒவ்வொரு மூலச்லோகத்திற்கும் அவதாரிகையுடன் 365 ச்லோகங்களால் 10 உல்லாஸங்களில் அருளிச் செய்தனர். ஸ்ரீஸ்வயம் பிரகாசயதி என்பவர் 'தத்வசுதா' என்ற பெயரால் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரத்திற்கு விளக்கமான உரையருளியிருக்கிறார்கள். ஸ்ரீராமதீர்த்தர் என்பார் 'மாநஸோல்லாஸ விருத்தாந்தம்' என்ற பெயருடன் நூல் முழுவதற்கும் தெளிவுரை அருளிச் செய்திருக்கிறார்கள்.

இங்ஙனம் ஸம்ஸ்கிருதத்தில் அமைந்ததோர் அரிய நூலைத் தமிழ்ப் பெருமக்களும் படித்துணர்ந்து பிறவிப்பயனைப் பெற வேண்டுமென்ற பெரு நோக்குடன் மதுரை ஜில்லா மேல்மங்கலம் ஸ்ரீ த. சுந்தரராஜ சர்மா என்ற பெரியார் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரத்தை வார்த்திகங்களுடன் தமிழில் மொழிபெயர்த்ததோடமையாது, முற்கூறிய பேருரைகளைத் தழுவித்தக்க மேற்கோள்களுடன் விளக்கங்களையும் சேர்த்துக் கிரந்த லிபியில் சுமார்

50 ஆண்டுகட்கு முன்னரே அச்சேற்றி வெளியிட்டுப் பேருதவிப் புரிந்திருக்கிறார்கள். சுமார் 80 ஆண்டு ஆயுட்காலத்தில் வாழ்க்கையின் பெரும் பகுதியை இல்லறத்துறவி, சிறந்த அநுபூதிமான், ஜீவன்முக்தர் என்ற நிலையில் கழித்தவர் இப்பெரியவர் என்று கூறுதல் மிகையாகாது. இளமையிலேயே ஐயந்திரிபறக் கற்பன கற்றுத் தெளிந்த மேதையினால் இவர் தமது முப்பதாவது வயதிலேயே, இந்நூலையும் ஸ்ரீசங்கர பாஷ்யத்துடன் ஸ்ரீமத் பகவத் கீதை, ஐதரேய உபநிஷத், ஸநத்ஸுஜாதீயம் ஆகியவற்றையும் தமிழில் மொழி பெயர்த்து க்ரந்தலிபியில் பிரசுரித்துப் பேரறிஞர் பலரது பாராட்டுடன் பெரும் புகழ் பெற்றிருக்கிறார் என்பது குறிப்பிடத்தக்கதாகும். இம்மாதிரியான உயரிய தமிழ் மொழிபெயர்ப்பினைக் காண்பது அரிது என்பதும், பகவத்கீதை சங்கர பாஷ்ய மொழிபெயர்ப்பு தனிப்பெருஞ் சிறப்பு வாய்ந்தது என்பதும் அறிஞர் பலர் கருத்தாகும்.

இனிய தமிழ் மொழியிலுள்ள இலக்கிய இலக்கண நூல்களுக்குத் தெள்ளிய உரை வரைந்த ஆசிரியர்களுள் திருக்குறளுக்கு உரை வகுத்த பரிமேலழகர்க்குத் தனிப் பெருமையுண்டு என்பர் ஆன்றோர். அத்தகைய பரிமேலழகரது உரைநடையின் பிரதிபலிப்பை இப்பெரியாரது மொழி பெயர்ப்பு நூல்களில் பரக்கக் காணலாம். ''நுண் மாண் நுழைபுலம்'' என்பது வள்ளுவர் வாக்கு. ''நுண்ணியதாய் மாட்சிமைப்பட்டுப் பல நூல்களிலும் சென்ற அறிவு'' என்பது அதற்குப் பரிமேலழகர் தெரித்த உரை. அதற்கேற்ப அமைந்ததுவே இம்மொழிப் பெயர்ப்பாளரது புலமைத்திறமும் என்பது இவரது பிரசுரங்கள் அனைத்தையும் ஆராய்வார்க்குத் தெள்ளிதின் விளங்கும். இப்பெரியாருடன் பல்லாண்டுகள் பழகும் பாக்கியம் பெற்றவர்களுள் யானும் ஒருவனாதலின், இவர் பன்முறையும் பரிமேலழகரைப் பற்றி வியந்து பாராட்டிப் பேசியதைக் கேட்டிருக்கிறேன்.

இவரது மொழிபெயர்ப்பினை ஊன்றிக் படிப்பார்க்குத் தமிழ் மொழி பெயர்ப்பின் தனிச்சிறப்பும், சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் திறமும், தெளிந்த கம்பீரமான உரைநடை இனிமையும், நுட்பமான கருத்துச் செறிவுள்ள பகுதிகளையும் மேற் கோள்களுடன் தெளிவுபட உணர்த்தும் நயமும் நன்கு புலனாகும்.

முதல் ச்லோகத்தின் நான்காம் பாதமான

तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥

என்பதன் விளக்கமாயமைந்த மொழிபெயர்ப்பைப் படித்தால் மூலத்தோடும் உரைகளோடும் எத்துணை நயம்பட அமைந்துள்ளதென்பது விளங்கும். 'முன்னோர் மொழி பொருளேயன்றி அவர் மொழியும் பொன்னேபோற் போற்றுவம்' என்பர் நன்னூலார். ஸ்ரீ சுரேச்வரரும் முன்னோராகிய கௌடபாதர் வாக்கை எடுத்தாள்கிறார் என்பதைச் சுட்டிக் காட்டுகிறார் (பக். 12). ''கனிகள் கூடையிலிருப்பது போல ஆத்மாவாகிய பிரம்மம் இடமென்பதில் இல்லை'' என விளக்கியிருப்பது கீதாபாஷ்ய

வாக்கியத்தை நினைவுறுத்துகின்றது (பக். 21). ஜடப்பொருள் சேதனத்தால் செயலுறுகின்றது என்பதனை வார்த்திகத்திலுள்ள तदङ्कुरवद्भवेत् என்பதற்கேற்ப விளக்கி யிருப்பதன் நுட்பம் கவனிக்கத்தக்கது (பக். 18).

ईश्वरश्च कुलालवत् (பக். 42) सांख्याश्च भाषन्ते (பக். 43) तस्मात् सत्ता च (பக். 147) முதலான இடங்களிலுள்ள (உம்) என்பதன் பொருளை மூலத்தோடு பொருந்த விடாது விளக்கியிருப்பது வியக்கத்தக்கதாகும். பிரத்யக்ஷம் முதலான பிரமாணங்களைத் தூய செந்தமிழில் விளக்கியிருத்தல் (பக். 54) தத்துவ நூற்பயிற்சியுடையார்க்கு மிக மகிழ்வூட்டுவதாம். प्रत्यभिज्ञायत इति प्रयोगः कर्मकर्तरि (பக். 221) என்பதன் விளக்கமும், உதாரணங்களும்

*''செயப்படு பொருளைச் செய்ததுபோலத்*
*தொழிற்படக் கிளத்தலும் வழக்கினுள் உரித்தே''*

தொல்—வினையியல் சூ 49 (நன்னுல் சூ. 400)

என்பதனோடு பொருந்தியிருப்பது படித்து இன்புறத்தக்கதாகும். ஒன்றனிடத்துள்ள வாஸனையானது தனக்குரிய நினைப்பை வேறொன்றினிடத்துப் பிறப்பிக்கமாட்டாது என்பதனைக் 'குட்டிச் சுவரில் தேள் கொட்டினால் கட்டுத்தறியில் நெறி ஏறாது' என்ற பழமொழியாலும் (பக். 185). 'மயக்கத்தை அந்யதாக்யாதி என்றலும் ஏலாது' என்பதனைக் கட்டகுடீப்ரபாத நியாயத்தாலும் விளக்கியிருப்பது தெளிவையுண்டாக்குவதாம். शिवलोके महीयते (பக். 133, 131) என்றவிடத்துச் 'சிவனாகிய உலகத்தில்' என மொழி பெயர்த்திருப்பதன் நுட்பம் கருதத்தக்கதாம். சொற்களுக்குரிய பொருளைப் பொருத்தமாக விளக்கியிருத்தலைப் பல இடங்களிலும் காணலாம். உதாரணமாக विविच्यतां பகுத்தறியப்படட்டும், महाव्यामोहसंहारिणे– மாயா சக்தித்தளுக்கினாலான பெரும் மயக்கத்தை அறத்துடைக்கின்ற தன்மையுள்ள, संयग्ज्ञानोदयादूर्ध्वं மெய்யறிவு பிறந்ததற்கு மேல், सौम्य அமைதி பொருந்திய இனிய ஐய! என்பனவற்றைக் குறிப்பிடலாம். கருத்துக்கு ஏற்றபடி வார்த்திகங்களை எண்ணிக்கையிட்டு வரையறுத்தல், வார்த்திகங்களுக்குத் தக்கவாறு தலைப்பு, உல்லாஸ இயைபு, ச்லோக முற்பாதி பிற்பாதி முதற்குறிப்பகராதி முதலியன இப்பதிப்பின் சிறப்பியல்புகளாம். முதல் வார்த்திகத்தில் मङ्गलं दिशतु मे विनायकः என்பதனை ''விநாயகன் மங்களத்தைத் தந்தருளுக'' என வியங்கோள் வினைமுற்றாக மொழிபெயர்த்த ஆசிரியர், प्रकाशयति यो विश्वं प्रकाशोऽयं प्रकाशताम् என்ற நூல் முடிவிலுள்ள வார்த்திகத்தைப் பொருத்தமுற இப்பிரகாசம் 'பிரகாசிக்க' என வியங்கோள் முற்றாலேயே மொழிபெயர்த்திருப்பது உய்த்துணர்ந்து இன்புறற்பாலதாம்.

பெரியகுளம்
06–07–1965

K.V. சேஷாசல சர்மா

## ஓர் உத்தம சிஷ்யரின் அநுபவ லிகிதம்

(ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரத்தை 1910–இல் (மாநஸோல்லாஸத்தோடு) விளக்கங்களுடன் தமிழில் அநுவாதம் செய்து பிரசுரித்து அதன்பின்னர் சுமார் 45 ஆண்டுகளாக உயர்ந்த பிரம்ம நிஷ்டராக இருந்து 1955–இல் மறைந்த பெரியவர்களைப் பற்றி, அன்னாரின் பிரதம சீடரும் **தலைசிறந்த முமுக்ஷுவாக வஸித்து** சமீப காலத்தில் இறைவனடி சேர்ந்தவருமான அடைய பலம் ம.வீ. நடராஜ சாஸ்திரிகள், (தேச பக்தர் ஆரணி சுப்பிரமணிய சாஸ்திரிகளின் சகோதரர்) குருநாதர் மறைந்த சில தினங்களில் பெரிய குளம் நண்பருக்கு எழுதிய கடிதம் (அது பெரியவாளின் வாழ்க்கைச் சரிதம் போலவே அமைந்திருப்பதால்) முழுமையும் கீழே பிரசுரிக்கப்படுகிறது.

– பதிப்பாளர்

**Adayapalam**
8-9-55

## श्रीगुरुभ्यो नमः

எனது அன்பரும் பூஜ்யருமான ஸ்ரீபரமேசுவரய்யருக்கு வேதோக்தமான ஆசீர்வாதங்கள். உபயகுசலோபரி.

நமது குருநாதரின் சரித குணங்களைப் பற்றியும் பிரபாவங்களைப் பற்றியும் பூராவாகவும் சிறப்பாகவும் நன்றாகவும் தங்களுக்கு அநுபவ பூர்வமாகத் தெரிந்திருந்தாலும் அடியேனுக்குத் தெரிந்தவரை மனமகிழ்ந்து வாயாரச் சொல்லி வாழ்த்தி கிருதார்த்ததையடைய வேண்டி எழுதுகிறேன். பெரியவாளிடத்தில் கண்டும் கேட்டும் முடிந்தவரை அறிந்ததை சொல்ல ஆவல் தூண்டுகிறது.

# மேல்மங்கலத்தில் அவதரித்த மஹர்ஷியின் பிரபாவம்



குணானுபவ ஆனந்த மேலீட்டாலும்,பூதவுடல் மறைந்தது என்ற வியாவஹாரிக மனவாட்டத்தாலும் கை நடுங்குகிறது.

பெரியவாள் வம்சம் வைதிகாசாரம் வேதாத்யயன முள்ள பரம்பரையைச் சேர்ந்தது. இவர்களின் தகப்பனாரும் அத்யயனம் செய்தவர். இவர்களும் பால்யத்திலேயே 12 வயதில் நியமாத்யயனம் செய்து காவ்ய, நாடக, கிரந்த வ்யுத்பத்தியும் ஊரிலேயே சம்பாதித்து விட்டார். அப்பொழுதே வேதாந்த கிரந்தங்களைப் பார்த்து வந்தார். தேசத்தையும் பெரியோர்களையும் பார்க்க ஆவலுள்ளவராய்ச் சுமார் 16 வயதுக்குள்ளேயே (விவாஹமான உடனேயே) வடதேசம் போய் அநேகம் பெரியவர்களைப் பார்த்ததில் லோகமான்ய திலகரையும் தரிசித்து, ''இவ்வளவு மேதாவியான நீ தற்கால ஆங்கில பாஷையையும் கற்றுக் கொண்டால் அதிக ஞாநப் பிரகாசத்தை அடைந்து உலகத்திற்கே ஒரு வழிகாட்டியாவாய்'' என்று அவர் சொன்னதின் பேரில் நேராக ஊருக்கு வந்து தகப்பனார் உத்தரவின் பேரில் திருச்சியில் ஆங்கிலப் பள்ளியில் சேர்ந்து அக்காலத்து Upper Secondary பரீட்சையில் தேறினார். அப்பாஷையிலும் பூரணத் தேர்ச்சியடைந்து சட்டத்திற்குப் படிக்க உத்தேசமிருந்தது. ஆயினும் அவருடையவும் நம்முடையவும் பெரும் பாக்கியத்தினால் பிரபஞ்ச வாழ்க்கையில் ஈடுபடாமல் பிரம்ம நிஷ்டையிலேயே ஆழ்ந்திருக்கும்படி நிச்சயித்தார். அச்சமயம்தான் ஸ்ரீ நாட்தேவராஜராவின் சேர்க்கையுண்டாயிற்று. திருச்சியில் குடித்தனம் 1895–1905 வரை. அப்பொழுதே வேதாந்த பாடங்கள் சொல்லிவந்தார்.

பிறகு சென்னையில் கீதோபந்நியாஸம் செய்து கொண்டு 'வேதாந்த போதினி' என்ற அச்சாபீஸ் வைத்து கீதாபாஷ்ய, ஐதரேய உபநிஷத் பாஷ்ய, ஸநத்ஸுஜாதீய பாஷ்ய, மாநஸோல்லாஸ மொழிபெயர்ப்புகளையும் மற்ற கிரந்தங்களையும் வெளியிட்டார். இதன் காலம் 1905–1915 இருக்கலாம். அதாவது 25–வது வயதிலேயே கீதாபாஷ்ய மொழிபெயர்ப்பு ஆரம்பித்திருக்க வேண்டும்.

மூன்று பாஷைகளிலும் இலக்கணபூர்வ ஞாநமும் வேதாந்தத்தில் அநுபவபூர்வ நிலையும் ஏற்பட்டிருந்தது. மொழிபெயர்ப்பைப் படிக்கும் வித்வான்களே இதற்குச் சான்றாக விளங்குகின்றார்கள். பிறகு காசி யாத்திரைக்கு குடும்பத்துடன் போனார். அச்சமயம் அநேக வித்வான்களையும் வேதாந்திகளையும் யோகிகளையும் மேல்நாட்டு வித்யா நிபுணர்களையும் ராஜநீதி நிபுணர்களையும் சந்தித்து அவர்களிடம்

நற்சான்று பெற்றிருக்கிறார். மதராஸில் (23.02.1920)இல் B.P. Madhava Rao, C.I.E. அவர்களிடமிருந்து பண்டித மாளவியாவுக்கு உயர்ந்த யோக்யதாபத்திரம் வாங்கிப் போனார். மேற்படியாரிடமும் டாக்டர் பகவன்தாஸிடமும் ஆறுமாதம் இருந்து ராஜநீதி, Sociology etc., போதித்தார். Inspector of Sanskrit Schools, (U.P) Kasi Ram என்பவர் Rai Sahib Sanyan (Banaras)க்கு உயர்ந்த பத்திரிகை கொடுத்திருக்கிறார். பரோடா மஹாராஜாவிடம் மூன்றாவது வடஇந்திய பயணத்தில் 6 மாதம் தனிவிடுதி கொடுக்கப்பட்டு வஸித்தார்.

கும்பகோணத்தில் பைங்காநாடு ஸ்ரீகணபதி சாஸ்திரிகள் முதலியவர்களால் மிகவும் புகழப்பெற்று ஸ்ரீயக்ஞசாமி சாஸ்திரிகளாலும் மிகவும் கொண்டாடப்பட்டு, அநுபவ வைராக்யமுள்ளவராக இருந்தார். 1924க்கு மேல் ஆரணி, திருவிசலூரில் சில ஆண்டுகளும் இக்கிராமத்தில் ஒரு ஆண்டும் வஸித்தார். அச்சமயம் அம்மஹான் சந்தர்சனமும் நெருங்கிய சகவாஸமும் சிஷ்யத்வமும் அடையும்படியான பாக்யம் அடியேனுக்கு கிடைத்தது. ஸ்ரீ தேவராஜராவ், பெரிய தீக்ஷிதர் (ஆரணி குப்பா தீக்ஷிதர்), சின்ன தீக்ஷிதர் (வேலூர் மார்க்கபந்து தீக்ஷிதர்), அடியேன் உள்பட அவர்களிடம் 'வேதாந்த பரிபாஷை' பாடம் கேட்டோம். அதுதவிர அவர்களிடம் சம்பாஷணைகள் மூலமாய் அநேக சாஸ்திர விஷயங்கள் கிரந்தங்களின் மேற்கோள்களைக் காட்டி விசாரம் நடந்து வரும்.

1930இல் பெரியகுளம் (ஸ்திரமாக) போய்விட்டார். பிறகு பெரியகுளத்தில் சதுஸ்ஸூத்ரீ பாஷ்யமும் பஞ்சதசீ ப்ரகரணமும் பாடமுறையாகவே நடந்தன. அச்சமயங்கள் அடியேன் வந்திருந்த காலங்களில் அவர்கள் அநுக்ரஹித்தது தங்களுக்குத் தெரிந்ததே. சுமார் 25 வருஷங்களாகத் தாங்கள் அவர்கள் அநுக்ரஹத்திற்குப் பூர்ணபாத்திரராயிருந்து உடல், பொருள், ஆவி, மனம், புத்தி பூராவுமே அவர்களுக்கு அர்ப்பணம் செய்து கடைசி காலத்திலும் கைங்கர்ய பாக்யத்தை செய்து கிருதார்த்தரானீர்கள்.

## மகிமை

वेधा द्वेधा भ्रमं चक्रे कान्तासु कनकेषु च ।
तासु तेष्वप्यनासक्तः साक्षाद्भर्गो नराकृतिः ॥

காந்தா, கனகங்களில்தான் பகவான் மயக்குந்தன்மையை வைத்திருக்கிறார். அவைகளில் பற்றில்லாதவன்தான் பிரத்தியக்ஷ மனிதாகிருதியோடு கூடிய கடவுள்.

இச்சம்ஸார வாழ்க்கையில் ஸத்ஸங்கம், அரை க்ஷணமாயினும் புதையல் மாதிரி. ஏனெனில் அவர்களிடம் எவ்விதமான ஸம்பாஷணைகளும் உபதேசமேயாகும். வைராக்யமேதான் ஸாதனங்களுக்கு அடிப்படை என்று 'அபரோக்ஷானுபூதி'யில் ஸ்ரீ பகவத்பாதாள் சொன்னபடி, இவர்களிடம் வைராக்யம் பூர்ணத்வத்தை அடைந்திருந்தது. பிரபஞ்ச வாழ்க்கையில் தோஷ திருஷ்டியும் ஆபாஸத்தைக் கண்டால் பிராகிருதர்களுக்கு இருப்பது போல அருவருப்பும் (जिहासा) ஒவ்வொரு ரோமத்வாரத்திலும் வெளிப்பட்டுக் கொண்டிருந்த விஷயம் நாம் எல்லோரும் ஸ்பஷ்டமாய் தெரிந்து கொண்டிருந்ததே. உத்தம புருஷர்கள் அவலம்பிக்கக் கூடிய கேவல ஞான மார்க்கத்தில் ஈடுபட்டு ஞாநாமிர்தத்திலேயே மூழ்கி மிதந்திருந்தார். யோக நிலையின் அப்யாஸம் மந்தாதிகாரிகளுக்கே என நிச்சயமாகக் கூறுவார். யோக சக்தியினால் சரீர அசௌகர்யத்தை ஸஹிக்கலாம். அது ஞாந லக்ஷணமல்ல. நெடுங்காலம் சரீரம் ஸ்வாஸ்த்யமில்லாதிருந்தும் சரீர, மன, புத்திகளுக்கு, தான் ஸாக்ஷி மாத்திரராய் விளங்கிக்கொண்டு (साक्षी चेता केवलो निर्गुणश्च) என்றபடி சரீராதி அநாத்ம பதார்த்தங்கள் பிராரப்தக்ஷயம் வரையில் மித்யாவபாஸமாயிருப்பதென்ற ஒரே திருட ப்ரக்ஞையிலிருந்தார். ஞாநசரம காலத்திலே, ஜீவன் முக்தனாயிருப்பதனால் சரீராதிகள் பிராரப்த க்ஷயத்தை எதிர்பார்த்திருந்தன. த்யான ஸமாதிகள் திருடஞாநிக்கு ஐச்சிகமே (optional) தவிர அவச்யமில்லை என்பதற்கும் சரமகாலத்திலே ஸமாதிநிஷ்டர்களாகவே இருக்கவேண்டியது அவச்யமுமல்ல. குறியுமல்ல (लक्षणं) என்பதைப் பற்றியும் நிஸ்ஸந்தேகமாய் परमार्थसारं என்ற கிரந்தத்தில் 81, 82, 83 ச்லோகங்களிலும், पञ्चदशी திருப்தி தீபத்தில் சுலோகங்கள் 243–66, 291–298 களிலும் விளக்கபட்டிருக்கிறது. சமுத்ரம் நிறைய ஜலம் இருந்தாலும் பாத்திரம் கொண்டதுதான் பிடிக்குமாறு போல, அந்த ஞாந சமுத்ரத்திலிருந்து நம் புத்தியாகிய குடம், கொண்டதுதான் கிரஹிக்கும். ஆயினும் ஈச்வரன், குரு அநுக்ரஹத்தினால் அமிர்தம் சிறு துளியானாலும் அமரத்வத்தையே கொடுக்குமாறு போல, நாமும் அவர்கள் உபதேசத்தை அநுஸரித்து நடந்து வந்தால் கிருதார்த்தர்களாகலாம் என்கிற உறுதி நமக்கு வழிகாட்டியாகவே இருக்கும்.

தோடகாசார்யார் போல அவ்யாஜ அசஞ்சலமான அசைக்கமுடியாத குருபக்த சிகாமணியாகிய தங்களைப் போன்றவரும், வைராக்ய ஞானங்களில் பெரியவர்களைப் போன்றவரும் இவ்வுலகத்தில் அநேக நூற்றாண்டுகளுக்கு ஒருதரம்தான்

தோன்றுவார்கள். மஹாமஹோபாத்யாய ராஜு சாஸ்திரிகளிடமும் நம் பெரியவாள் शास्त्रदीपिका சில காலம் வாசித்ததாகவும் அப்பொழுது அவர் மிகவும் வயோதிகராக இருந்ததாகவும் சொல்லியிருக்கிறார். ஸ்ரீயக்ஞசாமி சாஸ்திரிகளைக் கூட சீர்திருத்தும்படி இவர்களிடம் சொல்லிவந்தாராம். அப்பொழுது கூட நமது பெரியவாளை சாஸ்திரிகளவாள் 'பெரியகுளம் சாஸ்திரிகளே' என்று கூப்பிடுவாராம். Prof. சுந்தரராமய்யர் K.S. ராமசாமி சாஸ்திரிகள் அவர்களும் மிக மரியாதை வைத்திருந்தார்கள். ஆயினும் நமக்கு எவ்வளவு ஸுலபராக இருந்தாரோ அவ்வளவு அவர்களிடத்திலில்லை. அவர்கள் மகிமையை என் சிற்றறிவினால் வர்ணிக்க முடியாததால் இத்துடன் நிறுத்துகிறேன். ருசி பதார்த்தத்தை அன்பருடன் கூட அருந்தினால்தான் ஆனந்தமானதினால் தங்களுடன் மனதைக் கலந்து கொண்டேன். நான் எழுதியதில் பிழைகளிருந்தாலும் மறந்து குணத்தையே கிரஹிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

ஆத்யாத்மிக மார்க்கத்தில் என் வாழ்க்கையில் இது வரை ஈச்வரன் ப்ரோத்ஸாகமாகவும் தெளிவாகவும் வழியைக் காட்டிக் கொண்டு போவதாலும், சுருதி, யுக்தி, அநுபவத்திற்கு எனக்கு எட்டியவரை அநுஷ்டிப்பதும் தெளிவாகாததை மேல்மேலும் பக்தியுடன் ஆராய்ச்சி செய்து நிச்சயம் வரும் வரையில் யோசித்து நடப்பதும் நடைமுறையில் உசிதமாயிருப்பதாலும் எல்லாம் வல்ல ஈச்வரனும் குருவும் நம்மைப் பூர்ணமாக அநுக்ரஹிப்பார் என்ற நம்பிக்கையுடன் நிற்கிறேன்.

ஆசீர்வாதம்

(Sd) M. V. Nataraja Sastri

# ஸமர்ப்பணம்

ஸ்ரீசங்கரபகவத்பாதர்கள் இயற்றிய பல ஸ்தோத்திரங்களில் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரம் அத்யாத்ம மார்க்கத்தில் ஈடுபட்டிருக்கும் முமுக்ஷுக்களுக்கு பெரிதும் துணைபுரிவதாகும். இந்த ஸ்தோத்திரத்தில் உபநிஷத் சித்தாந்தங்கள் சுருக்கமாகவும், தெளிவாகவும் நிரூபிக்கப்பட்டிருப்பதால், ஸந்நியாசிகள் இதை சிரத்தையுடன் நாள்தோறும் படிப்பது வழக்கம்.

இந்த ஸ்தோத்திரத்திற்கு உபநிஷத் பாஷ்ய வார்த்திகங்களை அருளிச் செய்த ஸ்ரீமத் ஸுரேச்வராசார்யர் 'மானஸோல்லாஸம்' என்ற விரிவுரையை இயற்றியிருக்கிறார்.

இந்த மிகச்சிறந்த நூலாகிய ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரத்தை 'மானஸோல்லாஸம்' என்ற வார்த்திகத்துடன் கிரந்தலிபியிலும், அவற்றின் எளிய விளக்கக்குறிப்புடன் கூடிய தமிழ்மொழி பெயர்ப்புடன் ''வேதாந்த போதினி'' என்ற பிரசுரத்தொடரில் நான்காவது புஸ்தகமாக, மேல்மங்கலம் ஸ்ரீ த. சுந்தரராஜ சர்மா எனப்புகழ் பெற்ற பெரியவர் 1905-1915-ல் வெளியிட்டார்.

அவர் மேல்மங்கலத்தில் 1875-ல் பிறந்து நியமாத்யயனம் செய்து ஸம்ஸ்கிருத பாஷை மற்றும் சாஸ்திரங்களில் நல்லஞானம் சம்பாதித்து, விவாஹமானவுடன், சுமார் 16-வது வயதில் வடதேசம் சென்று பெரியோர்களை தரிசித்தார். ஸ்ரீலோகமான்ய திலகரால் ஆங்கில பாஷையும் கற்றுக்கொள்ளவேண்டும் என்று ஊக்குவிக்கப்பட்டு, திருச்சியில் ஓர் ஆங்கிலப்பள்ளியில் படித்து பூர்ண தேர்ச்சியடைந்தார். பிரபஞ்ச வாழ்க்கையில் ஈடுபடாமல், பிரம்மநிஷ்டையிலேயே ஆழ்ந்து இருந்து, 1895-1905 வரை வேதாந்த பாடங்கள் சொல்லி வந்தார்.

பின்னர் சென்னையில் கீதா உபந்நியாஸம் செய்து கொண்டு, ''வேதாந்த போதினி'' என்ற பிரசுரத்தொடரில் பகவத்கீதை, ஐதரேயஉபநிஷத், ஸநத்ஸுஜாதீயம் பாஷ்யங்களையும், மானஸோல்லாஸத்துடன் ஸ்ரீதக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரத்தினை கிரந்தலிபியிலும், தமிழ் மொழிபெயர்ப்புகளுடனும் 1905-15ல் வெளியிட்டார்.

காசியாத்திரைக்கு குடும்பத்துடன் சென்று பலவித்வான்களையும். யோகிகளையும் சந்தித்தார். மூன்றாவது வடஇந்திய பயணத்தில் பரோடா மகாராஜாவிடம் ஆறுமாதம் தனிவிடுதி வசதியுடன் வசித்தார். 1924-ல் ஆரணி, திருவிசலூரிலும், அடையபலம் கிராமத்திலும் தங்கி வேதாந்தபாடம் சொல்லிவந்தார். 1930-லிருந்து பெரியகுளம் சென்று அங்கே தங்கவே பிரம்மசூத்ரம், பஞ்சதசீ பிரகரணமும் பாடமுறையாகவே நடந்தன.

1955-ல் மறைந்த இப்பெரியவர் எண்பது ஆண்டு ஆயுட்காலத்தில் வாழ்க்கையின் பெரும்பகுதியை இல்லறத்துறவி, சிறந்த அனுபூதிமான், ஜீவன்முக்தர் என்ற நிலையில் இருந்தார் என்று கூறுதல் மிகையாகாது. இவரது ஸமாதி தேனீ மாவட்டம், பெரியகுளத்தில் முருகன் ஆலயத்திற்கு அருகேயுள்ளது.

அவரது மறைவுக்கு பத்து ஆண்டுகளுக்குப் பின்னர் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரம்-மானஸோல்லாஸம் என்ற நூலின் இரண்டாம் பதிப்பு அவரது சிஷ்யர்களான பெரியகுளம் ஸ்ரீநாகேச்வரய்யர், ஸ்ரீ பரமேச்வரய்யர், அவர்களது

முயற்சியினால், தேவநாகரீலிபியிலும், குறிப்புகளுடன் கூடிய தமிழ் மொழி பெயர்ப்புடனும், 1965-ல் மிகவும் சிரத்தையுடன் வெளியிடப்பட்டு முமுக்ஷுக்களுக்கு அன்பளிப்பாக வழங்கப்பட்டது. அதற்கு சிருங்கேரி சாரதாபீடம் ஜகத்குரு சங்கராச்சாரியார் அவர்களும் காஞ்சிகாமகோடி பீடம் ஜகத்குரு சங்கராச்சாரியார் அவர்களும் ஸ்ரீமுகம் அருளியுள்ளார்கள். மேலும், ஜனாதிபதி டாக்டர் S. ராதாகிருஷ்ணன் அவர்களின் ஆசியுரை, டாக்டர் C.P. ராமசாமி அய்யர் அவர்களின் முன்னுரை, இந்த தமிழ்மொழி பெயர்ப்பின் தனிச்சிறப்பை விளக்கும் பெரியகுளம் ஸ்ரீ K.V. சேஷாசல சர்மா அவர்களின் கட்டுரை, ஸ்ரீ M.V. நடராஜ சாஸ்திரிகள் எழுதிய ஸ்ரீ சுந்தரராஜ சர்மா அவர்களின் வாழ்க்கை வரலாறு இவையாவும் அந்தப்பதிப்பில் காணப்படுகின்றன.

ஸ்ரீ ஞானானந்த தபோவனத்தில் ஸத்குரு ஞானானந்தரின் ஆசிகளுடன், ஆசிரமத்தில் வேதாந்தபாடம் நடத்தி வந்த ஆசாரியர் பரமபூஜ்ய வித்யானந்தகிரி ஸ்வாமிகள் 'வேதாந்த போதினி' பிரசுரங்களை மீண்டும் பதிப்பிக்கவேண்டும் என்று நினைத்து, அவர்களால் பகவத்கீதா பாஷ்யத்தின் இரண்டாம் பதிப்பு 1977-ல் வெளியிடப்பட்டது. மேலும் ஐதரேய உபநிஷத், ஸனத்ஸுஜாதியம் பாஷ்யங்களும் தேவநாகரீலிபியிலும், தமிழ் மொழி பெயர்ப்புடனும் பிரசுரிக்கப்பட்டன. கீதா பாஷ்யத்தின் மூன்றாம் பதிப்பும், அதற்குபின் 2013-ல் நான்காம் பதிப்பின் வெளியீடும் வந்தது குறிப்பிடத்தக்கது.

'ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரம் - மானஸோல்லாஸம் என்று நூலின் இரண்டாம் பதிப்பு 1965-ல் பிரசுரிக்கப்பட்டு ஐம்பது ஆண்டுகளுக்குப்பின் இந்த மூன்றாம் பதிப்பு வெளிவருகிறது. இத்துடன் பரமபூஜ்ய ஸ்ரீ வித்யானந்தகிரி ஸ்வாமிகளின் விருப்பம் நிறைவேறுவதாகக் கருதுகிறோம். இப்பதிப்பிலும், முந்தைய பதிப்பில் உள்ள ஸ்ரீ முகங்கள், முன்னுரை, கட்டுரை யாவையும் இடம் பெறுகின்றன.

இந்நூலினை மீண்டும் அச்சிட பொருளுதவி செய்த எல்லா பக்தர்களுக்கும் எங்களது நாராணஸ்மிருதி. இப்பதிப்பை வெகு அழகாக அச்சிட்டுத்தந்த சுதர்ஸன் கிராபிக்ஸ் உரிமையாளர் ஸ்ரீ N. சுப்ரமணியன் அவர்கட்கும் அவரது நிறுவனத்து தொண்டர்கள் அனைவருக்கும் எமது மனம் கனிந்த பாராட்டுகளும் நாராயண ஸ்மிருதியும். இவர்கள் எல்லோரும் ஸத்குரு ஞானானந்தரின் பரிபூர்ண அருளாசிகளும் எல்லா சிரேயஸ்ஸுகளையும் பெற்றுய்ய வேண்டுமெனப் பிராத்திக்கிறோம்.

இந்த அரிய நூலை பரமபூஜ்ய ஸ்ரீ வித்யானந்த கிரி ஸ்வாமிகளை ஸ்மரித்துக் கொண்டு, ஸத்குரு ஞானானந்தரின் பேரருள் வேண்டி, அவரது திவ்ய சரணாரவிந்தங்களில் ஸ்ரீ வியாஸபூஜை நன்னாளன்று ஸமர்ப்பிக்கின்றோம். இந்த ஸ்தோத்திரத்தை பக்தர்கள் அனைவரும் படித்து, ஸத்குருநாதரின் பரிபூர்ண அனுக்கிரஹத்துடனும் பரம பூஜ்ய ஸ்ரீவித்யானந்தகிரி ஸ்வாமிகளின் ஆசிகளுடனும் பிறவிப்பயனாகிய ஆத்மஞானத்தை பெற்றுய்வாராக.

***ஸ்ரீ ஞானானந்த நிகேதன்***
தபோவனம் அஞ்சல் – 605 756
ஸ்ரீ வியாஸபூஜை, பௌர்ணமி,
ஜய ஷூ 28ந்தேதி, 12.07.2014

***ஓம் நித்யானந்தகிரி ஸ்வாமிகள்***

# உள்ளடக்கம்

பக்கம்


உரைப்பாயிரம்

பக்தர்களின் பகுப்பு 1
ஸகுணப்ரஹ்மபக்தர்கள் 1
நிர்க்குணப்ரஹ்மபக்தர்கள் 2
நூலும் வார்த்திகமும் 3

முதல் உல்லாஸம்

கடவுள் வாழ்த்து 4
ஸ்தோத்திரத்தின் பிரயோஜனம் 4
மூலகாரணத்தைப் பற்றிய வினாக்கள் 5
பிரபஞ்சம் ஆத்மாவினிடத்து உள்ளது 9
ஆத்ம ஒளியினால் பிரபஞ்சம் விளங்குகின்றது 10
அத்வைதக்காட்சி 11
ஆத்மா என்பதே ஜீவனும், ஈச்வரனுமாம் 14
ஈச்வரனே எல்லாவற்றினுடைய ஆத்மாவாம் 16
அறிவு 17
செயல் 17
வேற்றுமைக்கு மாயையே காரணம் 20

இரண்டாம் உல்லாஸம்

இதனுள் கூறப்படும் விஷயம் 39
வைசேஷிகர் கொள்கை 40
வைசேஷிகருடைய மூவகைக் காரணங்கள் 41
ஸமவாயிகாரணம் 41
அஸமவாயிகாரணம் 41
நிமித்தகாரணம் 42
ஸாங்க்யர் கொள்கை 43
தேச கால நிமித்தங்களால்வேற்றுமை தோன்றுகிறது 45
''முதலில்,'' ''(இருந்தது)'', ''பின்பு'' என வழங்கியதற்கு நியாயம் கூறுதல் 45
ப்ரஹ்மம் ஜகத்திற்கு நிமித்த காரணமாத்திரமன்று, உபாதாநகாரணமுமாம் 46
பரமாணுவாதத்தை மறுத்தல் 47
விவர்த்தக் கொள்கை 49
அறிவும், செயலும் சேதநப்பொருளைச் சார்ந்துள்ளன 49
பிரமாணங்களினது லக்ஷணம் 54
வைசேஷிகர் கொண்ட பொருள்கள் 54
ஸாங்க்யர்கொண்ட பொருள்கள் 57
ஸேச்வர ஸாங்க்யருடைய இருபத்துநான்கு தத்துவங்கள் 60

அநீச்வரஸாங்க்யருடைய இருபத்துநான்கு தத்துவங்கள் 60
பௌராணிகருடைய முப்பது தத்துவங்கள் 61
சைவாகமத்தினுடைய முப்பத்தாறு தத்துவங்கள் 61
சுருதியின் கொள்கை 62
ஈச்வரன் ஜகத்திற்கு நிமித்தகாரண மாத்திரமல்லன் 65

**மூன்றாம் உல்லாஸம்**

எல்லாம் ஆத்மஸ்வரூபந்தான் 94
அவித்யை மயக்கத்திற்குக் காரணம் 97
உடம்பு, ஜீவனை ஈச்வரனினும் வேறாகப் பிரிக்கின்றது 98
தத்துதமஸி என்னும் சுருதி, ஜீவனும் ஈச்வரனும் ஒரே பொருள் என உபதேசிக்கின்றது 90
சுருதி – ஜீவனுக்கும் ஈச்வரனுக்கும் வாஸ்தவத்திலே எத்தகைய பேதத்தையும் காட்டுவதில்லை 104
அஜ்ஞானிகள் உடம்பு முதலியவற்றையே ஆத்மாவாக மயங்குதல் 109
ஐந்து கோசங்களுள்ளும் ஆத்மா விளங்குதல் 109
ஆத்மா சரீரந்தோறும் விளங்குதல் 110
ஜீவனும் ஈச்வரனும் உண்மையிலே ஒரே பொருள் 111
ஆத்ம அறிவு முக்தியைத் தரும் 112

**நான்காம் உல்லாஸம்**

சுருதி கூறுகின்ற ஆத்ம உண்மையையும் ஆத்மப் பிரகாசத்தையும் ஆக்ஷேபித்தலும் ஸமாதாநமும் 133
ஈச்வரன் உபாதிகளின் வழியாகச் செய்பவனும் அறிபவனுமாகிறான் 138
அறிதற்கருவியான அகக்கரணம் 139
நாடிகள் 140
நனவுநிலை 144
கனவு நிலை 145
உறக்கநிலை 145
ஆத்மா என்றும் ஸச்சிதாநந்தம் 145
ஈச்வரனே ஸ்வயம்பிரகாச உண்மை 147
"நான்" என்பது 148

**ஐந்தாம் உல்லாஸம்**

உடம்பே ஆத்மா என்னும் கொள்கை 169
இந்திரியமே ஆத்மா என்னும் கொள்கை 172
பிராணனே ஆத்மா என்னும் கொள்கை 173
புத்தியே ஆத்மா என்னும் கொள்கை 174
உடம்பு முதலியன ஆத்மாவாகமாட்டா 174
உடம்பே ஆத்மா என்னும் கொள்கையை மறுத்தல் 176
இந்திரியமே ஆத்மா என்னும் கொள்கையை மறுத்தல் 178

பிராணனே ஆத்மா என்னும் கொள்கையை மறுத்தல் 179
புத்தியே ஆத்மா என்னும் கொள்கையை மறுத்தல் 181
உடம்பு முதலியவற்றின் ஸமுதாயமும் ஆத்மாவாகாது 183
ஆத்மா எங்கும் நிறைந்த பொருள் 184
மாயை என்னும் மயக்கம் 187

ஆறாம் உல்லாஸம்
சூந்யவாதம் 206
க்ஷணிக விஜ்ஞாநவாதம் 207
ஸமுதாயவாதம் 207
ஜகத்திற்கு கர்த்தா இல்லை 210
விஷயஞாநம்போல, விஷயிஞாநமும் க்ஷணிகமாம் 212
உண்மையும் விளக்கமும் இல்லை 213
பௌத்தமத மறுதலை 213
சூந்யவாத மாறுதலை 215
ஸமுதாயவாத மறுதலை 217
க்ஷணிக விஜ்ஞாவாத மறுதலை 218
ப்ரத்யபிஜ்ஞை மயக்கமாகாது 218
ஆத்மா நிலையான உண்மை 220
ஆத்ம இயல்பு 223

ஏழாம் உல்லாஸம்
வினா 244
விடை 245
ப்ரத்யபிஜ்ஞை இன்னதென்பது 247
ஆத்மா நித்யப் பொருள் 248
நினைவுகூர்தல் என்னும் ஸ்மிருதி ப்ரமாணமாகாது 250
நினைவு என்னும் ஸ்மிருதி 251
ஆத்மா நிலையானது 252
அவித்யையும், வித்யையும் 253
ஆத்மாவின் ப்ரத்யபிஜ்ஞை 254
அத்யாஸம் அல்லது மயக்கம் 256

எட்டாம் உல்லாஸம்
உண்மை ஒன்றே என்ற வழி உலகவ்யவஹாரமும்
வேதவ்யவஹாரமும் முரணுதல் 282
இங்குக் கூறினது கூறல் குற்றமன்று 283
வேற்றுமையுணர்ச்சி பொய்ம்மையாம் 286
மித்யை அல்லது பொய்ம்மை 288
பொய்ம்மையினால் மெய்ம்மையுணர்ச்சியுண்டாதல் 288
ஞாநத்தினால் மாயை இல்லாமற்போதல் 289

மாயையின் லக்ஷணம் 289
இந்த மாயாவேச்யையைத் தொலைத்திடுதலே மோக்ஷமென்பது 291

**ஒன்பதாம் உல்லாஸம்**

உல்லாஸ இயைபு 311
அஷ்டமூர்த்தி வடிவினான ஈச்வரனைத் தொழுதல் 311
அண்டத்திலுள்ள நிலம் பிண்டத்திலும் அமைந்திருத்தல் 314
அண்டத்திலுள்ள நீர் பிண்டத்திலும் அமைந்திருத்தல் 315
அண்டத்திலுள்ள நெருப்பாயினும் ஒளியாயினும் பிண்டத்திலும் அமைந்திருத்தல் 315
அண்டத்திலுள்ள வாயு பிண்டத்திலும் அமைந்திருத்தல் 316
அண்டத்திலுள்ள ஆகாசம் பிண்டத்திலும் அமைந்திருத்தல் 318
அண்டத்திலுள்ள சூரியனும் சந்திரனும் பிண்டத்திலும் அமைந்திருத்தல் 318
அண்டத்திலுள்ள புருஷன் பிண்டத்திலும் அமைந்திருத்தல் 318
யோகத்தினுடைய எட்டு உறுப்புகள் 318
ஸமநஸ்கயோகம் அமநஸ்கயோகத்தையடையச் செய்கின்றது 319
யமம் 319
நியமங்கள் 320
ஆஸநங்கள் 321
ப்ராணாயாமம் 322
ப்ரத்யாஹாரம் 322
தாரணை 322
த்யாநம் 323
ஸமாதி 323
மனமும் ப்ராணனும் அசையாமைக்கு யோகம் ஆவச்யகம் 324
ஸம்பிகாயோகம் 324
பூதஜயயோகத்தின் லக்ஷணங்கள் 324
யோகத்திலே ஈச்வரன் வெளிப்படுதல் 327
யோகத்திலே ப்ரணவம் வெளிப்படுதல் 327
ஈச்வரனுடைய அருளும் ஆசார்யனுடைய அருளும் ஆவச்யகம் 329

**பத்தாம் உல்லாஸம்**

இந்த ஸ்தோத்திரத்தின் பயன் 353
யாவற்றினும் மேலான பயன் 355
எட்டு ஸித்திகள் 357
ஸர்வாத்மபாவனையின் மஹிமை 360
ஞாநத்திற்கு ஈச்வர பக்தியும் குரு பக்தியும் இன்றியமையாதவை 362
மங்களம் 362

**குறிப்புகள்**

தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திர ச்லோகங்களின் முற்பாதி பிற்பாதி முதற்குறிப்பகராதி 379
மானஸோல்லாஸ ச்லோகங்களின் முற்பாதி பிற்பாதி முதற்குறிப்பகராதி 380
மேற்கோள் முதற்குறிப்பகராதி 392
விஷய அகராதி 393

# குறிப்பெழுத்துக்களின் விளக்கம்

| | | |
|---|---|---|
| ஆப | = | ஆபஹ்தம்ப தர்மஸூத்ரம் |
| ஐ – உப | = | ஐதரேய உபநிஷத் |
| கட | = | கட உபநிஷத் |
| காலாக்நி | = | காலாநிருத்ர உபநிஷத் |
| சா | = | சந்தோக்ய உபநிஷத் |
| கை | = | கைவல்ய உபநிஷத் |
| ச்வே | = | ச்வேதாச்வதர உபநிஷத் |
| தை – ஆ | = | தைத்திரீய ஆரண்யகம் |
| தை – உப | = | தைத்திரீய உபநிஷத் |
| நிரு – உத் – தா | = | நிருஸிம்ஹ உத்தாதாபநீய உபநிஷத் |
| பிரு | = | பிருகதாரண்யக உபநிஷத் |
| ப்ரு | = | பிருகதாரண்யக உபநிஷத் |
| மகா – நா – உப | = | மகாநாராயண உபநிஷத் |
| மநு | = | மநுஸ்மிருதி |
| மு | = | முண்டக உபநிஷத் |
| வே – ஐ – உப | = | ஐதரேய உபநிஷத் (வேதாந்த போதினிப் பதிப்பு) |
| வே – கீ | = | பகவத்கீதையும் ஸ்ரீ சங்கராசார்ய பாஷ்யமும் (வேதாந்த போதினிப்பதிப்பு) |
| ஸம் | = | ஸம்க்ஷேப சாரீரகம் |

श्री

# दक्षिणामूर्ति स्तोत्रम्

## मानसोल्लास सहितम्

---

ஸ்ரீ

# தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரமும்

## மாநஸோல்லாஸமும்

உரைப்பாயிரம்.

பக்தர்களின் பகுப்பு.

ஓம் நமோ பகவதே வாஸுதேவாய. ஸ்ரீமத்பகவத்கீதா சாஸ்திரத்தினுள்

"चतुर्विधा भजन्ते मां जनाः सुकृतिनोऽर्जुन ।
आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी च भरतर्षभ ॥"

"பரதரிற் சிறந்த அர்ஜுந! துயருற்றவனும், (உண்மையினை) அறிய விரும்புவோனும், பொருளை வேண்டுவோனும், ஞானியுமாகிய நால்வகையான நல்ல ஜனங்கள் என்னைத் தொழுகிறார்கள்" (வே-கீ-7-16)

எனத் தமது அன்பர்களைப் பகவான் நால்வகையாகப் பகுத்தருளினர்.

ஸகுணப்ரஹ்மபக்தர்கள்.

இவரில், இரண்டாமவன் - உறவு பகைகளாலும், விருப்பு வெறுப்புக்களாலும், மற்றுமித்தன்மையவற்றாலும் அழுக்குற்று நிற்கும் அகக்கரணம் திருந்தாதமந்த புத்தியனாயின்,—குறியொன்றும் இல்லாத நிர்க்குண வடிவான பகவத் ஸ்வரூபத்தைத் தியானிக்க மாட்டுவானல்லன். ஆகவே, பகவான் வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாத பரம்பொருளாயினும், தம்மை இப்படிப்பட்டவர் அறியும்படி கருணைசெய்து, கண்ணபிரான் சிவபெருமான் ரகுநாதன்

முதலான தமது ஸகுணவடிவத்தை அவர்களுக்கு அளித்து, அவரை அந்தந்த வடிவமாகிய குறியிலே நிறுத்துபவராய்ப் பின்பு, தமது உண்மைவடிவத்தை உள்ளவாறு உணரும் வண்ணம் அவர்கட்கு ஞானத்தைத் தந்தருளுகிறார். இப்படியே உள்ளது பகவான் திருவாக்கு :—

" ... ... ... ... भजतां प्रीतिपूर्वकम् ।
ददामि बुद्धियोगं तं येन मामुपयान्ति ते ॥
तेषामेवानुकम्पार्थम् अहमज्ञानजं तमः ।
नाशयाम्यात्मभावस्थः ज्ञानदीपेन भास्वता ॥ "

"அன்போடு (என்னைத்) தொழுகிறவர்க்கு,—எதனால் அவர்கள் என்னை அடைவார்களோ, அந்த ஞானயோகத்தைக் கொடுக்கிறேன். அவர்கட்கு அறியாமையினா லுண்டான இருட்டை, யான் (அவர்களது) சித்தவிருத்தியிலே இருந்து, ஒளிர்கின்ற ஞான விளக்கைக்கொண்டு கருணையினாலேயே தொலைக்கின்றேன்" (வே-கீ-10-10, 11).

இதற்கு இணங்க,

" निर्विशेषं परं ब्रह्म साक्षात्कर्तुमनीश्वराः ।
ये मन्दास्तेऽनुकम्प्यन्ते सविशेषनिरूपणैः ॥
वशीकृते मनस्येषां सगुणब्रह्मशीलनात् ।
तदेवाविर्भवेत् साक्षात् अपेतोपाधिकल्पनम् ॥ "

"எவர்கள் நிர்க்குணமான பரப்ரஹ்மத்தை நேரே காணமுடியாத மந்தர்களோ, அவர்கள் ஸகுணவடிவங்களால் அருள்புரியப்படுகிறார்கள் [ பரமேச்வரன் அந்த அன்பாளர்களுக்குத் தமது ஸகுணவடிவத்தைக் கருணையினால் அருளுகிறார் ]. இவரது மனம் ஸகுணப்ரஹ்மத்தினுடைய தியானப்பயிற்சியினாலே வசப்பட்டு (அலையாது) நிற்கும்பொழுது, அதுவே உபாதியின் கற்பனை நீங்கியதாய் நேரே காட்சிப்படும் ".

என வேதாந்தகல்பதருவினுள் அந்தரதிகரணத்தில் பெரியோர் அமலாநந்த பாதர் உரைத்ததைக் காண்க.

### நிர்க்குணப்ரஹ்மபக்தர்கள்.

அல்லது, அந்த இரண்டாமவன்-அகக்கரணம் செவ்வனே திருந்தியவனாய் நான்கு ஸாதநமும் பொருந்திய நுட்பபுத்தியனாயின்,—பகவானுடைய உண்மை வடிவான நிர்க்குணஸ்வரூபத்தைக் கேட்டுச், சிந்தித்துத், தெளிந்து

தொழுதற்கு உரியவன். அவன் இவ்வாறு பரம்பொருளைத் தொழ வல்லுந ஞானவளவிலே, பெயர் உருவம் முதலிய பேதபுத்தி அற்றவனாய் "ஞாநி" எனப்படுகிறான். மேலும், நால்வகையான பக்தர்களுள்ளும் அவனே மிக மேலான பக்தன். அவ்வண்ணமே, பகவான்

" तेषां ज्ञानी नित्ययुक्तः एकभक्तिर्विशिष्यते ।
प्रियोहि ज्ञानिनोऽत्यर्थम् अहं स च मम प्रियः ॥ "
" ... ... ... .... ज्ञानी त्वात्मैव मे मतम् ।
आस्थितः स हि युक्तात्मा मामेवानुत्तमां गतिम् ॥ "

" ஒன்றிலேயே பேரன்பையுடையவனாய் எப்பொழுதும் ஒருநிலைப் பட்ட ஞாநியானவன் அவர்களுள் மேம்படுகிறான். ஏனெனில், யான் ஞாநிக்கு மிகவும் பிரியமானவன். அவனும் எனக்குப் பிரியமானவன். ஞாநியோ ஆத்மாதான் என்பது-எனது கொள்கை. ஏனெனில், மனம் ஒருநிலைப்பட்ட அவன் என்னையே மிக்க மேலான அடைக்கலமாக நாடியுள்ளவன் " (வே-கீ-7-17, 18)

எனச் சிறந்தெடுத்துக் கூறியுள்ளார். இனி, இவனுக்கே முக்தி கைகூடுமென் பது வேதரஹஸ்யமாம்.

நூ லு ம், வா ர் த் தி க மு ம்.

ஆதலால், கீழ்க்கூறிய நுட்பமதியுள்ள பக்தர்கள் பகவானுடைய நிர்க் குணஸ்வரூபத்தை ஆராயப்புகுகிறார்கள். அங்ஙனம் ஆராயப்புகுந்தவர் அதனைச் சுருக்கமாயும் விளக்கமாயும் எளிதே அறியும் பொட்டு பகவத்பூஜ்ய பாதர் ஸகலவேதங்களுடைய ஸாரத்தைத் திரட்டியெடுத்து ஸ்ரீதக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரம் என்னும் நூலைப் பத்து சுலோகங்களால் அருளிச்செய்தனர். அதற்கு-அவரது மாணாக்கர் ஸுரேச்வரர் என்பவர் மாநஸோல்லாஸம் என்னும் உரையை வார்த்திகமாக அநுஷ்டுப் சுலோகங்களால் இயற்றியருளினர். ஸுரேச்வரரெனினும் வார்த்திககாரரெனினும் ஒக்கும். வார்த்திககாரர் - வார்த்திகத்தைச் செய்தவர். வார்த்திகமாவது - கூறிய பொருளையும், கூறுதொழிந்த பொருளையும், குறைவாகக் கூறிய பொருளையும் தெளிவுபெறச்செய்வது [ उक्तानुक्तदुरुक्तार्थ व्यक्तकारि तु वार्तिकम् ]

अथ

## ॥ प्रथमोल्लासः ॥

1

मङ्गलं दिशतु मे विनायकः
मङ्गलं दिशतु मे सरस्वती ।
मङ्गलं दिशतु मे महेश्वरी
मङ्गलं दिशतु मे सदाशिवः ॥

2

आत्मलाभात्परो लाभः नास्तीति मुनयो विदुः ।
तल्लाभार्थं कविः स्तौति स्वात्मानं परमेश्वरम् ॥

---

## முதல் உல்லாஸம்.

### கடவுள் வாழ்த்து.

1

விநாயகன் எனக்கு மங்களத்தைத் தந்தருளுக: ஸரஸ்வதீ எனக்கு மங்களத்தைத் தந்தருளுக: மஹேச்வரீ எனக்கு மங்களத்தைத் தந்தருளுக: ஸதாசிவன் எனக்கு மங்களத்தைத் தந்தருளுக.

### ஸ்தோத்திரத்தின் பிரயோஜனம்.

2

முனிவர்கள் "ஆத்மலாபத்தைக் காட்டிலும் வேறு லாபம் இல்லை" என அறிகிறார்கள். (ஆகவே) அறிவுடையோன் அதனைப் பெறுதற்காகத் தன் ஆத்மாவான பரமேச்வரனைத் துதிக்கின்றான்.

லாபம் - பேறு, பெறுவது, அடைவது. ஆத்மா அல்லாத அநாத்மப் பொருள்களெல்லாம் மாயாமயமாகி, வெறும் பதர்போலத் துச்சமாகித் தொல்லையொடு துன்பத்திற்கு வித்தாகும் பொய்ம்மையாதலால், அறிஞர் தாம் அவற்றை அடைய வேண்டுமென்று கொள்வதில்லை. அவ்வாறே, ஸ்மிருதிகளும்

3

स्वेच्छया सृष्टमाविश्य विश्वं यो मनसि स्थितः ।
स्तोत्रेण स्तूयतेऽनेन स एव परमेश्वरः ॥

4, 4½

अस्ति प्रकाशत इति व्यवहारः प्रवर्तते ।
तच्चास्तित्वं प्रकाशत्वम् कस्मिन्नर्थे प्रतिष्ठितम् ॥

---

" आत्मलाभात् न परं विद्यते "

" ஆத்மலாபத்தைக்காட்டிலும் வேறு இல்லை " (ஆப. 1-22-2)

" यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः "

" எதனை [ ஆத்மலாபத்தை ] அடைந்து, பின்பு, வேறு லாபத்தை அதனினும் அதிகமாக நினைப்பதில்லையோ " (வே-கீ-6-22)

என்று எடுத்துக்காட்டுகின்றன. ஆதலால், ஸகலத்திற்கும் ஸாக்ஷியாய் உள்ளேயுள்ள அறிவுப்பொருளாய் ஒப்பு உயர்வு அற்ற நித்யமான பேராநந்த ப்ரஹ்மமான ஆத்மஸ்வரூபத்தை அடைவதாகிய லாபந்தான் லாபம்: மற்றைய லாபமெல்லாம் லாபமாகா என்றபடி. (2)

3

அன்றியும்,

எவன் தனது இச்சையினுல் படைக்கப்பட்ட பிரபஞ்சத்தைப் புகுந்து, (எல்லாருடைய) மனத்தினுள்ளும் (வெளிப்பட்டு) நிற்கின்றுனோ அந்தப் பரமேச்வரனே இந்த ஸ்தோத்திரத்தினுல் துதிக்கப்படுகிருன்.

இச்சையினுல்-மாயை என்னும் சக்தியினுல். (3)

மூல காரணத்தைப் பற்றிய வினுக்கள்.

4, 4½

சென்ற பல பிறவிகளிலே செய்த நல்வினைப்பயன்களெல்லாம் பழுத்து நிற்குமளவிலே, பாவம் தேய்ந்து புத்தி திருந்துகின்றது. புத்தி திருந்தியவன் வேதாந்த நூல்களை ஒருவாறு பருமபடியாகப் படித்து மேல்நோக்காக ஆலோசித்து, தனது உலகவாழ்க்கையின் அநுபவத்தால் நித்ய அநித்யங்களது வேறுபாடுகளை உணர்கிருன். உணரவே, அழியுந்தன்மையுள்ள இம்மைமறுமை இன்பங்களில் அவனுக்கு உவர்ப்பு உண்டாகின்றது. அஃதுண்டாகவே, அவன் அடக்கம் பொறுமை முதலிய நற்குணங்களையுடையவனுய் குருவை வழிபட்டு, தனது மனத்திலுதிக்கும் ஸம்சயங்களை நீக்கிக் கொள்ளவேண்டி பின்வருமாறு வினவலாஞன்.

(முதல் வினு):—"(இது) உள்ளது, விளங்குகின்றது" என்னும் வழக்குச் செல்லுகின்றது. அந்த உண்மையென்பதும், விளக்கம் என்பதும் எப்பொரு

# किं तेषु तेषुवाऽर्थेषु किं वा सर्वात्मनीश्वरे ।

5

# ईश्वरत्वं च जीवत्वम् सर्वात்मत्वम् च कीदृशम् ॥

---

ளில் நிலைத்தவை? பொருள்கள் தோறும் நிலைத்தவையா? அல்லது, எல்லாவற்றிற்கும் ஆத்மாவான ஈச்வரனிடத்து (நிலைத்தவையா)?

தோற்றமுடைய ஒவ்வொரு பொருளையும்பற்றி "குடம் உள்ளது, விளங்குகின்றது" எனப் பேசுகின்ரேம். இங்கே, குடம் உடைந்தவழி நிலையில்லதாம். ஆனுல், "உள்ளது" என்பதும் "விளங்குகின்றது" என்பதும், அதாவது, உண்மை [உள்ள தன்மை] என்பதும் பிரகாசம் [விளக்கம்] என்பதும் அப்படிப்பட்டவையல்ல. எங்ஙனமெனில்,—குடம் உடைந்தவழி "ஆடை உள்ளது, விளங்குகின்றது" என உண்மையும் விளக்கமும் ஆடையினிடத்துக் காணப்படுகின்றன. (வே-கீ-30-31-32-33-ஆம் பக்கங்களைப் பார்க்க.) ஆதலால், தோற்றமுடையன வெல்லாம் நிலைவேறுபட்டுக் கெடுவனவாயினும், உண்மையும் விளக்கமும் நிலைவேறுபடாது, ஒருதன்மையனவாய்க் காணப்படுகின்றன. என ஆராய்ந்து பார்க்கும் மாணுக்கனுக்கு—"இந்த உண்மையும் விளக்கமும் குடம் முதலிய ஒவ்வொரு பொருளிலும் காணப்படுகின்றமையால், அந்த ஒவ்வொரு பொருளிலும் அதற்குரிய அளவு வடிவம் முதலியனபோல, தனித்தனியாகத் தங்கியவையா? அல்லது, இவை–குடம் முதலிய ஒவ்வொரு பொருளிலும் வேற்றுமையில்லாது பொதுவாகக் காணப்படுகின்றமையால், அந்த ஒவ்வொரு பொருளினுடைய ஆத்மாவாக எங்குமுள்ள ஈச்வரனிடத்துத் தங்கியவையா? ஆத் தன்மையாகிய அதனுடைமையானது ஒவ்வொரு ஆவினிடத்தும் தங்குவதுபோல" என்பது ஸம்சயம். அதள் - ஆவின் கழுத்தில் தொங்கும் சதை. (4,4½)

5

(இரண்டாம் வினு):—ஈச்வரனென்பவன் எப்படிப்பட்டவன்?

(மூன்ரும் வினு):—ஜீவனென்பவன் எப்படிப்பட்டவன்?

(நான்காம் வினு):—எல்லாவற்றினுடைய ஆத்மா என்பவன் எப்படிப் பட்டவன்?

ஜகத்திற்குக் கர்த்தாவான ஈச்வரன், குடத்திற்குக் குயவன்போல, அதற்குப் புறம்பானவனு? அல்லது, பாம்பிற்குக் கயிறுபோல ஜகத்திற்கு ஆதாரமானவனு?

ஜீவத்தன்மையானது உள்ளேயுள்ள—ஆத்மாவிற்கு இயற்கையாயுள்ளதா? அல்லது, அவ்வாத்மாவிற்கு உபாதிச்செயற்கையினுல் ஆனதா?

ஈச்வரன்தான் வாஸ்தவத்திலே எல்லாவற்றினுடைய ஆத்மாவா? அல்லது, உபசாரவழக்கினுல் அவன் அவ்வாறு கூறப்படுகின்ருனு? (5)

6

6, 6½

जानीयात्तत्कथं जीवः किं तज्ज्ञानस्य साधनम् ।
ज्ञानात्तस्य फलं किं स्यात् एकत्वं च कथं भवेत् ॥
सर्वज्ञः सर्वकर्ता च कथमात्मा भविष्यति ।

7

शिष्यं प्रतीत्थं पृच्छन्तम् वक्तुमारभते गुरुः ॥

1 विश्वं दर्पणदृश्यमाननगरीतुल्यं निजान्तर्गतम्
पश्यन्नात्मनि मायया बहिरिवोद्भूतं यथा निद्रया ।

---

6, 6½

(ஐந்தாம் வினு) :—ஜீவன் அதனை எப்படி அறியக்கூடும்?

(ஆரும் வினு) :—அதனை அறிவதற்குச் கருவி யாது?

(ஏழாம் வினு) :—அதனை அறிவதனுல் பயன் யாது?

(எட்டாம் வினு) :—மேலும், (ஜீவனும் ஈச்வரனும்) ஒன்று என்பது எவ்வாறு ஆகும்?

(ஒன்பதாம் வினு) :—முற்றுமுணர்ந்தவனுய் எல்லாவற்றையும் செய்கின்ற (ஈச்வரன்) ஜீவனுக எப்படி ஆவான்?

அதனை - கீழ்க்கூறிய ஈச்வரன் முதலானேர்களது உண்மையை என்றபடி. கருவி - வழி. ஜீவனுன ஆத்மா சிற்றுணர்வினன், சிறிது செய்பவன். ஈச்வரனே முற்றுமுணர்ந்தவன், எல்லாம் செய்பவன். இவ்வாறு இவர் தம்முள் விரோத இயல்பினர். ஆதலால், இவ்விருவரும் ஒன்று என்பது உபசாரவழக்கா? அல்லது, இவரது விரோத இயல்பு போலியாயின், இவ்விருவரும் வாஸ்தவத்திலே ஒன்று தானு? (6,6½)

7

இவ்வாறு வினவுகின்ற மாணுக்கனை நோக்கி ஆசார்யர் (விடை) கூறத் தொடங்குகிருர்.

1. கண்ணுடியில் காணப்படும் பட்டணம் போன்றதாய், தன்னுள் [ ஆத்மாவினுள் ]ளேயுள்ள பிரபஞ்சத்தை, தூக்கத்திஞல் போல ஆத்மாவினிடத்து மயக்கத்தினுல் வெளியில் தோன்றியதுபோல் காண்கின்ற எந்த (ஆத்மப்பொருளானது)

# यस्साक्षात्कुरुते प्रबोधसमये स्वात्मानमेवाद्वयम्
# तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥

**விழிப்புஸமயத்திலே இரண்டல்லாத தன் ஆத்மாவையே நேரே காண்கின்றதோ, அந்த ஸ்ரீமதாசார்ய ஸ்வரூபமான ஸ்ரீதக்ஷிணமூர்த்திக்கு இந்த நமஸ்காரம்.**

மாடமாளிகை முதலியவற்றோடு கூடிய பட்டணமானது கண்ணடியினுள் வாஸ்தவமாகவே இல்லதாயினும், அது அதனுள் இருப்பதுபோலவே தோற்றுகின்றது. அதுபோல, மலை கடல் முதலியவற்றோடு கூடிய இப்பிரபஞ்சமானது ஆத்மாவினுள் வாஸ்தவமாக இல்லதாயினும், அஃது அதனுள் இருப்பது போலத் தோற்றுகின்றது. இனி இவ்வாறாக இப்பிரபஞ்சம் வெளியில் இல்லதாயினும், ஆத்மாவிற்குப் புறம்பாக வெளியே காணப்படுகின்றதே? எனில்,—தூங்குகின்றவன் தன்னுள் வாஸநாமயமாயுள்ள கனவுப்பிரபஞ்சத்தை தூக்கத்தால் வெளியிலிருப்பது போலக் கண்டு அநுபவிக்கிறான். ஆனால் தூக்கமொழிந்து விழித்துக்கொண்டவளவிலே கனவுப்பிரபஞ்சமற்ற தன்னை மாத்திரமே நேரே கண்டு நிற்கிறான். அது போல, ஒருவன் தன்னுள் நிலம் நீர் முதலிய பூதவடிவாயுள்ள இப்பிரபஞ்சத்தை மயக்கத்தினால் வெளியிலிருப்பதுபோலக் கண்டு அநுபவிக்கிறான். ஆனால், அவன் ஆசார்யனது அருளினால் உபதேசிக்கப் பெற்றமஹாவாக்யப்பொருளைத் தெளிந்து உணர்ந்தவளவிலே இப்பிரபஞ்சமற்ற தன் ஆத்மாவைமாத்திரமே, தன்நிலையையே, தன்வடிவத்தையே, தன்னையே "நான் ஒளி அறிவான ஆநந்தமாய் இதோ இருக்கின்றேன்" என நேரே கண்டு நிற்கிறான்.

"குருவே ஈச்வரன்" என்று காட்டுவார் "ஸ்ரீமதாசார்யஸ்வரூபமான ஸ்ரீ தக்ஷிணமூர்த்திக்கு" என்றார். "ஆத்மாவே அந்த குருவும் ஈச்வரனுமாம்" என உணர்த்துவார் "எந்த (ஆத்மப்பொருளானது)......காண்கின்றதோ, அந்த ஸ்ரீமதாசார்ய ஸ்வரூபமான ஸ்ரீ தக்ஷிணமூர்த்திக்கு" என்றார். எனவே, மெய்யறிவை அருளுகின்ற குருவும், ப்ரஹ்மமான ஈச்வரனும், தன் ஸ்வரூபமான ஆத்மாவும் உண்மையிலே ஒரேபொருள் என்பதாயிற்று. ஸ்ரீ தக்ஷிணமூர்த்தி தென்திசையை நோக்கி நிற்கும் வடிவினையுடைய பெருமான். ஆலமரத்தின் கீழ் குருவாக வீற்றிருந்து, ஸநகர் முதலிய உயர்ந்த ஞாநிகட்கு ஞானோபதேசம் செய்த சிவபெருமானுடைய அந்தத் திருஅவதாரத்திற்கு "தக்ஷிணமூர்த்தி" என்று பெயர். அல்லது, இதற்கு "இன்னதென்று சொல்லவாராத மாயாசக்தியினால் உலகங்களைப் படைத்து, நிலைப்படுத்தி, அழித்து அமைப்பதிலே வல்லவனாயினும், வாஸ்தவத்திலே உருஇல்லாத பரம்பொருள்" எனப் பொருள் கொள்ளலாம். ஸ்ரீ - மாயாசக்தி; தக்ஷிண - தேர்ந்த; அமூர்த்தி - உருவமில்லாதவன், (7)

अस्यार्थ :—

8, 9

अन्तरस्मिन्निमे लोकाः अन्तर्विश्वमिदं जगत् ।
बहिर्वन्माययाऽऽभाति दर्पणे प्रतिबिम्बितम् ॥
स्वप्नेस्वान्तर्गतं विश्वम् यथा पृथगिवेक्ष्यते ।
तथैव जाग्रत्कालेऽपि प्रपञ्चोऽयं विविच्यताम् ॥

10

स्वप्ने स्वसत्तैवार्थानाम् सत्ता नान्येति निश्चिता ।

---

இதன் பொருள் (வருமாறு) :—

பிரபஞ்சம் ஆத்மாவினிடத்து உள்ளது.

8, 9.

இவ் வுலகங்கள் இதனுள் இருக்கின்றன. இப் பிரபஞ்சமெல்லாம் உள்ளே உள்ளன. கண்ணுடியினுள் பிரதிபலிக்கப் பெற்றது (போல் உள்ளேயுள்ள இப் பிரபஞ்சமானது) மாயையினுல் வெளியிலிருப்பது போலத் தோற்று கின்றது.

கனவிலே பிரபஞ்சமானது தன்னுள் [ ஆத்மாவினுள் ] உள்ள (தாயி னும்), எப்படி (தூங்குகிறவனுக்குப்) புறம்பாக உள்ளதுபோலக் காணப்படு கின்றதோ, அப்படியே விழிப்புஸமயத்திலும் இப் பிரபஞ்சத்தை ஆராய்க.

நாம் காண்கின்ற இப் பொருள்களெல்லாம் பரம்பொருளினிடத்து உள்ளன. அதற்குப் புறம்பாக, சுதந்திரமாக ஒருபொருளும் இல்லை. என்று தைத்திரீய ப்ராஹ் மணம் (2-8-8.) கூறுகின்றது. இப் பிரபஞ்சமானது, கண்ணுடியில் போல, பரம்பொரு ளான ஆத்மாவினுள் உள்ளதாயினும், மாயையினுல் வெளியிலிருப்பதுபோலத் தோற் கின்றது. —எப்படிப்போல எனில், —கனவிலே காணப்படும் பிரபஞ்சமானது ஆத்மா வினுள் இருப்பதாயினும், அவ்வாத்மாவிற்குப் புறம்பாக வெளியிலிருப்பதாகத் தோற்று கின்றது. அதுபோலவே, நனவில் [ விழிப்புநிலையில் ] காணப்படும் பிரபஞ்சமும் ஆத் மாவினுள் இருப்பதாயினும், அவ் வாத்மாவிற்குப் புறம்பாக வெளியி லிருப்பதாகத் தோற்றுகின்றது என்பதாம். (8,9)

10

இனி, இந்தத் திருஷ்டாந்தத்திலுலேயே, ஆத்மாஒன்றே உண்மைப்பொருள் என்னலாம். —எப்படி ?—கூறுவோம்.

को जाग्रति विशेषोऽस्ति जडानामाशुनाशिनाम् ॥

11

स्वप्ने प्रकाशो भावानाम् स्वप्रकाशान्न हीतरः ।
जाग्रत्यपि तथैवेति निश्चिन्वन्ति विपश्चितः ।

---

கனவில் (காணப்படும்) பொருள்களின் உண்மையானது ஆத்ம உண்மையேதான், வேறன்று; என நிச்சயிக்கப்பட்டுளது. சடமாய், விரைய அழியுந்தன்மையனவாய் நனவில் (காணப்படும் பொருள்கட்கு) வேற்றுமை என்ன? [ஒன்று மில்லை.]

கற்பனையாகிய பாம்பு விளங்குவதாயினும், அதன் உண்மையானது கயிற்றின் உண்மையேயன்றி வேறன்று: அதாவது, பாம்பு-தனக்கென்று ஓர் சொந்தமான உண்மையில்லாததாய், கயிற்றின் உண்மையினாலேயே தனக்கு உண்மையுடைத்தாகின்றது. அவ்வாறே, கனவில் விளங்கும் பொருள்கட்கெல்லாம் ஆத்ம உண்மையினாலேயே உண்மையாம் என்க. இனி, நனவில் விளங்கும் பொருள்களும் - கனவில் விளங்கும் பொருள்கள் போல, சடமாய், தோற்றம்மாத்திரமான இருப்புள்ளனவாய், தற்காலபோகத்தைத் தருவனவாய், பொள்ளெனப் போய்விடும் இயல்பினவாய், முடிவிலே ஸாரமற்ற விரஸமாய் இருக்கின்றன. அன்றியும், கனவு நனவினால் தள்ளுண்டு போமாறுபோல, நனவும் ஆத்மஅறிவினால் தள்ளுண்டு போகின்றது. ஆகவே, இவ்வாறாகக் கனவொடு ஒப்பநிற்கின்ற நனவினுடைய உண்மையும் ஆத்ம உண்மையேயன்றி வேறன்று. எனவே, உண்மையென்பது வாஸ்தவத்திலே ஆத்மா என முடிந்தது. (10)

**ஆத்மஒளியால் பிரபஞ்சம் விளங்குகின்றது.**

11

கனவில் (காணப்படும்) பொருள்களின் விளக்கமானது தன் [ஆத்ம] ஒளியினா லாகின்றது; வேறன்று. நனவிலும் அப்படியேதான் என்று அறிவுடையோர் துணிகிறார்கள்.

கனவுப்பொருள்கள் தமக்குச் சொந்தமான விளக்கமில்லாதவையாய், ஆத்ம உண்மையினாலேயே உண்மையைப் பெறுமாறுபோல, ஆத்மவிளக்கத்தினாலேயே விளங்குதலையும் பெறுகின்றன: சுதந்திரமாகத் தம்மால் தாமே விளங்குவன வல்ல. அவ்வண்ணமே, நனவுப்பொருள்களும் ஆத்மவிளக்கத்தினாலேயே விளங்குகின்றன; கனவுப்பொருள்களை ஒத்துள்ளமையின்.

சங்கை:—ஆயின், நனவுப்பொருள்கள் ஸூர்யன் முதலியவற்றால் விளங்குகின்றனவே? எனின், —

12

निद्रया दर्शितानर्थान् न पश्यति यथोत्थितः ।
सम्यग्ज्ञानोदयादूर्ध्वम् तथा विश्वं न पश्यति ॥

---

ஸமாதாநம் :—உண்மை; ஆயினும், அந்த ஸூர்யன் முதலியனவும் ஆத்ம ஒளியினுலேயே விளக்க முறுகின்றன. அவ்வாறே,

" आत्मनैवायं ज्योतिषाऽऽस्ते पल्ययते कर्म कुरुते विपल्येति "

" இவன் [மனிதன்] ஒளியான ஆத்மாவினுலேயே உட்காருகிருன், போகிருன், தொழிலைச் செய்கிருன், திரும்பிவருகிருன் " (பிரு-4-3-6);

" तस्य भासा सर्वमिदं विभाति "

" அதனது ஒளியினுல் இதெல்லாம் விளங்குகின்றது " (மு-2-2-10).

" यदादित्यगतं तेजः जगद्भासयतेऽखिलम् ।
यच्चन्द्रमसि यच्चाग्नौ तत्तेजो विद्धि मामकम् ॥"

" எந்த ஒளி ஸூர்யனைச் சார்ந்துநின்று, உலகையெல்லாம் பிரகாசிக்கச் செய்கின்றதோ; எது சந்திரனிடத்தும் உள்ளதோ; எது தீயினிடத்து உள்ளதோ; அந்த ஒளியை என்னுடையதாகத் தெரிந்துகொள் " (வே-கீ-15-12)

என சுருதியும், ஸ்மிருதியும் கூறுகின்றன; எனவே, கனவும் நனவும் ஆத்ம ஒளியினுலே ஒருநிகராக விளங்குகின்றன; என்ருலும், கனவிலே ஸூர்யன் முதலியன இல்லாமையால் கனவுவியவஹாரமானது நுண்மையாயிருக்கின்றது. ஆனுல், அவை நனவிலே உள்ளமையால் நனவுவியவஹாரமானது வெளிப்படையாகப் பரும்படியாயிருக்கின்றது: கண் முதலிய இந்திரியங்கள் ஸூர்யன் முதலியவற்றைத் துணையாகக் கொண்டு வெளியிற் செல்லுகின்றமையின் என்க.

ஐந்தாம் பக்கத்தில் வினவிய முதல் வினுவிற்கு - இந்த 10, 11-ஆம் சுலோகங்களால் விடை கூறப்பட்டது.

(11)

அத்வைதக் காட்சி

12

எழுந்திருந்தவன் - உறக்கத்தால் காட்டப்பெற்ற பொருள்களைக்காணு தவாறுபோல, (ஒருவன் தனக்கு) மெய்யுணர்வு உதித்தபின்னர் பிரபஞ்சத்தைக் காணமாட்டான்.

13

" अनादिमायया सुप्तो यदा जीवः प्रबुध्यते ।
अजन्मनिद्रमस्वप्नम् अद्वैतं बुध्यते तदा ॥ "

---

மெய்யுணர்வு - எல்லாவற்றிற்கும் அடி ஆதாரமாய் உள்ளேயுள்ள ஆத்மாவான ப்ரஹ்மத்தை உள்ளபடி காணும் அறிவு. (12)

13

அவ்வண்ணமே,

" அநாதி மயக்கத்தால் உறங்கிக்கொண்டிருக்கும் ஜீவன் எப்பொழுது விழித்துக்கொள்கின்றானோ ; அப்பொழுது—பிறவாததை, உறக்கமில்லாததை, கனவில்லாத அத்வைதத்தை அறிகிறான்."

இந்த சுலோகம் கௌடபாதரது திருவாக்கு (கௌ-1-16).

அநாதி மயக்கமாவது - தொடக்கமின்றித் தொடர்ந்துவரும் அறியாமையும் விபரீதஉணர்வுமாம். அறியாமையென்பது - உண்மையினை உணராமை: விபரீத உணர்வென்பது - கயிற்றைப் பாம்பென்றும், இப்பியை வெள்ளியென்றும் இவ்வாறே ஒன்றனை வேறொன்றாகத் துணிதல்: மறுபிறப்பும், நல்வினை தீவினைப் பயனும், கடவுளும் இல்லையென இவைபோன்றவற்றைக் கூறும் மயக்க நூல்வழக்குக்களை மெய்ந் நூல்வழக்கெனக் கொள்ளுதலும் அது. " இவள் எனது மனைவி, இவர் எனது மக்கள், இது எனது நிலம். இது எனது வீடு, இது எனது குதிரை ; நான் இவற்றிற்குச் சொந்தக்காரன் ; நான் இன்பமுடையவன், துன்பமுடையவன் ; நான் இதனால் வறுமையடைந்தேன், இதனால் செல்வமடைந்தேன் " என இத்தகைய விபரீத உணர்வுகளைக் கனவிலும் நனவிலும் உடையவனாய் அறியாமையாகிய உறக்கத்தில் அயர்ந்துகிடக்கும் ஜீவன் - வேதாந்த மெய்ப்பொருளைக் கண்டுணர்ந்த பரம காருணிகனான குருவினால் " நீ இவ்வாறு நிலம் குதிரை முதலியவற்றினுடைய சொந்தக்காரனாக, இன்புற்றவனாக, துயருற்றவனாக, இன்னுமித்தன்மையனாக இல்லை ; மற்று, நீ அதுவாக இருக்கிறாய்" என அறிவுறுத்தப்பெற்றவழி, கனவு நனவு உறக்கம் என்னும் மூன்றனையும் காணாதவனாய் அவற்றிற்கு அப்பால் உள்ள ப்ரஹ்மமான ஆத்மஸ்வரூபத்தை நேரேகாண்கிறான் என்பது கருத்து. பிறவாததை - பொருள்கட்கு உரிய: பிறத்தல், இருத்தல், வளர்தல் முதலிய வேறுபாடுகளில்லாததை. உறக்கமில்லாததை - பிறப்பு முதலியவற்றிற்குக் காரணமான அஜ்ஞாநமில்லாததை. ஆதலால், கனவில்லாத - அந்த அஜ்ஞாநத்தாலாகும் விபரீத உணர்வில்லாத. (13)

## 14, 15

श्रुत्याऽऽचार्यप्रसादेन योगाभ्यासवशेन च ।
ईश्वरानुग्रहेणापि स्वात्मबोधो यदा भवेत् ॥
भुक्तं यथाऽन्नं कुक्षिस्थम् स्वात्मत्वेनैव पश्यति ।
पूर्णाहन्ताकवलितं विश्वं योगीश्वरस्तथा ॥

---

14, 15.

அறியாமையும், பலதலையான உணர்வும், விபரீத உணர்வும் நீங்கி, அத்வைத அறிவைப் பெறுதற்கு வழிகளைக் கூறுபவராய், அதனையே விரித்துரைக்கிறார்:

சுருதியினாலும், ஆசார்யனது அருளினாலும், யோகப்பயிற்சியின் வலிமையினாலும், ஈச்வரனது அநுக்கிரகத்தினாலும் தன் ஆத்ம அறிவு எப்பொழுது உண்டாகுமோ, (அப்பொழுது)—

(ஒருவன்) உண்டு வயிற்றினுள் தங்கிய உணவைத் தானாகவே காண்குமாறுபோல, தேர்ந்த ஞானியானவன் பரிபூர்ணமான நான் என்னும் எண்ணத்தால் விழுங்கப்பெற்ற பிரபஞ்சத்தைத் தானாகவே காண்கிறான்.

யோகப்பயிற்சி என்பது - தெளிதல் என்னும் நிதித்யாஸநம். சுருதியும் ஆசார்யனும் உபதேசிக்கின்ற மெய்ப்பொருளைக் கேட்டுச், சிந்தித்துத், தெளிவதனால் பரமாத்மாவான ஈச்வரனைத் தொழ, ஈச்வரன் தன்னை அவ்வாறு தொழுவோனது உள்ளத்திலே தனது ப்ரஹ்மாத்மஸ்வரூபத்தை வெளிப்படுத்துவது - இங்கே, ஈச்வராநுக்கிரகமென்பது ; அவ்வாறே பகவான் இதனை எடுத்துச் காட்டுகிறார்:

"तेषामेवानुकम्पार्थम् अहमज्ञानजं तमः ।
नाशयाम्यात्मभावस्थः ज्ञानदीपेन भास्वता ॥"

"அவர்கட்கு அறியாமையினா லுண்டான இருட்டை, யான் (அவர்களது) சித்தவிருத்தியிலே இருந்து, ஒளிர்கின்ற ஞாந விளக்கைக்கொண்டு கருணையினாலேயே தொலைக்கின்றேன்" (வே-கீ-10-11).

நிதித்யாஸநமுதிர்ச்சியினால் "இதோ நான் இருக்கிறேன்" என்று தன் ஆத்மாவைப் ப்ரஹ்மமாகக் கண்டவன் பிரபஞ்சத்தைத் தன்னினும் வேறாகக் காண்பதில்லை; அதாவது, அவன் பிரபஞ்சத்தை - கேவல ஆத்மப்பொருளாய் எங்குமுள்ள ப்ரஹ்மமான நான் என்ற தானாகவே பார்க்கிறான்: ஒருவன் தான் உட்கொண்ட உணவைத் தன்னினும் வேறாகக் காணாது தானாகவே காண்பதுபோல. (14,15)

16, 17, 18, 19, 20

यथा स्वप्ने नृपो भूत्वा भुक्त्वा भोगान्यथेप्सितान् ।
चतुरङ्गबलोपेतः शत्रुं जित्वा रणाङ्गणे ॥
पश्चात्पराजितो भूत्वा वनं प्राप्य तपश्चरन् ।
मुहूर्तमात्रमात्मानं मन्यते कल्पजीविनम् ॥
तथैव जाग्रत्कालेऽपि मनोराज्यं करोत्यसौ ।
कालनद्योघवेगेन क्षीणमायुर्न पश्यति ॥
मेघच्छन्नोऽम्शुमालीव मायया मोहितोऽधिकम् ।
किञ्चित्कर्ता च किञ्चिज्ज्ञः लक्ष्यते परमेश्वरः ॥
यद्यत्करोति जानाति तस्मिंस्तस्मिन्परेश्वरः ।
राजा विद्वान् स्वसामर्थ्यात् ईश्वरोऽयमितीर्यते ॥

---

ஏழாம் பக்கத்தில் வினவிய ஐந்தாம் வினவிற்கு, இந்த 15-ஆம் சுலோகத்தினுல், "ஜீவன் அனைத்தையும் ஒரே ஆத்மஸ்வரூபமாக அறியக்கூடும்" என விடை கூறப்பட்டது. (14,15)

ஆத்மா என்பதே ஜீவனும், ஈச்வரனுமாம்.

16, 17, 18, 19, 20.

(ஒருவன்) கனவில் அரசனுகி, (தான்) பெற விரும்பியபடியுள்ள போகங்களை அநுபவித்து, சதுரங்கசேனையோடு கூடியவனுய்ப் போர்க்களத்தில் பகைவனை வென்று,

பின்பு தோல்வியுற்றவனுகிக் காட்டை யடைந்து தவம்புரிபவனுய் ஒரு சிறிதுபொழுதுமாத்திரத்தினுள் தன்னைக் கல்பகாலம் ஜீவித்தவனுக எண்ணிக்கொள்கிருன்.

அவ்வண்ணமே, இவன் நனவிலும் மனோராஜ்யத்தைச் செய்கிருன்; காலமென்னும் ஆற்றினுடைய ஓட்டத்தின் வேகத்தால் கழிந்துபோகும் ஆயுளை அறிவதில்லை.

பரமேச்வரன், மேகத்தால் மறைக்கப் பெற்ற ஸூர்யன்போல, மாயையினுல் மிக்குமயக்கப் பெற்றவனுய்ச் சிறிது செய்பவனுகவும், சிறிது அறிபவனுகவும் காணப்படுகிருன்.

பரமேச்வரன் தனது வல்லமையினுல் எதைதைச் செய்கின்றனே, அறிகின்றனே, அததிலே அரசனுகவும் வித்வானுகவும் (இருக்கின்றன்.

ஆதலால்), இவன் "ஈச்வரன்" எனப்படுகிருன். (பரமேச்வரன் - பரம் பொருள். அரசன் - எல்லாவற்றையும் செய்பவன். வித்வான் - எல்லாவற் றையும் அறிபவன்.)

ஈச்வரன் என்பவன் - ஜீவர்களை நியமித்து ஆள்பவனுய், உலகிற்கு அதிபதியாய், முற்றுமுணர்ந்தவனுய் சுதந்திர நிலையைப் பெற்ற ஆத்மாவாம்; கனவிலே ஒருவன் அரசனுகிக் குடிகளை நியமித்து ஆள்பவனுய், நாட்டிற்கு அதிபதியாய் சுதந்திரமாய் இருப்பதுபோல. ஜீவன் என்பவன் - பிறனுக்கு வசப்பட்ட சிற்றறி வினனுய், தான் விரும்பியதைப் பெறுதற்குக் கருவியான காரியத்தைச் செய்கின்ற ஆத்மாவாம்; ஒரரசன் கனவிலே தான் பகைவரால் வெல்லப்பட்டவனுகிக் காட்டிற் சென்று தவம் புரிவதுபோல.

வினு :—அப்படியானுல், உண்மையிலே பரம்பொருளான ஆத்மா ஒன்ருயிருக்க, அது தன்னை எப்படி ஜீவனுக, ஸம்ஸாரியாகப் பலபல வேதனைகட்கு ஆளாக்கிக் கொள்ளக்கூடும்? அல்லது, அது யாரை உத்தேசித்து அநர்த்தமான ஸம்ஸார மாயையை அமைக்கின்றது? உத்தேசிக்கப்படுகின்ற ஜீவர்கள் படைப்புத் தொடக் கத்திலில்லையாதலின்.

விடை :—அப்படியன்று : ஸம்ஸாரம் அநாதியானமையால், இத்தகைய வினுக் கட்கு இடமில்லை. ஆதியென்பது - தொடக்கம், உற்பத்தி. மாயை, ஜீவன், ஈச்வரன் என்னும் வேறுபாட்டிற்குத் தொடக்கமில்லை. தொடக்கமிருந்தாலன்ரே இவ்வினுக்கள் நிகழக்கூடும் என ஒழிக.

இனி, ஒருவன் கனவு காணுமளவிலே, "நான் போரில் பகைஞரை வென்று சுதந்திர அரசனுகிக் குடிகளை ஆண்டுவருகிறேன். எனது மனைவியோ கட்டழகு வாய்ந்த பொன்மேனியாள், குயிலன்ன மொழியுடையாள்; எனது நலத்தைக் கருதி குறிப்பறிந்து நடக்கும் உயர்ந்த புத்திமதீ இவள். எனது மக்களும் கல்வி ஒழுக்கமுடை யோர். எனக்கு ஒரு குறையுமில்லை. வெகுகாலமாக இஷ்டப்படி போகங்களை அநுபவித்து வருகிறேன்" என்று மனேராஜ்யம் செய்துகொண்டிருக்க, அக்கனவிலேயே பகை யரசன் வந்து பதினைந்து வருடங்கள் அவனேடு போர்புரிந்து நாட்டைக் கவர்ந்து கொள்ள, பின்பு அவன் காட்டையடைந்து பல வருடங்கள் வாழ்ந்தவனுகத் தன்னை நினைத்துக் கொள்கிருன். இவன் கனவு கண்ட காலம் நிமிஷக்கணக்கிற்கு உட்பட்ட ஒரு சிறிது பொழுது. இச் சிறிய காலத்தை நெடிய காலமாகக் கொள்ளுதல் ஜீவனது அறியாமையாம்.

மேலும், இவன் கனவிற்போல நனவிலும் மனேராஜ்யத்தைச் செய்கிருன்: உல கைக் கற்பித்துக் கொள்கிருன். காலம் விரைந்தோடிச் செல்வதனுல் ஆயுள் குறை தலையும் உணர்வதில்லை.

இவன் உண்மையிலே பரம்பொருளாயினும், மாயைக்கு வசப்பட்டு அற்ப சக்தியுள்ள வனுய், சிறுதொழிலைச் செய்பவன், சிற்றுணர்வினன், ஆளப்படுபவன், நியமிக்கப்படு

21

**ज्ञानक्रिये शिवेनैक्यात् सङ्क्रान्ते सर्वजन्तुषु ।
ईश्वरत्वं च जीवानाम् सिद्धं तच्छक्तिसङ्गमात् ॥**

---

பவன்; மேகத்தினுல் மறைப்புண்டு ஒளிமழுங்கிப் பிரகாசிக்கும் ஸூர்யன்போல என்க.

மற்று, ஈச்வரன் என்பவன் ஜீவனைப்போல உண்மையிலே பரம்பொருளாய், மாயையைத் தனக்கு வசப்படுத்திக் கொண்டவனும், அளவிலாச் சக்தியுடையவனும், படைப்பு முதலிய பெரிய தொழில்களைச் செய்பவன், முற்றுணர்வினன், ஆள்பவன், நியமிப்பவன்.

சங்கை :—ஆயின், ஜீவனும் ஈச்வரனும் உண்மையிலே பரம்பொருளாதலால், முந்தினவன் பிந்தினவனுக்கு உட்பட்டவன், அவனுல் நியமித்து ஆளப்படுபவன் என்பது எப்படி? அதாவது, அந்தச் சிறுமையும் பெருமையும் எவனுலானவை?

ஸமாதானம் :—உபாதியினுலானவை. ரஜஸ்தமோ குணங்களால் கலக்கப் பெருத சுத்த ஸத்துவமான மாயை ஈச்வரனது உபாதியாம். ரஜஸ்தமோகுணங்களால் கலக்கப்பெற்ற அசுத்த ஸத்துவமான மாயை ஜீவனது உபாதியாம். ஈச்வரன் தனது உபாதியினுல் உலகங்களைப் படைத்தல் முதலிய அளவிலாச் சக்தியை யுடையவனுகின்றுன்; ஜீவன் தனது உபாதியினுல் மாடமாளிகைகளைப் படைத்தல் முதலிய அற்ப சக்தியை யுடையவனுகின்றுன். ஆகவே, அதிகவலிமையுள்ள அரசன் அற்பவலிமையுள்ள குடிகளைப்போல, உயர்ந்த உபாதியுள்ள ஈச்வரன் இழிந்த உபாதியுள்ள ஜீவர்களை நியமித்து ஆளவல்லவனும். இவ்வாருக ஈச்வரனுக்கு உயர்வான பெருமையும், ஜீவர்கட்குத் தாழ்வான சிறுமையும் உள்ளன. (16, 17, 18, 19, 20)

**ஈச்வரனே எல்லாவற்றினுடைய ஆத்மாவாம்.**

21

இவ்வாருக ஜீவர்களது இயல்பையும், ஈச்வரனது இயல்பையும் கூறி "எல்லாவற்றினுடைய ஆத்மா ஈச்வரனேதான்" என உணர்த்துகிருர்:

(ஜீவர்கள்) ஈச்வரனேடு ஒன்ருயிருத்தலின், அறிவும் செயலும் எல்லாப் பிராணிகளிடத்தும் பொருந்தியுள்ளன; அவனது சக்திக் கலப்பினுல் ஜீவர்கட்கு ஈச்வரனது தன்மை அமைந்துளது.

தீயொடு ஒன்ருயுள்ளமையால் இரும்புக்கட்டி வைக்கோலை எரிக்கின்றது. அதுபோல, எல்லாவற்றையும் சுதந்திரமாய் அறிபவனும் செய்பவனுமான ஈச்வரனேடு ஒன்ருயுள்ளமையால் ஜீவர்கள் ஒன்றை அறிபவராக, செய்பவராக இருக்கிருர்கள் ஆகவே, அறிவென்னும் ஞானமும் செய்கையென்னும் கிரியை

22, 22½

अयं घटोऽयं पट इत्येवं नानाप्रतीतिषु ।
अर्कप्रभेव ज्ञानं तत् स्वयमेव प्रकाशते ॥
ज्ञानं न चेत् स्वयं सिद्धं जगदन्धं तमो भवेत् ।

23, 24, 25.

न चेदस्य क्रिया काचित् व्यवहारः कथं भवेत् ॥

---

யுமாகிய இந்த ஈச்வரசக்திகள் ஜீவர்களிடத்து உள்ளமையால், அவர்கள் ஈச்வரனும் என்க; எனவே, ஈச்வரனேதான் எல்லாவற்றினுடைய ஆத்மாவாய் இருக்கிருன் என முடிந்தது.

ஆரும் பக்கத்தில் வினவிய நான்காம் விஞவிற்கு, இதனுல் விடை கூறப்பட்டது. (21)

அறிவு.

22, 22½.

"இது குடம்" "இது ஆடை" என இத்தகைய வேறுவேருன உணர்ச்சிகளுள் அந்த அறிவு ஸூர்யன் ஒளிபோல, தானே விளங்குகின்றது.

அறிவு தானே அமையாததாயின், உலகம் குருடான இருட்டாகும்.

"இது குடம்" எனக் குடத்தை அறியும் அறிவு எதுவோ, "இது ஆடை" என ஆடையை அறியும் அறிவு எதுவோ, "இது புஸ்தகம்" எனப் புஸ்தகத்தை அறியும் அறிவு எதுவோ, அஃதெல்லாம் அறிவாதலால், அறிவென்பது ஒன்றென்க. இனி, அவ்வறிவு தானே விளங்குவதன்ருயின், உலகத்தில் ஒருவர்க்கும் ஒன்றும் தெரிய மாட்டாது. ஆனுல், அப்படி இல்லை. நள்ளிருளில் இருக்கின்ற குருடனுக்கும் நாற்றம் புலப்படுன்றது; "இது மல்லிகையின் மணம்" என்னும் அறிவு தானே விளங்குகின்றது. ஆதலால், அறிவு ஸ்வயம் பிரகாசமாம். (22, 22½)

செயல்.

23, 24, 25.

இவனது செயலொன்று இல்லையாயின், வியவஹாரம் எவ்வாறு நிகழும்?

क्रिया नाम परिस्पन्दपरिणामस्वरूपिणी ।
स्पन्दमाने बहिर्ज्ञाने तदङ्कुरवदुद्भवेत् ॥
उत्पाद्यप्राप्यसंस्कार्यविकार्योपाश्रया क्रिया ।
करोति गच्छत्युन्मार्ष्टि छिनत्तीति प्रतीयते ॥

---

செயலென்பது - அசைவுவடிவாக, திரிபுவடிவாக இருக்கின்றது; அறிவு வெளியே செல்லுமிடத்து அதனது முளைபோல உண்டாகின்றது.

இனி, அந்தத் திரிபாகிய செயல் எவ்வாறு காணப்படுகின்றது ?

செயலானது - "இயற்றுகிறான்," "அடைகிறான்," "சுத்தப்படுத்துகிறான்," "குறைக்கிறான்" என ஆக்கப்படுவதும், அடையப்படுவதும், ஸம்ஸ்கரிக்கப்படுவதும் வேறுபடுத்தப்படுவதுமாகிய இவற்றைச் சார்ந்ததாகப் புலப்படுகின்றது.

அசைவு - அசைதல். திரிபு - திரிதல், வேறுநிலையைப் பெறுதல். அசைதலென்னும் செயல் - எறிந்த அம்பிலும், திரிதலென்னும் செயல் - நகையாயுள்ள பொன்னிலும் காணப்படுகின்றது. இனி, இவற்றிற்கு இச்செயலானது - அறிவென்னும் சேதநப்பொருளாலாவது; ஆதலால், "அசேதநமான ஜடப்பொருள் சேதனத்தால் செய லுறுகின்றது" எனக் காட்டுவார் "அதனது [அறிவினது] முளைபோல" என்றார். எங்ஙனமெனில்,—கண்ணின்வழியாக வெளியே செல்லுகின்ற அகக்கரணத்தோடு அறிவும் செல்ல, குடம் என்னும் அறிவு உண்டாக, பார்த்தல் என்னும் செயல் நிகழ்கின்றது. ஜடப்பொருளாகிய கண்ணிற்குப் பார்த்தல் என்னும் செயலானது உள்ளேயுள்ள ஆத்மாவான அறிவுப்பொருளினால் ஆகின்றது: வண்டிக்கு ஓடுதல் போல.

இவ்வாறாக, ஜடப்பொருள்கள் தாமாகத் தொழிற்பட ஏலாவாதலால், பார்த்தல் கேட்டல் முதலிய உலகவியவஹாரங்களெல்லாம் நடைபெறாதிருத்தல் வேண்டும். ஆனால், அப்படியில்லை. ஆகவே, பிராணன் முதலியவற்றினுடைய செயலும் - அங்தர்யாமியாய் உள்ளேநின்று அனைத்தையும் நியமித்து வருகின்ற ஈச்வரனது ஸந்நிதிமாத்திரத்தா லாகின்றது; எனவே, எல்லாச் செயலும் அவனது செயலாம் என்றபடி. நான்காம் உல்லாஸத்தினுள் 7,8 - ஆம் சுலோகங்களைப் பார்க்க.

திரிதலாகிய செயலானது - இயற்றப்படுவதும், அடையப்படுவதும், ஸம்ஸ்கரிக்கப்படுவதும், வேறுபடுத்தப்படுவதும் என நால்வகைத்தான செயப்படுபொருளைச் சார்ந்துளது. 1. "வீட்டைக் கட்டுகிறான்"; 2. "பாலைக் கறக்கிறான்";

26.

शिवो ब्रह्मादिदेहेषु सर्वज्ञ इति भासते ।
देवतिर्यङ्मनुष्येषु किञ्चिज्ज्ञस्तारतम्यतः ॥

27.

जरायुजोऽण्डजश्चैव स्वेदजः पुनरुद्भिदः ।
एते चतुर्विधा देहाः क्रमशो न्यूनवृत्तयः ॥

---

3. "தரையை ப்ரோக்ஷிக்கிருன்"; 4. "நெல்லைக் குத்துகிருன்" என்பன முறையே உதாரணம். இங்கே, இயற்றுதலாவது - முன் இல்லாத வீட்டை உண்டாக்குதல்; அடைதலாவது - கறக்கும் வரையிலும் பாலைப் பெறுதல்; ஸம்ஸ்கரித்தலாவது - ஜலத்தைத் தெளித்தலால், தரையைச் சுத்தஞ்செய்தல்; வேறுபடுத்தலாவது - முன் உள்ள உமியைப் பிரித்தல். (23, 24, 25)

26

இப்பொழுது, முற்றுணர்வுடைமையும் சிற்றுணர்வுடைமையும் உபாதிபேதத்தாலாகின்றன எனக் காட்டுகிருர்:

ஈச்வரன் (உபாதியினுடைய) ஏற்றத்தாழ்ச்சிக்கு ஏற்ப ப்ரஹ்மா முதலானவருடைய உடம்புகளில் முற்றுணர்வினனுக விளங்குகிருன்; தேவர் விலங்கு மனிதர்களில் சிற்றுணர்வினனுக விளங்குகிருன்.

14, 15, 16, ஆம் பக்கங்களைப் பார்க்க. (26)

27

அந்த ஏற்றத்தாழ்ச்சி, உடம்பு என்னும் உபாதியினுலாகின்றது எனக் கூறுகிருர்:

பையிற் பிறப்பதும், முட்டையிற் பிறப்பதும், வியர்வையிற் பிறப்பதும்; நிலத்திற் பிறப்பதுமாகிய இந்நால்வகை உடல்களும் முறையே தாழ்ந்த தன்மையன.

பையிற் பிறப்பவை - மனிதர் மாடு முதலியன. முட்டையிற் பிறப்பவை-பறவை, பாம்பு முதலியன. வியர்வையிற் பிறப்பவை - பேன், கொசு முதலியன. நிலத்திற் பிறப்பவை - மரம், செடி முதலியன. இவற்றினுள், முந்தினதைக் காட்டிலும் பிந்தினது தாழ்ந்தது. அவ்வாறே, மனிதனது உடம்பிற்கும், மாட்டினது உடம்பிற்கும் வேற்றுமை உள்ளமையால், பையிற் பிறப்பனவற்றினுள்ளும் அறிவு முதலியவற்றினுடைய ஏற்றத்தாழ்ச்சிகளை நோக்குக. (27)

28

**ब्रह्मादिस्तम्बपर्यन्ता स्वप्नकल्पैव कल्पना ।**
**साक्षात्कृतेऽनवच्छिन्ने प्रकाशे परमात्मनि ॥**

29

**अणोरणीयान्महतो महीयानिति वेदवाक् ।**
**रुद्रोपनिषदप्येवम स्तौति सर्वात्मकं शिवम ॥**

---

**வேற்றுமைக்கு மாயையே காரணம்.**

28

ஜீவன் ஈச்வரன் முதலிய வேறுபாடுகளெல்லாம் மாயாமயம் என்று கீழே உணர்த்தியதை இப்பொழுது முடிக்கிறார்:

அளவிலா ஒளியான பரமாத்மாவை நேராகக் கண்டவிடத்து, ப்ரஹ்மா முதல் புல்ஈருகவுள்ள கற்பனை(யெல்லாம்) கனவை நிகர்த்ததே என்க.

எங்குமுள்ள ஆத்மாவைக் கண்டு எல்லாம் தானானவிடத்து, யார் யாரைக் காண்பான்? அதாவது - கனவு, நனவிலே எதிர்ப்படாது சடக்கென்று பொய்ம்மையாகக் கரைந்துபோவது போல, த்வைதப்பிரபஞ்சம் நிர்விகல்ப ஸமாதியிலே இல்லாமற் போகின்றது. (28)

29

வினா:—ஆயின், எல்லாம் ஆத்மஸ்வரூபந்தான் என்பதற்குப் பிரமாணம் யாது?
விடை:—வருமாறு:

(ப்ரஹ்மம்) "சிறிதினும் சிறிது, பெரிதினும் பெரிது" என்பது-வேதத்தின் திருவாக்கு. இவ்வாறு ருத்ரோபநிஷத்தும் ஈச்வரனை ஸர்வாத்மாவாக [எல்லாவற்றினுடைய ஆத்மஸ்வரூபமாக]ப் புகழ்கின்றது.

"**अणोरणीयान् महतो महीयान् आत्माऽस्य जन्तोर्निहितं गुहायाम् ।**"

"ஆத்மா சிறிதினும் சிறிது: பெரிதினும் பெரிது: இந்தப் பிராணியினுடைய ஹிருதயத்திலே இருப்பது" (கட-2-20; ச்வே-3-20; ம-நா-8-3.)

"**यस्मान्नाणीयोऽस्ति न ज्यायोऽस्ति कश्चित् ।**"

"எதனைக்காட்டிலும் நுண்மையானது இல்லையோ, பருமையான தொன்று இல்லையோ"—(ச்வே-3-6; ம-நா-10-4).

30

ईश्वरो गुरुरात्मेति मूर्तिभेदविभागिने ।
व्योमवद्व्याप्तदेहाय दक्षिणामूर्तये नमः ॥

31

इति श्रीदक्षिणामूर्तिस्तोत्रार्थप्रतिपादके ।
प्रबन्धे मानसोल्लासे प्रथमोल्लाससंग्रहः ॥

---

" अणोरणीयानहमेव तद्वन्महान् । "

" நானே சிறிதினும் சிறியவன் ; அதுபோல, (எல்லாவற்றிற்கும்) பெரியவன் "—(கை-20).

இவ்வாறு கடோபநிஷத்தும், ச்வேதாச்வதரோபநிஷத்தும், மஹாநாராயணேபநிஷத்தும், கைவல்யோபநிஷத்தும் ஆத்மவடிவத்தை வெகு சமத்காரமாகக் கூறுகின்றன. ஒருவன் எதனைச் சிறியதாகக் கொள்கின்ருனே, ஆத்மா அதனினும் சிறிதாம்: அவ்வண்ணமே, எதனைப் பெரியதாகக் கொள்கின்ருனே, ஆத்மா அதனினும் பெரிதாம். அதாவது-ஆத்மஸ்வரூபத்தின் நுண்மையும் விரிவும் இடத்தால் அளவுபடா என்பதாம். ஆகவே, கனிகள் கூடையிலிருப்பதுபோல, ஆத்மாவாகிய ப்ரஹ்மம் இடமென்பதில் இல்லை: இடமென்பதைக் கடந்து, அதற்கு அப்பால் தானே தன்மஹிமையில் தங்கியுளது. ஆதலால், ஆத்மா எங்குமுள்ள பொருளென்க. (29)

30

இவ்வாறு எங்குமுள்ள ஒன்ருன தனிப்பொருளாயினும்,

ஈச்வரன், ஆசார்யன், ஆத்மா என்னும் வடிவத்தின் வேற்றுமையால் வேறுபட்டு, ஆகாசம்போல் (எங்கும் தனது) ஸ்வரூபம் நிறைந்த தக்ஷிணமூர்த்திக்கு நமஸ்காரம்.

ஈச்வரஸ்வரூபமாகவும், குருஸ்வரூபமாகவும், ஆத்மஸ்வரூபமாகவும் உள்ளது ப்ரஹ்மமான ஒரேபொருளென்பார், " (எங்கும் தனது) ஸ்வரூபம் நிறைந்த " எனச் சிறப்பித்துக் கூறினர். (30)

31

இதனேடு, எ-ஆம் பக்கத்திலுள்ள முதல் சுலோகத்தின் உரையை முடிக்கிருர்:

ஸ்ரீ தக்ஷிணமூர்த்தியினுடைய ஸ்தோத்திரத்தின் பொருளை விரித்து உணர்த்துகின்ற மாநஸோல்லாஸம் என்னும் நூலினுள் முதல் உல்லாஸப் பொழிப்புரை முற்றும். (31)

குறிப்பு:—1. ஐந்தாம் பக்கத்தில்வினவிய முதல் விஞவிற்கு 10, 11-ஆம் சுலோகங்களால் விடை கூறப்பட்டது.

2, 3. ஆரும் பக்கத்தில் வினவிய இரண்டாம் விஞவிற்கும், மூன்ரும் விஞவிற்கும்-16, 17, 18, 19, 20-ஆம் சுலோகங்களால் விடை கூறப்பட்டது.

4. ஆரும் பக்கத்தில் வினவிய நான்காம் விஞவிற்கு-21-ஆம் சுலோகத்திஞல் விடை கூறப்பட்டது.

5. ஏழாம் பக்கத்தில் வினவிய ஐந்தாம் விஞவிற்கு-15-ஆம் சுலோகத்திஞல் விடை கூறப்பட்டது.

6. ஏழாம் பக்கத்தில் வினவிய ஆரும் விஞவிற்கு-14-ஆம் சுலோகத்திஞல் விடை கூறப்பட்டது.

7. ஏழாம் பக்கத்தில் வினவிய ஏழாம் விஞவிற்கு- "ஸம்ஸாரம் முற்றும் ஒழிதலே ஆத்ம அறிவின் பயன்" என இனி மூன்ரும் உல்லாஸத்திஞள் விடை கூறப்படும்.

8, 9. ஏழாம் பக்கத்தில் வினவிய எட்டாம் விஞவிற்கும், ஒன்பதாம் விஞவிற்கும் -19, 20, 26, 27-முதலிய சுலோகங்களால் விடை கூறப்பட்டது.

---

## முதல் அத்தியாயம்.

---

### பதவுரை.

1

| | |
|---|---|
| विनायकः | விநாயகன் |
| मे | எனக்கு |
| मङ्गलम् | மங்களத்தை |
| दिशतु | தந்தருளுக ; |
| सरस्वती | ஸரஸ்வதீ |
| मे | எனக்கு |
| मङ्गलम् | மங்களத்தை |
| दिशतु | தந்தருளுக ; |
| महेश्वरी | மஹேச்வரீ |
| मे | எனக்கு |
| मङ्गलम् | மங்களத்தை |
| दिशतु | தந்தருளுக ; |
| सदाशिवः | ஸதாசிவன் |
| मे | எனக்கு |
| मङ्गलम् | மங்களத்தை |
| दिशतु | தந்தருளுக. |

---

2

| | |
|---|---|
| मुनयः | ரிஷிகள் |
| आत्मलाभात् | " ஆத்மலாபத்தைக் காட்டிலும் |
| परः | வேறு |
| लाभः | லாபம் |

| | |
|---|---|
| न अस्ति | இல்லை " |
| इति | என்று |
| विदुः | அறிகிறார்கள். |
| कविः | அறிவுள்ளவன் |
| तल्लाभार्थम् | அதனைப் பெறுதற்காக |
| स्वात्मानम् | தன் ஆத்மஸ்வரூபமான |
| परमेश्वरम् | பரமேச்வரனை |
| स्तौति | துதிக்கிறான். |

---

3

| | |
|---|---|
| यः | எவன் |
| स्वेच्छया | தனது இச்சைப்படி |
| सृष्टम् | படைக்கப்பட்ட |
| विश्वम् | ஜகத்தை |
| आविश्य | புகுந்து |
| मनसि | மனத்தில் |
| स्थितः | நிற்கின்றானோ, |
| सः | அந்த |
| परमेश्वरः एव | பரமேச்வரனே |
| अनेन | இந்த |
| स्तोत्रेण | ஸ்தோத்திரத்தினால் |
| स्तूयते | துதிக்கப்படுகிறான். |

---

4, 4½

| | |
|---|---|
| अस्ति | " இருக்கின்றது, " |
| प्रकाशते | " விளங்குகின்றது " |
| इति | என்று |
| व्यवहारः | வியவகாரம் |
| प्रवर्तते | செல்லுகின்றது. |

| | |
|---|---|
| तत् | அந்த |
| अस्तित्वम् | இருக்கின்றது என்பதும் |
| प्रकाशत्वम् च | விளங்குகின்றது என்பதும் |
| कस्मिन् | எந்த |
| अर्थे | பொருளில் |
| प्रतिष्ठितम् | நிலைபெற்றது ? |
| तेषु तेषु | அந்தந்த |
| अर्थेषु वा | பொருள்களிலாயினும் |
| किं (प्रतिष्ठितम्) | (நிலைபெற்றதா) ? |
| सर्वात्मनि | எல்லாவற்றிற்கும் ஆத்மாவான |
| ईश्वरे वा | ஈச்வரனிடத்திலாயினும் |
| किं (प्रतिष्ठितम्) | (நிலைபெற்றதா) ? |

---

5

| | |
|---|---|
| च | மேலும், |
| ईश्वरत्वम् | ஈச்வரத்தன்மை |
| कीदृशम् | எப்படிப்பட்டது ? |
| जीवत्वम् | ஜீவத்தன்மை |
| (कीदृशम्) | (எப்படிப்பட்டது) ? |
| च | அன்றியும், |
| सर्वात्मत्वम् | எல்லாவற்றினுடைய ஆத்மாவின் தன்மை |
| (कीदृशम्) | (எப்படிப்பட்டது) ? |

---

6, 6½

| | |
|---|---|
| जीवः | ஜீவன் |
| तत् | அதனை |
| कथम् | எப்படி |

| | |
|---|---|
| जानीयात् | அறிவான் ? |
| तज्ज्ञानस्य | அதனை அறிதற்கு |
| साधनम् | கருவி |
| किम् | யாது ? |
| तस्य | அதனுடைய |
| ज्ञानात् | அறிவினல் |
| किम् | யாது |
| फलम् | பயன் |
| स्यात् | ஆகும் ? |
| च | மற்றும், |
| एकत्वम् | ஒன்று என்பது |
| कथम् | எப்படி |
| भवेत् | இருக்கும் ? |
| च | இன்னும், |
| सर्वज्ञः | எல்லாவற்றையும் அறிபவனய், |
| सर्वकर्ता | எல்லாவற்றையும் செய்பவன் |
| आत्मा | ஜீவனக |
| कथं | எப்படி |
| भविष्यति | ஆவான் ? |

7

| | |
|---|---|
| गुरुः | குருவானவர் |
| इत्थम् | இவ்வாறு |
| पृच्छन्तम् | வினவுகின்ற |
| शिष्यम् | சிஷ்யனை |
| प्रति | நோக்கி |
| वक्तुम् | சொல்ல |
| आरभते | தொடங்குகிறர். |

1

| | |
|---|---|
| दर्पणदृश्यमान- नगरीतुल्यम् | கண்ணாடியில் காணப்படுகின்ற பட்டணம் போன்றதாய் |
| निजान्तर्गतम् | தன்னுள்ளேயுள்ள |
| विश्वम् | ஜகத்தை |
| निद्रया यथा | தூக்கத்தினால்போல |
| आत्मनि | ஆத்மாவிடத்து |
| मायया | மயக்கத்தினால் |
| बहिः | வெளியில் |
| उद्भूतम् इति | தோன்றியதுபோல் |
| पश्यन् | பார்க்கின்ற |
| यः | எவன் |
| प्रबोधसमये | விழிப்புசமயத்திலே |
| अद्वयम् | இரண்டல்லாத |
| स्वात्मानम् एव | தன் ஆத்மாவைமாத்திரமே |
| साक्षात्कुरुते | நேரே காண்கிறானோ, |
| तस्मै | அந்த |
| श्रीगुरुमूर्तये | ஸ்ரீமதாசார்யஸ்வரூபமான |
| श्रीदक्षिणामूर्तये | ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு |
| इदम् | இந்த |
| नमः | நமஸ்காரம் |

---

| | |
|---|---|
| अस्य | இதனுடைய |
| अर्थः | அர்த்தம் |
| (उच्यते) | (உரைக்கப்படுகின்றது.) |

---

8, 9

| | |
|---|---|
| इमे | இந்த |
| लोकाः | உலகங்கள் |
| अस्मिन् | இதனிடத்து |
| अन्तः | உள்ளே |
| (वर्तन्ते) | (இருக்கின்றன): |
| इदम् | இந்த |
| विश्वम् | எல்லா |
| जगत् | பிரபஞ்சமும் |
| अन्तः | உள்ளே |
| (वर्तते) | (இருக்கின்றது) ; |
| दर्पणे | கண்ணாடியினுள் |
| प्रतिबिम्बितम् | பிரதிபலிக்கப்பட்டது (போல் உள்ளே இருக்கின்ற ஜகத்தானது) |
| मायया | மயக்கத்தினால் |
| बहिर्वत् | வெளியிலிருப்பதுபோல |
| आभाति | தோன்றுகின்றது. |
| यथा | எப்படி |
| स्वप्ने | கனவில் |
| स्वान्तर्गतम् | தன்னுள்ளேயுள்ள |
| विश्वम् | பிரபஞ்சமானது |
| पृथक् इव | வேறாகத் தனித்திருப்பதுபோல |
| ईक्ष्यते | காணப்படுகின்றதோ, |
| तथा एव | அப்படியே |
| जाग्रत्काले अपि | நனவுகாலத்திலும் |
| अयं | இந்த |
| प्रपञ्चः | பிரபஞ்சமானது |
| विविच्यताम् | பகுத்தறியப்படட்டும். |

10

| | |
|---|---|
| स्वप्ने | கனவிலே |
| अर्थानाम् | பொருள்களுக்கு |

| | |
|---|---|
| सत्ता | உண்மையானது |
| स्वसत्ता एव | ஆத்மஉண்மையேதான், |
| अन्या | வேறு |
| न | அன்று |
| इति | என |
| निश्चिता | நிச்சயிக்கப்பட்டுளது. |
| जडानाम् | சடமாய் |
| आशुनाशिनाम् | விரைய அழியுந்தன்மையுள்ள (பொருள்கட்கு) |
| जाग्रति | நனவிலே |
| कः | யாது |
| विशेषः | வித்தியாசம் |
| अस्ति | இருக்கின்றது ? |

11

| | |
|---|---|
| स्वप्ने | கனவில் |
| भावानाम् | பொருள்கட்கு |
| प्रकाशः | விளக்கமானது |
| स्वप्रकाशात् | ஆத்மவிளக்கத்தினும் |
| इतरः | வேருக |
| न हि | இல்லை ; |
| जाग्रति अपि | நனவிலும் |
| तथा एव | அப்படியே |
| इति | என்று |
| विपश्चितः | அறிவுடையோர் |
| निश्चिन्वन्ति | நிர்ணயிக்கிருர்கள். |

12

| | |
|---|---|
| यथा | எப்படி |
| उत्थितः | எழுந்திருந்தவன் |

| | |
|---|---|
| निद्रया | உறக்கத்தால் |
| दर्शितान् | காட்டப்பெற்ற |
| अर्थान् | பொருள்களை |
| न पश्यति | காண்கிறானில்லையோ, |
| तथा | அப்படி |
| सम्यज्ज्ञानोदयात् ऊर्ध्वम् | மெய்யறிவு பிறந்ததற்குமேல் |
| विश्वम् | பிரபஞ்சத்தை |
| न पश्यति | காண்கிறானில்லை. |

---

13

| | |
|---|---|
| अनादिमायया | ஆதியில்லா மயக்கத்தால் |
| सुप्तः | உறங்கிக்கொண்டிருக்கும் |
| जीवः | ஜீவன் |
| यदा | எப்பொழுது |
| प्रबुध्यते | விழித்துக்கொள்கின்றானோ, |
| तदा | அப்பொழுது |
| अजन्मनिद्रम् | பிறப்பும் தூக்கமும் இல்லாததை |
| अस्वप्नम् | கனவில்லாததை |
| अद्वैतम् | அத்வைதத்தை |
| बुध्यते | அறிகிறான். |

---

14, 15

| | |
|---|---|
| स्वात्मबोधः | தன் ஆத்மஅறிவானது |
| श्रुत्या | சுருதியினாலும் |
| आचार्यप्रसादेन | குருவினுடைய அனுக்கிரகத்தினாலும் |
| योगाभ्यासवशेन च | நிதித்யாஸநப்பயிற்சியின் வலிமையினாலும் |
| ईश्वरानुग्रहेण अपि | ஈச்வரனது அருளினாலும் |

| | |
|---|---|
| यदा | எப்பொழுது |
| भवेत् | உண்டாகுமோ, |
| (तदा) | (அப்பொழுது)— |
| (कश्चित्) | (ஒருவன்) |
| भुक्तम् | புஜிக்கப்பட்டதாய் |
| कुक्षिस्थम् | வயிற்றினுள் இருக்கின்ற |
| अन्नम् | சோற்றை |
| स्वात्मत्वेन एव | தானுகவே |
| यथा | எப்படி |
| पश्यति | பார்க்கின்ருனே ।[கொள்கின்ருனே] |
| तथा | அப்படி |
| योगीश्वरः | தேர்ந்த ஞாநியானவன் |
| पूर्णाहन्ताकवलितम् | பூர்ணமான நான் என்னும்எண்ணத்தால் விழுங்கப்பெற்ற |
| विश्वम् | பிரபஞ்சத்தை |
| (स्वात्मत्वेन एव) | (தானுகவே) |
| (पश्यति) | (பார்க்கிருன்.) |

---

16, 17, 18, 19, 20.

| | |
|---|---|
| यथा | எப்படி |
| (कश्चित्) | (ஒருவன்) |
| स्वप्ने | கனவில் |
| नृपः | அரசனுக |
| भूत्वा | ஆகி, |
| यथेप्सितान् | அடைய விரும்பியவாறுள்ள |
| भोगान् | போகங்களை |

| | |
|---|---|
| भुक्त्वा | அநுபவித்து, |
| रणाङ्गणे | போர்க்களத்தில் |
| चतुरङ्गबलोपेतः | சதுரங்கசேனையோடு கூடியவனாய் |
| शत्रुम् | பகைவனை |
| जित्वा | வென்று, |
| पश्चात् | பின்பு |
| पराजितः | தோல்வியுற்றவனாக |
| भूत्वा | ஆகி |
| वनम् | காட்டை |
| प्राप्य | அடைந்து |
| तपः | தபஸை |
| चरन् | செய்பவனாய் |
| मुहूर्तमात्रम् | சிறிதுபொழுது மாத்திரத்தினுள் |
| आत्मानम् | தன்னை |
| कल्पजीविनम् | கல்பகாலம் ஜீவித்தவனாக |
| मन्यते | எண்ணிக்கொள்கிறான். |
| तथा एव | அப்படியே |
| असौ | இவன் [ஜீவன்] |
| जाग्रत्काले अपि | நனவுகாலத்திலும் |
| मनोराज्यम् | மனோராஜ்யத்தை |
| करोति | செய்கிறான் ; |
| कालनद्योघवेगेन | காலம் என்னும் ஆற்றினுடைய ஓட்டத்தின் வேகத்தால் |
| क्षीणम् | குறைந்துபோகின்ற |
| आयुः | ஆயுளை |
| न पश्यति | அறிகிறானில்லை. |

| | |
|---|---|
| परमेश्वरः | பரமேச்வரன் |
| मेघच्छन्नः | மேகத்தால் மூடப்பட்ட |
| अंशुमाली इव | கிரணமாலைகளையுடைய (ஸூர்யன்) போல |
| मायया | மாயையினால் |
| अधिकम् | மிகவும் |
| मोहितः | மயக்கப்பட்டவனாய் |
| किञ्चित्कर्ता | சிறிது செய்பவனாகவும் |
| किञ्चिज्ज्ञः च | சிறிது அறிபவனாகவும் |
| लक्ष्यते | காணப்படுகிறான் ; |
| परेश्वरः | பரமேச்வரன் |
| स्वसामर्थ्यात् | தனது சாமர்த்தியத்தினால் |
| यत् यत् | எதெதை |
| करोति | செய்கின்றானோ |
| जानाति | அறிகின்றானோ, |
| तस्मिन् तस्मिन् | அததிலே |
| राजा | அரசனாகவும் |
| विद्वान् | வித்வானாகவும் (இருக்கிறான்.) |
| (अतः) | (ஆகவே,) |
| अयम् | இவன் |
| ईश्वरः | "ஈச்வரன்" |
| इति | என்று |
| ईर्यते | சொல்லப்படுகிறான். |

---

21

| | |
|---|---|
| ज्ञानक्रिये | அறிவும், செயலும் |
| शिवेन | ஈச்வரனோடு |
| ऐक्यात् | ஒன்றாயுள்ளமையால் |

| | |
|---|---|
| सर्वजन्तुषु | எல்லாப் பிராணிகளிடத்தும் |
| सङ्क्रान्ते | சென்றுள்ளன. |
| ईश्वरत्वं च | ஈச்வரத்தன்மையும் |
| जीवानाम् | ஜீவர்கட்கு |
| तच्छक्तिसङ्गमात् | அவனுடைய சக்திக்கலப்பினால் |
| सिद्धम् | அமைந்துளது. |

---

22, 22½

| | |
|---|---|
| तत् | அந்த |
| ज्ञानम् | அறிவானது, |
| अयम् | " இது |
| घटः | குடம், " |
| अयम् | " இது |
| पटः | ஆடை " |
| इति | என்று |
| एवम् | இவ்வாறான |
| नानाप्रतीतिषु | வேறுவேறு உணர்ச்சிகளுள் |
| अर्कप्रभा इव | ஸூர்யன்ஒளிபோல |
| स्वयम् एव | தானே |
| प्रकाशते | விளங்குகின்றது. |
| ज्ञानम् | அறிவானது |
| स्वयम् | தானே |
| सिद्धम् न चेत् | அமையாததாயின், |
| जगत् | பிரபஞ்சமானது |
| अन्धम् | குருடான |
| तमः | இருளாக |
| भवेत् | ஆகும். |

---

23, 24, 25

| | |
|---|---|
| अस्य | இவனுடைய |
| क्रिया | செய்கை |
| काचित् | ஒன்று |
| न चेत् | இல்லையாயின், |
| व्यवहारः | வியவகாரமானது |
| कथम् | எப்படி |
| भवेत् | நிகழும் ? |
| क्रिया नाम | செய்கையென்பது |
| परिस्पन्दपरिणामस्वरूपिणी | அசைதல் வடிவினது, திரிதல் வடிவினது ; |
| ज्ञाने | அறிவு |
| बहिः | வெளியில் |
| स्पन्दमाने | செல்லும்பொழுது |
| तदङ्कुरवत् | அதனது முளைபோல |
| उद्भवेत् | உண்டாகும். |
| क्रिया | செய்கையானது |
| उत्पाद्य- | ஆக்கப்படுவதும், |
| प्राप्य- | அடையப்படுவதும், |
| संस्कार्य | ஸம்ஸ்கரிக்கப்படுவதும், |
| विकार्योपाश्रया | வேறுபடுத்தப்படுவதும் (ஆகிய இவற்றைச்) சார்பாகக் கொண்டது ; |
| करोति | " செய்கிறான், " |
| गच्छति | " அடைகிறான், " |
| उन्मार्ष्टि | " சுத்தப்படுத்துகிறான், " |
| छिनत्ति | " குறைக்கிறான், " |
| इति | என |
| प्रतीयते | புலப்படுகின்றது. |

26

| | |
|---|---|
| शिवः | ஈச்வரன் |
| ब्रह्मादिदेहेषु | ப்ரஹ்மா முதலானவர்களுடைய உடம்புகளிலே |
| सर्वज्ञः | எல்லாம் அறிபவன் |
| इति | என்று |
| भासते | விளங்குகிறான் ; |
| देवतिर्यङ्मनुष्येषु | தேவர், விலங்கு, மனிதர்களிடத்து |
| तारतम्यतः | தாரதம்யத்தால் |
| किञ्चिज्ज्ञः | சிறிது அறிபவன் |
| (इति) | (என்று) |
| (भासते) | (விளங்குகிறான்.) |

27

| | |
|---|---|
| जरायुजः | பையில் பிறப்பதும், |
| अण्डजः च एव | முட்டையில் பிறப்பதும், |
| स्वेदजः | வியர்வையில் பிறப்பதும், |
| पुनः | இன்னும் |
| उद्भिदः | (நிலத்தைப்)பிளந்து பிறப்பதுமாகிய |
| एते | இந்த |
| चतुर्विधाः | நான்குவகையான |
| देहाः | உடல்கள் |
| क्रमशः | முறையே |
| न्यूनवृत्तयः | குறைந்த தன்மையுள்ளன. |

28

| | |
|---|---|
| अनवच्छिन्ने | வரையறுக்கப்படாத |
| प्रकाशे | ஜ்யோதிஸான |

| | |
|---|---|
| परमात्मनि | பரமாத்மா |
| साक्षात्कृते | நேரே பார்க்கப்பெற்றவிடத்து, |
| ब्रह्मादिस्तम्बपर्यन्ता | ப்ரஹ்மாமுதலாக புல்ஈருகவுள்ள |
| कल्पना | கற்பனையானது |
| स्वप्नकल्पा एव | கனவை ஒத்ததேதான். |

29

| | |
|---|---|
| अणोः | " அணுவைக்காட்டிலும் |
| अणीयान् | அணுவானது, |
| महतः | மஹத்தைக்காட்டிலும் |
| महीयान् | மஹத்தானது " |
| इति | என்பது |
| वेदवाक् | சுருதியின் வசன(மாம்.) |
| रुद्रोपनिषत् अपि | ருத்திரோபநிஷத்தும் |
| शिवम् | சிவனை |
| एवम् | இவ்வாறு |
| सर्वात्मकम् | எல்லாவற்றினுடைய ஆத்ம ஸ்வரூபமாக |
| स्तौति | ஸ்தோத்திரம் செய்கின்றது. |

30

| | |
|---|---|
| ईश्वरः | ஈச்வரன், |
| गुरुः | குரு, |
| आत्मा | ஆத்மா |
| इति | என்னும் |
| मूर्तिभेदविभागिने | வடிவத்தின் பேதத்தால் பேதமுடைய (பொருளாய்) |
| व्योमवत् | ஆகாசம்போல |
| व्याप्तदेहाय | (எங்கும்) ஸ்வரூபம் வியாபிக்கப் பெற்ற |

दक्षिणामूर्तये — தக்ஷிணாமூர்த்திக்கு
नमः — நமஸ்காரம்.

31

श्रीदक्षिणामूर्ति-स्तोत्रार्थ-प्रतिपादके — ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியினுடைய ஸ்தோத்திரத்தின் பொருளை உணர்த்துகின்ற
मानसोल्लासे — மாநஸோல்லாஸம் (என்ற)
प्रबन्धे — நூலினுள்
प्रथमोल्लाससंग्रहः — முதல் உல்லாஸப்பொழிப்புரை
इति — முற்றிற்று.

---

अथ

# ॥ द्वितीयोल्लासः ॥

## இரண்டாம் உல்லாஸம்.

### இதனுள் கூறப்படும் விஷயம்.

சென்ற உல்லாஸத்தினுள், உலகம் - ப்ரஹ்மமான ஆத்மாவினிடத்து உள்ளது எனவும், அது கனவுபோலப் பொய்ம்மையாம் எனவும் கூறப்பட்டன. ஆனால், இவற்றிற்கு மாறுக, வைசேஷிகர் ஸாங்க்யர் நையாயிகர் முதலானோர்கள் தம்தம் கொள்கைகளைக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே, மாணக்கன் அவற்றால் மயங்கா வண்ணம் அவற்றை மறுப்பவராய்,

"सदेव सौम्य इदमग्र आसीत् एकमेवाद्वितीयम्"

"ஸௌம்ய! இது முதலில் உள்ளதாகவே, இரண்டாவதில்லாத ஒன்றாகவே இருந்தது. (ஸௌம்யன்-அமைதிபொருந்திய இனிய ஐயன்)"—(சா-6-2-3)

"आत्मा वा इदमेक एवाग्र आसीत् नान्यत् किञ्चन"

"இது முதலில் ஆத்மாவாகவே, ஒன்றாகவே இருந்தது; பிறிதொன்றும் இல்லை"—(ஐ-உப-1-1-1)

"यतो वा इमानि भूतानि जायन्ते"

"இந்தப் பொருள்கள் எதனினின்று உண்டாகின்றனவோ"—(தை-உப-3-1-1)

"तस्माद्वा एतस्मादात्मन आकाशः सम्भूतः"

"அந்த இவ்வாத்மாவினின்றே ஆகாசம் உண்டாயிற்று"—(தை-உப-2-1-1-)

என ஆத்மப்பொருளை உலகிற்கு முதற்காரணமாகக் கூறுகின்ற சுருதியின் கொள்கையை உணர்த்துகின்றார்.

1

**उपादानं प्रपञ्चस्य सम्युक्ताः परमाणवः ।**
**मृदन्वितो घटस्तस्मात् भासते नेश्वरान्वितः ॥**

2

**परमाणुगता एव गुणा रूपरसादयः ।**
**कार्ये समानजातीयं आरभन्ते गुणान्तरम् ॥**

---

**வைசேஷிகர் கொள்கை.**

1

(தம்முள்) ஒருங்குசேர்ந்த பரமாணுக்கள் ஜகத்திற்கு முதற்காரணம். ஆதலால், குடம் மண்ணோடு ஒற்றித்ததாக விளங்குகின்றது; ஈச்வரனோடு ஒற்றித்ததாக அன்று.

பரமாணு என்பது-எவ்வளவிற்குமேல் உறுப்புஉறுப்பாகப் பிரித்துவகுத்தல் இயலாது ஒழிந்திடுமோ, அவ்வளவு முடிவுவரையிலும் சென்று நிற்கின்ற மிக நுண்மையான பொருள். எது தான் உள்ளவழி எதனோடு ஒற்றித்ததாகத் தவறாது விளங்குகின்றதோ, அதற்கு அது முதற்காரணமாகக் காணப்படுகின்றது.—எங்ஙனமெனில் —மண்ணோடு ஒற்றித்ததாய், மண்ணைவிட்டு நீங்காததாய் விளங்குகின்ற குடத்திற்கு மண் முதற்காரணமாம். அவ்வாறே, மலை கடல் முதலிய இவ்வுலகமெல்லாம் ஜடப்பொருளோடு ஒற்றித்து விளங்குகின்றமையால், சேதநப் பொருளல்லாத பரமாணுக்களே அதற்கு முதற்காரணமாம். ஆகவே, உலகம் அறிவுப்பொருளான ஆத்மா என்னும் ஈச்வரனோடு ஒற்றித்து விளங்குவதாகக் காணப்படாமையினால், பிரபஞ்சத்திற்கு முதற்காரணம் ஈச்வரனாயினும், அவனது மாயையாயினும் அன்று என்பது பொருள். முதற்காரண மெனினும், உபாதானகாரண மெனினும் பொருந்தும். (1)

2

காரணத்தினுடைய அந்தந்தத் தன்மைக்கு ஏற்ப அந்தந்தக்காரியமும் அதனது தன்மையும் தாமே அமையுமாதலால், இவ்விஷயத்திலும் ஈச்வரன் கார்யப் பொருள்கட்காயினும், அவற்றது குணங்கட்காயினும் முதற்காரண மல்லன்; எப்படியெனின்,—

உருவம், சுவை முதலிய குணங்கள் பரமாணுக்களிலேயே உள்ளன; ஒரு இனமான பல குணங்களை [தம்தம் குணங்களைத் தாமே தனித்தனியாக]க் கார்யத்திலே செய்கின்றன.

தீயின் பரமாணுக்கள் தம்முள் சேர்ந்து உருவப்பொருளாய்க் காரியப்படுகின்றன; நீரின்பரமாணுக்கள் தம்முள் சேர்ந்து சுவைப்பொருளாய்க் காரியப்படுகின்றன. அவ்வாறே, பிறவற்றையும் கண்டுகொள்க. (2)

3

कार्यं यत्र समन्वेति कारणं समवायि तत् ।
चक्राद्यं साधनं यत्तु घटस्याऽसमवायि तत् ॥

4

समवायिनि तिष्ठेद्यत् समवाय्याश्रये तथा ।
कार्येऽवधृतसामर्थ्यं कल्प्यतेऽसमवायि तत् ॥

---

**வைசேஷிகருடைய மூவகைக்காரணங்கள்.**

இவ்வாறிருந்தாலும், குடத்திற்குக் குயவன்போல, ஈச்வரன் உலகிற்குக் கர்த்தாவாகிய செய்பவன் என்னும் நிமித்தகாரணமேயன்றி வேறுகாரணமல்லன் என்பதைக் கூறும்பொருட்டு, முதலில், மூவகைக்காரணங்களும் இன்னவை என்று பெயரெடுத்துக் கூறி விரிக்கிறார் :

**(1) ஸமவாயிகாரணம்.**

3

கார்யம் எதனிடத்து ஒற்றித்துநிற்கின்றதோ, அது ஸமவாயிகாரணமாம். மற்று, குடத்திற்குச் சக்கிரம் முதலிய கருவி எதுவோ, அது ஸமவாயிகாரணம் அன்றாம்.

ஸமவாயத்தை யுடையது-ஸமவாயி ; ஸமவாயம்-ஒற்றித்தல் நீக்கமின்றி நிற்றல். ஸமவாயிகாரண மெனினும், உபாதாந காரண மெனினும், முதற்காரண மெனினும் ஒக்கும். குடம் மண்ணால் செய்யப்படுகின்றது ஆதலால், முந்தினது பிந்தினதின் காரியமாம் ; அதாவது, முந்தினதற்குப் பிந்தினது காரணமாம். குடமாகிய காரியம் மண்ணாகிய காரணத்தினிடத்து ஒற்றித்து நிற்கின்றது ; நிற்கவே, குடத்திற்கு மண் ஸமவாயிகாரணம் என்பது. ஆனால், சக்கிரம் முதலிய கருவிகள் குடத்திற்கு ஸமவாயி காரணம் ஆகமாட்டா.—மற்றென்ன ?—துணைக்காரணமாகிய நிமித்தகாரணமாம் என்க. (3)

**(2) அஸமவாயிகாரணம்.**

4

எது கார்யத்திலே வலிமையுடைத்தாய் ஸமவாயியினிடத்து நிற்குமோ, அவ்வாறே (எது கார்யத்திலே வலிமையுடைத்தாய்) ஸமவாயியின் சார்பினிடத்து (நிற்குமோ), அது அஸமவாயிகாரணமாகக் கொள்ளப்படுகின்றது.

1. நூல்கள் ஆடைக்கு ஸமவாயிகாரண மாயினும், நூல்களது இயைபு உள்ள வழிதான் ஆடையாகிய காரியம் ஆகும், ஆகவே, ஆடையாகிய காரியத்திற்கு

4½

# निमित्तं कारणं तेषां ईश्वरश्च कुलालवत् ।

5, 6

# यत्कार्यं जायते यस्मात् तस्मिन् तत्प्रतितिष्ठति ॥

---

நூலியையும் காரணமாம். அது [ நூலியைபு ] - ஆடையின் ஸமவாயிகாரணமான நூல்களிடத்து நிற்றலால், ஆடைக்கு அஸமவாயிகாரணம் என்பது.

2. ஆடை, தனது நிறத்திற்கு ஸமவாயிகாரணமாயினும், அந்நிறம் நூல்களினிடத்து உள்ளவழிதான் ஆடைக்கு ஆகும். ஆகவே, ஆடைநிறத்திற்கு நூல் நிறமும் காரணமாம். அது [ நூல்நிறம் ] - ஆடை நிறத்தின் ஸமவாயிகாரணமான ஆடையினது சார்பிலே, அதாவது நூலினிடத்து நிற்றலால், ஆடைநிறத்திற்கு அஸமவாயிகாரணம் என்பது.

இவ்வாறாக அஸமவாயிகாரணம் இருவகைத்தாம்.

"காரியத்திலே வலிமையுடைத்தாய்" என்றது - நூலியைபு முதலியன ஆடை முதலியவற்றிற்கு இன்றியமையாதவை எனக் காட்டும்பொருட்டு. (4)

## (3) நிமித்தகாரணம்.

4½

ஈச்வரனும் அவற்றிற்கு நிமித்தகாரணமா யிருக்கிறான்; (குடத்திற்குக்) குயவன்போல.

நிமித்தகாரணமாவது - ஸமவாயிகாரணம் அஸமவாயிகாரணமாகிய இரண்டின் வேறாகிய காரணம்; உதாரணமாக, குயவனும் சக்கிரம் தடி முதலியனவும் குடத்திற்கு நிமித்தகாரணமாம். "ஈச்வரனும்" என்ற உம்மையானது - அந்தந்தக்காரியத்திற்குரிய பல நிமித்தகாரணங்களிருந்தாலும், அவற்றுள் ஈச்வரன் ஒவ்வொரு காரியத்திற்கும் இன்றியமையாத ஒருநிமித்தகாரணமாம் என்பதை உணர்த்துகின்றது. ஜடப்பொருள்கள் சேதநப்பொருளாலன்றித் தாமாகக் காரியப்படா வாதலால், ஸகல காரியங்களும் உண்டாதற்கு வேறு காரணங்கள் இருந்தாலும் ஈச்வரனும் நிமித்தகாரணமாம்; குடம் உண்டாதற்கு மண் சக்கிரம் முதலிய வேறுகாரணங்கள் இருந்தாலும், குயவன் நிமித்தகாரணம் ஆமாறுபோல. (4½)

5, 6

இவ்வாறாக ஈச்வரன் உலகிற்கு நிமித்தகாரணமேயன்றி உபாதாந காரணமல்லன்; எப்படி யெனில்,—

எந்தக் காரியம் எதனினின்று பிறக்கின்றதோ, அது அதனிடத்துத் தங்குகின்றது; மண்ணிலே குடமும், நூலிலே ஆடையும், பொன்னிலே

मृत्तिकायां घटस्तन्तौ पटः स्वर्णेऽङ्गुलीयकम् ।
इति वैशेषिकाः प्राहुः तथा नैयायिका अपि ॥

7, 8

रजस्सत्त्वं तमश्चेति प्रधानस्य गुणास्त्रयः ।
रजो रक्तं चलं तेषु सत्त्वं शुक्लं प्रकाशकम् ॥
तमः कृष्णं चाऽऽवरकं सृष्टिस्थित्यन्तहेतवः ।
इति साङ्ख्याश्च भाषन्ते तेषां दूषणमुच्यते ॥

---

மோதிரமும் (அமைகின்றன). என்று வைசேஷிகரும், அவ்வாறே நையாயிகரும் கூறுகிறார்கள்.

உலகத்திலே எல்லாக் காரியங்களும் அசேதநப்பொருளிலே அமைந்துகிடக்கின்றன ; உதாரணமாக, குடம் முதலிய காரியங்களை-ஜடப்பொருளான மண் முதலியவற்றிலே காண்க. அங்ஙனமாகவே, சேதநப்பொருளான ஈச்வரனை ஜகத்திற்கு உபாதாநகாரணமாகக் கொள்ளுதல் பொருந்தாது. ஆதலால், அவன் பிரபஞ்சத்திற்குக் கர்த்தாவான நிமித்தகாரணமேயன்றி வேறுகாரண மல்லன் என்றவாறு. (5, 6)

ஸாங்க்யர் கொள்கை.

7, 8

பிரதாநத்திற்கு -ரஜஸ், ஸத்துவம், தமஸ் என்று மூன்று குணங்கள் உள்ளன. அவற்றுள், ரஜஸ் - செம்மையானது, அசைவது ; ஸத்துவம் வெண்மையானது, விளக்கமானது ; தமஸ் - கருமையானது, மறைப்பது. (அவை முறையே) படைப்பிற்கும், நிலைப்பிற்கும், அழிவிற்கும் காரணங்கள். என்று ஸாங்க்யர்களும் சொல்லுகிறார்கள். அவர்கட்குக் குற்றம் கூறப்படுகின்றது:

பிரதாநமாவது-பிரகிருதி ; 2-31 ஆம் சுலோகத்தைப் பார்க்க. "செம்மையானது" சிவப்புநிறமுடையது ; மையலாக்குவது, விகாரப்படுத்துவது என்றபடி. எது அசையும் இயல்பினதாய் விகாரத்தைக் கிளப்புகின்றதோ, அது ரஜஸ் என்னும் குணமாம். "வெண்மையானது" சுத்தமானது எனறபடி. எது சுத்தமாய் விளக்கமாய் இருக்கின்றதோ, அது ஸத்துவம் என்னும் குணமாம். "கருமையானது"—கறுப்பு நிறமுடையது ; அசுத்தமானது என்றபடி. எது அசுத்தமாய் விவேகத்தை மூடுவதாய் இருக்கின்றதோ, அது தமஸ் என்னும் குணமாம். உலகத்தின் படைப்பிற்கு ரஜோ குணம் காரணம் எனவும், அது நிலைபெறுதற்கு ஸத்துவகுணம் காரணம் எனவும், அது அழிதற்கு தமோகுணம் காரணம் எனவும் ஸாங்க்யர் கூறுகிறார்கள். மற்று,

2 बीजस्यान्तरिवाङ्कुरो जगदिदं प्राङ्निर्विकल्पं पुनः
मायाकल्पितदेशकालकलना वैचित्र्य चित्रीकृतम् ।
मायावीव विजृम्भयत्यपि महायोगीव यः स्वेच्छया
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥

---

அவர்கள் சேதநப்பொருளை நிமித்தகாரணமாகவாயினும் கொள்வதில்லை.

" ஸாங்க்யர்களும் " என்ற உம்மையால் - ஸ்வபாவவாதிகள், சூந்யவாதிகள், சைவர், பௌராணிகர் என இவர்களையும் கொள்க. அந்த எல்லாருடைய கொள்கைகளையும் பின்வருமாறு மறுக்கிருர். (7, 8)

2. இந்தப் பிரபஞ்சம் முதலில், விதையினுள் முளைபோல, வேற்றுமையற்றதாய் (உண்மைமாத்திரமாய் இருந்தது) ; பின்பு, மாயையினுல் கற்பிக்கப்பெற்ற இடம் காலம் என இவற்றினது சம்பந்தத்தால் வேற்றுமை வர, அதனுல் பலபடிப்பட்டது. எந்த (ஆத்மப் பொருளானது அத்தகைய இப்பிரபஞ்சத்தை) மாயாவிபோலும், மகாயோகிபோலும் தனது இச்சையினுல் தோற்றுவிக்கின்றதோ அந்த ஸ்ரீமதாசார்யஸ்வரூபமான ஸ்ரீதக்ஷிணாமூர்த்திக்கு இந்த நமஸ்காரம்.

முளை என்பது - தளிர், கிளை முதலியவற்றிற்கும், இடம் காலம் என்பன - நிமித்தத்திற்கும் உபலக்ஷணம்.

விருக்ஷம் முதலில் தான் வெளிப்படாத நிலையிலே, வேர்என முளைஎன தளிர்என இலைஎன கிளைஎன பூஎன பிஞ்சுஎன காய்என பழம்என இவ்வாருன வேற்றுமையனைத்தும் அற்றதாய் வித்தினுள் அமைந்து அந்த வித்தாகவே இருக்குமாறு போல,— இவ்வுலகம் முதலில் தான் தோன்ருத நிலையிலே, மலைஎன கடல்என காடுஎன மனிதன் என மிருகம்என இவைபோன்ற விசித்திரமெல்லாம் அற்றதாய் ஆத்மாவினுள் அமைந்து அந்த ஆத்மஸ்வரூபமாகவே இருந்தது. பின்னர், இடமென்பதும் காலமென்பதும் நிமித்தமென்பதும் - மாயாசக்தியினுல் தோன்ற, பிரபஞ்சம் அவற்ருல் மண்ணுக, மலையாக, கடலாக, யக்ஷனுக, ராக்ஷஸனுக, தேவனுக, மநுஷ்யனுக, மரமாக, மிருகமாக, காடாக, நாடாக இன்னும் இவைபோன்ற பற்பல விசித்திரமாயிற்று.

சங்கை:—மாயையென்பது யாது? அஃதொன்றனை அதிகமாகக் கொண்ட விடத்து த்வைதமன்றோ ஆகும்?

ஸமாதாநம்:—அப்படியன்று; ஏனெனில், மாயையென்பது - இன்னதென்று சொல்லவாராத பொய்ம்மையாம். சூடு என்னும் சக்தியானது தீயினும் வேறு என்றுயினும் தீயொடு ஒன்று என்றுயினும் சொல்லமுடியாதவாறுபோல, மாயை என்னும் சக்தியானது ப்ரஹ்மத்தினும் வேறு என்றுயினும் ப்ரஹ்மத்தோடு ஒன்று என்றுயினும் இன்னதெனச் சொல்லவொண்ணுதது. ஆகவே, அது பொய்ம்மையாதலால் த்வைதமாகா தென்பது.

## தேச கால நிமித்தங்களால் வேற்றுமை தோன்றுகின்றது.

இனி, செப்படிவித்தைக்காரனுடைய மாயாசக்தியானது மாமரம் முதலியவற்றைப் படைப்பதுபோல, ப்ரஹ்மத்தினுடைய சக்தியானது தேச கால நிமித்தங்களைப் படைக்கின்றது. படைக்கவே, வேற்றுமைக ளெல்லாம் தலைப்படுகின்றன. எப்படியெனில்,—இந்த ஜகத்தில் ஒவ்வொரு வியவகாரமும் ஒரு இடத்திலே ஒருகாலத்திலே ஒரு நிமித்தத்தைச் சார்ந்து நிகழ்கின்றது. உதாரணமாக, புதல்வர்கள் ஒரே இடத்து ஒரே நிமித்தத்தால் தோன்றியவராயினும், "மூத்தோன்" "இளையோன்" என காலத்தினது முன்மை பின்மைகளால் வேறுபட்டார்கள். இவ்வாறே, பிறவற்றையும் நோக்கிக்கொள்க. ஆகவே, இடத்திலே உள்ள முன்மை பின்மையும், காலத்திலே உள்ள முன்மை பின்மையும், நிமித்தத்திலே உள்ள சார்பும் வேற்றுமையைச் செய்கின்றன; எனவே, உலகில் ஒவ்வொன்றும் தேசம் காலம் நிமித்தம் என்றிவற்றினுடைய வரம்பிற்கும் ஒழுங்கிற்கும் உள்பட்டுச் செல்லுகின்றது. ஆதலால், இவற்றைக் கடந்து ஒரு வியவகாரமும் நிகழமாட்டா தென்பதாம்.

## "முதலில்," "(இருந்தது)," "பின்பு" என வழங்கியதற்கு நியாயம் கூறுதல்.

சங்கை:—இவ்வாறு, தேச கால நிமித்தங்கள் இல்லாவழி வியவகாரமே இல்லாதிருக்க, "இந்த ஜகத்து முதலில் வேற்றுமையற்றதாய் (உண்மை மாத்திரமாய் இருந்தது); பின்பு,.........பலபடிப்பட்டது" என்றவிடத்து, "முதலில்" என்பதும் "(இருந்தது)" என்பதும், "பின்பு" என்பதும் காலத்தைக்குறிக்கின்றமையால், அங்ஙனம் காலமென்பது ஏது?—இல்லையாகவே, அவை எவ்வாறு வழங்கப்பட்டன?

ஸமாதாநம்:—மனம் காலவர்ஸனையேறி அழுந்திக்கிடக்கின்றமையின், "இவ்வுலகம் முதலில் எப்படி இருந்தது? பின்பு எப்படியாயிற்று?" என மாணுக்கன் காலத்தைப்பிடித்தே வினவுகின்றுன். ஆதலால், அவ்வினுவிற்குத்தக அவனது சொற்களைக்கொண்டு "இவ்வுலகம் முதலில் வேற்றுமையற்றதாய் உண்மைமாத்திரமாய் இருந்தது; பின்பு,..............பலபடிப்பட்டது" என "முதலில்" "இருந்தது" "பின்பு" என்பவற்றை வழங்கி அவனுக்குத் தெளியத் தெரியும் பொருட்டு விடை

## अस्यायमभिप्रायः—

கூறப்படுகின்றது. ஆகலான், அது குற்ற மன்றும். வே - ஐ - உப - 1 - 1 - 1 பாஷ்யத்தைப் பார்க்க.

**ப்ரஹ்மம் ஜகத்திற்கு நிமித்தகாரணமாத்திரமன்று, உபாதாநகாரணமுமாம்.**

செப்படிவித்தைக்காரன் மாயையைமாத்திரம் கருவியாகக்கொண்டு யானை குதிரை பட்டணம் முதலியவற்றைப் படைப்பதுபோல, ப்ரஹ்மஸ்வரூபமான ஈச்வரன் மாயையைமாத்திரம் கருவியாகக்கொண்டு பிரபஞ்சத்தைப் படைக்கிருன். அல்லது, விச்வாமித்திரர் முதலிய பெரிய யோகிகள் தமது இச்சையைமாத்திரம் கருவியாகக் கொண்டு ஸ்வர்க்கம் முதலியவற்றைப் படைப்பதுபோல, அவன் தனது இச்சையையே கருவியாகக்கொண்டு பிரபஞ்சத்தைப் படைக்கிருன் எனினுமாம்.

இது இவ்வாறிருக்க, மாயையினுலான தேசம் காலம் நிமித்தம் என்றிவற்றி னுடைய ஒட்டினுல் பலவகைப்பட்ட பிரபஞ்சம் பரம்பொருளான ஆத்மாவினிடத்து ஏற்றப்பட்டிருக்கின்றது; வளிவான தளமும், கருமைநிறமும் வானத்திலே ஏற்றப்படுமாறுபோல. குடம் உண்டாதலும், நிலைபெறுதலும், அழிதலும் மண்ணினிடத்துக் காணப்படுகின்றமையின், மண்குடத்திற்கு உபாதாநகாரணமாம். அவ்வாறே, பாம்பு தோன்றுதலும், நிலைபெறுதலும், கெடுதலும் கயிற்றினிடத்துக் காணப்படுகின்றமையின், கயிறு பாம்பிற்கு உபாதாநகாரணமாம். அதுபோல் இவ்வுலகம் உண்டாதலும், நிலைபெறுதலும், அழிதலும்.

**" यतो वा इमानि भूतानि जायन्ते । येन**
**जातानि जीवन्ति । यत्प्रयन्त्यभिसंविशन्ति । "**

" இந்தப் பொருள்கள் எதனினின்றும் பிறக்கின்றனவோ, பிறந்தவைகள் எதனுல் உயிர் வாழ்கின்றனவோ, எதனை அடைகின்றனவோ, மீளப்புகுகின்றனவோ [ எதனெடு ஒன்றுகின்றனவோ ] "—(தை - உப - 3 - 1 - 1).

எனச் சுருதியினுல் ப்ரஹ்மத்தினிடத்துக் கூறப்படுகின்றமையின், ப்ரஹ்மம் ஜகத்திற்கு உபாதாநகாரணமாம். எனவே, ஆத்மப்பொருள் தேச கால நிமித்தங்கட்கு அப்பாற்பட்டதாய், கயிறு பாம்போடு போல, உலகத்தொடு ஒட்டற்றதாய், அஸங்கமாய் உளது என்பது கருத்து.

இது இதன் கருத்து :—

9

# अङ्कुरादिफलान्तेषु कार्येष्वस्तित्वमिष्यते ।
# कुत आगत्य सम्बद्धा वटबीजेषु ते कणाः ॥

---

## பரமாணுவாதத்தை மறுத்தல்.

9

ஜகத்திற்குப் பரமாணுக்கள் உபாதாநகாரணமாம் என்னும் கொள்கையை மறுக்கிருர்:

முளைமுதலாகப் பழம்ஈருகவுள்ள காரியப்பொருள்களில் உண்மையானது கொள்ளப்படுகின்றது. அந்தப் பரமாணுக்கள் ஆலமரத்து விதைகளுள் எங்கிருந்து வந்து சேர்ந்தன ?

முளை, தளிர், கிளை, பூ, பிஞ்சு, காய், பழம் என்றவற்றில் "முளை உள்ளது" "தளிர் உள்ளது" "கிளை உள்ளது" "பூ உள்ளது" "பிஞ்சு உள்ளது" "காய் உள்ளது" "பழம் உள்ளது" என உண்மையானது முளை தளிர் கிளை முதலிய எல்லாக் காரியங்களோடும் ஒற்றித்ததாய்க் காணப்படுகின்றதேயன்றி, பரமாணுக்களல்ல எல்லாக்காரியங்களோடும் எது ஒற்றித்துநிற்பதாகக் காணப்படுகின்றதோ, அது அவற்றிற்கு உபாதாநகாரணமாதலால், முளை தளிர் முதலிய எல்லாப்பிரபஞ்சத்திற்கும் உண்மையெனப்படுகின்ற ப்ரஹ்மமே உபாதாநகாரணமாம்.

பிரதிவாதி :—யாம் [வைசேஷிகர்] கூறுவது யாதெனின்,—ஈச்வரனது இச்சை வசத்தால் பரமாணுக்களில் கிரியை தோன்றி இரண்டு பரமாணுக்கள் தம்மில் சேர்ந்து இரட்டையணுவாய், அவை மும்மூன்று தம்முள் சேர்ந்து மும்மையணுவாய், அவை நந்நான்கு தம்முள் சேர்ந்து நான்மையணுவாய், இவ்வாறே ஒன்றற்கொன்று அவயவமும் அவயவியுமாய்த் தோன்றிக் காரியப்படும் முறையினுல் உலகம் உண்டாதற்குத் தடையொன்றும் இன்மையால், பரமாணுக்கள் தம்முள் சேர்ந்து பிரபஞ்சத்தைப் படைக்கின்றன என்பது.

வாதி :—அப்படியன்று ; ஈச்வரனது இச்சை நித்யமாதலால், பிரளயகாலத்திலும் பரமாணுக்களில் கிரியைதோன்றுதல் வேண்டும். ஆகவே, காரணமின்மையால் அவற்றில் கிரியைதோன்றுதலில்லை. அஃதில்லையாகவே, பரமாணுக்கள் தம்முள் சேர்தலில்லை. சேர்தலின்மையால், அவற்ருலாகும் இரட்டையணு முதலான ஒரு காரியமும் அமையா.

10

कारणान्तर्गतं कार्यं इति सर्वैश्च सम्मतम् ।
तस्मात् सत्ता स्फुरत्ता च सर्वत्राप्यनुवर्तते ॥

11

पुष्पे फलत्वमापन्ने क्षीरे च दधितां गते ।
विजातीयाः प्रवर्तन्ते गुणा रूपरसादयः ॥

---

ஆதலால், பரமாணுக்கள் பிரபஞ்சத்திற்கு உபாதாநகாரணமாகா என்றபடி.

10

"கார்யம் காரணத்தினுள் அடங்கியது" என்பது—யாவராலும் சம்மதிக்கப்பட்டது. ஆதலால், உண்மையும் விளக்கமும் எங்கும் தொடர்ந்திருக்கின்றது.

காரியமெல்லாம் உபாதாநகாரணத்தினுள் அமைவன என எல்லாரும் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். உண்மையும், விளக்கமும் - "இது உள்ளது, விளங்குகின்றது" என எல்லாக்காரியப்பொருள்களிலும் தவருது காணப்படுகின்றன. ஆதலால், உண்மையும் விளக்கமுமாயிருப்பது எதுவோ, அது [ப்ரஹ்மம்] உபாதாந காரணமாம். (10)

11

இனி, முந்தின முந்தின காரியம் பிந்தின பிந்தின காரியத்திற்கு உபாதாந காரணம் என்பதும் ஒவ்வாது. எங்ஙனமெனின்,—காட்டுவோம் :

பூ பழமாதலைப் பெற்றவிடத்தும், பால் தயிராதலை அடைந்த விடத்தும், உருவம் சுவை முதலான குணங்கள் வேறு இனமாகவே தலைப்படுகின்றன.

2-2 ஆம் சுலோகத்தினுள், உபாதாநகாரண குணங்கள் காரியத்திலே தமது இனமான பல குணங்களைச் செய்கின்றன எனக் கூறியபடி, பூவாகிய உபாதாந காரணம் பழமாகிய காரியத்திலும், பாலாகிய உபாதாநகாரணம் தயிராகிய காரியத்திலும் முறையே ஒரே தன்மையான குணங்களைப் பிறப்பிக்கவேண்டும் ; ஆனால், அப்படி இல்லை: அதாவது, பூவினது உருவமும் சுவையும் முதலாயின-பழத்தினது உருவம் சுவை முதலியவற்றினும் வேருகவும், பாலினது உருவமும் சுவையும் முதலாயின - தயிரினது உருவம் சுவை முதலியவற்றினும் வேருகவும் காணப் படுகின்றன. ஆகவே, முந்தின காரியம் பிந்தின காரியத்திற்கு உபாதாநகாரண மாகா தென்க. (11)

12

कारणं कार्यमंशोऽंशी जातिर्व्यक्ती गुणी गुणः ।
क्रिया क्रियावानित्याद्याः प्रकाशस्यैव कल्पनाः ॥

13

चैतन्यं परमाणूनां प्रधानस्यापि नेष्यते ।
ज्ञानक्रिये जगत्क्लृप्तौ दृश्येते चेतनाश्रये ॥

---

விவர்த்தக்கொள்கை,

12

விஞ :—ஆயின், ஆகாசம் போல உருவமில்லதாய் விளக்கமாகிய உண்மை மாத்திரமான பொருள், பலபல உருவமுடைய இவ்வுலகிற்கு உபாதாநகாரண மென்பது எப்படி ஆகும் ?

விடை :—" ஆகாசம் போல " என நன்று கூறினுய். ஆகாசம் எனப்படுகின்ற வானத்திற்கு உருவமில்லை யென்பது உண்மை. மற்று, அவ்வானம் வளைவான தளத்திற்கும் கருமைநிறத்திற்கும் போல, ப்ரஹ்மமானது [விளக்கமான உண்மை யானது] உலகிற்கு விவர்த்தி என்னும் உபாதாநகாரணமாம். விவர்த்தி - விவர்த்த முடையது. விவர்த்தமாவது - கயிறு கெடாது பாம்பாக விளங்குதல் போல, முந்தின நிலை கெடாது வேருேர் நிலை விளங்குதல் : அதாவது - பொய்ம்மைத்தோற்றமாம்.

அவ்வண்ணமே அருளிச்செய்கிருர் :

காரணம் கார்யம், அவயவம் அவயவீ, ஜாதி வடிவு, குணீ குணம், வினை வினைமுதல் என்பன முதலான கற்பனைகள் விளக்கத்திற்கே [ப்ரஹ்மத்திற்கே] உள்ளன.

காரணம் . விதை முதலியன ; கார்யம் - முளை முதலியன. அவயவம் - நூல் முதலியன ; அவயவீ - ஆடை முதலியன. ஜாதி - ஆத்தன்மை முதலியன ; வடிவு - அதனையுடைய ஆ முதலியன. குணீ - ஆடை முதலியன ; குணம் - நிறம் முதலியன. வினை-தொழில் ; வினை முதல் - அம்பு சக்கிரம் முதலியன. இவை முதலிய அனைத்தும், தானேவிளங்குகின்ற உண்மைப்பொருளின் விவர்த்தமாம் என்பது கருத்து. (12)

அறிவும், செயலும் சேதநப்பொருளைச் சார்ந்துள்ளன.

13

பரமாணுக்களுக்கும், பிரதாநத்திற்கும் பிரபஞ்சத்தைப் படைக்கும் விஷயத்திலே சேதநத்தன்மையானது (முறையே வைசேஷிகர்களாலும், ஸாங்க்யர்களாலும்) கொள்ளப்படவில்லை. அறிவும், செயலும் சேதநத்தைச் சார்ந்தவையாகக்காணப்படுகின்றன.

## 13½

# कालरूपक्रियाशक्त्या क्षीरात्परिणमेद्दधि ।

---

வைசேஷிகர், தாம் பிரபஞ்சத்திற்கு உபாதாநகாரணமாகக்கொண்ட பரமாணுக்களுக்குச் சேதநத்தன்மையை ஏற்றுக்கொள்ளவில்லை ; அவ்வாறே, ஸாங்க்யர்களும், தாம் பிரபஞ்சத்திற்கு உபாதாநகாரணமாகக் கொண்ட பிரதாநத்திற்குச் சேதநத் தன்மையை அங்கீகரிக்கவில்லை. மேலும், சேதநப்பொருளினுடைய சம்பந்தமில்லாத ஜடப்பொருளில் அறிவும் செயலும் காணப்படவில்லை. அன்றியும், சாந்தோக்ய சுருதியானது (6 - 2 - 3) - "ப்ரஹ்மத்தினது இச்சையினால் பிரபஞ்சம் உண்டாயிற்று ; ப்ரஹ்மமே பலபடிப்பட்ட பிரபஞ்ச மாயிற்று" என சேதநப்பொருளான ஆத்மாவையே பிரபஞ்சத்திற்கு நிமித்தகாரணமாகவும் உபாதாநகாரணமாகவும் கூறுகின்றது. மற்றும், பிருகதாரண்யக சுருதியானது (2 - 1 - 20) - ப்ரஹ்மம் ஜகத்திற்கு நிமித்தகாரணமாயும் உபாதாநகாரணமாயும் இருப்பதை, "நூலாகிய காரியத்திற்கு சிலம்பி உபாதாந காரணமாயும் நிமித்தகாரணமாகவும் இருப்பது போல" என்னும் உபமையினால் விளக்கிக்காட்டுகின்றது. ஆகவே, ஜடப்பொருளன பரமாணுக்களினின்றாயினும், ஜடப்பொருளான பிரதாநத்தினின்றாயினும் பிரபஞ்சம் உண்டாதல் ஏலாது ; அல்லது, மண் குயவனுக்குப் புறம்பாக, வேறாகத், தனியே நின்று அவனால் காரியப்படுமாறு போல, அவை ப்ரஹ்மத்திற்குப் புறம்பாக, வேறாகத், தனியே நின்று காரியப்படும் என்றல் கீழ் எடுத்துக்காட்டிய சுருதிகட்கு விரோதமாம். ஆதலால், படைக்கின்ற ஈச்வரனுக்கும் படைக்கப்பட்ட பிரபஞ்சத்திற்கும் வாஸ்தவத்திலே பேதமில்லை என்றபடி.

வினா :—ஆயின், படைக்கவேண்டிய விஷயங்களை "இன்ன இன்ன விதமாய் படைத்தல் வேண்டும்" என முன்னர் ஆலோசித்தலாகிய அறிவும், பின்னர் அவற்றைப் படைத்தலாகிய செயலும் நிர்விகாரியான சேதநப்பொருளுக்கு எதனாலாகின்றன ?

விடை :—மாயாசக்தி ஸம்பந்தத்தினாலாகின்றன ; விறகை எரித்தல் ஸூர்யனுக்கு தீக்கல்ஸம்பந்தத்தினாலாவது போல என்க. (13)

## 13½

ஆக்ஷேபம் :—காரியமானது சேதநப்பொருளை வேண்டாமலும் உண்டாவதாகக் காணப்படுகின்றது. எங்ஙன மெனின்,—பால் சேதநப்பொருளினுடைய அபேக்ஷையில்லாமலே தயிராகத் தானாகவே மாறுகின்றது.

ஸமாதானம் :—கூறுவோம் :

தயிரானது, காலவடிவான கிரியாசக்தியினால் பாலினின்று மாறுகின்றது.

"यः सर्वेषु भूतेषु तिष्ठन् ............
यः सर्वाणि भूतान्यन्तरो यमयति"

14

ज्ञातृज्ञानज्ञेयरूपं ज्ञानशक्त्या भवेज्जगत् ॥

15

ज्ञानं द्विधा वस्तुमात्रद्योतकं निर्विकल्पकम् ।
सविकल्पं तु संज्ञादिद्योतकत्वादनेकधा ॥

---

" எவன் எல்லாப் பொருள்களிலும் இருக்கின்றவனே...........எவன் உள்ளேயுள்ளவனுய் எல்லாப் பொருள்களேயும் நியமிக்கின்ருனே"— (பிரு-3-7-15)

எனச் சுருதிகூறும் வண்ணம் உள்ளேநின்று ஸகலத்தையும் நடத்துகின்ற எங்குமுள்ள பொருளான ஈச்வரனது கிரியாசக்தி, காலம்என்னும் உருவத்தைக் கொண்டுநிற்க, பாலானது அந்தக் காலமாகிய கிரியாசக்தியினுல் காரியப்படுத்தப் பட்டுத் தயிராக ஆகின்றது. பால் தனது இயல்பாகவே தயிராக ஆவதன்று; அங்ஙனமாயின், அது எப்பொழுதும் தயிராதல் வேண்டும்.

இதனுல், காலமென்பதும் ஈச்வரனுடைய ஒருவிதமான சக்தியேதான் எனக் குறிப்பிக்கப்பட்டது; ஏனெனில், அவனது சக்திக்கு அளவில்லே. அவ்வாறே, சுருதி கூறுகின்றது.

" पराऽस्य शक्तिर्विविधैव "

" இவனது சக்தி (யாவற்றினும்) மேம்பட்டதாய், பலவகைப் பட்டதே என்க "—(ச்வே-6-8)　(13½)

14

இனி, ஈச்வரனுடைய ஞாநசக்தியைப் பகுத்துக்காட்டுபவராய், அது ஜகத்திற்குக் காரணமாதலேக் கூறுகிருர்:

பிரபஞ்சமானது - உணரும்பொருள், உணர்வு, உணரப்படும் பொருள் என்றிவற்றின் வடிவமாக ஞாநசக்தியினுல் ஆகின்றது.

உணர்வாவது — " உலகிற்குக் கர்த்தாவானவன் படைக்கவேண்டியவற்றை ஆலோசித்தான் " என்னும் வியவகாரத்தைச் செய்கின்ற மாயாவ்ருத்தி. அது, தனக்கு ஆதாரமான ப்ரஹ்மத்தை-உணரும்பொருளான ஈச்வரனுகச் செய்கின்றது. அன்றியும், அது தன்னே - படைக்கப்படும் பிரபஞ்சமாக, உணரப்படும் பொருளாகக்காட்டு கின்றது. இவ்வாருக, ஈச்வரனது ஞாநசக்தியினுல் உலகம் உண்டாகின்றது என்பதாம்.

15　(14)

இந்த ஞாநசக்தியைப் பொதுவாகவும், சிறப்பாகவும் பகுக்கிருர்:

ஞாநம் (நிர்விகல்பகம், ஸவிகல்பகம் என) இருவகைத்து. நிர்விகல்பகம் பொருளேமாத்திரம் குறித்து நிற்பது; ஸகவிகல்பகமோ பெயர் முதலிய வற்றைக் குறித்து நிற்கின்றமையால் பலவகைத்தாம்.

16

**सङ्कल्पसंशयभ्रान्तिस्मृतिसादृश्यनिश्चयाः ।**
**ऊहोऽनध्यवसायश्च तथाऽन्येऽनुभवा अपि ॥**

17, 18, 19.

**प्रत्यक्षमेकं चार्वाकाः कणादसुगतौ पुनः ।**
**अनुमानञ्च तच्चापि साङ्ख्याः शब्दञ्च ते अपि ॥**

---

விகல்பம் - வேற்றுமை. நிர்விகல்பகம் - வேற்றுமையற்றது. ஸவிகல்பகம் - வேற்றுமையுடையது. ஞானசக்தியானது நிர்விகல்பகம் எனவும், ஸவிகல்பகம் எனவும் இருதிறப்படும். படைக்கவேண்டிய பொருள்களையெல்லாம் "யான் பலவாக ஆவேனாக" (சா-6-2-3 ; தை-உப-2-6-1). என முதலில் பொதுவாகக் குறித்துநிற்கும் ஞானம் நிர்விகல்பகஞானம் என்பது. மற்று, அதே ஞானமானது ஆகாசம் முதலான படைக்கவேண்டிய பலவிதமான பொருள்களைத் தனித்தனி இன்னதின்னதெனச் சிறப்பாகக் குறிக்குமிடத்து, ஸவிகல்பகஞானமாம் என்க. (15)

16

ஞானத்திற்குத் தன் இயல்பிலே வேற்றுமை இல்லையாயினும், உணரப்படும் பொருள்கள் வேறுவேறுயுள்ளமையால், ஞானம் வேற்றுமையுடையதாகத் தோற்றுகின்றது ; உதாரணமாக,

எண்ணம், ஸந்தேகம், கலக்கம், நினைவு, ஒப்புமை, நிச்சயம், ஊகம், துணிபின்மை (இவை காணப்படுகின்றன) ; அவ்வாறே, மற்றைய அநுபவங்களுமாம்.

எண்ணமாவது - இனி இதனைச் செய்வேன் என்னும் மனோவ்ருத்தி. ஸந்தேகம் - பலதலையான உணர்வு. ஒப்புமை-இது இதனை ஒத்தது என்னும் வ்ருத்தி. ஊகமாவது—பார்த்ததைக் கொண்டு வேறொன்றை ஊகித்தல். துணிபின்மையாவது - பொருள் புலப்பட்டாலும், இது என்னவோ என நிச்சயம் பிறவாது நிற்கும் வ்ருத்தி. அநுபவங்கள் - ப்ரமா எனப்படுகின்ற யதார்த்த அறிவுகள்.

17, 18, 19.

வினா :—அந்த அநுபவங்கள் என்பன யாவை? அவற்றுள், எதனை யார் கொண்டிருக்கிறார்கள் ?

விடை :—வருமாறு:

சார்வாகர்கள் பிரத்தியக்ஷமொன்றையே (கொள்ளுகிறார்கள்.) மற்று, கணாதனும் ஸுகதனும் அதனையும், அநுமானத்தையும் (கொள்ளுகிறார்கள்).

न्यायैकदेशिनोऽप्येवं उपमानञ्च केचन ।
अर्थापत्त्या सहैतानि चत्वार्याह प्रभाकरः ॥
अभावषष्ठान्येतानि भाट्टा वेदान्तिनस्तथा ।
सम्भवैतिह्ययुक्तानि तानि पौराणिका जगुः ॥

---

ஸாங்க்யர்கள் அவையிரண்டனையும், சாப்தத்தையும் (கொள்ளுகிறார்கள்).

மேலும், நியாயைகதேசிகள் இவ்வாறே (கொள்ளுகிறார்கள்). சிலர் [மற்றைய நையாயிகர்] உபமாநத்தையும் கூட்டுகிறார்கள். ப்ரபாகரன் அர்த்தாபத்தியொடு இந்த நான்கையும் கூறுகிறான்.

பட்டனைப் பின்பற்றியவரும், வேதாந்திகளும் - அபாவத்தை ஆறாவதாக வுடைய இவற்றை(க் கொண்டார்கள்). பௌராணிகர்கள் அவற்றை ஸம்பவம், ஐதிஹ்யம் என்றவற்றோடு கூடக்கொண்டார்கள்.

சார்வாக ரெனினும், லோகாயத ரெனினும் ஒக்கும். இவர் - "இந்திரியங்கட்குப் புலப்படுவது எதுவோ, அது மாத்திரம் மெய்; மற்றையது மெய்யன்று" என்பர். ஆதலால், பிரத்தியக்ஷப் பிரமாணத்தை மாத்திரம் கொள்வர்.

கணாதன் - வைசேஷிக தர்சநத்தை நாட்டியவன். ஸுகதன் - புத்தன், கணந்தோறும் தோன்றி அழியும் ஞானமே ஆத்மா என்பவன். கணாதனும், புத்தனும் பிரத்தியக்ஷம் அநுமாநம் என்ற இரண்டுப் பிரமாணமும் கொள்வர்.

ஸாங்க்யர் - கபிலனது தர்சநத்தையும், பதஞ்சலியினது தர்சநத்தையும் பின் பற்றியவர். நியாயைகதேசிகள் - நையாயிகரில் ஒருசாரார். இவர் - பிரத்தியக்ஷமும், அநுமாநமும், சாப்தமும் ஆக மூன்றுப் பிரமாணமும் கொள்வர்.

(நையாயிகர் - கௌதமனது தர்சநத்தைப் பின்பற்றியவர்.) இவர் - அம்மூன்றுடன் உபமாநப்பிரமாணமும் கொள்வர்.

ப்ரபாகரன் - ஜைமிநியினது தர்சநத்தைப் பின்பற்றியவன். இவன் - அந்நாலுடன் அர்த்தாபத்திப் பிரமாணமும் கொள்வன்.

பட்டன் - ப்ரபாகரன் போல, ஜைமிநியினது தர்சநத்தைப் பின்பற்றியவன். ஆயினும், இவ்விருவர்க்கும் கொள்கைகளில் வேறுபாடு உண்டு. பட்டனும், வேதாந்திகளும் - அவ்வைந்துடன் அபாவம் என்னும் அநுபலப்திப் பிரமாணமும் கொள்வர்.

பௌராணிகர் - புராணங்கள் கூறுவதைக் கொண்டவர். இவர் - அந்த ஆறுப் பிரமாணங்களுடன் ஸம்பவப்பிரமாணத்தையும், ஐதிஹ்யப்பிரமாணத்தையும் கொள்வர்,

20

# द्रव्यं गुणस्तथा कर्म सामान्यं सविशेषकम् ।
# समवायश्च काणादाः पदार्थान् षट् प्रचक्षते ॥

---

**பிரமாணங்களினது லக்ஷணம்.**

1. பிரத்தியக்ஷமாவது - இந்திரிய விஷய ஸம்பந்தத்தால் தோன்றும் ஞானம். இந்திரியம் - கண்மூக்கு முதலியன ; விஷயம் - குடம் நாற்றம் முதலியன. இது, காண்டல் எனவும் பெயர்பெறும்.

2. அநுமாநமாவது - ஆராய்ச்சியால் தோன்றும் ஞாநம். மலையிலே புகையைக் காணுங்கால், அங்ஙனம் "இம்மலை தீயுடைத்து" என்று தோன்றும் உணர்வு அநுமாநமாம். இது, கருதல் எனவும் பெயர்பெறும்.

3. சாப்தமாவது - ஆப்தனது வாக்கியத்தால் தோன்றும் ஞாநம். ஆப்தன் - உண்மைப்பொருளைக் கூறுவோன். அவ்வாக்கியம் - வேதம் முதலியன. இது, உரை எனவும் பெயர்பெறும்.

4. உபமாநமாவது - பெயர்க்கும் பெயர்ப்பொருட்குமுள்ள ஸம்பந்தத்தை அறியும் ஞாநம். ஆமா என்னும் சொல்லுக்கு அர்த்தமுணராதவனொருவன் - "ஆவினை ஒக்கும் ஆமா" என ஒரு வேடனிடத்தினின்றும் கேட்டுக்காட்டில் சென்று, ஆவோடு ஒப்புமையுடைய மிருகத்தைக் கண்டபின்னர், "இது ஆமா" என்னும் உணர்வு அவனுக்குத்தோன்று மென்க. இது, ஒப்பு எனவும் பெயர்பெறும்.

5. அர்த்தாபத்தியாவது-பொருந்தாத பொருளினால், பொருந்தியதைக்கொள்ளுதல் "பகலுண்ணான் சாத்தன் பருத்திருப்பான்" என்றவழி, உண்ணாதவனுக்குப் பொருந்தாத பருமையாகிய பொருளால், இரவுண்டல் கொள்ளப்படவேண்டும் என்பதாம். இது, பொருள் எனவும் பெயர்பெறும்.

6. அபாவம் என்னும் அநுபலப்தியாவது-இதனைக் காணாமையால், இது இங்கே இல்லை என்னும் உணர்வு. வெளிச்சமுள்ள ஒரு அறையிலே குடத்தைக்காணாதவழி, இங்கே குடமில்லை யெனச் சடக்கென்று உணர்கின்றோம்.

7. ஸம்பவமாவது - உண்மை. நூற்றில் ஐம்பது உண்டு என்னும் உணர்வு ஸம்பவமாம்.

8. ஐதிஹ்யமாவது - மூலம் தெரியாது பரம்பரையாக வந்த உணர்வு. இந்த ஆலமரத்தில் பேய் உண்டு என்பது. (17, 18, 19)

**வைசேஷிகர் கொண்ட பொருள்கள்.**

20

இவ்வாறு, அவரவர்கொண்ட பிரமாணங்களைக் கூறி, இனி அவரவர்கொண்ட பொருள்களைக் கூறுபவராய் முதலில் வைசேஷிகமதத்தைத் தொடங்குகிறார் :

காணாதர்கள் ஆறு பொருள்களைக் கூறுகிறார்கள். (அவை) 1. திரவியம். 2. குணம். 3. தொழில். 4. சாமாந்யம். 5. விசேஷம். 6. சமவாயம் என்பன.

20½

नव द्रव्याणि भूतानि दिक्कालात्ममनाम्सि च ।

21, 22, 23.

चतुर्विम्शतिरेव स्युः गुणाः शब्दादिपञ्चकम् ॥
परिमाणं च सङ्ख्या च द्वौ सम्योगविभागकौ ।
स्वभावतः पृथक्त्वं च गुरुत्वं द्रवता पुनः ॥
परत्वञ्चापरत्वञ्च स्नेहः सम्स्कार इत्यपि ।
धीद्वेषसुखदुःखेच्छा धर्माधर्मप्रयत्नकाः ॥

24, 25.

सम्स्कारस्त्रिविधो वेगः इष्वादेर्गतिकारणम् ।
दृष्टश्रुतानुभूतार्थस्मृतिहेतुश्च भावना ॥
स्थितस्थापकता नाम पूर्ववत्स्थितिकारणम् ।
आकृष्टशाखाभूर्जादौ स्पष्टमेवोपलक्ष्यते ॥

---

20½

(அவற்றுள்) 1. திரவியங்கள் - பூதங்கள். [1. நிலம். 2. நீர். 3. தீ. 4. வாயு. 5. ஆகாசம்] 6. திசை. 7. காலம். 8. ஆத்மா. 9. மனம்(என) ஒன்பது.

21, 22, 23.

2. குணங்கள் இருபத்து நான்கு :—ஓசை முதலிய ஐந்து [1. ஓசை 2. உருவம். 3. சுவை. 4. நாற்றம். 5. ஸ்பர்சம்] 6. பரிமாணம். 7. எண். 8. சேர்க்கை. 9. பிரிவு. 10. இயல்பிலே வேற்றுமை. 11. திண்மை. 12. நெகிழ்ச்சி. 13. முன்மை. 14. பின்மை. 15. ஸ்நேஹம். 16. வாஸநை. 17. புத்தி. 18. வெறுப்பு. 19. இன்பம். 20. துன்பம். 21. விருப்பு. 22. அறம். 23. பாவம். 24. முயற்சி.

24, 25.

(அவற்றுள்) வாஸநையானது - (வேகம், பாவநை, நிலைபெறுத்துகை என) மூவகைத்து :—1. வேகமாவது - அம்பு முதலியன செல்லுதற்குக் காரணமாயுள்ளது. 2. பாவநையாவது-அநுபவிக்கப்பட்ட பொருளைக் கண்ட விடத்தும் அவனது நினைவிற்குக் காரணமாயுள்ளது. 3. நிலைபெறுத்துகை யென்பது - முன்போன்ற நிலையையே ஆக்குவது; வளைக்கப்பட்ட

26,

उत्क्षेपणमवक्षेपो गमनं च प्रसारणम् ।
आकुञ्चनमिति प्राहुः कर्म पञ्चविधं बुधाः ॥

27, 27½

सामान्यं द्विविधं प्रोक्तं परं चापरमेव च ।
परं सत्तैव सर्वत्र तदनुस्यूतवर्तनम् ॥
द्रव्यत्वं गुणतेत्यादि सामान्यमपरं तथा ।

28

विशेषाः स्युरनन्तास्ते व्यावृत्तिज्ञानहेतवः ॥

28½

रूपस्येव घटे नित्यः सम्बन्धः समवायकः ।

---

கொப்பிலும், பூர்ஜ மரத்திலும், பிறவற்றிலும் தெளிவாகவே காணப் படுகின்றது.

ஒரு புளியமரத்தின் மிலாறைப் பிடித்து இழுத்து வளைக்க, அது வேறுதன்மையாகச் செய்யப்பட்டது; அங்ஙனம் அம்மிலாறை விட்டிட, அது மீட்டும் தனது முந்தின நிலையையே பெறுகின்றது, அது அவ்வாருதற்கு நிலைபெறுத்துகை என்னும் குணம் காரணமாம். (24, 25)

26

3. அறிவுடையோர்: தொழிலை - 1. எழும்பல். 2. வீழ்தல். 3. நடத்தல். 4. நிமிர்தல். 5. வளைதல் என ஐந்துவிதமாகக் கூறுகிறார்கள்.

27, 27½

4. சாமாந்யம் - மேல், கீழ் என இருவகைத்தாகக் கூறப்பட்டுளது :—
1. உண்மைத்தன்மையே மேற்சாமாந்யம்; அது எங்கும் தொடர்ந்திருப்பது.
2. திரவியத்தன்மை, குணத்தன்மை முதலியன கீழ்ச் சாமாந்யம்.

28

5. விசேஷங்கள் அளவிறந்தவை; அவை வேற்றுமையுணர்விற்குக் காரணங்கள்.

28½

6. சமவாயமாவது - நித்யமான சம்பந்தம்; குடத்திலே உருவத்தினது (சம்பந்தம்) போல என்க.

29, 29½.

कालाकाशदिगात्मानः नित्याश्च विभवश्च ते ॥
चतुर्विधाः परिच्छिन्नाः नित्याश्च परमाणवः ।

30.

इति वैशेषिकमते पदार्थाः षट् प्रकीर्तिताः ॥

31.

माया प्रधानमव्यक्तं अविद्याऽज्ञानमक्षरम् ।
अव्याकृतं च प्रकृतिः तम इत्यभिधीयते ॥

---

அவயவமும் அவயவியும், குணமும் குணியும், வினையும் வினைமுதலும், ஜாதியும், வடிவும், விசேஷமும் நித்யப்பொருளும் ஸமவாயத்தால் [நீக்கமின்றி] இருப்பனவாம். (28½)

29, 29½.

கீழ்க்கூறிய ஒன்பது திரவியங்களின் நித்யஅநித்ய வேறுபாட்டைக் கூறுகிறார் ;

காலமும், ஆகாசமும், திசையும், ஆத்மாவும் நித்யமாயுள்ளன ; அவை வியாபகமாயு முள்ளன. பரமாணுக்கள் நால்வகையாகப் பகுக்கப்பட்டவை, நித்யமாயுமுள்ளவை.

எனவே, பரமாணுக்களின் கார்யவடிவான நிலமும் நீரும் தீயும் வாயுவும் அநித்யப் பொருள்கள் என்றபடி. மனமோ, அணுஅளவிற்றாய், நித்யமா யிருப்பது.

30.

இவ்வாறு வைசேஷிக மதத்தில் ஆறு பொருள்கள் கூறப்பட்டன.

**ஸாங்க்யர் கொண்ட பொருள்கள்.**

31.

இனி, ஸேச்வர ஸாங்க்யரது தத்துவங்களை வகுத்துக் கூறுகிறார் :

மாயை - பிரதாநம் எனவும், அவ்யக்தம் எனவும், அவித்யை எனவும், அஜ்ஞாநம் எனவும், அக்ஷரம் எனவும், அவ்யாகிருதம் எனவும், பிரகிருதி எனவும், தமஸ் எனவும் கூறப்படுகின்றது.

மாயை - மயக்கம் ; பிரதாநம் - முதன்மை ; அவ்யக்தம் - வெளிப்படாதது ; அவித்யை - அறியாமை ; அஜ்ஞாநம் - பேதைமை ; அக்ஷரம் - அழியாதது ; அவ்யாகிருதம் - விகாரப்படாதது ; பிரகிருதி - இயல்பு ; தமஸ் - இருள் - இவை, சொல்லர்த்தம். சுருதிஸ்மிருதி புராணங்களுள், மூலப்பிரகிருதி - மாயை முதலிய சொற்களால் கூறப்படுகின்றது என்பதாம். (31)

32.

मायायां ब्रह्मचैतन्यप्रतिबिम्बानुषङ्गतः ।
महत्कालपुमांस्सः स्युः महत्तत्त्वादहङ्कृतिः ॥

33, 34.

तामसात्स्युरहङ्कारात् खानिलाग्न्यम्बुभूमयः ।
शब्दः स्पर्शश्च रूपं च रसो गन्धोऽप्यनुक्रमात् ॥
इन्द्रियाणाञ्च विषयाः भूतानामपि ते गुणाः ।
देवास्सदाशिवश्चेशः रुद्रो विष्णुश्चतुर्मुखः ॥

34½.

सात्त्विकात्स्यादहङ्कारात् अन्तः करणधीन्द्रियम् ।

---

32.

மாயையிலே ப்ரஹ்மசைதந்யத்தினுடைய பிரதிபிம்பஸம்பந்தத்தினுல் மஹத்து, காலம், புருஷன் என்பன உண்டாகும். மஹத்தத்துவத்தினின்று அஹங்காரம் (பிறக்கின்றது).

மூலப்பிரகிருதி தன்னை வசப்படுத்திக்கொள்கின்ற ஈச்வரசைதந்யத்தோடு ஸம்பந்தப்பட, மஹத்தத்துவம் காலம் புருஷன் என்னும் மூன்று பொருள்கள் உண்டாகின்றன .புருஷன் - ஸம்ஸாரியான ஜீவன். (32)

33, 34.

அஹங்காரம் - தாமஸம், ஸாத்துவிகம், ராஜஸம்:என மூவகைப்பட, அவற்றுள் தாமஸ அஹங்காரத்தின்று ஆகாசம், :வாயு, தீ, நீர், நிலம் என்பன உண்டாகும்; முறையே, ஒசையும் ஸ்பர்சமும் உருவமும் சுவையும் நாற்றமுமாம். அவை இந்திரியங்கட்கு விஷயங்களாகவும், பூதங்களது குணங்களாகவும் உள்ளன. (அவற்றிற்கு) தேவதைகள் - ஸதாசிவனும், ஈசனும், ருத்திரனும், விஷ்ணுவும், நான்முகனுமாம்.

தேவதைகள் - ஆகாசம் முதலிய இப்பூதங்களை அதிஷ்டித்து நடத்துகின்ற கடவுளர். (33, 34)

34½.

ஸாத்துவிக அஹங்காரத்தினின்று 1. அகக்கரணமும், 2. ஞானேந்திரியமும் உண்டாகும்.

35, 36.

मनोबुद्धिरहङ्कारः चित्तं करणमान्तरम् ॥
सम्शयो निश्चयो गर्वः स्मरणं विषया अमी ।
चन्द्रः प्रजापती रुद्रः क्षेत्रज्ञ इति देवताः ॥

37.

श्रोत्रं त्वक्चक्षुषी जिह्वाघ्राणं ज्ञानेन्द्रियं विदुः ।
दिग्वातसूर्यवरुणनासत्या इति देवताः ॥

37½.

राजसात्स्युरहङ्कारात् कर्मेन्द्रियसमीरणाः ।

38, 39.

कर्मेन्द्रियाणि वाक्पाणिः पादः पायुरुपस्थकम् ॥
वचनादानगमन विसर्गानन्दसञ्ज्ञकाः ।
विषया देवतास्तेषां वह्नीन्द्रोपेन्द्रमृत्युकाः ॥

---

35, 36.

(அவற்றுள்) 1. அகக்கரணம் - மனம், புத்தி, அஹங்காரம், சித்தம் (என நால்வகைப்படும்). ஸந்தேகம், நிச்சயம், செருக்கு, நினைவு இவை (முறையே அவற்றினது) விஷயங்களாம். சந்திரன், பிரஜாபதி, ருத்திரன், க்ஷேத்ரஜ்ஞன் என்பவர் (அவற்றிற்கு) தேவதைகளாம்.

37.

செவி, மெய், கண், நாக்கு, மூக்கு என்றவற்றை - 2. ஞானேந்திரியமாக (ஸாங்க்யர்) அறிகிருர்கள். திக்கு, வாதம், சூரியன், வருணன், அச்வின் என்பவர்(அவற்றின்) தேவதைகள்.

37½.

ராஜஸ அஹங்காரத்தினின்று 1. கர்மேந்திரியங்களும், 2. வாயுக்களும் உண்டாகும்.

38, 39.

1. கர்மேந்திரியங்கள் - வாய், கை, கால், பாயு, (ஆண்பெண்) குறி என்பன.

39½.

प्राणोऽपानस्समानश्चोदानव्यानौ च वायवः ।

40, 40½.

भूतैस्तुपञ्चभिः प्राणैः चतुर्दशभिरिन्द्रियैः ॥

चतुर्विंशति तत्त्वानि साङ्ख्यशास्त्रविदो विदुः ।

---

விஷயங்கள் [அவற்றின் செய்கைகள்] - பேசுதல், எடுத்தல், செல்லல், விடுத்தல், இன்புறுதல் எனப்படுகின்றன. அவற்றிற்கு தேவதைகள் - வன்னி, இந்திரன், உபேந்திரன், மிருத்தியு, (பிரஜாபதி) என்பவர்.

39½.

2. வாயுக்கள் - பிராணன், அபானன், ஸமானன், உதானன், வியானன் என்பவையாம்.

ஸேச்வரஸாங்க்யருடைய இருபத்துநான்கு தத்துவங்கள்.

40, 40½.

ஸாங்க்யநூலை யுணர்ந்தவர் - ஐந்து பூதங்களாலும், ஐந்து பிராணன்களாலும், பதினாலு இந்திரியங்களாலும் இருபத்துநாலு தத்துவங்களை அறிகிறார்கள்.

மாயை ப்ரஹ்மம் முதலாக தந்மாத்திரங்கள் ஈறாகவுள்ள தத்துவங்கள் இந்த இருபத்துநான்கு தத்துவங்களுக்கும் காரணமாயுள்ளமையால், அவற்றை வேறாகக் கணக்கிடவில்லை.

இதனால் - அநீச்வரஸாங்க்யமதமும் சொல்லாமையே கூறப்பட்டதாயிற்று. எப்படியெனில், அது வருமாறு :

அநீச்வரஸாங்க்யருடைய இருபத்துநான்கு தத்துவங்கள்.

மூலப்பிரகிருதி 1. மஹத்து 1. அஹங்காரம் 1. தாமஸ அஹங்காரத்தினின்று பிறந்த தந்மாத்திரங்கள் 5. தந்மாத்திரங்களினின்று பிறந்த மகாபூதங்கள் 5. ஸாத்துவிக அஹங்காரத்தினின்று பிறந்த அகக்கரணம் 1. மறித்தும், அந்த ஸாத்துவிக அஹங்காரத்தினின்று பிறந்த ஞானேந்திரியங்கள் 5. ராஜஸ அஹங்காரத்தினின்று பிறந்த கர்மேந்திரியங்கள் 5. ஆக தத்துவங்கள் 24. புருஷன் இருபத்தைந்தாம் தத்துவம். காலம் என்பதற்கு- "இது இருந்தது, இருக்கின்றது, இருப்பது" என வியவகரிக்கப்படும் பொருள்கட்குப் புறம்பாக இருப்பு இல்லாமையால், அஃதோர் சுதந்திரமான பொருள் இல்லை யென்க. (40, 40½)

41, 41½.

महान्कालः प्रधानं च मायाऽविद्ये च पूरुषः ॥
इति पौराणिकाः प्राहुः त्रिम्शत्तत्वानि तैस्सह ।

42, 42½.

बिन्दुनादौ शक्तिशिवौ शान्तातीतौ ततः परम् ॥
षट्त्रिम्शत्तत्वमित्युक्तं शैवागमविशारदैः ।

---

**பௌராணிகருடைய முப்பது தத்துவங்கள்.**

41, 41½.

இனி, பௌராணிகமதத்தைக் கூறுகிறார் :

பௌராணிகர் - மஹத்து, காலம், பிரதாநம், மாயை, அவித்யை, புருஷன் என அவற்றோடுகூட முப்பது தத்துவங்களைச் சொல்லுகிறார்கள்.

கீழ்க்கூறிய 24 தத்துவங்களோடு இந்த மஹத்து காலம் முதலிய ஆறையும் கூட்ட, தத்துவங்கள் 30 ஆம். பிரதாநம் - மூலப்பிரகிருதி, தனக்கு இருப்பிடமாயுள்ளதை மயக்காதது மாயை யென்றும், அதற்கு மாறானது, அதாவது மயக்குவது அவித்யை யென்றும் வேறுபாடு காண்க. காலமாவது - ஈச்வரனது செய்கையாம். புருஷன் பரமாத்மாவினது அம்சமாம். (41, 41½)

**சைவாகமத்தினுடைய முப்பத்தாறு தத்துவங்கள்.**

42, 42½.

இனி, சைவமதத்தைக் கூறுகிறார்,

சைவநூலில் தேர்ந்தவரால்-அவற்றிற்குமேல் பிந்துவையும் நாதத்தையும், சக்தியையும் சிவனையும், சாந்தத்தையும் அதீதத்தையும் (சேர்த்து) தத்துவங்கள் முப்பத்தாறு என்று கூறப்பட்டது.

கீழ்க்கூறிய 30 தத்துவங்களோடு இந்த பிந்து நாதம் முதலிய ஆறையும் கூட்ட, தத்துவங்கள் 36 ஆம். பிந்துஎன்பது - ஸகலத்தையும் அதிஷ்டித்து ஆளுகின்ற ஸதாசிவன் என்னும் பெயருடைய நிர்க்குணமான தத்துவம். நாதமாவது - பிரணவ ஸ்வரூபமாக யாவற்றையும் விளக்கிவெளிப்பட்ட அதனது [பிந்துவினது] வேறோர் வடிவம். சக்தி - மாயை அவித்யைகட்கு வேறாய், ஸகலத்தையும் அதிஷ்டித்து நடத்துகின்ற ஈச்வரவல்லமை. சிவன் - இந்த சக்தியையுடையவன், பக்தர்கட்காகத் தன் இச்சையினால் உடம்பை எடுப்பவன். சாந்தம் - அமைதியுற்றது. அதீதம் - கடந்தது. இவையிரண்டும் சிவனுடைய வெவ்வேறான நிலையாம் என்க. (42, 42½)

43, 44, 44½.

सर्वे विकल्पाः प्रागासन् बीजेऽङ्कुर इवात्मनि ॥

इच्छाज्ञानक्रियारूपमायया•ते विजृम्भिताः ।
इच्छाज्ञानक्रियापूर्वाः यस्मात्सर्वाः प्रवृत्तयः ॥
सर्वेऽपि जन्तवस्तस्मात् ईश्वरा इति निश्चिताः ।

---

சுருதியின் கொள்கை.

43, 44, 44½.

கீழ்க்கணக்கிடப்பட்ட தத்துவங்களனைத்தும் பரப்ரஹ்மம் என்னும் ஒரேபொருளி னுடைய மாயாப்பகட்டேயன்றி உண்மைப்பொருள்களல்ல என்னும் வேதாந்தக் கொள்கையானது - "வித்தினுள் முளைபோல" என்னும் உவமையினுல் கீழே உணர்த் தப்பட்டது ; படவே, இங்ஙனம் அவ்வேதாந்தக்கொள்கையைப் பின்பற்றுகிறுர் :

வேற்றுமைகளெல்லாம், வித்தினுள் முளைபோல, முதலில் ஆத்மாவினுள் இருந்தன. அவை - இச்சை, அறிவு, முயற்சி என்னும் வடிவான மாயை யினுல் காட்டப்பட்டன.

எல்லாக் காரியங்களும் இச்சை அறிவு முயற்சி என்றிவற்றுலாகின்ற மையின், எல்லாப் பிராணிகளும் ஈச்வரர்கள் என நிர்ணயிக்கப்பெற்றுர்கள்.

ஜகத்தின் தத்துவமானது அந்தந்தமதத்தார் கூறுகிறபடி உண்மையாயிருந்தால், அங்ஙனம் அவர்கட்கு விவாதம் இல்லை. ஆனுல், அது காணப்படுகின்றது. ஆகவே, பிரபஞ்சம் மாயாகற்பனையேயன்றி உண்மையின்று என்பதாம். மரம், தான் உண்டா தற்குமுன் விதையொடு ஒன்ருக, அதாவது விதையாக இருக்குமாறு போல, பிரபஞ்சம்-தான் உண்டாதற்குமுன் ஈச்வரனேடுஒன்ருக, ஈச்வரனுக இருந்தது என்க.

இனி, இச்சை அறிவு முயற்சி என்பன அசேதநப்பொருள்கட்கு அமையா. ஆனுல், அவை மாயையொடுகூடிய சேதநப்பொருளான ஈச்வரனுக்கு அமைகின்றன. சேதநப்பொருளுக்கோ உபாதிபேதமில்லாது தன்னிடத்துப் பேதமில்லை. ஆதலால், சேதநப்பொருளான ஜீவர்களெல்லாம் ஈச்வரர்களாம். இவ்வாருக, பிரபஞ்சம் நிலை பெறுங்காலும் ஈச்வரனெடு ஒன்ருக, ஈச்வரனுக இருக்கின்றது என்பதாம்.

எனவே, ஈச்வரனது இச்சைமுதலியன மாயாமய மாதலால், அவற்றுலான பிரபஞ்சமும் மாயாமயம் என அமையுமென்க. (43, 44, 44½)

45, 46, 47, 48.

बीजाद्वृक्षस्तरोर्बीजं पारम्पर्येण जायते ॥
इतिशङ्कानिवृत्त्यर्थं योगिदृष्टान्तकीर्तनम् ।
विश्वामित्रादयः पूर्वे परिपक्कसमाधयः ॥
उपादानोपकरणप्रयोजनविवर्जिताः ।
स्वेच्छया ससृजुः स्वर्गं सर्वभोगोपबृम्हितम् ॥
ईश्वरोऽनन्तशक्तित्वात् स्वतन्त्रोऽन्यानपेक्षया ।
स्वेच्छामात्रेण सकलम् सृजत्यवति हन्ति च ॥

---

45, 46, 47, 48.

இனி, ஈச்வரன் உலகைப் படைத்து, காத்து, அழிக்கிருன் என்பதைத் திருஷ்டாந்தத்தால் விளக்குகிருர் :

" வித்தினின்று விருக்ஷம் உண்டாகின்றது ; விருக்ஷத்தினின்று வித்து உண்டாகின்றது ; தொடர்ச்சியாக (இவ்வாறு வித்தும் விருக்ஷமும் உண்டாகின்றன)" என்னும் சங்கையை நீக்கும்பொருட்டு யோகி திருஷ்டாந்தத்தைக் கூறுதல் (ஆயிற்று). ஸமாதிமுதிர்ந்த விச்வாமித்திரர் முதலிய முன்ஞேர்கள் உபாதாநகருவியில்லாமலே, பயனை நோக்காமலே, தன் இச்சையினுல், ஸகலபோகங்களும் நிரம்பிய ஸ்வர்க்கத்தைப் படைத்தார்கள்.

ஈச்வரன் அளவிலாச் சக்தியுடையோனுதலால் சுதந்திரனுய் வேருென்றையும் வேண்டாது, தன்இச்சைமாத்திரத்தால் ஸகலத்தையும் படைக்கிருன், காக்கிருன், அன்றியும் அழிக்கிருன் என்க.

விருக்ஷபீஜ திருஷ்டாந்தத்தினுல் - " ஈச்வரனின்று ஜகத்தும், ஜகத்தினின்று ஈச்வரனும், மறித்து ஈச்வரனின்று ஜகத்தும் இவ்வாறு தொடர்ச்சியாகத் தலைப்பட்டுச் செல்லும் " என்னலாம். ஆனுல், அது நேரன்று ; ஈச்வரன் இறவாத பிறவாத அவிகாரிப் பொருளாதலின். ஆகவே, அத்தகைய சங்கையைமறுப்பவராய் யோகி திருஷ்டாந்தத்தைக் கூறுகிருரென்றபடி. தான்படைத்த உலகினின்றும் யோகி பிறவாமையை இங்கே நோக்கிக்கொள்க. (45, 46, 47, 48)

49.

வினு :—ஆயின், தொழிற்படாத நிர்விகாரியான ஈச்வரன் படைத்தல், காத்தல் அழித்தல் என்றவற்றை எவ்வாறு செய்யக்கூடும் ?

விடை :—கூறுவோம் :

49.

न कारकाणां व्यापारात् कर्ता स्यान्नित्य ईश्वरः ।
नापि प्रमाणव्यापाराज् ज्ञाताऽसौ स्वप्रकाशकः ॥

50, 51.

ज्ञातृत्वमपि कर्तृत्वं स्वातन्त्र्यं तस्य केवलम् ।
या चेच्छाशक्तिवैचित्री साऽस्य स्वच्छन्दकारिता ॥
यया कर्तुमथाकर्तुं अन्यथा कर्तुमर्हति ।
स्वतन्त्रामीश्वरेच्छां के परिच्छेत्तुमिहेशते ॥

52.

श्रुतिश्च सोऽकामयतेतीच्छया सृष्टिमीशितुः ।
तस्मादात्मन आकाशः सम्भूत इति चाब्रवीत् ॥

---

நித்யமான ஈச்வரன் காரகங்களுடைய செய்கையினுல், (தான்) செய்பவனுகமாட்டான். அன்றியும், தானேவிளங்குகின்ற இவன் பிரமாணங்களுடைய செய்கையினுல் அறிபவனுகமாட்டான்.

பிரமாணங்கள் - அறிதற்கருவியான கண் செவி முதலியன. வே - கீ-571, 572, 573 ஆம் பக்கங்களைப் பார்க்க. அதனுல், இச்சுலோகத்தின் கருத்து இனிது விளங்கும். (49)

50, 51.

அவனது அறிவும் செயலும் கேவல ஸ்வாதந்திரியமாம். அன்றியும், இவனது இச்சாசக்தியின் விசித்திரம் எதுவோ, அது தன்இஷ்டப்படி செய்யும் தன்மையாம்.

எதனுல் (அவன் ஒன்றனைச்) செய்யவும், செய்யாதிருக்கவும், வேறுவகையாகச் செய்யவும் கூடியவனுய் இருக்கின்ருனே, (அந்த) ஸ்வதந்திரமான ஈச்வரேச்சையை யார் வரையறுக்க வல்லுநர் ?

கேவலமாவது - ஈச்வரனது இயல்பிலே யாதொரு விகாரமும் ஆகாமை. ஸ்வாதந்திரியம் - வேறொன்றை வேண்டிநில்லாமை. இச்சாசக்தியென்பது - ஈச்வரன் தன்இஷ்டப்படி செய்யும் திறமையாம். அது எதனுலும் தடைப்படாதது, சுதந்திரமானது, அளவிடவொண்ணுதது. (50, 51)

52.

இனி, ஈச்வரனுடைய இத்தகைய இச்சாசக்தியினுலேயே உலகைப் படைத்தல் முதலான காரியம் ஆகின்றது என்பதற்குப் பிரமாணம் யாதெனின்,—வருமாறு :

ஈச்வர(ன் த)னது இச்சையினுல் படைத்தலை - " அவன் விரும்பினுன் " எனவும், " அந்த ஆத்மாவினின்று ஆகாசம் உண்டாயிற்று " எனவும் சுருதி கூறுகின்றது.

53.

# निमित्तं चेद्भवेदस्य जगतः परमेश्वरः ।
# विकारित्वं विनाशित्वं भवेदस्य कुलालवत् ॥

இங்கு மேற்கோளாக எடுத்தாளப்பட்ட சுருதிகள் பிருகதாரண்யக உபநிஷத்தும், தைத்திரீய உபநிஷத்துமாம். (52)

ஈச்வரன் ஜகத்திற்கு நிமித்தகாரணமாத்திர மல்லன்.

53.

இவ்வாறு, ஈச்வரன் பிரபஞ்சத்திற்கு உபாதாநகாரணமும் நிமித்தகாரணமுமாம் என - பிரத்தியக்ஷம் முதலிய மற்றைய எல்லாப் பிரமாணங்களைக் காட்டிலும் மிகவலியுடைத்தான சுருதிப்பிரமாணத்தினுல் உணர்த்தப்பட்டது. இனி, குடத்திற்குக் குயவன் நிமித்தகாரணமாத்திரமா யிருப்பதுபோல, ஜகத்திற்கு ஈச்வரன் நிமித்தகாரணமாத்திரமாம் என்னின்,—அதிலே குற்றம் வருகின்றது :

பரமேச்வரன் இந்த ஜகத்திற்கு நிமித்தகாரண(மாத்திர)மாயின், இவன் குயவன்போல விகாரப்படுதலும் அழியுந்தன்மையனுதலும் ஆகும்.

இப்பிரபஞ்சத்திற்கு பரமாணு உபாதாநகாரணம் எனவும், ஈச்வரன் நிமித்தகாரணம் எனவும் கொண்டால்,—அங்ஙனம் அவன் குயவன்போல விகாரப்படுதல், அதாவது கிரியையுள்ளவனுதல் வேண்டும் ; ஏனெனில், ஒருவன் தான் கிரியையில்லாதவனுய் வேருென்றை விகாரப்படுத்தல், அதாவது காரியப்படுத்தல், இயலாது. கிரியையுள்ளவழியோ சரீரமிருத்தல் வேண்டும் ; வேண்டவே, அழியுந்தன்மை அவச்யம் ஆகுமென்க. ஆதலால், ஈச்வரனை மெய்யாகவே கர்த்தாவாகக் கொள்ளுமிடத்து, அவன் விகாரியாதல் முதலிய குற்றங்கள் வருதலை விலக்குதல் முடியாது ; அவன் நிர்விகாரியான நித்தியப்பொருளாதலின் என்பது கருத்து. (53)

பிரதிவாதி :— புத்திமுதல் முயற்சிஈருகவுள்ள ஒன்பது குணங்களும் (2-23) ஈச்வரனது இயல்பிலே நித்யமாய் அமைந்துள்ளமையால், அவனுக்குச் சரீரமில்லை ; எனவே, கீழ்க்கூறிய குற்றங்கட்கு இடமில்லை என்பதாம்.

வாதி :—அப்படியன்று ; சரீரமில்லையெனக் கொண்டாலும், அங்ஙனம் வேருேர் குற்றம் வருகின்றமையின்.—எப்படியெனில்,—கூறுவோம் :

54.

बुद्ध्यादयो नव गुणाः नित्या एवेश्वरस्य चेत् ।
नित्येच्छावान् जगत्सृष्टौ प्रवर्तेतैव सर्वदा ॥

55.

प्रवृत्त्युपरमाभावात् सम्सारो नैव नश्यति ।
मोक्षोपदेशो व्यर्थस्स्यात् आगमोऽपि निरर्थकः ॥

56.

तस्मान्मायाविलासोऽयं जगत्कर्तृत्वमीशितुः ।
बन्धमोक्षोपदेशादिव्यवहारोपि मायया ॥

---

54,

புத்திமுதலான ஒன்பது குணங்களும் ஈச்வரனுக்கு நித்யமாகவே இருந்தால், (அவன்) நித்யமான இச்சையை யுடையவனுய் பிரபஞ்சப் படைப்பிலே எப்பொழுதும் தலைப்படவே வேண்டும்.

இச்சையென்பது - புத்திமுதலிய ஒன்பது குணங்களுள் ஒன்று. அது ஈச்வரனுக்கு நித்யமாதலால், எப்பொழுது மிருத்தலால், அவன் உலகத்தைப் படைத்தலை எப்பொழுதும் செய்துகொண்டேயிருக்கவேண்டும்; தன்து இச்சையினுல் அதனைப் படைக்கின்றமையின். (54)

55.

இவ்வாறு, ஈச்வரனது

செய்கைக்கு ஒய்வில்லாவளவிலே, ஸம்ஸாரம் தொலைதலே இல்லை. (தொலையவேண்டாம் எனில்,—அங்ஙனம்) மோக்ஷத்தை உபதேசித்தல் வீணுகும்; சாஸ்திரமும் பயனில்லதாகும்.

56.

இவ்வாருகப் பிறர்மதத்தில் குற்றங்கூறி, அதனுல் இழுக்குருத தன்மதத்தை முடிக்கிருர்:

ஆதலால், ஈச்வரன் பிரபஞ்சத்தைப் படைத்தலென்பது, இந்த மாயாப் பகட்டேயாம். பந்தமும், மோக்ஷமும், (அதனை) உபதேசித்தலும் (ஆகிய இவைபோன்ற) பிறவற்றின் வியவகாரமும் மாயையினுல் (ஆவதாம் என்க).

57.

इति श्रीदक्षिणामूर्तिस्तोत्रार्थप्रतिपादके ।
प्रबन्धे मानसोल्लासे द्वितीयोल्लास संग्रहः ॥

57.

44 - ஆம் பக்கத்தில் கூறிய இரண்டாம் சுலோகத்தின் உரையை, இதனோடு முடிக்கிறார் :

ஸ்ரீதக்ஷிணாமூர்த்தியினுடைய ஸ்தோத்திரத்தின் பொருளை நன்கு உணர்த்துகின்ற மாநஸோல்லாஸம் என்னும் நூலினுள் இரண்டாம் உல்லாஸப்பொழிப்புரை முற்றும்.

---

## இரண்டாம் உல்லாஸம்.

### பதவுரை.

1.

| | |
|---|---|
| सम्युक्ताः | ஒருங்குகூடிய |
| परमाणवः | பரமாணுக்கள் |
| प्रपञ्चस्य | ஜகத்திற்கு |
| उपादानम् | உபாதாநகாரணமாக (இருக்கின்றது) |
| तस्मात् | ஆதலால், |
| घटः | குடம் |
| मृदन्वितः | மண்ணோடு கூடியதாக |
| भासते | விளங்குகின்றது ; |
| ईश्वरान्वितः | ஈச்வரனோடு கூடியதாக |
| न (भासते) | (விளங்குவது) அன்று. |

2.

| | |
|---|---|
| रूपरसादयः | வடிவம், சுவை முதலான |
| गुणाः | குணங்கள் |
| परमाणुगताः एव | பரமாணுக்களில் உள்ளவையே ; |
| कार्ये | காரியத்தில் |
| समानजातीयम् | ஒரேஇனமான |
| गुणान्तरम् | பல குணங்களை |
| आरभन्ते | செய்கின்றன. |

3.

| | |
|---|---|
| यत्र | எதிலே |
| कार्यम् | காரியமானது |

| | |
|---|---|
| समन्वेति | ஒற்றித்துநிற்கின்றதோ, |
| तत् | அது |
| समवायि | சமவாயி (என்னும்) |
| कारणम् | காரணமாக (இருக்கின்றது). |
| तु | ஆனால், |
| यत् | எது |
| चक्राद्यम् | சக்கிரம் முதலிய |
| साधनम् | கருவியாக (இருக்கின்றதோ). |
| तत् | அது |
| घटस्य | குடத்திற்கு |
| असमवायि | ஸமவாயிகாரண மன்று |

4.

| | |
|---|---|
| यत् | எது |
| कार्ये | காரியத்திலே |
| अवधृतसामर्थ्यम् | வலிமையுடையதாய் |
| समवायिनि | ஸமவாயிகாரணத்தில் |
| तिष्ठत् | நிற்குமோ, |
| तथा | அப்படியே |
| समवाय्याश्रये | ஸமவாயிசார்பில் (நிற்குமோ), |
| तत् | அது |
| असमवायि | அஸமவாயி(என்னும் காரணமாக) |
| कल्प्यते | கொள்ளப்படுகின்றது. |

4½.

| | |
|---|---|
| ईश्वरः च | ஈச்வரனும் |
| कुलालवत् | குயவன்போல, |
| तेषाम् | அவற்றிற்கு |
| निमित्तम् | நிமித்தம் (என்னும்) |
| कारणम् | காரணமாக (இருக்கிருன்). |

5, 6.

| | |
|---|---|
| यत् | எந்த |
| कार्यम् | காரியமானது |
| यस्मात् | எதனினின்று |
| जायते | உண்டாகின்றதோ, |
| तत् | அது |
| तस्मिन् | அதிலே |
| प्रतितिष्ठति | நிலைபெறுகின்றது ; |
| मृत्तिकायाम् | மண்ணிலே. |
| घटः | குடமும், |
| तन्तौ | நூலிலே |
| पटः | ஆடையும், |
| स्वर्णे | பொன்னிலே |
| अङ्गुलीयकम् | மோதிரமும் (போல என்க). |
| इति | இவ்வாறாக |
| वैशेषिकाः | வைசேஷிகரும், |
| तथा | அப்படியே |
| नैयायिकाः अपि | நையாயிகரும் |
| प्राहुः | கூறுகிறார்கள். |

---

7, 8.

| | |
|---|---|
| रजः | ரஜஸ் (என்றும்), |
| सत्त्वं | ஸத்துவம் (என்றும்), |
| तमः इति च | தமஸ் என்றும் |
| त्रयः | மூன்று |
| गुणाः | குணங்கள் |
| प्रधानस्य | மூலப்பிரகிருதிக்கு (உள்ளன), |
| तेषु | அவற்றுள் |
| रजः | ரஜஸ் |

| | |
|---|---|
| रक्तम् | சிவந்தது, |
| चलम् | அசைவது ; |
| सत्त्वं | ஸத்துவம் |
| शुक्लम् | வெண்மையானது, |
| प्रकाशकम् | விளக்கமானது ; |
| तमः | தமஸ் |
| कृष्णम् | கருமையானது. |
| आवरकं च | மறைப்பது ; |
| (तानि) | (அவை) |
| सृष्टिस्थित्यन्तहेतवः | படைப்பிற்கும், நிலைப்பிற்கும், அழிவிற்கும் காரணமாக (உள்ளன). |
| इति | இவ்வாறு |
| साङ्ख्याः च | ஸாங்க்யர்களும் |
| भाषन्ते | சொல்லுகிறார்கள். |
| तेषाम् | அவர்கட்கு |
| दूषणम् | குற்றம் |
| उच्यते | கூறப்படுகின்றது. |

---

2.

| | |
|---|---|
| इदम् | இந்த |
| जगत् | பிரபஞ்சம் |
| बीजस्य | விதையினுடைய |
| अन्तः | உள்ளே |
| अङ्कुरः इव | முளை போல, |
| प्राक् | முதலில் |
| निर्विकल्पम् | வேற்றுமையற்றதாய் (இருந்தது) |
| पुनः | பின்னர் |
| मायाकल्पित-देशकालकलना- | மாயையினால் கற்பிக்கப்பட்ட இடம் காலம் என்றவற்றின் ஸம்பந்தத்தாலான |

| | |
|---|---|
| वैचित्र्य- | விசித்திரத்தினால் |
| चित्रीकृतम् | பலபடிப்பட்டதாக (ஆயிற்று). |
| यः | எவன் |
| मायावी इव | மாயாவிபோலவும், |
| महायोगी इव अपि | பெரியயோகிபோலவும் |
| स्वेच्छया | தன் இச்சையினால் |
| विजृम्भयति | (இப்பிரபஞ்சத்தை) வெளிக் காட்டுகின்றானோ, |
| तस्मै | அந்த |
| श्रीगुरुमूर्तये | ஸ்ரீமதாசார்யஸ்வரூபமான |
| श्रीदक्षिणामूर्तये | ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு |
| इदम् | இந்த |
| नमः | நமஸ்காரம். |

| | |
|---|---|
| अस्य | இதற்கு |
| अयम् | இது |
| अभिप्रायः | கருத்து : |

9

| | |
|---|---|
| अस्तित्वम् | உள்ளது என்பது |
| अङ्कुरादिफलान्तेषु | முளை முதல் பழம்வரையுள்ள |
| कार्येषु | காரியங்களில் |
| दृश्यते | கொள்ளப்படுகின்றது. |
| ते | அந்த |
| कणाः | பரமாணுக்கள் |
| कुतः | எங்கிருந்து |
| आगत्य | வந்து |
| वटबीजेषु | ஆலமரவிதைகளுள் |
| सम्बद्धाः | சேர்ந்தன ? |

10.

| | |
|---|---|
| कार्यम् | " காரியம் |
| कारणान्तर्गतम् | காரணத்தினுள் அடங்கியது " |
| इति | என்று |
| सर्वैः च | எல்லாராலும் |
| सम्मतम् | சம்மதிக்கப்பட்டது. |
| तस्मात् | ஆதலால், |
| सत्ता | உண்மையும் |
| स्फुरत्ता च | விளக்கமும் |
| सर्वत्र अपि | எங்கும் |
| अनुवर्तते | தொடர்ந்திருக்கின்றது. |

---

11.

| | |
|---|---|
| पुष्पे | பூ |
| फलत्वम् | பழமாதலை |
| आपन्ने | அடைந்தபொழுதும், |
| क्षीरे | பால் |
| दधिताम् | தயிராதலை |
| गते च | அடைந்தபொழுதும், |
| रूपरसादयः | வடிவம், சுவை முதலிய |
| गुणाः | குணங்கள் |
| विजातीयाः | வேறு இனமாக |
| प्रवर्तन्ते | தலைப்படுகின்றன. |

---

12.

| | |
|---|---|
| कारणम् | காரணமும் |
| कार्यम् | காரியமும் |
| अम्शः | அவயவமும் |
| अम्शी | அவயவியும் |
| जातिव्यक्ती | ஜாதியும், வடிவும் |

| | |
|---|---|
| गुणी | குணியும் |
| गुणः | குணமும் |
| क्रिया | வினையும் |
| क्रियावान् | வினைமுதலும் |
| इत्याद्याः | என்பனமுதலான |
| कल्पनाः | கற்பனைகள் |
| प्रकाशस्य एव | விளக்கத்திற்கே (உள்ளன). |

---

13.

| | |
|---|---|
| चैतन्यम् | சேதநத்தன்மை |
| परमाणूनाम् | பரமாணுக்களுக்கும் |
| प्रधानस्य अपि | மூலப்பிரகிருதிக்கும் |
| न इष्यते | கொள்ளப்படவில்லை. |
| ज्ञानक्रिये | அறிவும், செயலும் |
| जगत्क्लृप्तौ | ஜகத்தைப் படைப்பதிலே |
| चेतनाश्रये | சேதநப்பொருளைச் சார்பாக வுடையவையாக |
| दृश्येते | காணப்படுகின்றன. |

---

13½.

| | |
|---|---|
| दधि | தயிர் |
| कालरूपक्रियाशक्त्या | காலம் என்னும் கிரியாசக்தியினால் |
| क्षीरात् | பாலினின்று |
| परिणमेत् | மாறும். |

---

14.

| | |
|---|---|
| जगत् | பிரபஞ்சம் |
| ज्ञानशक्त्या | ஞானசக்தியினால் |

| | |
|---|---|
| ज्ञातृज्ञानज्ञेयरूपम् | அறியும்பொருள், அறியும் கருவி, அறியப்படும் பொருள் என்றவ்ற்றின் வடிவாக |
| भवेत् | ஆகும். |

15.

| | |
|---|---|
| ज्ञानम् | அறிவு |
| द्विधा | இருவகைத்து. |
| निर्विकल्पकम् | நிர்விகல்பகம் (என்னும் ஞானம்) |
| वस्तुमात्रद्योतकम् | பொருளைமட்டும் குறிப்பது ; |
| सविकल्पं तु | ஸவிகல்பக(ம் என்னும் ஞான)மோ |
| संज्ञादिद्योतकत्वात् | பெயர் முதலியவற்றைக் குறிக்கின்றமையால் |
| अनेकधा | பலவகைத்து. |

16.

| | |
|---|---|
| सङ्कल्पसम्शयभ्रान्ति- | எண்ணமும், ஸந்தேகமும், மயக்கமும், |
| स्मृतिसादृश्यनिश्चयाः | நினைவும், ஒப்புமையும், நிர்ணயமும் |
| ऊहः | ஊகமும் |
| अनध्यवसायः च | நிச்சயமின்மையும் |
| तथा | அப்படியே |
| अन्ये | மற்றைய |
| अनुभवाः अपि | அநுபவங்களும் |
| (भवन्ति) | (உள்ளன). |

17, 18, 19.

| | |
|---|---|
| चार्वाकाः | சார்வாகர்கள் |
| प्रत्यक्षम् एकम् | பிரத்தியக்ஷமொன்றை(க் கூறுகிறார்கள்.) |
| पुनः | ஆனல், |

| | |
|---|---|
| कणादसुगतौ | கணாதனும், ஸுகதனும் |
| तत् च अपि | அதனையும் |
| अनुमानं च | அநுமாநத்தையும் (கூறுகிறார்கள்). |
| साङ्ख्याः | ஸாங்க்யர்கள் |
| ते अपि | அவற்றையும் |
| शब्दं च | சப்தத்தையும் (கூறுகிறார்கள்). |
| न्यायैकदेशिनः अपि | நியாயைகதேசிகளும் |
| एवम् | இவ்வாறு (கூறுகிறார்கள்). |
| केचन | சிலர் |
| उपमानं च | உபமாநத்தையும் (கூறுகிறார்கள்). |
| प्रभाकरः | ப்ரபாகரன் |
| अर्थापत्त्या सह | அர்த்தாபத்தியோடுகூட |
| एतानि | இந்த |
| चत्वारि | நான்கையும் |
| आह | கூறுகிறான். |
| भाट्टाः | பாட்டர்கள் |
| अभावषष्ठानि | அபாவத்தை ஆறுவதாகவுடைய |
| एतानि | இவற்றை(க் கூறுகிறார்கள்). |
| वेदान्तिनः | வேதாந்திகள் |
| तथा | அப்படியே (கூறுகிறார்கள்). |
| पौराणिकाः | பௌராணிகர்கள் |
| सम्भवैतिह्ययुक्तानि | ஸம்பவம் ஐதிஹ்யம் என்றவற்றோடு கூடிய |
| तानि | அவற்றை |
| जगुः | கூறினார்கள். |

---

20.

| | |
|---|---|
| काणादाः | காணாதர்கள்,— |
| द्रव्यम् | திரவியமும் |

| | |
|---|---|
| गुणः तथा | குணமும் |
| कर्म | கர்மமும் |
| सविशेषकम् | விசேஷத்தோடு |
| सामान्यम् | ஸாமாந்யமும் |
| समवायः च | ஸமவாயமும் (ஆகிய) |
| षट् | ஆறு |
| पदार्थान् | பதார்த்தங்களை |
| प्रचक्षते | கூறுகிறார்கள். |

20½.

| | |
|---|---|
| नव | ஒன்பது |
| द्रव्याणि | திரவியங்களாவன : |
| भूतानि | பூதங்களும் |
| दिक् | திசையும் |
| कालात्ममनांसि च | காலம் ஆத்மா மனம் (என்பவையாம்). |

21, 22, 23.

| | |
|---|---|
| गुणाः | குணங்கள் |
| चतुर्विंशतिः एव | இருபத்துநான்கே |
| स्युः | ஆகும் : |
| शब्दादिपञ्चकम् | ஓசை முதலிய ஐந்தும் |
| परिमाणं च | அளவும் |
| सङ्ख्या च | எண்ணும் |
| संयोगविभागकौ द्वौ | சேர்க்கையும் பிரிவுமாகிய இரண்டும் |
| स्वभावतः | இயல்பிலே |
| पृथक्त्वम् च | வேற்றுமையும் |
| गुरुत्वम् | கனமும் |
| द्रवता पुनः | நெகிழ்ச்சியும் |

| | |
|---|---|
| परत्वम् च | முன்மையும் |
| अपरत्वम् च | பின்மையும் |
| स्नेहः | சினேகமும் |
| संस्कारः इति अपि | ஸம்ஸ்காரம் என்பதும் |
| धीः | புத்தியும் |
| द्वेषसुखदुःखेच्छाः | வெறுப்பும் இன்பமும் துன்பமும் இச்சையும் |
| धर्माधर्मप्रयत्नकाः | அறமும் பாவமும் முயற்சியும் (24 குணங்களாம்). |

24, 25.

| | |
|---|---|
| संस्कारः | ஸம்ஸ்காரம் |
| त्रिविधः | மூவகைத்தாக (உளது) : |
| वेगः | வேகம் |
| इष्वादेः | அம்பு முதலியவற்றினுடைய |
| गतिकारणम् | போக்கிற்குக் காரணமாய் (உள்ளது) ; |
| भावना च | பாவனையென்பது |
| दृष्टश्रुतानुभूतार्थ- | பார்ப்பதனாலும், கேட்பதனாலும்- |
| स्मृतिहेतुः | அநுபவிக்கப்பட்ட விஷயங்களின் நினைவிற்கு காரணமாய்(உள்ளது) ; |
| स्थितस्थापकता नाम | நிலைபெறுத்துகையாவது |
| पूर्ववत् | முன்போல |
| स्थितिकारणम् | நிலைகொள்ளுதற்குக் காரணமாய் (உள்ளது) ; |
| आकृष्टशाखाभूर्जादौ | இழுக்கப்பட்ட கொப்பிலும், பூர்ஜமரத்திலும், பிறவற்றிலும் |
| स्पष्टम् एव | தெளிவாகவே |
| उपलक्ष्यते | காணப்படுகின்றது. |

26.

| | |
|---|---|
| बुधाः | புலவர்கள் |
| कर्म | கர்மத்தை |
| उत्क्षेपणम् | எழும்பல் |
| अवक्षेपः | வீழ்தல் |
| गमनं च | நடத்தல் |
| प्रसारणम् | நிமிர்தல் |
| आकुञ्चनम् | வளைதல் |
| इति | என |
| पञ्चविधम् | ஐந்துவிதமாக |
| प्राहुः | கூறுகிறார்கள். |

---

27, 27½.

| | |
|---|---|
| सामान्यम् | சாமான்னியம் |
| परम् च | மேல் (எனவும்) |
| अपरम् एव च | கீழ் (எனவும்) |
| द्विविधम् | இருவகைத்தாக |
| प्रोक्तम् | கூறப்பட்டுளது. |
| परम् | மேற்சாமான்னியமாவது |
| सत्ता एव | உள்ளதன்மையே. |
| तत् | அது |
| सर्वत्र | எங்கும் |
| अनुस्यूतवर्तनम् | தொடர்ந்திருப்பது. |
| तथा | அப்படியே |
| अपरं सामान्यम् | கீழ்ச்சாமான்னியமாவது |
| द्रव्यत्वम् | திரவியத்தன்மை |
| गुणता | குணத்தன்மை |
| इत्यादि | என்பன முதலிய (தாம்). |

---

28.

| | |
|---|---|
| विशेषाः | விசேஷங்கள் |
| अनन्ताः | அளவில்லாதவை |
| स्युः | ஆகும். |
| ते | அவை |
| व्यावृत्तिज्ञानहेतवः | வேற்றுமையுணர்விற்குக் காரணங்கள். |

28½.

| | |
|---|---|
| समवायकः | சமவாயமாவது |
| घटे | குடத்திலே |
| रूपस्य इव | உருவத்தினது (ஸம்பந்தம்) போல, |
| नित्यः | நித்யமான |
| संबन्धः | சம்பந்த (மாம்). |

29, 29½.

| | |
|---|---|
| कालाकाशदिगात्मानः | காலமும், ஆகாசமும், திக்கும், ஆத்மாவும் |
| नित्याः च | நித்யமாயும் (உள்ளன). |
| ते | அவை |
| विभवः च | வியாபகமாயும் (உள்ளன). |
| परमाणवः | பரமாணுக்கள் |
| चतुर्विधाः | நான்குவகையுள்ளவையாக |
| परिच्छिन्नाः | வகுக்கப்பட்டவை, |
| नित्याः च | நித்யமாயும் (உள்ளவை). |

30.

| | |
|---|---|
| इति | இவ்வாறு |
| षट् | ஆறு |
| पदार्थाः | பொருள்கள் |

| | |
|---|---|
| वैशेषिकमते | வைசேஷிகமதத்தில் |
| प्रकीर्तिताः | கூறப்பட்டுள்ளன. |

---

31.

| | |
|---|---|
| माया | மாயையானது |
| प्रधानम् | பிரதாநம் (என்றும்), |
| अव्यक्तम् | அவ்யக்தம் (என்றும்), |
| अविद्या | அவித்யை (என்றும்), |
| अज्ञानम् | அஜ்ஞாநம் (என்றும்), |
| अक्षरम् | அக்ஷரம் (என்றும்), |
| अव्याकृतम् | அவ்யாகிருதம் (என்றும்), |
| प्रकृतिः | பிரகிருதி (என்றும்), |
| तमः इति च | தமஸ் என்றும் |
| अभिधीयते | கூறப்படுகின்றது. |

---

32.

| | |
|---|---|
| महत्कालपुमांसः | மஹத்தும், காலமும், புருஷனும் |
| मायायाम् | மாயையிலே |
| ब्रह्मचैतन्य- | ப்ரஹ்மசைதந்யத்தினுடைய |
| प्रतिबिम्बानुषङ्गतः | பிரதிபிம்பசம்பந்தத்தினால் |
| स्युः | உண்டாகும். |
| महत्तत्त्वात् | மஹத்தத்துவத்தினின்று |
| अहङ्कृतिः | அஹங்காரம் (உண்டாகும்). |

---

33, 34.

| | |
|---|---|
| खानिलाग्न्यम्बुभूमयः | ஆகாசமும், வாயுவும், தீயும், நீரும், நிலமும் |
| तामसात् | தாமஸமான |
| अहङ्कारात् | அஹங்காரத்தினின்று |

| | |
|---|---|
| स्युः | உண்டாகும் ; |
| शब्दः | ஓசையும் |
| स्पर्शः च | ஸ்பர்சமும், |
| रूपं च | உருவமும், |
| रसः | சுவையும், |
| गन्धः अपि | நாற்றமும் |
| अनुक्रमात् | முறையே (உண்டாகும்). |
| ते | அவை |
| इन्द्रियाणाम् | இந்திரியங்கட்கு |
| विषयाः च | விஷயங்களாகவும், |
| भूतानाम् | பூதங்களுடைய |
| गुणाः अपि | குணங்களாகவும் (உள்ளன). |
| देवाः | தேவதைகள் |
| सदाशिवः च | ஸதாசிவனும், |
| ईशः | ஈசனும், |
| रुद्रः | ருத்திரனும், |
| विष्णुः | விஷ்ணுவும், |
| चतुर्मुखः | நான்முகனு (மாம்). |

---

34½.

| | |
|---|---|
| अन्तःकरणधीन्द्रियम् | அகக்கரணமும், ஞானேந்திரியமும் |
| सात्त्विकात् | ஸாத்துவிகமான |
| अहङ्कारात् | அகங்காரத்தினின்று |
| स्यात् | உண்டாகும். |

---

35, 36.

| | |
|---|---|
| आन्तरम् | உள்ளேயுள்ள |
| करणम् | கருவியானது |
| मनः | மனம் |

| | |
|---|---|
| बुद्धिः | புத்தி |
| अहङ्कारः | அகங்காரம் |
| चित्तम् | சித்தம் (என நால்வகைத்து). |
| सम्शयः | ஸந்தேகம் |
| निश्चयः | நிர்ணயம் |
| गर्वः | கர்வம் |
| स्मरणम् | நினைவு . |
| अमी | இவை |
| विषयाः | விஷயங்க(ளாம்). |
| चन्द्रः | சந்திரன் |
| प्रजापतिः | பிரஜாபதி |
| रुद्रः | ருத்திரன் |
| क्षेत्रज्ञः | க்ஷேத்ரஜ்ஞன் |
| इति | என்ற (இவர்) |
| देवताः | தேவதைகள். |

---

37.

| | |
|---|---|
| श्रोत्रम् | செவியையும் |
| त्वक्चक्षुषी | மெய்யையும், கண்ணையும் |
| जिह्वाघ्राणम् | நாக்கையும், மூக்கையும் |
| ज्ञानेन्द्रियम् | ஞானேந்திரியமாக |
| विदुः | (வித்வான்கள்) அறிகிருர்கள். |
| दिग्वातसूर्य- | திக்கு, வாதம், சூரியன் |
| वरुणनासत्याः | வருணன், அச்வின் |
| इति | என்ற (இவர்) |
| देवताः | தேவதைகள். |

---

37½.

| | |
|---|---|
| कर्मेन्द्रियसमीरणाः | கர்மேந்திரியங்களும், வாயுக்களும் |
| राजसात् | ராஜஸமான |
| अहङ्कारात् | அகங்காரத்தினின்று |
| स्युः | உண்டாகும். |

38, 39.

| | |
|---|---|
| कर्मेन्द्रियाणि | கர்மேந்திரியங்கள் |
| वाक् | வாய் |
| पाणिः | கை |
| पादः | கால் |
| पायुः | பாயு |
| उपस्थकम् | (ஆண்பெண்) குறி (என்பன). |
| विषयाः | விஷயங்கள் |
| वचनादानगमन- | பேசுதல், எடுத்தல், செல்லுதல், |
| विसर्गानन्दसंज्ञकाः | விடுத்தல், இன்புறுதல் என்னும் பெயருடையவை. |
| वह्नीन्द्रोपेन्द्र- | வன்னி, இந்திரன், உபேந்திரன் |
| मृत्युकाः | மிருத்தியு (என்பவர்) |
| तेषाम् | அவற்றிற்கு |
| देवताः | தேவதைகள். |

39½.

| | |
|---|---|
| वायवः | வாயுக்கள் |
| प्राणः | பிராணனும் |
| अपानः | அபானனும் |
| समानः च | ஸமானனும் |
| उदानव्यानौ च | உதானனும், வியானனும் (என்பவையாம்). |

40, 40⅓.

| | |
|---|---|
| सांख्यशास्त्रविद: | ஸாங்க்ய நூலை யுணர்ந்தவர்கள், |
| पञ्चभि: भूतै: तु | ஐந்து பூதங்களாலும் |
| (पञ्चभि:) प्राणै: | (ஐந்து) பிராணங்களாலும் |
| चतुर्दशभि: | பதினு |
| इन्द्रियै: | இந்திரியங்களாலும் |
| चतुर्विंम्शतितत्त्वानि | இருபத்துநாலு தத்துவங்களை |
| विदु: | அறிகிறார்கள். |

41, 41⅓.

| | |
|---|---|
| पौराणिका: | பௌராணிகர்கள் |
| तै: सह | அவற்றோடுகூட |
| महान् | மஹத்து |
| काल: | காலம் |
| प्रधानं च | பிரதாநம் |
| मायाऽविद्ये च | மாயை, அவித்யை |
| पूरुष: | புருஷன் |
| इति | என |
| त्रिम्शत्तत्त्वानि | முப்பது தத்துவங்களை |
| प्राहु: | சொல்லுகிறார்கள். |

42, 42⅓.

| | |
|---|---|
| शैवागमविशारदै: | சைவநூலில் தேர்ந்தவரால் |
| तत: परम् | அவற்றிற்குமேல் |
| बिन्दुनादौ | பிந்து, நாதம், |
| शक्तिशिवौ | சக்தி, சிவன் |
| शान्तातीतौ | சாந்தம், அதீதம் |
| इति | என |

षट्त्रिंशत्तत्त्वम् முப்பத்தாறு தத்துவங்கள்
उक्तम् கூறப்பட்டன.

---

43, 44, 44½.

सर्वे எல்லா
विकल्पाः வேற்றுமைகளும்,
बीजे விதையினுள்
अङ्कुरः इव முளைபோல,
प्राक् முதலில்
आत्मनि ஆத்மாவினிடத்து
आसन् இருந்தன.

ते அவை
इच्छाज्ञानक्रियारूप- இச்சை, அறிவு, முயற்சி என்னும் வடிவான
मायया மாயையினுல்
विजृम्भिताः காட்டப்பட்டன.
यस्मात् எதனுல்
सर्वाः எல்லா
प्रवृत्तयः செய்கைகளும்
इच्छाज्ञानक्रियापूर्वाः இச்சை, அறிவு, முயற்சி என்றவற்றை முன்னிட்டு நிற்கின்றனவோ

तस्मात् அதனுல்
सर्वे எல்லா
जन्तवः अपि பிராணிகளும்
ईश्वराः इति ஈச்வரர்களாக
निश्चिताः நிச்சயிக்கப்பட்டார்கள்.

---

45, 46, 47, 48.

| | |
|---|---|
| बीजात् | " விதையினின்று |
| वृक्षः | மரமும், |
| तरोः | மரத்தினின்று |
| बीजम् | விதையும் |
| पारंपर्येण | பரம்பரையாக |
| जायते | உண்டாகின்றது " |
| इतिशङ्कानिवृत्त्यर्थम् | என்னும் சங்கையை நீக்கும் பொருட்டு |
| योगिदृष्टान्तकीर्तनम् | யோகியினது திருஷ்டாந்தத்தைக் கூறுதல் (ஆயிற்று). |
| परिपक्वसमाधयः | பரிபக்குவமான ஸமாதியையுடைய |
| विश्वामित्रादयः | விச்வாமித்திரர் முதலிய |
| पूर्वे | முன்னோர்கள் |
| उपादानोपकरण- | உபாதாநகருவியும் |
| प्रयोजनविवर्जिताः | பயனும் இல்லாதவராய் |
| सर्वभोगोपबृंहितम् | எல்லாப்போகங்களும் பெருகிய |
| स्वर्गम् | ஸ்வர்க்கத்தை |
| स्वेच्छया | தனது இச்சையினுல் |
| ससृजुः | படைத்தார்கள். |
| ईश्वरः | ஈச்வரன் |
| अनन्तशक्तित्वात् | அளவிலா வல்லமை யுடைமை யினுல் |
| स्वतन्त्रः | சுதந்திரனுய் |
| अन्यानपेक्षया | பிறவற்றை வேண்டாது, |
| सकलम् | யாவற்றையும் |
| स्वेच्छामात्रेण | தனது இச்சைமாத்திரத்தினுல் |
| सृजति | படைக்கிருன், |

| | |
|---|---|
| अवति | காக்கிறான், |
| हन्ति च | அழிக்கவும் அழிக்கிறான். |

49.

| | |
|---|---|
| नित्यः | நித்யமான |
| ईश्वरः | ஈச்வரன் |
| कारकाणाम् | காரகங்களுடைய |
| व्यापारात् | செய்கையினால் |
| कर्ता | செய்பவனாக |
| न स्यात् | ஆகமாட்டான். |
| अपि | மேலும், |
| स्वप्रकाशकः | தானே விளங்குகின்ற |
| असौ | அவன் |
| प्रमाणव्यापारात् | பிரமாணங்களுடைய செய்கையினால் |
| ज्ञाता | அறிபவனாக |
| न (स्यात्) | ஆகமாட்டான். |

50, 51.

| | |
|---|---|
| ज्ञातृत्वम् | அறிபவனாதலும் |
| कर्तृत्वम् अपि | செய்பவனாதலும் |
| तस्य | அவனுடைய |
| केवलं स्वातन्त्र्यम् | தனி ஸ்வாதந்திர்ய (மாம்). |
| च | அன்றியும், |
| इच्छाशक्तिवैचित्री | இச்சாசக்தியின் விசித்திரம் |
| या | எதுவோ, |
| सा | அது |
| अस्य | இவனுடைய |
| स्वच्छन्दकारिता | தன் இஷ்டப்படி செய்யும் தன்மை (யாம்). |

| | |
|---|---|
| यया | எதனல் |
| कर्तुम् | (அவன் ஒன்றைச்) செய்யவும் |
| अकर्तुम् अथ | செய்யாதிருக்கவும் |
| अन्यथा | வேறுவிதமாக |
| कर्तुम् | செய்யவும் |
| अर्हति | தகுந்தவனு யிருக்கின்ருனே, |
| ( ताम् ) | (அந்த) |
| स्वतन्त्राम् | சுதந்திரமான |
| ईश्वरेच्छाम् | ஈச்வரனுடைய இச்சையை |
| परिच्चेत्तुम् | வரையறுக்க |
| इह | இங்கே |
| के | யார் |
| ईशते | வல்லவரா யிருக்கிருர்கள். |

---

52.

| | |
|---|---|
| श्रुतिः च | சுருதியும்,— |
| सः | " அது |
| अकामयत | விரும்பிற்று " |
| इति | எனவும், |
| तस्मात् | " அந்த |
| आत्मनः | ஆத்மாவினின்று |
| आकाशः | ஆகாசம் |
| सम्भूतः | உண்டாயிற்று " |
| इति च | எனவும் |
| ईशितुः | ஈச்வரனுடைய |
| इच्छया | இச்சையினுல் |
| सृष्टिम् | படைப்பை |
| अब्रवीत् | கூறிற்று. |

---

53.

| | |
|---|---|
| परमेश्वरः | பரமேச்வரன் |
| अस्य | இந்த |
| जगतः | ஜகத்திற்கு |
| निमित्तम् | நிமித்தகாரணமாக |
| भवेत् चेत् | இருந்தால், |
| अस्य | இவனுக்கு |
| कुलालवत् | குயவன்போல |
| विकारित्वम् | விகாரித்தன்மையும் |
| विनाशित्वम् | விநாசித்தன்மையும் |
| भवेत् | ஆகும். |

54.

| | |
|---|---|
| बुद्ध्यादयः | புத்திமுதலிய |
| नव | ஒன்பது |
| गुणाः | குணங்களும் |
| ईश्वरस्य | ஈச்வரனுக்கு |
| नित्याः एव | எப்பொழுது முள்ளவையாகவே |
| (स्युः) चेत् | இருந்தால், |
| (सः) | (அவன்) |
| नित्येच्छावान् | எப்பொழுதும் இச்சையை யுடையவனாய் |
| जगत्सृष्टौ | பிரபஞ்சத்தைப் படைப்பதிலே |
| सर्वदा | எப்பொழுதும் |
| प्रवर्तेत एव | தலைப்படவே வேண்டும். |

55.

| | |
|---|---|
| सम्सारः | ஸம்ஸாரமானது, |
| प्रवृत्त्युपरमाभावात् | செய்கைக்கு ஓய்வில்லாமையினால் |
| न नश्यति एव | அழிவதே இல்லை ; |
| मोक्षोपदेशः | மோக்ஷத்தை உபதேசித்தல் |
| व्यर्थः | வீண் |

| | |
|---|---|
| स्यात् | ஆகும்; |
| आगमः अपि | சாஸ்திரமும் |
| निरर्थकः | பயனில்ல (தாகும்.) |

---

56.

| | |
|---|---|
| तस्मात् | ஆதலால், |
| ईशितुः | ஈச்வரனுக்கு |
| जगत्कर्तृत्वम् | ஜகத்கர்த்திருத்துவமானது |
| अयम् | இந்த |
| मायाविलासः | மாயாவிலாஸ (மாம்). |
| बन्धमोक्षोपदेशादि— | பந்தம், மோக்ஷம், உபதேசம் முதலியவற்றின் |
| व्यवहारः अपि | வியவகாரமும் |
| मायया | மாயையினுல் (நிகழ்கின்றது). |

---

57.

| | |
|---|---|
| श्रीदक्षिणामूर्ति- | ஸ்ரீ தக்ஷிணமூர்த்தியினுடைய |
| स्तोत्रार्थ- | ஸ்தோத்திரத்தின் பொருளை |
| प्रतिपादके | உணர்த்துகின்ற |
| मानसोल्लासे | மாநஸோல்லாஸம் (என்ற) |
| प्रबन्धे | நூலினுள் |
| द्वितीयोल्लास संग्रहः | இரண்டாம் உல்லாஸப்பொழிப்புரை |
| इति | முற்றிற்று. |

---

अथ

## ॥ तृतीयोल्लासः ॥

सत्तास्फुरत्ते भावेषु कुत आगत्य सङ्गते ।
बिम्बादिदर्पणन्यायात् इत्थं पृच्छन् प्रबोध्यते ॥

3. यस्यैव स्फुरणं सदात्मकमसत्कल्पार्थकं भासते
साक्षात्तत्त्वमसीति वेदवचसा यो बोधयत्याश्रितान् ।

---

மூன்றும் உல்லாஸம்.

1.

உடம்பினுள் நின்று வெளியிலுள்ள எல்லாப்பொருள்களையும் காண்கின்ற அறிவான ஆத்மாவாகிய ஜீவன், 8 - ஆம் பக்கத்திலுள்ள முதல் சுலோகத்தினுல் குறிக்கப்பட்டது. பிரபஞ்சத்தைப் படைக்கின்ற ப்ரஹ்மம் 44 - ஆம் பக்கத்திலுள்ள இரண்டாம் சுலோகத்தினுல் குறிக்கப்பட்டது. இனி, அவ்வாறு குறிக்கப்பெற்ற அவ்விருபொருளும் ஒரேபொருளெனக் காட்டுகின்ற மூன்றும் சுலோகத்திற்கு உரையிடும் பொருட்டு வினு எழுகின்றது:

உண்மையும் விளக்கமும் பொருள்களில் எங்கிருந்து வந்து சேர்ந்தன ?—இவ்வாறு பிம்பாதிதர்ப்பணநியாயத்தால் வினவுகின்ற (மாணுக்கன், மூன்றும் சுலோகத்தினுல்) அறிவுறுத்தப்படுகிருன்.

உண்மையும் விளக்கமும், அறியும்பொருளான ஆத்மாவின் இயல்பேயன்றி அறியப்படும்பொருளான குடம்முதலியவற்றின் இயல்பு இல்லை எனக் கீழேகூறப் பட்டது. அப்படியானுல், அந்த உண்மையும் விளக்கமும் குடம்முதலியவற்றினுடைய இயல்பாய் இல்லையானுல், அவை அக்குடம்முதலியவற்ருேடு ஒட்டிநிற்பனவாக எப்படிக் காணப்படுகின்றன ?—முகம்முதலியன கண்ணுடியினுள்போல அவை குடம்முதலிய வற்றுள் பிரதிபிம்பித்தலால் அவற்றினிடத்துக் காணப்படுகின்றனவா ? அல்லது, தீ இரும்புக்கட்டியொடுபோல, அவை குடம்முதலியவற்ருேடு கூடியுள்ளமையால் அவற்றினிடத்துக் காணப்படுகின்றனவா ? (1)

விடை கூறுவோம் :

3. எதனுடையதேயான விளக்கமானது, இல்லதுபோன்ற பொருள்களில் புகுந்து உண்மைவடிவாய் விளங்குகின்றதோ, எது (தன்னை) யடைந்தவர்களை

यत्साक्षात्करणाद्भवेन्न पुनरावृत्तिर्भवाम्भोनिधौ
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर்तये ॥

''நீ அதுவாக இருக்கிருய்'' என்னும் வேதவாக்கினுல் நேரே அறிவுறுத்துகின்றதோ, எதனை நேரே காண்பதனுல் ஸம்ஸாரஸமுத்திரத்துள் மீண்டும் திரும்புதலில்லையோ, அந்த ஸ்ரீமதாசார்யஸ்வரூபமான ஸ்ரீதக்ஷிணமூர்த்திக்கு இந்த நமஸ்காரம்.

இல்லாதபொருளான முயற்கொம்பு முதலியவற்றிற்கு விளக்கமில்லை ; அதாவது, அவை விளங்குவனவில்லை. ஆனுல், கயிற்றிலே பாம்பு - இல்லாதபொருளாயினும், எதிரே தோற்றுகின்றது ; அதனுல் வாஸ்தவமாகவே மனநடுக்கம் உடம்புப் பதட்டம் முதலியனவும் உண்டாகின்றன. ஆகவே, பாம்பை - முயற்கொம்புபோல இல்பொருளாகக் கொள்ளுதல் ஆகாது. அன்றியும், அது வாஸ்தவமாகவே இல்லையாதலால், அதனை - கயிற்றைப்போல உள்பொருளாகக் கொள்ளுதலும் ஆகாது. ஆதலால், அது [பாம்பு] இல்பொருளுமல்லதாய், உள்பொருளுமல்லதாய் இன்னதென்று சொல்லவாராத பொய்ப்பொருளாம் என்க. இவ்வாருகப் பாம்பிற்கு உண்மையும் விளக்கமும் தனக்கென்று சொந்தமாக இல்லையாயினும், அது உள்பொருளான கயிற்றினுடைய உண்மையையும் விளக்கத்தையும் பெற்று நிற்கின்றது. அதுபோல, ஆகாசம்முதலிய பொருள்களெல்லாம் பெரும்பான்மை இல்பொருளை நிகர்த்தவையாய், தானேவிளங்கும் உள்பொருளான பரமேச்வரனுடைய உண்மையையும் விளக்கத்தையும் பெற்றுநிற்கின்றன ; இல்லாவிடில், பிரபஞ்சம் குருடா யிருக்கும். ஆகவே, பாம்பு வாஸ்தவத்திவ் கயிருயிருப்பதுபோல பிரபஞ்சம் வாஸ்தவத்திலே ப்ரஹ்மஸ்வரூபமாகவே இருக்கின்றது என்பதாம்.

இனி, இவ்வாறு பொய்ம்மையான ஜகத்தின்மேல் மெய்ம்மைஎன்னும் நிச்சயமும், ஆத்மாஅல்லாத உடம்புமுதலியவற்றின்மேல் ஆத்மாஎன்னும் நிச்சயமும் ஸகல ஸம்ஸாரத்திற்கும் காரணமாம். ஆதலால், பகவான் பரமேச்வரன் அத்தகைய தீய நிச்சயத்தைப் போக்குபவராய், அமைதி அடக்கம் பொறுமை முதலிய ஸாதநங்களைக் கொண்டு அப்பகவானுகிய பரம்பொருளைப் பார்க்க ஆவலுற்று அதனையே அடைக்கலமாக அடைந்தவர்க்குத் தானே குருவாக வந்து "நீ அதுவாக இருக்கின்ருய்" (சா - 6 - 9 - 4) என்னும் வேதத்திருவாக்கினுல் உண்மையை நேரேஉபதேசித்தருளுகின்ருன். அருளவே, "தானேவிளங்கும் ப்ரஹ்மமாகிய பேரறிவான ஆநந்தஸ்வரூபமாக இதோ நானிருக்கின்றேன்" என ஒருவன் தன்னை

इदमत्राकूतम् :—

2.

असत्कल्पेषु भावेषु जडेषु क्षणनाशिषु ।
अस्तित्वञ्च प्रकाशत्वं नित्यात्संक्रामतीश्वरात् ॥

---

ப்ரஹ்மமாகக் கண்டுணர்ந்தவளவிலே, தொல்லைநிரம்பிய இச்சம்சாரக்கடலினுள் மீட்டும் திரும்பிவருதலில்லை. அவ்வண்ணமே, எண்ணிறந்த சுருதிகள் கூறுகின்றன ; அவற்றுள், சில வருமாறு :

"तरति शोकमात्मवित्"

"ஆத்மாவை அறிந்தவன் துயரத்தைக் கடந்திடுகிறான்"—(சா - 7 - 1 - 3)

"ब्रह्म वेद ब्रह्मैव भवति"

"ப்ரஹ்மத்தை அறிகிறான், ப்ரஹ்மமாகவே ஆகிறான்"— (மு - 3 - 2 - 1)

"न स पुनरावर्तते"

"அவன் மறுபடியும் திரும்புவதில்லை"—(காலாக்நி - ) (3)

இது இங்கே கருத்து :—

எல்லாம் ஆத்மஸ்வரூபந்தான்.

2.

உண்மையும் விளக்கமும் நித்யமான ஈச்வரனிடத்தினின்று (இப்பொருள் களிலே அளாவுகின்றன,) இல்பொருளை ஒத்தவையாய்க் கணப்பொழுதுள் அழியுந்தன்மையுடைய ஜடமான பொருள்களிலே சேர்கின்றன.

தோற்றுவனவெல்லாம், கயிற்றிலே பாம்புபோல, பார்க்கும்பொழுதே அழிந்திடும் இயல்பினவாய் ஜடமாயிருத்தலால் பொய்ம்மையாம். வாஸ்தவத்திலே ஆத்மா ஒன்றே இருக்கின்றது. என்றாலும், கயிறு பாம்பாகத் தோற்றுவதுபோல, ஆத்மா பிரபஞ்சமாகத் தோற்றுகின்றது. ஆத்மாவினுடைய உண்மையும் விளக்கமும் பொய்ப்பொருளோடு சேர்ந்து, அப்பொய்ப்பொருளிலே உள்ளவைபோல் அப்பொய்ப் பொருளாகவே தோற்றுகின்றன ; கயிற்றினுடைய உண்மையும் விளக்கமும் பாம்போடு சேர்ந்து, அப்பாம்பிலே உள்ளவைபோல் அப்பாம்பாகவே தோற்றுவன போல என்க. ஆகவே, ஆத்மாவையல்லது வேறு இல்லையாதலால், ஆத்மாவிற்குப் புறம்பாக ஒன்று மில்லையாதலால், ஆத்மாவும் பிரபஞ்சமும் - முகமும் கண்ணாடியும் போலவாயினும், தீயும் இரும்புக்கட்டியும்போலவாயினும் வேறுவேறாகத் தனித்தனி நின்று சேர்தலில்லை.—மற்றென்னவெனின்,—"உண்மையும் விளக்கமும் நித்யமான

## 3.

# आत्मसत्त्वैव सत्त्वैषां भावानां न ततोऽधिका ।
# तथैव स्फुरणञ्चैषां नात्मस्फुरणतोऽधिकम् ॥

---

ஈச்வரனிடத்தினின்று.........பொருள்களில் சேர்கின்றன" என்றவிடத்து, அவை அப்பொருள்களுள் புகுதல் கருத்தன்று; அவை அந்தந்தப்பொருள்வடிவமாகத் தோன்றுகின்றன என்பது கருத்தாம். கற்பிக்கப்பட்ட பாம்பிலே கயிற்றினது உண்மையும் விளக்கமும் நுழைதலில்லை; கற்பிக்கப்பட்ட பாம்பிற்கு - ஆதாரமான கயிற்றிற்குப்புறம்பாக வடிவம், ஸ்வரூபம் இல்லையாதலின் என்க. அதுபோல இங்கும் நோக்கிக்கொள்க. (2)

3.

கீழ்க்கூறியதையே தெளிவுபெறக் காட்டுகிறார்:

இப்பொருள்களினது உண்மை ஆத்ம உண்மையேதான்; அதனினும் அதிகமாக இல்லை. அப்படியே, இவற்றினது விளக்கமும் ஆத்மவிளக்கத்தினும் அதிகமாக இல்லை.

முகம்பிரதிபிம்பிக்கப்பெறுத கண்ணுடியும் தீயொடு கூடாத குளிர்ந்த இரும்புக்கட்டியும் முறையே முகத்தினும் தீயினும்வேருகத் தனியே விளங்குகின்றன. அதுபோல, ஆகாசம் முதலிய பொருள்கள் ஆத்மாவினும் வேருகத் தனியே விளங்குகின்றனவில்லை. ஆதலால், அதனது உண்மையும் விளக்கமும் அவற்றுள் பிரதிபிம்பித்தலாயினும், அவற்ருேடு கலத்தலாயினும் இல்லை என்பதாம்.

இனி, கண்ணுடிமுதலியன முகம்முதலியவற்றிற்கு வேருக, புறம்பாகத்தனித்து விளங்குகின்றமையால் முந்தினவற்றினுடைய உண்மையும் விளக்கமும் பிந்தினவற்றினுடைய உண்மைவிளக்கங்களினும் அதிகமாக உள்ளன: அதாவது உண்மை விளக்கங்கள் முந்தினவற்றிற்குத் தமக்கென்று சொந்தமாக உள்ளன. ஆனுல், முகம் கண்ணுடிக்குவேருக விளங்குவதுபோல், பாம்பு கயிற்றிற்கு வேருக புறம்பாகத் தனித்து விளங்காமையினுல், பாம்பினுடைய உண்மையும் விளககமும் கயிற்றினுடைய உண்மைவிளக்கங்களினும் அதிகமாக இல்லை: அதாவது, உண்மைவிளக்கங்கள் பாம்பிற்குத் தனக்கென்று சொந்தமாக இல்லை. அதுபோல, ஆகாசம் முதலிய இந்த ஜகத்தினது உண்மையும் விளக்கமும் ஆத்மாவினுடைய உண்மைவிளக்கங்களினும் அதிகமாக இல்லை: அதவாவது, உண்மையும் விளக்கமும் இந்த ஆகாசம் முதலிய பொருள்கட்குத் தமக்கென்று சொந்தமாக இல்லை.

எனவே, பாம்பு கயிற்றினது உண்மையிலே உள்ளதாகி கயிற்றினது விளக்கத்திலே விளங்குவதுபோல, எல்லாம் - ஆத்மஸ்வரூபமான ப்ரஹ்மத்தினது உண்மையிலே உள்ளனவாகி ப்ரஹ்மத்தினது விளக்கத்திலே விளங்குகின்றன என்பதாம். (3)

4.

ज्ञानानि बहुरूपाणि तेषाञ्च विषया अपि ।
अहङ्कारेऽनुषज्यन्ते सूत्रे मणिगणा इव ॥

5.

प्रकाशाभिन्नमेवैतत् विश्वं सर्वस्य भासते ।
लहरीबुद्बुदादीनां सलिलान्न पृथक्स्थितिः ॥

---

4.

இவ்வாறு, வாஸ்தவநோக்கிலே இந்த ஆகாசம்முதலிய பொருள்களே இல்லை என்று உணர்த்தப்பட்டது. இனி, உலகநோக்கிலும் ஆத்மஉண்மைமுதலியவற்றைப் பின்பற்றுது அறிவுக்கு உண்மை முதலியன இல்லை எனக்காட்டுகிருர் :

பலவித அறிவுகளும், அவற்றினது விஷயங்களும்—நூலிலே ரத்நமாலை போல, அகங்காரத்திலே படிகின்றன [அமைகின்றன].

3 - 6, 7 - ஆம் சுலோகங்களையும், நான்காம் உல்லாஸத்தினுள் 2 - ஆம் சுலோகம் முதலியவற்றையும் பார்க்க. (4)

5.

ஆகவே, ஆத்மப்பொருளொன்றே மெய்ப்பொருள் என முடிக்கிருர் :

இந்த ஜகத்தானது விளக்கத்தினும் வேருகாததாகவே யாவர்க்கும் விளங்குகின்றது. அலை குமிழி முதலியவற்றிற்கு நீரினும் வேருக இருப்பு இல்லை.

யாவர்க்கும் - எல்லாப்பிராணிகட்கும். எது தனது உண்மை விளக்கத்திற்காக எந்த வேருெர் பொருளைச் சார்ந்துநிற்கின்றதோ, அது அந்த வேருெர் பொருளினுடைய கற்பனையான வடிவமேதான் ; நீரின்கற்பனைவடிவான அலையும் குமிழியும் போல என்க. அப்படியே, தமது உண்மைவிளக்கத்திற்காக ஆத்மாவைச் சார்ந்து நிற்கின்ற இந்த ஆகாசம்முதலிய பொருள்களெல்லாம், அந்த ஆத்மாவினுடைய கற்பனையான வடிவங்களேதான். எனவே, தானே விளங்கும் உண்மையானது இரண்டாவதில்லாத ஒரே பொருள் என்பதாயிற்று. (5)

6.

“ ஆகாசம்முதலிய இப்பொருள்களெல்லாம் விளங்குதலானது, அறிவுவடிவான ஆத்ம இயல்பேயன்றி அவற்றினது இயல்பன்று ” என்பதை நிரூபிக்கிருர் :

(முதலில்) எந்த அறிவானது பொருள்களில்புகுந்து, “ அறிகிறேன் ”

6.

जानामीत्येव यज्ज्ञानं भावानाविश्य वर्तते ।
ज्ञातं मयेति तत्पश्चात् विश्राम्यत्यन्तरात्मनि ॥

7.

घटादिकानि कार्याणि विश्राम्यन्ति मृदादिषु ।
विश्वं प्रकाशाभिन्नत्वात् विश्राम्येत्परमेश्वरे ॥

---

என்றே (வெளிப்பட்டு) நிற்கின்றதோ, அது, பின்னர், உள்ளேயுள்ள ஆத்மா வினுள் " என்னால் அறியப்பட்டது " என அமர்ந்து [தங்கி] விடுகின்றது.

" நான் குடத்தை அறிகின்றேன், " " என்னால் குடம் அறியப்பட்டது " என்ற இரண்டிலும்—அறிவின் விஷயமாகிய குடம் குறிக்கப்படுகின்றது என்பது உண்மை. என்றாலும், முந்தினதில், குடத்தை அறிதலாகிய செயல் மாத்திரமே சொல்லுவான் குறிப்பு; பிந்தினதிலோ, அந்த அறிதலாகிய செயல் தன்னோடு [ஆத்மாவொடு] ஒற்றித்துத்தன்னிடத்து [ஆத்மாவினிடத்து] அமர்ந்திட்டது என்பது, சொல்லுவான் குறிப்பு.

7.

ஆகாசம் முதலிய இப்பொருள்களெல்லாம் எப்பிரகாசத்தினால் விளங்குகின்றன-வோ, அப்பிரகாசமானது ஆத்மப்பிரகாசத்தினும் வேறு இல்லை; அதாவது, அப்பிரகாசம் ஆத்மப்பிரகாசமே தான் என முந்தின சுலோகத்தினால் உணர்த்தினர். இனி, அந்த ஆகாசம் முதலியவற்றினுடைய உண்மையும் [இருப்பும்] ஆத்ம உண்மை யினும் வேறு இல்லை; அதாவது, அவற்றினது உண்மை ஆத்ம உண்மையேதான் எனத் திருஷ்டாந்தத்தால் காட்டுகிறார்:

(எப்படிக்) குடம் முதலிய காரியங்கள் மண்முதலியவற்றில் முடிகின்றனவோ, (அப்படிப்) பிரபஞ்சமானது பிரகாசத்தினும் வேறாகாமையினால் பரமேச்வரனிடத்து முடிதல் வேண்டும்.

காரியம் காரணத்திற்குப் புறம்பாக இல்லை. உதாரணமாக, குடமாகிய காரியம் தனது உபாதானகாரணமாகிய மண்ணிற்குப் புறம்பாக, வேறாக இல்லை; மண்ணோடு ஒன்றாகி மண்ணாகவே உள்ளது. அதுபோல, இந்த ஜகத்தானது தனது உபாதான காரணமாகிய ஆத்மஸ்வரூபத்திற்குப் புறம்பாக, வேறாக இல்லை; ஆத்ம ஸ்வரூபத்-தோடு ஒன்றாகி ஆத்மஸ்வரூபமாகவே இருக்கின்றது. ஆகவே, வாஸ்தவத்திலே மண் மெய்ம்மையும் குடம் பொய்ம்மையுமாய் இருக்குமாறு போல, ஆத்மப்பொருள் மெய்ம்மையும் பிரபஞ்சம் பொய்ம்மையுமாம் என்க. (7)

அவித்யை மயக்கத்திற்குக் காரணம்

8.

இவ்வாறு, உண்மை ஒன்றேயானால், ஏன் எல்லாப்பிராணிகளும் அதனை அறிதலில்லை? எனில்,—அதனது காரணத்தைத் திருஷ்டாந்தத்தோடு கூறுகிறார்:

8.

स्वगतेनैव कालिम्ना दर्पणं मलिनं यथा ।
अज्ञानेनावृतं ज्ञानं तेन मुह्यन्ति जन्तवः ॥

9.

घटाकाशो महाकाशः घटोपाधिकृतो यथा ।
देहोपाधिकृतो भेदः जीवात्मपरमात्मनोः ॥

---

தன்மேல் படிந்த கறையினுல் எப்படிக் கண்ணுடி மங்கலாகின்றதோ, (அப்படி) அறிவு அறியாமையினுல் மூடுண்டு கிடக்கின்றது; அதனுல் பிராணிகள் மயங்குகின்றன.

அவித்யை, பிராணிகட்கு ஆத்மஸ்வரூபத்தை மறைத்துப் பொய்யுணர்வைச் செய்கின்றது: உணர்வது உணரப்படுவது, காரணம் காரியம் என்பன முதலான வேற்றுமைகளை வாஸ்தவ விஷயங்களாகவே கொள்ளும்படி செய்கின்றது என்பது கருத்து. (8)

**உடம்பு, ஜீவனை ஈச்வரனினும் வேருகப் பிரிக்கின்றது.**

9.

வேற்றுமை வியவகாரங்கட்கெல்லாம் அஜ்ஞானமே அடிக்காரணம் என்ருர். இனி, ஜீவன் ஈச்வரன் என்னும் வேற்றுமை தோன்றுதற்கு ஓர் அதிகமான காரணத்தைத் திருஷ்டாந்தத்தோடு காட்டுகிருர்:

எப்படி கடாகாசமும் மஹாகாசமும் கடமாகிய உபாதியினுல் ஆவனவோ, (அப்படி) ஜீவாத்மாவிற்கும் பரமாத்மாவிற்கும் பேதமானது உடம்பாகிய உபாதியினுல் ஆனதாம்.

வரையறுக்கப்படாது எங்கும் வியாபகமாயுள்ள ஆகாசத்திலே—குடமாகிய உபாதி காரணமாக அக்குடத்தால் தன்னுள் முகக்கப்பட்ட ஆகாசம் மாத்திரம் குடாகாசம் எனவும், அக்குடத்திற்குப்புறம்பாக வெளியிலுள்ள ஆகாசம் மஹாகாசம் எனவும் படுகின்றன. ஒரு கட்டையை இரண்டாகத் துணித்துப் பிரித்தல்போல், அவயவமில்லா ஆகாசத்தைப் பகுத்தல் எதனுலும் நிகழாது. அதுபோலவே,—எங்குமுள்ள ப்ரஹ்மமான ஆத்மஸ்வருபத்திலே-உடம்பாகிய உபாதிகாரணமாக அவ்வுடம்பினுல் வரையறுக்கப்பெற்ற ஆத்மாமாத்திரம் ஜீவன் எனவும், அவ்வுடம்பிற்குப் புறம்பாக வெளியிலுள்ள ஆத்மா ஈச்வரன் எனவும், அவயவமில்லாத அவ்வாத்மஸ்வருபத்திலே பாகுபாடென்பது, பிரிவென்பது வாஸ்தவத்தில் ஏலாதெனவும் கூறப்படுகின்றன.

10.

तत्त्वमस्यादिवाक्यैस्तु तयोरैक्यं प्रदर्श्यते ।
सोऽयं पुरुष इत्युक्ते पुमानेको हि बुध्यते ॥

11.

यज्जगत्कारणं तत्त्वं तत्पदार्थः स उच्यते ।
देहादिभिः परिच्छिन्नो जीवस्तु त्वम्पदाभिधः ॥

---

"நான் மநுஷ்யன், நான்ஸ்திரீ, நான்புருஷன்" :என இதுபோன்றவாறு உடம்பினுல் விசேஷிக்கப்படுகின்ற அந்த அறிவான ஆத்மாவே ஜீவாத்மாவாம் : அதனுல் விசேஷிக்கப்படாத அதுவே ஈச்வரனும் என்றபடி.

உடம்பு முதலிய உபாதிகட்கு ஆத்மஸ்வரூபத்தோடு ஒட்டானது—மயக்கமில்லாவழி இல்லையாதலால், ஜீவனுக்கும் ஈச்வரனுக்கும் வாஸ்தவமான பேதம் நிகழமாட்டா-தென்பது உட்கருத்து. (9)

தத்துவமஸி என்னும் சுருதி, ஜீவனும் ஈச்வரனும் ஒரேபொருள் என உபதேசிக்கின்றது.

10.

ஆகவே, அவ்விரண்டும் ஒன்று என-தத்துவமஸி முதலான வாக்கியங்-களால் நன்கு உணர்த்தப்படுகின்றது. "அவன் இம்மனிதன்" என்ற-விடத்து ஒரே மனிதனன்றோ உணரப்படுகின்றுன், [குறிக்கப்படுகின்றுன்].

11.

தத்துவமஸி என்னும் வாக்கியத்தின் பொருளுணர்ச்சி உண்டாகும் விதத்தை உணர்த்தும் பொருட்டு, முதலில் அவ்வாக்கியத்திலுள்ள 'தத்' 'துவம்; என்னும் சொற்களின் அர்த்தத்தைக் கூறுகிறுர்.

பிரபஞ்சத்திற்குக் காரணமான மூலப்பொருள் எதுவோ, அது - தத் என்னும் சொல்லின் அர்த்தமாகக் கூறப்படுகின்றது. உடம்பு முதலியவற்ருல் அளவிடப்பெற்ற ஜீவனே, துவம் என்னும் சொல்லை (த்தனது) பெயராகக் கொண்டவன்.

நாம் வெளியே காண்கின்ற இந்த ஆகாசம் பூமி முதலான உலகங்களைப் படைத்து, அவ்வவற்றைத் தம்தம் இயல்பு பிறழாது தம்தம் வரம்பிலே நிற்கச் செய்-கின்றதாய், நமக்குத் தெரியாததாயிருக்கின்ற பொருள் எதுவோ, அப்பொருள் - தத் என்னும் சொல்லின் அர்த்தம், நமது சரீரத்தால் வரைசெய்யப் பெற்றுத் தனக்குத் தானே தெரிகின்றதாய், நாம் உள்ளே காண்கின்ற பொருள் எதுவோ, அப்பொருள் - துவம் என்னும் சொல்லின் அர்த்தம். முந்தினது - ப்ரஹ்மம் எனவும், ஈச்வரன் எனவும் பெயர் பெறும்; பிந்தினது - ஆத்மா எனவும், ஜீவன் எனவும் பெயர் பெறும்.

 (11)

12, 13, 14.

तद्देशकालावस्थादौ दृष्टः स इति कथ्यते ।
तथैतद्देशकालादौ दृष्टोऽयमिति कीर्त्यते ॥

मुख्यं तदेतद्वैशिष्ट्यं विसृज्य पदयोर्द्वयोः ।
पुम्मात्रं लक्षयत्येकं यथा सोऽयं पुमान्वचः ॥

प्रत्यक्त्वञ्च पराक्त्वञ्च त्यक्त्वा तत्त्वमसीति वाक् ।
तथैव लक्षयत्यैक्यं जीवात्मपरमात्मनोः ॥

15, 15½.

सामानाधिकरण्याख्यः सम्बन्धः पदयोरिह ।

---

12, 13, 14.

இனி, "அவன் இவனாயிருக்கிறான்" என்னும் திருஷ்டாந்த வாக்கியத்தில்,

அந்த இடத்திலே அந்தக்காலத்திலே அந்த நிலைமை முதலியவற்றிலே காணப்பட்டவன் - "அவன்" என்று சொல்லப்படுகிறான். அவ்வாறே, இந்த இடத்திலே இந்தக்காலம் முதலியவற்றிலே காணப்பட்டவன் - "இவன்" என்று சொல்லப்படுகிறான்.

'அவன் இம்மனிதனாய் [இவனாய்] இருக்கிறான்" என்னும்வாக்கியமானது —(அவன், இவன் என்னும்) இரு சொற்களுடைய முக்கிய அர்த்தமான அச்சம்பந்தத்தையும் இச்சம்பந்தத்தையும் விட்டு, ஒரு மனிதனை மாத்திரம் எப்படி உணர்த்துகின்றதோ,

அப்படியே, "நீ அதுவாயிருக்கிறாய்" என்னும் வாக்கியமானது—உள் தன்மையையும் வெளித்தன்மையையும் விட்டு, ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்று என்பதை உணர்த்துகின்றது.

அவ்வாக்கியம், ஒரேபொருளை உணர்த்துவது என்றல் எப்படி ? எனின்,—அந்த வகையை விளங்கவைக்கிறார் :

15, 15½.

இ(வ்வாக்கியத்)திலே(நீ, அதுஎன்னும்) இருசொற்களின் சம்பந்தமானது, சாமானாதிகரண்யம் என்னும் பெயருடைத்து. (அவ்)விரு சொற்களுடைய

विशेषणविशेष्यत्वं सम्बन्धः स्यात्पदार्थयोः ॥
लक्ष्यलक्षणसम्योगात् वाक्यमैक्यञ्च बोधयेत् ।

---

அர்த்தங்களின் சம்பந்தமானது, விசேஷண விசேஷ்யத் தன்மையாம்.

வாக்கியமானது உணர்த்தப்படுவதும் உணர்த்துவதுமாகிய சம்பந்தத்தால் (ஜீவப்ரஹ்ம) ஐக்கியத்தை உணர்த்தும்.

"அந்த இடத்திலே" (3-12) என்பது முதலான இச்சுலோகங்களின் பொருள் வருமாறு ;—

"அவன் இவனுயிருக்கிருன்" என்பது, திருஷ்டாந்த வாக்கியம். இதனை—மார்கழி மாசத்திலே ஸ்ரீரங்கத்தில் சோமதத்தன் என்னும் பெயருடையவனைக்கண்ட விசாகதத்தன் என்பவன் மறுபடியும் அவனை மாசிமாசத்தில் மதுரையில் பார்த்தவுடன் சொல்வதாகக் கொள்ளுமிடத்து,—மார்கழி மாசமாகிய இறந்தகாலத்தோடும் ஸ்ரீரங்கமாகிய முந்தின இடத்தோடும் சம்பந்தித்துள்ளமைபற்றி "அவன்" என்னும் சொல் வந்தது ; அவ்வண்ணமே, மாசிமாசமாகிய நிகழ்காலத்தோடும் மதுரையாகிய பிந்தின இடத்தோடும் சம்பந்தித்துள்ளமைபற்றி "இவன்" என்னும் சொல் வந்தது. இவ்வாருக வெவ்வேறு காரணம்பற்றிவந்த அவ்விரு சொற்களும், சோமதத்த சரீர பிண்டமாகிய ஒரே பொருளின்மேல் நிற்றல்—ஸாமாநாதிகரண்யமாம், இதனது லக்ஷணத்தைமேலே (3–18, 18½) கூறுவர். இனி, விசேஷண விசேஷ்யத்தன்மையாவது—விசேஷிப்பதும் விசேஷிக்கப்படுவதுமாகிய தன்மை. விசேஷிப்பது - வேறுபடுத்துவது ; விசேஷிக்கப்படுவது - வேறுபடுத்தப் பெறுவது. "அவன் இவனுயிருக்கிருன்," அல்லது "இவன் அவனுயிருக்கிருன்" என்ற வாக்கியத்திலுள்ள "அவன்" என்னும் சொல்லுக்கு—இறந்தகாலம் முதலியவற்ருேடு சம்பந்தித்த சோமதத்தன் என்பது பொருள் ; அப்படியே "இவன்" என்னும் சொல்லுக்கு-நிகழ்காலம் முதலியவற்ருேடு சம்பந்தித்த சோமதத்தன் என்பதுபொருள். எனவே, "அவன்," "இவன்" என்னும் சொற்களுடைய இந்த அர்த்தங்கள் தம்முள் ஒன்றற்கொன்றுள்ள பேதத்தை வரையறுத்து வேறுபடுத்துகின்றமையால் ஒன்றற்கொன்று விசேஷணமும் விசேஷ்யமும் ஆகின்றன.

வினு :—ஆயின், விரோத முண்டாகின்றது. அவன் அவனுகவே இருத்தலும், இவன் இவனுகவே இருத்தலும் நேராகும் ; இதற்குமாருக, அவன் இவனுக இருத்தலும் இவன் அவனுக இருத்தலும் நேராகமாட்டா : அதாவது, இறந்தகாலம் முதலியவற்ருேடு சம்பந்தித்தவன் நிகழ்காலம் முதலியவற்ருேடு சம்பந்தித்தவனுய் இருக்கிருன் என்றலும், நிகழ்காலம் முதலியவற்ருேடு சம்பந்தித்தவன் இறந்தகாலம் முதலியவற்ருேடு

16, 17, 17½.

**गङ्गायां घोष इतिवत् न जहल्लक्षणा भवेत् ॥**

**नाजहल्लक्षणाऽपि स्यात् श्वेतोधावतिवाक्यवत् ।**
**तत्त्वमस्यादिवाक्यानां लक्षणा भागलक्षणा ॥**

---

சம்பந்தித்தவனாய் இருக்கிறான் என்றலும் முரணாம். ஆகவே, "அவன் இவனாயிருக்கிறான்," அல்லது "இவன் அவனாயிருக்கிறான்" என்றவிடத்து சொல் அர்த்தம் பொருந்தாமையினால், அவ்வாக்கியத்தின்பொருளை உணர்தல் எதனாலாகும் ?

விடை ;—லக்ஷணையினாலாகும். (இதனை மேலே [3–17–17½] காண்க.) ஆகவே, "அவன்." "இவன்" என்னும் இருசொற்களும் அவற்றினது அர்த்தங்களும் - ஒன்றற்கொன்று முரணான இறந்தகாலம் நிகழ்காலம் முதலிய விரோத பாகத்தை நீக்கி, விரோதமில்லாத சோமதத்த சரீரபிண்டத்தை உணர்த்துகின்றன என்பது.

இது போலவே, தத்துவமஸி [நீ அதுவாக இருக்கின்றாய்] என்னும் தார்ஷ்டாந்திக வாக்கியத்தை விரிவாக ஆராய்ந்துகொள்க. ஆயினும், அவ்வாராய்ச்சியின் முடிபு சுருக்கமாய் விளங்குமாறு சிறிது கூறுவோம் : "நீ" என்னும் சொல்லுக்கு-உடம்பினால் வரை செய்யப்பட்டதாய் உள்ளேயுள்ள அறிவுப் பொருள் என்பது அர்த்தம். "அது" என்னும் சொல்லுக்கு - உலகங்களைப் படைத்தல் முதலியவற்றையுடையதாய் வெளியிலுள்ள அறிவுப்பொருள் என்பது அர்த்தம். மஹாவாக்கியமானது உள்என்பதையும் வெளிஎன்பதையும் பிறவற்றையும் நீக்கி, எங்குமுள்ள கேவல அகண்ட அறிவுப் பொருளைமாத்திரம் லக்ஷணையால் உணர்த்துகின்றது என்பது தேர்ந்த கருத்து.

16, 17, 17½.

ஆயின், லக்ஷணையென்பது-விட்டலக்ஷணை விடாதலக்ஷணை விட்டுவிடாத லக்ஷணை என மூவகைத்தாயிருக்க, அவற்றுள் மகாவாக்கியத்திற்குப் பொருந்துவது யாதெனின்,—கூறுகிறார் :

"கங்கையில் இடைச்சேரி" என்பதுபோல, (மகாவாக்கியத்திற்கு விட்டலக்ஷணை வாராது.

"வெண்மை [வெண்மையான குதிரை] ஓடுகின்றது" என்னும் வாக்கியம் போல, விடாதலக்ஷணையும் வாராது. தத்துவமஸி முதலான வாக்கியங்கட்கு

सोऽयं पुरुष इत्यादिवाक्यानामिव कीर्तिता ॥

18, 18½.

भिन्नवृत्तिनिमित्तानां शब्दानामेकवस्तुनि ॥
प्रवृत्तिस्तु समानाधिकरणत्वमिहोच्यते ।

---

லக்ஷணையானது - " அவன் இம்மனிதன் " என்பது முதலிய வாக்கியங்கட்குப்போல, பாகலக்ஷணையாகக் கூறப்பட்டுளது.

விட்டலக்ஷணையாவது - சொல்லின் அர்த்தம் முழுதையும்விட்டு, அதனேடு சம்பந்தித்துள்ள வேருேர்பொருளை அறிவித்தல். " கங்கையில் இடைச்சேரி " என்ருல், " கங்கை " என்னும்பதம் - நீரோட்டமாகிய தன் அர்த்தத்தை முற்றும் விட்டு, அதனேடு சம்பந்தித்துள்ள கங்கையை அறிவித்து நின்றது. விடாதலக்ஷணையாவது - சொல்லின் அர்த்தத்தைவிடாது, அதனது சம்பந்தமுடையதை அறிவித்தல். " வெண்மை ஓடுகின்றது " என்ருல், "வெண்மை" என்னும் பதம் - வெண்மைநிறமாகிய தன் அர்த்தத்தைவிடாது, அதனது சம்பந்தமுடைய குதிரையை உணர்த்தி நின்றது. விட்டுவிடாத லக்ஷணையாவது-சொல்லின் அர்த்தத்தினுடைய ஏகதேசத்தை விட்டு, ஏகதேசத்தை அறிவித்தல். இது, பாகலக்ஷணை எனவும் பெயர்பெறும். அது " அவன் இவனுயிருக்கிருன் " என வரும். 101, 102-ஆம் பக்கங்களைப்பார்க்க.

மகாவாக்கியத்திற்கு விட்டலக்ஷணையைக் கொண்டால்,—"நீ," "அது" என்னும் பதங்களின் முக்கிய அர்த்தங்களை முற்றும் விட்டிடுதல் ஏலாது; அறிவாகிய அம்சம் ஒன்ருயிருப்பதிலே விரோதமின்மையின். எனவே, மகாவாக்கியத்திற்கு விட்டலக்ஷணை பொருந்தா தென்க. இனி, விடாதலக்ஷணையைக் கொள்ளுங்கால்,—அவ்விருசொற்களின் முக்கிய அர்த்தங்களை விடாதிருத்தல் ஏலாது; ஒரேபொருளானது - ஆளப்படுகின்ற ஜீவனுகவும், ஆள்கின்ற ஈச்வரனுகவும் உள்ளது என்றல் விரோதப்படுகின்றமையின். எனவே, மகாவாக்கியத்திற்கு விடாதலக்ஷணையும் பொருந்தாதென்க. மற்று, விட்டுவிடாதலக்ஷணையைக் கொள்ளுமிடத்து,—அவ்விருசொற்களின் முக்கிய அர்த்தங்களுடைய ஒரு பாகத்தைவிட்டு, ஒருபாகத்தைவிடாது நிற்றல் ஏற்கின்றது. 101, 102-ஆம் பக்கங்களைப் பார்க்க. ஆகவே, விட்டுவிடாதலக்ஷணையே மகாவாக்கியத்திற்குப் பொருந்துவது என்பதாம். (16, 17, 17½)

18, 18½.

நிற்க, கீழே (3, 15) ஸாமாநாதிகரண்யம் என்று கூறப்பட்டதே; அதனது லக்ஷணம் யாது ?

வெவ்வேறு மொழிப்பொருட் காரணமுடைய சொற்கள் ஒரோபொருளின் மேல் செல்லுதல், இங்கே ஸாமாநாதிகரண்யம் எனப்படுகின்றது.

19, 20, 20½.

परस्यांशो विकारो वा जीवो वाक्येन नोच्यते ॥

जीवात्मना प्रविष्टत्वात् स्वमायासृष्टमूर्तिषु ।
निरंशो निर्विकारोऽसौ श्रुत्या युक्त्या च गम्यते ॥

घटाकाशो विकारो वा नांशो वा वियतो यथा ।

---

மொழிப்பொருட்காரணம் எனினும், பிரவிருத்திநிமித்தம் எனினும் ஒக்கும். பிரவிருத்திநிமித்தமாவது - சொற்கள் பொருள்களை அறிவித்தற்குக் காரணம்.

சுருதி - ஜீவனுக்கும் ஈச்வரனுக்கும் வாஸ்தவத்திலே எத்தகைய பேதத்தையும் காட்டுவதில்லை.

19, 20, 20½.

இனி, "விரல் கையாயிருக்கின்றது," "உவர்மண் நிலமாயிருக்கின்றது," "நெய்தல் கருமையாயிருக்கின்றது" என்பது முதலியவற்றில் முறையே அம்சாம்சித்தன்மையையும் விகாரவிகாரித்தன்மையையும் குணகுணித்தன்மையையும் பிறவற்றையும் கொள்ளுமாறு போல, "நீ அதுவாயிருக்கிறாய்" என்பதிலே அத்தன்மைகளுள் யாதாயினுமொன்றைக் கொள்ளக்கூடாதோ? எனின்,—கூடாது; ஏனெனில், அவ்வாறு கொள்வதற்கு இடமில்லை.—எப்படி?—கூறுவோம்:

வாக்கியமானது - ஜீவன் பரம்பொருளினுடைய அம்சமாகவாயினும், விகாரமாகவாயினும் இருக்கிறான் என்று அர்த்தம் கொள்ளாது; (அப் பொருள், தன்மாயையினால் படைக்கப்பட்ட உருவங்களுள் ஜீவவடிவாகப் புகுந்துள்ளமையின். அது அவயவமில்லதாக விகாரமில்லதாகச் சுருதியினாலும் யுக்தியினாலும் அறியப்படுகின்றது. எப்படிக் கடாகாசமானது மகாகாசத்தினுடைய விகாரமாகவாயினும் அம்சமாகவாயினும் ஆகமாட்டாதோ, (அப்படிப்போல என்க).

ப்ரஹ்மம் தான்படைத்த பொருள்களுள் தானே ஜீவாத்மாவாகப் புகுந்திருப்பதற்குச் சுருதிகள் பல உள்ளன; அவற்றுள், சில வருமாறு:

"तत्सृष्ट्वा । तदेवानुप्राविशत्"
"அதனைப்படைத்து, அதனுள்ளேயே புகுந்தது"—(தை-உப-2-6)

"अनेन जीवेनात्मनानुप्रविश्य"
"இந்த ஜீவாத்மாவாகப் புகுந்து"—(சா-6-3-2.)

## 21.

# त्वमिन्द्रोऽसीतिवद्वाक्यं न खलु स्तुतितत्परम् ॥

---

ப்ரஹ்மம் அம்சமில்லாததாய் விகாரமில்லதாயிருப்பதற்குச் சுருதிஸ்மிருதிகள் வருமாறு :

**" निष्कलं निष्क्रियं शान्तम् "**

" அவயவமில்லாதது, கிரியை யில்லாதது, சாந்தமானது "—(ச்வே-6-19),

**" अरूपमव्ययम् "**

" உருவமில்லாதது, தேய்தலில்லாதது "—(கட-3-15.)

**" नित्यं............तदव्ययम् "**

" அது நித்யமானது, குறைதலில்லாதது "—(மு-1-6.)

**" अविकार्योऽयम् "**

" இது விகாரப்படாதது "—(வே-கீ-2-25,)

இதற்கு யுக்தியும் வருமாறு :—ஜகத்திற்குக் கர்த்தாவான முதற்பொருளாகிய ப்ரஹ்மம் என்னும் ஈச்வரன் அம்சங்களை யுடையவனாயின், அவயவங்களாலாகியவனாயின்,—அவை அவச்யம் அவனுக்குமுந்தி இருத்தல்வேண்டும்; அவை தம்மாலாகிய அவ்வீச்வரனுக்குமுன்னமே இருத்தல் இன்றியமையாததாம். ஆகவே, அங்ஙனமவன், படைக்கப்பட்ட பொருள்களுள் தானும் ஒரு படைக்கப்பட்ட பொருளாகின்றமையால், முற்று முணர்ந்தவனாய் எல்லாம்வல்ல ஜகத்கர்த்தாவான ஈச்வரனாகமாட்டான். அன்றியும் அந்த அவயவங்களைக் கார்யப்படுத்தி அவனைப்படைத்தற்கு ஒருகர்த்தா வேண்டும் என இது இவ்வாறு வரம்பின்றி ஓடும். ஆகவே, ப்ரஹ்மத்தினிடத்து அம்சமென்பது பொருந்தாது. அவ்வாறே, அதனிடத்து விகாரமும் பொருந்தாது ; உருவமும் அவயவமுமில்லாத் உண்மைமாத்திரமா யிருத்தலின் என்க.

எனவே, தத்துவமஸி வாக்கியமானது அம்சாம்சித்தன்மையையும், விகார விகாரித்தன்மையையும் குறிக்கமாட்டாதென்பதாம். (19,20, 20½)

## 21.

மேலும், அது புகழ்ச்சியையும் குறிக்கமாட்டாது ;

வாக்கியமானது - " நீ இந்திரனாயிருக்கிறாய் " என்பதுபோல, புகழ்ச்சியின்மேல் நிற்பதாகவே மாட்டாது.

இந்திரனல்லாதவனை " நீ இந்திரனாயிருக்கிறாய்" என்றால், அது வெறும் புகழ்ச்சியே யன்றிப் பிறிதில்லை. அதுபோல, " நீ அதுவாயிருக்கிறாய் " என்பதிலே ஜீவனை

21½.

# न सादृश्यपरं वाक्यं अग्निर्माणवकादिवत् ।

22.

# न कार्यकारणत्वस्य साधनं मृद्घटादिवत् ॥

ஈச்வரனுகப் புகழ்தல் ஒவ்வாது; எங்ஙனமெனில்,—பேதமுள்ள வழியன்றோ புகழ்ச்சி கூடும். மற்றுச் சுருதிகளெல்லாம் ஜீவனுக்கும் ஈச்வரனுக்கும் அபேதத்தை முழங்குகின்றன. ஆகவே, பேதமில்லாதவழி, புகழ்ச்சிக் கற்பனைக்கு இடமில்லை என்பதாம். (21)

21½.

அன்றியும், அது ஒப்புமையையும் குறிக்கமாட்டாது :

வாக்கியமானது—“ மாணுக்கன் நெருப்பாயிருக்கிருன் ” என்பது முதலியனபோல், ஒப்புமையின் மேல் நிற்பதாகாது.

ஒப்புமையாவது - ஒன்றனுடைய குணமாயினும் செய்கையாயினும் உறுப்பாயினும் மற்றொன்றனுடைய குணத்தோடு செய்கையோடு உறுப்போடு சமானமாயிருத்தல். “ மாணுக்கன் நெருப்பாயிருக்கிருன் ” என்ருல், “ மாணுக்கன் நெருப்புப் போல பொன்மை நிறமுடையவனுயிருக்கிருன் ” எனப் பொன்மை நிறமாகிய குணம் ஒப்புமையாம். ஆனுல், “ நீ அதுவாயிருக்கிருய் ” என்பதற்கு—ஜீவன் ஈச்வரன் போலிருக்கிருன் என்று பொருள்கொள்ளுதல் பொருந்தாது ; ஏனெனில், ஈச்வரன்— நிர்க்குணன், குணமில்லாதவன்; நிரவயவன், உறுப்பில்லாதவன்; நிஷ்கிரியன், செய்கையில்லாதவன் என்பது. ஆகவே, “ மாணுக்கன் நெருப்பாயிருக்கிருன் ” என்னும் வாக்கியம் ஒப்புமையைக் குறியாதென்க. (21½)

22.

மற்றும், அது காரியகாரணத் தன்மையையும் கூருது ;

(வாக்கியமானது)—“ குடம் மண்ணுயிருக்கின்றது ” என்பது முதலியன போல, காரியகாரணத்தன்மையைக் குறிப்பதன்று.

“குடம் மண்ணுயிருக்கின்றது” என்ருல், மண் குடமாகக் காரியப்பட்டிருக்கின்றது என்பது. ஆனுல், “ நீ அதுவாயிருக்கிருய் ” என்பதற்கு—ஈச்வரன் ஜீவனுகக் காரியப் பட்டிருக்கிருன் என்று பொருள் கொள்ளுதல் பொருந்தாது ; ஈச்வரன் நித்தியமான நிரவயவப் பொருளாதலின் என்க. (22)

இன்னும், அது ஜாதிவ்யக்தித் தன்மையையும் உணர்த்தாது :

22½.

**न जातिव्यक्तिगमकं गौः खण्ड इतिवद्वचः ।**

23.

**गुणगुण्यात्मकं वाक्यं नैतन्नीलोत्पलादिवत् ॥**

23½.

**नोपासनापरं वाक्यं प्रतिमास्वीशबुद्धिवत् ।**

---

22½.

வாக்கியமானது - "துண்டம் ஆவாயிருக்கின்றது" என்பதுபோல ஜாதிவ்யக்திகளைக் குறிப்பதன்று.

"துண்டம் ஆவாயிருக்கின்றது" என்றால், அதள் முதலியவற்றையுடைய சரீர பிண்டமாகிய வ்யக்தியிலே ஆத்தன்மையாகிய ஜாதி இருக்கின்றது என்பது. (அதள் - ஆவின் கழுத்தில் தொங்கும்சதை.) ஆனால், "நீ அதுவாயிருக்கிறாய்" என்பதற்கு - ஜீவவடிவான வ்யக்திகளிலே ஈச்வரனாகிய ஜாதி உள்ளது என்று பொருள் கொள்ளுதல் கூடாது; ஏனெனில், ஜாதியென்பது அசேதநமாதலால், சேதனப் பொருளாகிய ஈச்வரன் ஆத்தன்மைபோல ஜாதி யாகமாட்டான் என்க. (22½)

23

மேலும், அது. குணகுணித் தன்மையும் காட்டாது :

இந்தவாக்கியமானது - "நெய்தல் கருமையாயிருக்கின்றது" என்பது முதலியனபோல, குணகுணித்தன்மையை யுடையதன்று.

ஜீவனை ஈச்வரனுடைய குணமாகக் கொண்டால், அங்ஙனம் ஈச்வரன் ஜீவனைப்போல் பிறந்து இறந்து உழலும் சம்சாரியாதல் வேண்டும். ஆகவே, அது - ஈச்வரனை, இயல்பாகவே நித்யனாக சுத்தனாக முக்தனாக முற்று முணர்ந்தவனாக எல்லாம் வல்லவனாகக் கூறுகின்ற சுருதிகட்கு முரணும். அல்லது, ஈச்வரனை ஜீவனுடைய குணமாகக் கொண்டால், ஜீவன் சம்சாரியாகாது நித்ய முக்தனா யிருத்தல் வேண்டும்; வேண்டவே, அங்ஙனம் பந்த மோக்ஷத்தைப் பற்றிய சாஸ்திரம் வீணாம். (23)

23½.

மற்றும், அது உபாஸனையையும் குறிப்பதாகாது :

வாக்கியமாவது - விக்கிரகங்களிலே ஈச்வரபுத்திபோல உபாஸனையின் மேல் நிற்பதன்று.

"நீ அதுவா யிருக்கிறாய்" என்னும் வாக்கியமானது - ஜீவனை ஈச்வரனாக

24.

# न चौपचारिकं वाक्यं राजवद्राजपूरुषे ॥

24½.

# जीवात्मना प्रविष्टोऽसौ ईश्वरः श्रूयते यतः ।

---

வாயினும், ஈச்வரனை ஜீவனுக வாயினும் தொழுதல் வேண்டும் என விதிக்கின்றது என்று பொருள் கொள்ளாது. ஏனெனில் அவ்வாறு அர்த்தம் கொடுக்கக்கூடிய யாதொரு பதமும் அவ்வாக்கியத்தில் இல்லை; அன்றியும், அவ்வாக்கியமானது உபாஸனையைக் கூறுகின்ற பிரகரணத்தினுள்ளும் வரவில்லை. மற்று, "இருக்கிறுய்" என்னும் பதம் அடுத்து நிற்றலால் அவ்வாக்கியம் ஸ்வரூப மாத்திரத்தில் தீர்கின்றது என்பது நிச்சயமாம். (23½)

24.

அன்றியும், அது உபசார வழக்கைக் குறிக்கமாட்டாது :

இன்னும் வாக்கியமானது - அரசனது வேலைக்காரனிடத்து அரசனைப் போல, உபசார வழக்கினுல் வந்ததன்று.

அரசனுடைய வேலைக்காரனை அரசனென்றல்போல, ஜீவனை ஈச்வரனென்றல் உபசாரவழக்காம் எனின்,—அது அமையாது; சாந்தோக்ய உபநிஷத்தில் ஆறும் அத்தியாயத்துள் "தத்துவமஸி" என்ற அதே வாக்யத்தை ஒன்பதுமுறை திரும்பத்திரும்பச் சொல்லித் தேற்றமாக உறுதிப்படுத்தி யிருத்தற்கு இவ்வுபசார வழக்கு விரோதப்படுமாதலின். உபசாரத்தால் கூறிய வார்த்தையைத் திரும்பத் திரும்பச் சொல்லித் தேற்றமாக உறுதிப்படுத்துவதற்கு இடமேது ?—இல்லை. ஆகவே, வாக்கியமானது உபசாரத்தைக் குறித்து நிற்பதன்றென்க. (2 )

24½.

வாக்கியத்திலே இந்தப் புகழ்ச்சி (3-21) முதலான பேதகற்பனைகட்கு இடமில்லை :

ஏனெனில், அந்த ஈச்வரன் ஜீவாத்மாவாகப் புகுந்திருக்கிறுன் எனச் சுருதி கூறுகின்றது.

எனவே, உடம்பு முதலியவற்றினுடைய சேர்க்கையுள் புகுந்துள்ள ஈச்வரனே ஜீவன் என்னும் பெயரைப் பெறுகிருன் என அமைந்தது. ஆகவே, அந்த உடம்பு முதலிய உபாதிகளை நீக்கியவழி, ஜீவன் என்று ஒரு வேறுபொருள் இல்லாமல் எல்லாம் ப்ரஹ்மமாகவே இருத்தலால், தத்துவமஸி என்னும் வாக்கியமானது உண்மைப் பொருளான ஆத்மாவாகிய ப்ரஹ்மஸ்வரூபத்தையே உள்ளபடி உணர்த்துகின்றது என்பது தேர்ந்த கருத்து. (24½)

25, 26.

देहेन्द्रियमनोबुद्धिप्राणाहङ्कारसंहतौ ॥
आत्मसङ्कलनादज्ञैः आत्मत्वं प्रतिपाद्यते ।
वह्निधीः काष्ठलोहादौ वह्निसङ्कलनादिव ॥

27, 28, 29, 30, 30½.

देहमन्नमयं कोशं आविश्यात्मा प्रकाशते ।
स्थूलो बालः कृशः कृष्णः वर्णाश्रमविकल्पवान् ॥

---

**அஜ்ஞானிகள் உடம்புமுதலியவற்றையே ஆத்மாவாக மயங்குதல்.**

25, 26.

இனி, எல்லாவற்றினுடைய ஆத்மாவும் ப்ரஹ்மமான ஈச்வரனுனல்,—"நான் ப்ரஹ்மமாயிருக்கிறேன்" என்று ஏன் ஆத்மா ஈச்வரனுகத் தோன்றவில்லை? "நான் மநுஷ்யனு யிருக்கிறேன்" என்பது முதலாக ஈச்வரனினும் வேருகவேயன்ரே ஆத்மா தோன்றுகின்றது எனில்,—கூறுவோம், கேட்பாயாக:

உடம்பு, இந்திரியங்கள், மனம், புத்தி, பிராணன், அகங்காரம் என்றிவற்றினது சேர்க்கையிலே ஆத்மக்கலப்பினுல் அஜ்ஞாநிகள் (அச்சேர்க்கையையே) ஆத்மாவாகக் கொள்கிருர்கள்; விறகு உலோகம் முதலியவற்றிலே நெருப்புக்கலப்பினுல் நெருப்பென்னும்புத்திபோல.

விறகிலே நெருப்பின் கலப்பினுல் அவ்விறகையே நெருப்பாகக் கொள்வதுபோல, உடம்புமுதலியவற்றிலே ஆத்மாவின் கலப்பினுல் அவ்வுடம்பு முதலியவற்றையே ஆத்மாவாக அஜ்ஞாநிகள் அறிகிருர்கள். (25, 26)

**ஐந்து கோசங்களுள்ளும் ஆத்மா விளங்குதல்.**

27, 28, 29, 30, 30½.

ஆத்மா இவ்வாறு உடம்புமுதலிய உபாதிகளால் ஈச்வரனினும் வேருகத் தோன்றுதலைக் கூறி, அவ்வாத்மா அளவுபட்டவன்போல் தோற்றுதலையும் எடுத்துச் சொல்கிருர்:

ஆத்மா அன்னமயமாகிய சரீரத்தைப் புகுந்து பருத்தவனுக, சிறியவனுக, மெலிந்தவனுக, கறுத்தவனுக, ஜாதிவித்தியாசமும் ஆச்ரம வித்தியாசமும் உடையவனுகப் புலப்படுகிருன்.

प्राणकोशेऽपि जीवामि क्षुधितोऽस्मि पिपासितः ।
सम्शितो निश्चितो मन्ये इति कोशे मनोमये ॥
विज्ञानमयकोशस्थः विजानामीति तिष्ठति ।
आनन्दमयकोशाख्ये त्वहम्कारे पुरा कृतैः ॥
पुण्यैरुपासनाभिश्च सुखितोऽस्मीति मोदते ।
एवं कञ्चुकितः कोशैः कञ्चुकैरिव पञ्चभिः ॥
परिच्छिन्नइवाभाति व्याप्तोऽपि परमेश्वरः ।

31, 31½.

यथा सलिलमाविश्य बहुधा भाति भास्करः ॥
तथा शरीराण्याविश्य बहुधा स्फुरतीश्वरः ।

---

(அவன்) பிராணகோசத்திலும் "வாழ்கிறேன்," "பசியுள்ளவனு யிருக்கிறேன்," "தாகமுடையவனு யிருக்கிறேன்" (எனக் கருதுகின்ருன்). மனோமயகோசத்திலே "ஸந்தேகமுடையவனு யிருக்கிறேன்," "நிச்சய முடையவனு யிருக்கிறேன்," "நினைக்கிறேன்" என(க் கொள்கிருன்).

(அவன்) விஜ்ஞானமயகோசத்திலிருக்கும்பொழுது "உணர்கிறேன்" என்று நிற்கிருன். மற்றும், ஆநந்தமயகோசம் என்னும் பெயருடைய அஹங்காரத்திலே, முன்செய்த நல்வினைகளாலும் உபாஸனைகளாலும் "இன்புற்றவனுயிருக்கிறேன்" என மகிழ்கின்ருன்.

பரமேச்வரன் எங்கும் நிறைந்தவனுனுலும், ஐந்து போர்வைகள்போன்ற ஐந்து கோசங்களினுலும் போர்த்துமூடப்பெற்றவனுய் (அவற்ருல்) அளவுபட்டவன்போல் தோன்றுகிருன்.

ஆத்மா சரீரந்தோறும் விளங்குதல்.

31, 31½.

பரிபூர்ணனுன பரமேச்வரன் இவ்வாறு உடம்புமுதலிய உபாதிகளால் அளவு பட்டவன்போல் தோற்றுதலை எடுத்துக்கூறி, அவன் சரீரந்தோறும் பேதமாய் அனேகமாய்த் தோன்றுதலைத் திருஷ்டாந்தத்தால் எடுத்துக்காட்டுகிருர்:

எப்படி சூரியன் நீரினுள் புகுந்து பலபடியாகத் தோற்றுகின்ருனே, அப்படி ஈச்வரன் உடம்புகளுள் புகுந்து பலபடியாகத் தோற்றுகின்ருன். எனவே, அனேக ஜலபாத்திரங்களுள் தோன்றுகின்ற சூரியபிம்பத்திற்கு ஜலமாகிய உபாதியை நோக்காவிடத்து, அதனது [சூரியபிம்பத்தினது] இயல்பிலே பேதத்தை நிரூபித்தல் இயலாதவாறுபோல,—அனேக சரீரங்களுள் விளங்குகின்ற

32, 33, 34, 34½.

कारणत्वं च कार्यत्वं तटस्थं लक्षणं तयोः ॥
शाखायां चन्द्र इतिवत् नैव मुख्यमिदं मतम् ।
महाप्रकाशमित्युक्तं स्वरूपं चन्द्रलक्षणम् ॥
सच्चिदानन्दरूपत्वं स्वरूपं लक्षणं तयोः ।
एकलक्षणयोरैक्यं वाक्येन प्रतिपाद्यते ॥
तस्मादेकप्रकाशत्वं सर्वात्मत्वमिति स्थितम् ॥

---

ஆத்மபிம்பத்திற்கும் சரீரமாகிய உபாதியை நோக்காவிடத்து, அதனது [ஆத்ம பிம்பத்தினது] இயல்பிலே பேதத்தை நிரூபித்தல் இயலாது. ஆகவே, எல்லாத் தேகங்களுள்ளும் இருக்கின்ற ஆத்மா - உண்மையிலே ஒருபடித்தாய் எங்கும் நிறைந்த ஒரேபொருள்தான்; பலபடித்தவான பல ஆத்மப்பொருள்கள் இல்லை என்றபடி.

(31, 31½)

ஜீவனும் ஈச்வரனும் உண்மையிலே ஒரேபொருள்.

32, 33, 34, 34½.

இனி, ஜீவேச்வரர்களுடைய பொதுவியல்பையும் சிறப்பியல்பையும் நோக்கு மிடத்தும், மகாவாக்கியமானது ஒரேபொருளை உணர்த்துகின்றது எனக் காட்டுகிருர்:

காரணத்தன்மையும், காரியத்தன்மையும் அவ்விருவருடைய தடஸ்த லக்ஷணமாம். இது - "மரக்கொப்பிலே சந்திரன்" என்பதுபோல முதன்மையேயான கொள்கையன்று.

மகாப்பிரகாசமா(யிருப்பது எதுவோ, அது) சந்திரனுடைய ஸ்வரூப லக்ஷணமாகக் கூறப்பட்டிருக்கின்றது. ஸ்ச்சிதாநந்தவடிவமாயிருத்தல் அவ்விருவருடைய ஸ்வரூபலக்ஷணமாம்.

ஒரேலக்ஷணங்களுடைய (அவ்விருவர்க்கும்) வாக்கியத்தால் ஐக்கியம் உணர்த்தப்படுகின்றது.

ஆதலால், ஒரேபிரகாசமாயிருப்பது (எதுவோ, அதுவே) எல்லாவற்றிலு முள்ள ஆத்மஸ்வரூபமாம் என நின்றது [நிச்சயிக்கப்பட்டது].

சூரியன் கடலினுள் வீழ்வதுபோலவும், சந்திரன் மரக்கொப்பிலே இருப்பது போலவும் தோற்றுகின்றமையால், தோற்றம்மாத்திரத்தைக்கொண்டு, "சூரியன் கடலினுள் வீழ்கின்றது," "சந்திரன் மரக்கொப்பிலே இருக்கின்றது" என்பது. ஆனால், "எது மரக்கொப்பிலே இருக்கின்றதோ, அது சந்திரன்" என்பது-எப்படி சந்திரனுடைய

35, 35½.

देवतिर्यङ्मनुष्याणां प्रकाशाच्च पृथक् स्थितिः ॥
जीवप्रकाशाभिन्नत्वात् सर्वात्मेत्यभिधीयते ।

36, 36½.

एवं प्रकाशरूपत्वपरिज्ञाने दृढीकृते ॥
पुनरावृत्तिरहितं कैवल्यं पदमश्नुते ।

37, 37½.

सकृत्प्रसक्तमात्रोऽपि सर्वात्मत्वे यदृच्छया ॥

---

ஸ்வரூபலக்ஷணமாகாதோ, அப்படி,—காரணத்தை [மாயையை] உபாதியாகக் கொண்டவன் ஈச்வரன் என்பதும், காரியத்தை [அகக்கரணத்தை] உபாதியாகக் கொண்டவன் ஜீவன் என்பதும் அவருடைய தடஸ்தலக்ஷணமாகுமேயன்றி ஸ்வரூபலக்ஷண மாகா.—மற்றென்னவெனின்,—" மகாப்பிரகாசமாயிருப்பது எதுவோ அது சந்திரன்," என்பது - சந்திரனது ஸ்வரூபலக்ஷணமாமாறுபோல,—ஸச்சிதாநந்த வடிவமே அவ்விருவரது ஸ்வரூபலக்ஷணமாம் என்க. தடஸ்தலக்ஷணம் எனினும், பொதுவியல்பு எனினும் ஒக்கும். ஸ்வரூபலக்ஷணம் எனினும், சிறப்பியல்பு எனினும் ஒக்கும். (32,...34½)

35, 35½.

தேவர் மநுஷ்யர் முதலிய பேதமுள்ளமையால், இவ்வாறு எல்லாம் ஆத்ம ஸ்வரூபமேதான் என்று எப்படி நிச்சயித்தலாகும்? எனின்,—அருளிச்செய்கிறார்:

தேவர் விலங்கு மநுஷ்யர்கட்குப் பிரகாசத்தினும் வேருக நிலை இல்லை. ஜீவனும் பிரகாசமும் ஒன்றாயிருத்தலால் (ஜீவன்) எல்லாவற்றிலுமுள்ள ஆத்மா எனப்படுகின்றான். (3 - 5 ஐப் பார்க்க.)

ஆத்மஅறிவு முக்தியைத்தரும்.

36, 36½.

இனி, வாக்கியப்பொருளினுடைய அநுபவத்தின் பயனை அருளிச்செய்கிறார்:

இவ்வாறாக, (எல்லாம் ஆத்மஸ்வரூபமான) பிரகாசவடிவமாம் என்னும் அநுபவஅறிவைத் திடப்படுத்திக்கொண்டவளவிலே. (ஒருவன்), மீண்டும் திரும்பிவருதலில்லாத கைவல்யநிலையை யடைகிறான்.

37, 37½.

ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்று என்றறியும் ஞானத்தின் மாட்சிமையைக் கைமுதிக நியாயத்தால் கூறுகிறார்:

(ஒருவன்) ஸர்வாத்மஸ்வரூபத்திலே தற்செயலாய் ஒருகால் சென்றவனே

सर्वपापविनिर्मुक्तः शिवलोके महीयते ।

38, 38½.

सर्वात्मभावना यस्य परिपक्वा महात्मनः ॥

सम्सारतारकः साक्षात् स एव परमेश्वरः

39, 39½.

इति श्रीदक्षिणामूर्तिस्तोत्रार्थप्रतिपादके ॥

प्रबन्धे मानसोल्लासे तृतीयोल्लाससङ्ग्रहः ।

---

யானாலுங்கூட, எல்லாப்பாவங்களினின்றும் நீங்கியவனாய் சிவனாகிய லோகத்திலே நன்கு மதிக்கப்படுகிறான்.

(கைமுதிக நியாயமாவது - "பூனைக்கு இவ்வளவு அஞ்சினால், புலிக்கு அஞ்சுதல் எவ்வளவு என்பது சொல்லவேண்டியதில்லை" என்பதுபோன்ற ஒரு நியாயம். கிமுத - எவ்வளவு; இதனது தத்திதரூபம் - கைமுதிகம் என்பது.) தற்செயலாய் - முன் செய்த புண்ணியத்தின் ஒட்டினால். சிவனாகிய லோகத்திலே நன்கு மதிக்கப்படுகிறான் - சிவபெருமான்போல் பூஜிக்கத்தக்கோனாகிறான் என்பது பொருள். (37, 37½)

38, 38½.

ஈச்வரனை ஸர்வாத்மஸ்வரூபமாக ஒருதரம் அறிவதற்கே இத்தகைய பயனாயின்,— அந்த ஞானம் பயிற்சிவசத்தால் அசையாது திடப்பட்டு உறுதியாக நிலைத்திட்ட வளவிலே, ஸம்ஸாரமும் அதனது காரணமும் அறத் தொலைந்திடுகின்றன என்று கூறவும் வேண்டுமோ :

எந்த மஹாத்மாவினுடைய ஸர்வாத்மபாவனையானது முற்றும் பழுத்துளதோ, அவனேதான் ஸம்ஸாரத்தினின்று (ஸகலரையும்) நேரே மீட்டுகின்ற ஸாக்ஷாத் பரமேச்வரன்.

39, 39½.

ஸ்ரீதக்ஷிணாமூர்த்திஸ்தோத்திரத்தின் பொருளை உணர்த்துகின்ற மாநஸோல்லாஸம் என்னும் நூலினுள் மூன்றாம் உல்லாஸப்பொழிப்புரை முற்றும்.

---

மூன்றும் உல்லாஸம்.

பதவுரை

1.

| | |
|---|---|
| सत्तास्फुरत्ते | உண்மையும், விளக்கமும் |
| भावेषु | பொருள்களில் |
| कुतः | எங்கிருந்து |
| आगत्य | வந்து |
| सङ्गते | சேர்ந்தன ? |
| इत्थं | இவ்வாறு |
| बिम्बादिदर्पणन्यायात् | பிம்பாதிதர்ப்பணநியாயத்தால் |
| पृच्छन् | வினவுகின்ற |
| (शिष्यः) | (மாணுக்கன்) |
| प्रबोध्यते | அறிவுறுத்தப்படுகிருன். |

3.

| | |
|---|---|
| यस्य एव | எவனுடையதேயான |
| स्फुरणं | விளக்கமானது |
| असत्कल्पार्थगं | இல்லது போன்ற பொருள்களை யடைந்ததாய் |
| सदात्मकं | உண்மைவடிவாய் |
| भासते | விளங்குகின்றதோ, |
| यः | எது |
| आश्रितान् | (தன்னை) யடைந்தவர்களை |
| त्वम् | "நீ |
| तत् | அதுவாக |
| असि | இருக்கிருய்" |

| | |
|---|---|
| इति | என்னும் |
| वेदवचसा | வேதவாக்கினால் |
| साक्षात् | நேரே |
| बोधयति | அறிவுறுத்துகின்றதோ, |
| भवाम्भोनिधौ | சம்சாரக்கடலினுள் |
| पुनरावृत्तिः | மீண்டும் திரும்புதல் |
| यत्साक्षात्करणात् | எதனை நேரே காண்பதனால் |
| न भवेत् | நிகழமாட்டாதோ, |
| तस्मै | அந்த |
| श्रीगुरुमूर्तये | ஸ்ரீமதாசார்ய ஸ்வரூபமான |
| श्रीदक्षिणामूर्तये | ஸ்ரீதக்ஷிணாமூர்த்திக்கு |
| इदम् | இந்த |
| नमः | நமஸ்காரம். |

---

| | |
|---|---|
| इदम् | இது |
| अत्र | இங்கே |
| आकूतम् | கருத்து : |

---

2.

| | |
|---|---|
| अस्तित्वं | உண்மையும் |
| प्रकाशत्वं च | விளக்கமும்,— |
| असत्कल्पेषु | இல்பொருளை நிகர்த்தவையாய் |
| क्षणनाशिषु | கணப்பொழுதுள் அழியும் இயல்பினவாய் |
| जडेषु | ஜடமான |
| भावेषु | பொருள்களில் |

| | |
|---|---|
| नित्यात् | நித்யமான |
| ईश्वरात् | ஈச்வரனிடத்தினின்று |
| सङ्क्रामति | வந்து கலக்கின்றது. |

3.

| | |
|---|---|
| एषां | இந்த |
| भावानां | பொருள்களுடைய |
| सत्ता | உண்மையானது |
| आत्मसत्ता एव | ஆத்ம உண்மையேதான்; |
| ततः | அதனினும் |
| अधिका | அதிகமாக |
| न (भवति) | இல்லை. |
| तथा एव | அப்படியே |
| एषाम् | இவற்றினுடைய |
| स्फुरणं च | விளக்கமும் |
| आत्मस्फुरणतः | ஆத்மவிளக்கத்தினும் |
| अधिकं | அதிகமாக |
| न (भवति) | இல்லை. |

4.

| | |
|---|---|
| बहुरूपाणि | பலவகையான |
| ज्ञानानि | அறிவுகளும் |
| तेषां | அவற்றினுடைய |
| विषयाः च अपि | விஷயங்களும்,— |
| सूत्रे | நூலிலே |
| मणिगणाः इव | ரத்நவரிசைபோல |
| अहङ्कारे | அகங்காரத்திலே |
| अनुषज्यन्ते | ஒட்டிச் சேர்ந்துகொள்கின்றன. |

5.

| | |
|---|---|
| एतत् | இந்த |
| विश्वं | பிரபஞ்சம் |
| प्रकाशाभिन्नम् एव | விளக்கத்தினும் வேறாகாததாகவே |
| सर्वस्य | யாவர்க்கும் |
| भासते | விளங்குகின்றது. |
| लहरीबुद्बुदादीनां | அலை, குமிழி முதலியவற்றின் |
| स्थितिः | நிலையானது |
| सलिलात् | ஜலத்தினும் |
| पृथक् | வேறாக |
| न (अस्ति) | இல்லை. |

---

6.

| | |
|---|---|
| यत् | எந்த |
| ज्ञानं | அறிவானது |
| भावान् | பொருள்களை |
| आविश्य | புகுந்து |
| जानामि | "அறிகிறேன்" |
| इति एव | என்றே |
| वर्तते | இருக்கின்றதோ, |
| तद् | அது |
| पश्चात् | பின்பு |
| मया | "என்னால் |
| ज्ञातं | அறியப்பட்டது" |
| इति | என்று |
| अन्तरात्मनि | உள்ளேயுள்ள ஆத்மாவினுள் |
| विश्राम्यति | அமர்ந்திடுகின்றது. |

---

7.

| | |
|---|---|
| घटादिकानि | குடம் முதலிய |
| कार्याणि | காரியங்கள் |
| मृदादिषु | மண் முதலியவற்றில் |
| विश्राम्यन्ति | (எப்படி) அமர்கின்றனவோ |
| विश्वम् | (அப்படி) ஜகத்தானது |
| प्रकाशाभिन्नत्वात् | பிரகாசத்தினும் வேருகாமையினுல் |
| परमेश्वरे | பரமேச்வரனிடத்து |
| विश्राम्येत् | அமர்தலாகும். |

8.

| | |
|---|---|
| यथा | எப்படி |
| दर्पणं | கண்ணுடி |
| स्वगतेन एव | தன்மேலேயுள்ள |
| कालिम्ना | அழுக்கினுல் |
| मलिनं | மங்கலாக (ஆகின்றதோ), |
| ज्ञानं | (அப்படி) அறிவு |
| अज्ञानेन | அறியாமையினுல் |
| आवृतं | மூடப்பட்டிருக்கின்றது ; |
| तेन | அதனுல் |
| जन्तवः | பிராணிகள் |
| मुह्यन्ति | மயங்குகின்றன. |

9.

| | |
|---|---|
| यथा | எப்படி |
| घटाकाशः | கடாகாசமும் |
| महाकाशः(च) | மஹாகாச(மும்) |
| घटोपाधिकृतः | குடமாகிய உபாதியினுல் ஆனவையோ, |

| | |
|---|---|
| जीवात्मपरमात्मनोः | (அப்படி) ஜீவாத்மாவிற்கும், பரமாத்மாவிற்கும் |
| भेदः | வேற்றுமையானது |
| देहोपाधिकृतः | உடம்பாகிய உபாதியினுல் ஆனது. |

10.

| | |
|---|---|
| तयोः | அவர்கட்கு |
| ऐक्यं | ஐக்கியமானது |
| तत्त्वमस्यादिवाक्यैः तु | தத்துவமஸி முதலான வாக்கியங்களாலேயே |
| प्रदर्श्यते | நன்கு உணர்த்தப்படுகின்றது. |
| सः | "அவன் |
| अयम् | இந்த |
| पुरुषः | மனிதன்" |
| इति | என்று |
| उक्ते | சொன்னவிடத்து, |
| एकः | ஒரே |
| पुमान् हि | மனிதனன்றே |
| बुध्यते | அறியப்படுகிருன். |

11.

| | |
|---|---|
| यत् | எது |
| जगत्कारणं | பிரபஞ்சத்திற்குக் காரணமான |
| तत्त्वं | மூலப்பொருளாய் (உள்ளதோ), |
| सः | அது |
| तत्पदार्थः | தத் என்னும் சொல்லின் அர்த்தமாக |
| उच्यते | சொல்லப்படுகின்றது. |
| देहादिभिः | உடம்பு முதலியவற்ருல் |
| परिच्छिन्नः | அளவுபட்ட |

| | |
|---|---|
| जीवः तु | ஜீவனே |
| त्वम्पदाभिधः | துவம் என்னும் சொல்லை(த்-தனது) பெயராகக்கொண்டவனாய் (இருக்கிறான்). |

---

12, 13, 14.

| | |
|---|---|
| तद्देशकालावस्थादौ | அந்த இடம் காலம் நிலைமை முதலியவற்றிலே |
| दृष्टः | காணப்பட்டவன் |
| सः | "அவன்" |
| इति | என்று |
| कथ्यते | சொல்லப்படுகிறான். |
| तथा | அப்படியே |
| एतद्देशकालादौ | இந்த இடம் காலம் முதலியவற்றிலே |
| दृष्टः | காணப்பட்டவன் |
| अयम् | "இவன்" |
| इति | என்று |
| कीर्त्यते | சொல்லப்படுகிறான். |
| यथा | "எப்படி |
| सः | "அவன் |
| अयं | இந்த |
| पुमान् | மனிதன்" |
| वचः | (என்னும்) வாக்கியமானது |
| द्वयोः | இரண்டு |
| पदयोः | சொற்களுடைய |
| मुख्यं | முக்கிய (அர்த்த)மான |
| तदेतद्वैशिष्ट्यं | அச்சம்பந்தத்தையும், இச்சம்பந்தத்தையும் |
| विसृज्य | விட்டு |

| | |
|---|---|
| एकं | ஒரே |
| पुम्मात्रं | மனிதனைமாத்திரம் |
| लक्षयति | உணர்த்துகின்றதோ, |
| तथा एव | அப்படியே |
| त्वं | "நீ |
| तत् | துவாக |
| असि | நக்கிருய்" |
| इति | என்னும் |
| वाक् | வாக்கியமானது |
| प्रत्यक्त्वं च | உள்தன்மையையும் |
| पराक्त्वं च | வெளித்தன்மையையும் |
| त्यक्त्वा | விட்டு |
| जीवात्मपरमात्मनोः | ஜீவாத்மாவிற்கும் பரமாத்மாவிற்கும் |
| ऐक्यं | ஐக்கியத்தை |
| लक्षयति | உணர்த்துகின்றது. |

---

15, 15½.

| | |
|---|---|
| इह | இதிலே |
| पदयोः | இருசொற்களுடைய |
| सम्बन्धः | சம்பந்தமானது |
| सामानाधिकरण्याख्यः | ஸாமாநாதிகரண்யம் என்னும் பெயருடைத்து. |
| पदार्थयोः | சொற்களின் அர்த்தங்களுடைய |
| सम्बन्धः | சம்பந்தமானது |
| विशेषणविशेष्यत्वं | விசேஷணவிசேஷ்யத் தன்மையாக |
| स्यात् | ஆகும், |

| | |
|---|---|
| वाक्यं च | வாக்கியமானது |
| लक्ष्यलक्षणसम्योगात् | உணர்த்தப்படுவதும் உணர்த்துவதுமாகிய சம்பந்தத்தால் |
| ऐक्यं | ஐக்கியத்தை |
| बोधयेत् | உணர்த்தும். |

---

16, 17, 17 .

| | |
|---|---|
| गङ्गायां | "கங்கையில் |
| घोषः | இடைச்சேரி" |
| इतिवत् | என்பதுபோல |
| जहल्लक्षणा | விட்டலக்ஷணை |
| न भवेत् | வாராது. |
| श्वेतो धावति वाक्यवत् (श्वेतः धावति इति वाक्यम् इव) | "வெண்மை ஓடுகின்றது" என்னும் வாக்கியம்போல |
| अजहल्लक्षणा अपि | விடாத லக்ஷணையும் |
| न स्यात् | வாராது. |
| तत्त्वमस्यादिवाक्यानां | தத்துவமஸி முதலான வாக்கியங்கட்கு |
| लक्षणा | லக்ஷணையானது,— |
| सः | "அவன் |
| अयं | இந்த |
| पुरुषः | மனிதன்" |
| इत्यादिवाक्यानाम् इव | என்பது முதலிய வாக்கியங்கட்குப்போல, |
| भागलक्षणा | பாகலக்ஷணையாக |
| कीर्तिता | கூறப்பட்டுளது. |

---

18, 18½.

| | |
|---|---|
| भिन्नवृत्तिनिमित्तानां | வெவ்வேறு மொழிப்பொருட் காரணமுடைய |
| शब्दानां | சொற்களுக்கு |
| एकवस्तुनि | ஒரே பொருளின்மேல் |
| प्रवृत्तिः तु | சக்தியோ |
| इह | இங்கே |
| समानाधिकरणत्वं | ஸமாநாதிகரணத்தன்மையாக |
| उच्यते | கூறப்படுகின்றது. |

---

19, 20, 20½.

| | |
|---|---|
| स्वमायासृष्टमूर्तिषु | (பரம்பொருள்) தன்மாயையினுல் படைக்கப்பட்ட உருவங்களுள் |
| जीवात्मना | ஜீவவடிவாக |
| प्रविष्टत्वात् | புகுந்துள்ளமையின்,— |
| वाक्येन | வாக்கியத்திஞல் |
| जीवः | ஜீவன் |
| परस्य | பரம்பொருளினுடைய |
| अंशः | அவயவமாகவாயினும் |
| विकारः वा | விகாரமாகவாயினும் |
| न उच्यते | உணர்த்தப்படுகிருனில்லை. |
| असौ | இவன் |
| निरंशः | அவயவமில்லாதவஞக |
| निर्विकारः | விகாரமில்லாதவஞக |
| श्रुत्या | சுருதியிஞலும் |
| युक्त्या च | யுக்தியிஞலும் |
| गम्यते | அறியப்படுகிருன். |

| | |
|---|---|
| यथा | எப்படி |
| घटाकाशः | கடாகாசம் |
| वियतः | மகாகாசத்தினுடைய |
| विकारः वा | விகாரமாகவாயினும் |
| अम्शः वा | அவயவமாகவாயினும் |
| न (भवति) | ஆகமாட்டாதோ, |
| | (அப்படிப்போல என்க). |

---

21.

| | |
|---|---|
| वाक्यं | வாக்கியமானது |
| त्वं | "நீ |
| इन्द्रः | இந்திரனாக |
| असि | இருக்கிறாய்" |
| इतिवत् | என்பதுபோல |
| स्तुतितत्परं | புகழ்ச்சியின்மேல் நிற்பதாக |
| न (भवति) खलु | ஆகமாட்டாது. |

---

21½.

| | |
|---|---|
| वाक्यं | வாக்கியமானது |
| अग्निः माणवकादिवत् | "மாணக்கன் நெருப்பாயிருக்கிறான்" என்பது முதலியனபோல |
| सादृश्यपरं | ஒப்புமையைக் குறிப்பதாக |
| न (भवति) | ஆகாது. |

---

22.

| | |
|---|---|
| (वाक्यं) | (வாக்கியமானது) |
| मृद्घटादिवत् | "குடம் மண்ணாயிருக்கின்றது" என்பது முதலியனபோல |
| कार्यकारणत्वस्य | காரியகாரணத்தன்மையை |

| | |
|---|---|
| साधनं | சாதிப்பதாக |
| न (भवति) | ஆகாது. |

---

22½.

| | |
|---|---|
| वचः | வாக்கியமானது |
| खण्डः | "துண்டம் |
| गौः | ஆவாக (இருக்கின்றது)" |
| इतिवत् | என்பதுபோல |
| जातिव्यक्तिगमकम् | ஜாதிவ்யக்திகளைக் குறிப்பதாக |
| न (भवति) | ஆகாது. |

---

23.

| | |
|---|---|
| एतत् | இந்த |
| वाक्यं | வாக்கியம் |
| नीलोत्पलादिवत् | "நெய்தல் கருமையாயிருக்கின்றது" என்பது முதலியனபோல |
| गुणगुण्यात्मकम् | குணகுணித்தன்மையையுடையதாக |
| न (भवति) | ஆகாது. |

---

23½.

| | |
|---|---|
| वाक्यं | வாக்கியமானது |
| प्रतिमासु | விக்கிரகங்களிலே |
| ईशबुद्धिवत् | ஈச்வரபுத்திபோல |
| उपासनापरम् | உபாஸனையின்மேல் நிற்பதாக |
| न (भवति) | ஆகாது. |

24.

| | |
|---|---|
| च | அன்றியும் |
| वाक्यं | வாக்கியமானது |
| राजपूरुषे | அரசனுடைய மனிதனிடத்து |
| राजवत् | அரசன்போல |
| औपचारिकं | உபசாரத்தால் வந்ததாக |
| न (भवति) | ஆகமாட்டாது. |

24½.

| | |
|---|---|
| यतः | ஏனெனில் |
| असौ | அந்த |
| ईश्वरः | ஈச்வரன் |
| जीवात्मना | ஜீவவடிவமாக |
| प्रविष्टः | புகுந்திருப்பவனாய் |
| श्रूयते | சுருதியில் கூறப்படுகிறான். |

25, 26.

| | |
|---|---|
| अज्ञैः | அஜ்ஞானிகளால்.— |
| देहेन्द्रियमनोबुद्धि-प्राणाहङ्कारसम्हतौ | உடம்பு, இந்திரியங்கள், மனம் புத்தி, பிராணன், அகங்காரம் இவற்றின் தொகுதியில் |
| आत्मसङ्कलनात् | ஆத்மாவின் கலப்பினால் |
| आत्मत्वं | ஆத்மத்தன்மையானது |
| प्रतिपाद्यते | கொள்ளப்படுகின்றது ; |
| काष्ठलोहादौ | விறகு, உலோகம் முதலியவற்றில் |
| वह्निसङ्कलनात् | நெருப்பின் கலப்பினால் |
| वह्निधीः इव | நெருப்பென்னும் புத்திபோல. |

27, 28, 29, 30, 30½.

| | |
|---|---|
| आत्मा | ஆத்மாவானவன் |
| अन्नमयं | அன்னமயமான |
| देहं | தேகமாகிய |
| कोशं | கோசத்தை |
| आविश्य | புகுந்து |
| स्थूलः | பருத்தவனாக |
| बालः | சிறுவனாக |
| कृशः | மெலிந்தவனாக |
| कृष्णः | கறுத்தவனாக |
| वर्णाश्रमविकल्पवान् | ஜாதி, ஆச்ரமம் இவற்றின் வேற்றுமையை யுடையவனாக |
| प्रकाशते | புலப்படுகிறான்; |
| प्राणकोशे अपि | பிராணகோசத்திலும் |
| जीवामि | "உயிர்க்கிறேன்" |
| क्षुधितः | "பசியுள்ளவனாய் |
| अस्मि | இருக்கிறேன்," |
| पिपासितः | தாகமுள்ளவனா (யிருக்கிறேன்" எனப் புலப்படுகிறான்); |
| मनोमये | மனோமயமான |
| कोशे | கோசத்தில் |
| सम्शितः | "சம்சயமுள்ளவனா (யிருக்கிறேன்)," |
| निश्चितः | "நிச்சயமுடையவனா(யிருக்கிறேன்)", |
| मन्ये | "நினைக்கிறேன்" |
| इति | என(ப் புலப்படுகிறான்) ; |
| विज्ञानमयकोशस्थः | விஜ்ஞானமயகோசத்தி லிருப்பவனாய் |
| विजानामि | "அறிகிறேன்" |

| | |
|---|---|
| इति | என |
| तिष्ठति | நிற்கிறான் ; |
| आनन्दमयकोशाख्ये | ஆநந்தமயகோசம் என்னும் பொருளுடைய |
| अहङ्कारे तु | அகங்காரத்திலோ,— |
| पुरा | முன் |
| कृतैः | செய்யப்பட்ட |
| पुण्यैः | புண்ணியங்களாலும் |
| उपासनाभिः च | உபாஸனைகளாலும் |
| सुखितः | "இன்புற்றவனாய் |
| अस्मि | இருக்கிறேன்" |
| इति | என்று |
| मोदते | மகிழ்கின்றான். |
| परमेश्वरः | பரமேச்வரன் |
| व्याप्तः अपि | எங்கும் நிறைந்தவனானாலும் |
| कञ्चुकैः इव (स्थितैः) | போர்வைகள்போ(லிருக்கின்ற) |
| पञ्चभिः | ஐந்து |
| कोशैः | கோசங்களால் |
| एवं | இவ்வாறு |
| कञ्चुकितः | போர்த்தப்பெற்றவனாய் |
| परिच्छिन्नः इव | அளவுப்பட்டவன்போல் |
| आभाति | தோன்றுகிறான். |

31, 31½.

| | |
|---|---|
| यथा | எப்படி |
| भास्करः | சூரியன் |
| सलिलं | ஜலத்தை |
| आविश्य | புகுந்து |
| बहुधा | பலவாறு |
| भाति | விளங்குகிறானோ, |

| | |
|---|---|
| तथा | அப்படி |
| ईश्वरः | ஈச்வரன் |
| शरीराणि | தேகங்களை |
| आविश्य | புகுந்து |
| बहुधा | பலவாறு |
| स्फुरति | விளங்குகிறான். |

32, 32½.

| | |
|---|---|
| कारणत्वम् | காரணத்தன்மையும் |
| कार्यत्वं च | காரியத்தன்மையும் |
| तयोः | அவ்விருவருடைய |
| तटस्थं | தடஸ்தமான |
| लक्षणं | லக்ஷணமாய் (உளது); |
| इदं | இது, |
| शाखायां | "கொப்பிலே |
| चन्द्रः | சந்திரன்" |
| इतिवत् | என்பதுபோல |
| मुख्यम् एव | முக்கியமேயான |
| मतं | கொள்கை |
| न (भवति) | அன்று. |

33. 33½.

| | |
|---|---|
| महाप्रकाशं | மகாப்பிரகாசமானது |
| स्वरूपं | ஸ்வரூபமான |
| चन्द्रलक्षणम् | சந்திரலக்ஷணம் |
| इति | என்று |
| उक्तं | கூறப்பட்டுள்ளது ; |

| | |
|---|---|
| सच्चिदानन्दरूपत्वं | ஸச்சிதாநந்தவடிவமாயிருத்தல் |
| तयोः | அவ்விருவருடைய |
| स्वरूपं | ஸ்வரூபமான |
| लक्षणं | லக்ஷணமாக (உள்ளது). |

34.

| | |
|---|---|
| वाक्येन | வாக்கியத்தால், |
| एकलक्षणयोः | ஒரேலக்ஷணங்களுடைய |
| (तयोः) | (அவ்விருவர்க்கும்) |
| ऐक्यं | ஐக்கியமானது |
| प्रतिपाद्यते | உணர்த்தப்படுகின்றது. |

34½.

| | |
|---|---|
| तस्मात् | ஆதலால், |
| एकप्रकाशत्वं | ஒரே பிரகாசமாயிருப்பது |
| सर्वात्मत्वं | ஸர்வாத்மத்தன்மை |
| इति | என |
| स्थितं | நிலைத்தது. |

35, 35½.

| | |
|---|---|
| देवतिर्यङ्मनुष्याणां | தேவர், விலங்கு, மநுஷ்யர்கட்கு |
| स्थितिः | இருப்பு |
| प्रकाशात् | பிரகாசத்தினும் |
| पृथक् | வேருக |
| न (अस्ति) | இல்லை ; |
| जीवप्रकाशाभिन्नत्वात् | ஜீவனும், பிரகாசமும் வேருயில்லை யாதலால் |

| | |
|---|---|
| सर्वात्मा | (ஜீவன்) எல்லாவற்றினுடைய ஆத்மா |
| इति | என்று |
| अभिधीयते | கூறப்படுகிருன். |

36, 36½.

| | |
|---|---|
| एवं | இவ்வாறு |
| प्रकाशरूपत्वपरिज्ञाने | (எல்லாம்) பிரகாசவடிவமாம் என்னும் அநுபவ அறிவு |
| दृढीकृते (सति) | திடமாகச் செய்யப்பட்டபொழுது |
| पुनरावृत्तिरहितं | மீளவும் திரும்புத லில்லாத |
| कैवल्यं | கைவல்யமான |
| पदं | நிலையை |
| अश्नुते | (ஞாநி) யடைகிருன். |

37, 37½.

| | |
|---|---|
| सर्वात्मत्वे | (ஒருவன்) ஸர்வாத்மஸ்வரூபத்திலே |
| यदृच्छया | தற்செயலாய் |
| सकृत् | ஒருகால் |
| प्रसक्तमात्रः अपि | சென்றவனேயானலும், |
| सर्वपापविनिर्मुक्तः | எல்லாப்பாவங்களினின்றும் தப்பியவனய் |
| शिवलोके | சிவனுகிய லோகத்திலே |
| महीयते | நன்கு மதிக்கப்படுகிருன். |

38, 38½.

| | |
|---|---|
| यस्य | எந்த |
| महात्मनः | மஹாத்மாவினுடைய |
| सर्वात्मभावना | ஸர்வாத்மபாவனையானது |
| परिपक्वा | நன்றாய்ப்பழுத்துளதோ, |
| सः एव | அவனே |
| साक्षात् | நேரே |
| सम्सार तारकः | ஸம்ஸாரத்தினின்று விடுவிக்கின்ற |
| परमेश्वरः | பரமேச்வரனாய் |
| (भवति) | (இருக்கிறான்). |

39, 39½.

| | |
|---|---|
| श्रीदक्षिणामूर्तिस्तोत्र-अर्थप्रतिपादके | ஸ்ரீ தக்ஷிணமூர்த்தி ஸ்தோத்திரத்தின் பொருளை உணர்த்துகின்ற |
| मानसोल्लासे | மானஸோல்லாஸம் என்னும் |
| प्रबन्धे | நூலினுள் |
| तृतीयोल्लास सङ्ग्रहः | மூன்றாம் உல்லாஸப்பொழிப்புரை |
| इति | முற்றும். |

अथ

## ॥ चतुर्थोल्लासः ॥

1

**स्वतः सन्तः प्रकाशन्ते भावा घटपटादयः ।**
**नेश्वरस्य समावेशात् इत्यस्योत्तरमुच्यते ॥**

---

## நான்காம் உல்லாஸம்.

இவ்வாறு ஆத்மஸ்வரூபத்தையும் ப்ரஹ்மஸ்வரூபத்தையும் ஆராய்ந்து, அவையிரண்டும் ஒரேபொருள் என்று கீழே உணர்த்தப்பட்டது; அன்றியும், இதுவே ஸகலவேதாந்தங்களும் முழக்குகின்ற பரமரஹஸ்யமான அத்வைததத்துவம் என்றும், பெறுதற்கரிய மனிதப்பிறவியைப் பெற்றோர் இதனையே தெளியக்கண்டு ஈடேறுதலாகும் என்றும் எடுத்துக்காட்டப்பட்டன. என்றாலும், மாணக்கன் பிரத்தியக்ஷம் முதலிய பிரமாணங்களால் அத்வைத தத்துவத்திலே சங்கைநிகழப்பெற்றவனாய் ஆகாசம், பூமி, மலை, கடல், சரீரம் முதலியவற்றைக் கண்டு தெளிவுபிறவாது மீள மீள மலைக்கின்றான். ஆகவே, அவனது சங்கையை நீக்கித் தெளிவு பிறப்பித்து அத்வைத உண்மையைத் திடப்படுத்தும்பொருட்டு இவ்வுல்லாஸம் எழுகின்றது :

### சுருதி கூறுகின்ற ஆத்மஉண்மையையும் ஆத்மப்பிரகாசத்தையும் ஆக்ஷேபித்தலும், ஸமாதாநமும்.

1

" குடம் ஆடை முதலிய பொருள்கள் தாமே உள்ளவையாய் விளங்குகின்றன; ஈச்வரனது கலப்பினால் இல்லை " என்ற இதற்கு மறுமொழி கூறப்படுகின்றது :

ஆக்ஷேபம் :—" இப்பொருள்களினது உண்மை ஆத்மஉண்மையேதான்; அதனினும் அதிகமாக இல்லை. அப்படியே, இவற்றினது விளக்கமும் ஆத்மவிளக்கத்தினும் அதிகமாக இல்லை " (3 - 3) எனக் குடம்முதலிய எல்லாப்பொருள்கட்குமே

4. नानाच्छिद्रघटोदरस्थितमहादीपप्रभाभास्वरम्
ज्ञानं यस्य तु चक्षुरादिकरणद्वारा बहिः स्पन्दते ।
जानामीति तमेव भान्तमनुभात्येतत्समस्तं जगत्
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥

---

தமக்கென்று சொந்தமான உண்மையும் விளக்கமும் இல்லை யெனவும், ஆனால் அவற்றில் காணப்படுகின்ற உண்மையும் விளக்கமும் ஆத்மாவான ஈச்வரனது உண்மையும் விளக்கமுமாம் எனவும் கூறியது நேரன்று; அநுபவத்திற்கு விரோதமாதலின். "குடம் முதலிய பொருள்கள் தாமாகவே உள்ளன; தாமாகவே விளங்குகின்றன" என்பது, நம்மனோர்க்குத் தடையிலா அனுபவமாயிருக்கின்றது. ஆகவே,—"குடம்முதலிய பொருள்களுள் ஈச்வரன் புகுந்திருக்கின்றான்; அதனால் அவை உள்ளன; அதனால் அவை விளங்குகின்றன" என்பதற்கு யாதொரு பிரமாணத்தையும் காணேம் என்க.

ஸமாதானம் :—வருமாறு :

4. எதனுடைய அறிவானது-பல துவாரங்களையுடைய குடத்தினுள்ளேயுள்ள பெரிய விளக்கின் ஒளிபோல் ஒளிர்கின்றதாய்க் கண் முதலிய இந்திரியங்களின் வழியாக வெளியிற் செல்லுகின்றதோ, "அறிகிறேன்" என்று (எது தானே விளங்குகின்றதோ, அதுவே விளங்க,) இந்த ஜகத்தெல்லாம், விளங்குகின்ற அதனையே அடுத்து விளங்குகின்றது. அந்த ஸ்ரீமதாசார்யஸ்வரூபமான ஸ்ரீதக்ஷிணமூர்த்திக்கு இந்த நமஸ்காரம்.

பல துவாரங்களையுடைய ஒரு குடத்தினுள் உள்ள ஒருபெரிய விளக்கின் ஒளியானது - அத்துவாரங்களின் வழியாக வெளியிற் சென்று, அருகிலுள்ள பொருள்களை விளக்குவதாய்த் தானே விளங்குமாறுபோல,—பல இந்திரியத்துவாரங்களையுடைய இத்தேகத்தினுள் உள்ள ஆத்மப்பொருளின் ஸ்வரூபஅறிவானது - கண்முதலிய அவ்விந்திரியத்துவாரங்களின் வழியாக வெளியிற் சென்று, உருவம் முதலிய பொருள்களை விளக்குவதாய்த் தானே விளங்குகின்றது. எங்ஙன மெனில்,—"யான் குடத்தை அறிகிறேன்," "ஆடையை அறிகிறேன்," "மரத்தை அறிகிறேன்" என்றவிடத்து, ஆத்மஅறிவு - குடம்முதலியவற்றைத் தனது சுதந்திரமான சொந்தப் பிரகாசத்தால்

**अस्य अयं भावः—**

२.

## अहमित्यनुसन्धाता जानामीति न चेत् स्फुरेत् :

---

விளக்கித் தான் விளங்குதற்குப் பிறிதோர் பிரகாசத்தை வேண்டாது தானே விளங்கி நிற்றல் காண்க,

இவ்வாறு சூரியன், சந்திரன், மண், விண் முதலிய இப்பிரபஞ்சமெல்லாம் ஸ்வப்பிரகாசமான[தானே விளங்குகின்ற] ஆத்மாவையே அடுத்துவிளங்குகின்றது; அவை தமது இயல்பிலே ஜடமாதலால் தாமே விளங்குதல் செல்லாமையின்.

இதனை உதாரணத்தில் வைத்துக் காட்டுவோம்:—பழுக்கக் காய்ந்த உலோகத்தைக் குறித்து, "உலோகம் சுடுகின்றது" என்கிறோம். ஆனால், சுடுதற் செய்கை உலோகத்தினிடத்து இல்லை: தீயினிடத்தே உளது. ஆகவே, அதற்குத் தீயோடொத்த செய்கை எப்படி நிகழ்கின்றது? எனில்,—உலோகமானது, சுடுகின்ற தீயையடுத்துச் சுடுகின்றது: அதாவது - உலோகம் தீயொடு மயங்கி [கலந்து] நிற்பதனால், உலோகத்தினிடத்துத் தீயோடொத்த செய்கை ஏற்றப்பட்டது. எனவே வாஸ்தவத்தில் தீயே சுடுவதாயிருக்க, உலோகம் சுடுகின்றது என்பதுபோல்,— வாஸ்தவத்தில் ஆத்மஸ்வரூபமே விளங்குவதாயிருக்க, சூரியன் சந்திரன் மண் விண் முதலியவெல்லாம் விளங்குகின்றன என்பது. ஆகவே, ஆதாரமான ப்ரஹ்மத்தின் விளக்கத்தினாலேயே ஜகத்து விளங்குகின்றது; ஜகத்து விளங்குதலானது வேறோர் விளக்கமன்று என்பது கருத்து. அவ்வண்ணமே, சுருதிஸ்மிருதிகள் கூறுகின்றன:

**"न तत्र सूर्यो भाति न चन्द्रतारकं नेमा विद्युतो भान्ति कुतोऽयमग्निः ॥**
**तमेव भान्तमनुभाति सर्वं तस्य भासा सर्वमिदं विभाति ॥"**

"அங்கு சூரியன் விளங்கவில்லை: சந்திரனும், நக்ஷத்திரங்களும் விளங்கவில்லை: இந்த மின்னல்களும் விளங்கவில்லை: இந்த அக்நி எங்கிருந்து (விளங்கும்)? எல்லாம், விளங்குகின்ற அதனையே யடுத்து விளங்குகின்றது; இதெல்லாம் அதனது விளக்கத்தால் விளங்குகின்றது"—(கட - 5 - 15; ச்வே - 6 - 14 -; மு - உப - 2 - 2 - 10)-

11 - ஆம் பக்கத்திலுள்ள மேற்கோள்களையும் பார்க்க.

இது இதன் கருத்து:— (4)

2.

"நான்" என்று நினைப்பவன் - "அறிகிறேன்" என்று விளங்கா-

कस्य को वा प्रकाशेत जगच्च स्यात्सुषुप्तवत् ॥

प्रागूर्ध्वं चासतां सत्त्वं वर्तमानेऽपि न स्वतः ।
तस्मादीशे स्थितं सत्त्वं प्रागूर्ध्वत्वविवर्जिते ॥

---

விட்டால், எதற்கு எதுதான் விளங்கும்? ஜகத்து உறக்கத்தில்போல இருக்கும்.

அறியும்பொருளான விஷயியானது-"நான் குடம்முதலியவற்றை அறிகின்றேன்" எனக் குடம்முதலாக அறியப்படும் விஷயங்களோடு கூடி விளங்காவிட்டால், அங்ஙனம் ஒருவர்க்கும் ஒன்றும் விளங்காது; விளங்காதாகவே, பிரபஞ்சம் தூக்கத்தில் எப்படி இருக்கின்றதோ, அப்படியே எப்பொழுது மிருத்தல் வேண்டும். ஆனுல், இது இல்லை; அதாவது, ஜகத்து விளங்குகின்றது; பேசுதல் உண்ணுதல் முதலிய வியவகாரங்களெல்லாம் நடக்கின்றன. ஆதலால், உள்ளேயுள்ள ஆத்மஅறிவானது, சூரியன் மண் விண் முதலியவற்றை விளங்கச்செய்வதாய்த் தானே விளங்குகின்றது என்க; எனவே, அப்பொருள்களின் விளக்கம் பராதீனமாம் என்பது. (2)

3.

அவற்றினது விளக்கம் பராதீனமாயிருப்பதுபோல, அவற்றினது உண்மையும் பராதீனமாம்; எப்படியெனில்,—

முன்னும் பின்னும் இல்லாதவற்றிற்கு நிகழ்காலத்திலும் [நடுவிலும்] உண்மை, தானே இல்லை. ஆதலால், உண்மையானது முன்மைபின்மையில்லாத ஈச்வரனிடத்து நிலைத்ததாம்.

முன்னும் - சென்ற காலத்திலும். பின்னும் - வருங்காலத்திலும். குடம்முதலிய பொருள்கள் முன்னுமில்லாது, பின்னுமில்லாது, கயிற்றிலே பாம்புபோல. இடையே தோன்றுகின்றமையால், அவற்றிற்குத் தமக்கென்று சொந்தமான சுதந்திரஉண்மை இல்லை. அவற்றிற்குச் சுதந்திரமான உண்மை உளதாயின், அவை ஆத்மாபோலத் தாமே விளங்கவும் வேண்டும்: வேண்டவே, அங்ஙனமவை அறிவினுல் அறியப்படும் பொருளாதல் செல்லாது. ஆனுல், இது இல்லை: அவை அறியப்படும்பொருளாகவே இருக்கின்றன. ஆதலால், அவற்றிற்குச் சுதந்திரமான உண்மை இல்லை யென்பது.

மற்று, அவை எந்த எல்லையில் தோன்றி மறைகின்றனவோ அந்த எல்லையாக ஈச்வரன் எப்பொழுது மிருக்கின்றுன்; அன்றியும், அவன் எல்லா நிலைமைகட்கும் ஸாக்ஷியாய் உள்ளேயுள்ள ஆத்மஸ்வரூபமாய் எப்பொழுதும் விளங்குகின்றுன். அவன்இல்லாதகாலமும் அவன்விளங்காதகாலமும் முன் இருந்ததில்லை;

4, 4½.

स्वयमेव प्रकाशेरन् जडा यदि विनेश्वरम् ।
सर्वं सर्वस्य भासेत न वा भासेत किञ्चन ॥
तस्मात्सर्वज्ञमज्ञं वा जगत्स्यादेकरूपकम् ।

5, 6.

तुल्ये स्वयम्प्रकाशत्वे जडचेतनयोर्मिथः ॥

---

இருப்பது மில்லை. ஆதலால், இறந்தகாலத்து இல்லனவாய் வருங்காலத்து அழிவனவாய் நிகழ்காலத்துத் தோன்றிநிற்கின்ற குடம் முதலிய பொருள்கட்கு உண்மையானது எப்பொழுதுமுள்ள தனிமுதற்பொருளான ஈச்வரனது உண்மையால் உள்ளதாம். அவற்றினது உண்மை வேறோர் உண்மை யில்லை என்றபடி. (3)

4, 4½.

இங்ஙனம் விஷயங்களினுடைய உண்மைவிளக்கங்கள் ஈச்வரனைச் சார்ந்தவை என்று கூறியதையே தெளியக் காட்டுகிறார் :

ஜடங்கள் ஈச்வரனில்லாது தாமாகவே விளங்குமாயின், எல்லாம் எல்லாவற்றிற்கும் விளங்கும் ; அல்லது, ஒன்றும் விளங்காது. ஆகவே, ஜகத்து எல்லாவற்றையும் அறிவதாகவாயினும், (ஒன்றையும்) அறியாததாகவாயினும், ஒருபடித்தாயிருக்கும்.

ஈச்வரனை - விஷயங்களை யறிவதாய்த் தானேவிளங்குகின்ற ஞானஸ்வரூபமான பொருளை என்றபடி. எல்லாம் எல்லாவற்றிற்கும் விளங்கட்டும், அல்லது விளங்காதிருக்கட்டும். அதனாலாவதென்ன ?—எல்லாம் எல்லாவற்றிற்கும் எப்பொழுதும் விளங்குமாயின், அங்ஙனம் எல்லாம் எல்லவற்றையும் அறிவதாகும். ஒன்றும் ஒன்றற்கும் ஒருபொழுதும் விளங்காவிடில், ஒன்றும் ஒன்றையும் அறிவதாகாது. ஆகவே, (1) எல்லாவற்றையும் அறிவதும், (2) ஒன்றையும் அறியாததுமாகிய இவ்விருதன்மையினுள் எதுவாயினும் ஆகுக ; ஜகத்து அந்த ஒரேதன்மையதாகவே இருத்தல் வேண்டும். ஆனால், இது இல்லை : பிரபஞ்சம் அறியப்படும்பொருளாக இருக்கின்றது. ஆதலால், அது தானாகவே விளங்கா தென்பதாம். (4, 4½)

5, 6.

விஷயங்களும் ஆத்மாபோல ஸ்வப்பிரகாசமாம் எனக் கொண்டவிடத்துப்படும் குற்றம் கூறப்பட்டது. இனி, அங்ஙனம் வரும் வேறோர் குற்றத்தைக் கூறுகிறார் :

ஜடமும் சேதனமும் ஸ்வப்பிரகாசமா யிருத்தல் ஒருநிகரான வளவிலே, உணரப்படுவதும் உணர்வதுமாகிய தன்மை முதலியன ஒன்றற்கொன்று

तुल्यमेव प्रसज्येरन् ग्राह्यग्राहकतादयः ।
इन्द्रियाणामनियमात् चाक्षुषाः स्यू रसादयः ॥

7, 7½.

मलिनामलिनादर्श पश्चात्प्राग्भागतुल्ययोः ।
क्रियाशक्तिज्ञानशक्त्योः अन्तःकरणभागयोः ॥
प्रतिबिम्बे स्फुरन्नीशः कर्ता ज्ञातेति कथ्यते ।

---

சமமாகவே ஆகிவிடும். (அங்ஙனம்) இந்திரியங்கட்கு முறை இன்மையால் சுவைமுதலியன கண்ணால் அறியப்படுவனவாகும்.

ஜடமும் சேதநம்போல ஸ்வப்பிரகாசமானவளவிலே, ஒன்றையொன்று அறிதல் வேண்டும்; அதாவது - எல்லாம் எல்லாவற்றையும் அறிவனவாகவும், எல்லாம் எல்லாவற்றாலும் அறியப்படுவனவாகவும் வேண்டும். வேண்டவே,—"கண் உருவத்தைமாத்திரம் அறியுமேயல்லாது, உருவம் திருப்பிக் கண்ணையறியாது" எனவும், "மூக்கு நாற்றத்தைமாத்திரம் அறியுமேயல்லாது, நாற்றம் திருப்பி மூக்கை யறியாது" எனவும் ஆகிய இவைபோன்ற நியமமில்லை. இல்லையெனவே, கண்ணும் சுவைமுதலியவற்றை அறிதலாகும்; சுவைமுதலியனவும் திருப்பிக் கண்ணை அறிதலாகும். ஆனால், இது இல்லை. ஆகவே, விஷயங்களினுடைய உண்மை விளக்கங்கள்பராதீனமாம்.சுதந்திரமான சொந்த உண்மைவிளக்கங்கள் ஈச்வரனுக்காம் என்பது தேர்ந்த கருத்து. (5,6)

**ஈச்வரன் உபாதிகளின் வழியாகச் செய்பவனும் அறிபவனுமாகிறான்.**

7, 7½.

தாமேஉண்மையும் தாமேபிரகாசித்தலு மில்லாத வெறும் ஜடமாய்க் காணப்படுகின்ற குடம்முதலிய இப்பொருள்களெல்லாவற்றினுள்ளும் ஈச்வரன் உண்மைப்பிரகாசமாய் வியாபித்துநிற்றல் எடுத்துக்காட்டப்பட்டது. இப்பொழுது, அவன் உபாதிவசத்தால் செய்பவனும் அறிபவனுமாதலை அருளிச்செய்கிறார்:

கண்ணாடியினுடைய மழுங்கலான பின்பக்கத்தையும் துலக்கமான முன்பக்கத்தையும் நிகர்த்தவையாய்க் கிரியாசக்தி ஞானசக்திகளான அந்தக்கரணப்பக்கங்களிலே விளங்கும் ஈச்வரன் "செய்பவன்," "அறிபவன்" எனப்படுகிறான்.

பிராணன், அகக்கரணத்தினுடைய கிரியாசக்திவடிவான பாகமாம். இது கண்ணாடியினுடைய மழுங்கலான பின்பாகத்தைப்போன்றது. மனமும் புத்தியும் அகக்கரணத்தினுடைய ஞானசக்திவடிவமான பாகமாம். இது கண்ணாடியினுடைய

बुद्धिः सत्त्वगुणोत्कर्षात् निर्मलो दर्पणो यथा ॥
गृह्णाति विषयच्छायां आत्मच्छायानुभावतः ।

9, 9½.

अन्तःकरणसम्बन्धात् निखिलानीन्द्रियाण्यपि ॥
रथाङ्गनेमिवलये कीलिता इव कीलकाः ।

---

துலக்கமான முன்பக்கத்தைப்போன்றது. எங்கும் உண்மைப்பிரகாசமாய் வியாபித்திருக்கும் ஈச்வரனான ஆத்மா தொழிலையுடைய பிராணனாகிய உபாதியினால் வரை-செய்யப்பட்டவனாய் "கர்த்தா, செய்பவன்" எனப்பெயர் பெறுகிறான்; அவ்வாறே அவன் - மாறுந்தன்மையுள்ள புத்திமனங்களாகிய உபாதியினால் வரைசெய்யப்பட்டவனாய் "ஞாதா, அறிபவன்" எனப் பெயர்பெறுகிறான்; என்பது பொருள்.

(7, 7½)

அறிதற்கருவியான அகக்கரணம்.

8, 8½.

ஆத்மா அறிபவனாதற்கு உபாதியாயுள்ளது ஞானசக்தியான அகக்கரணமாம் என்று கூறியதையே விரித்துரைக்கின்றார்:

புத்தியானது அழுக்கில்லாத கண்ணாடிபோல ஸத்துவகுண மேம்பாட்டினால் (துலக்கமாயுள்ளவளவிலே, தன்னிடத்துள்ள) ஆத்மப்பிரதிரூபத்தினால் விஷயப்பிரதிரூபத்தைப் பிடிக்கின்றது.

ரஜோகுணமும் தமோகுணமும் மேலிட்டவிடத்து, உலோபம் தவறு முதலிய உண்டாகுமாதலால், அது கூடாதென "ஸத்துவகுணமேம்பாட்டினால்" என்று கூறப்பட்டது. அவ்வாறே, பகவானும் அருளிச்செய்கிறார்:

"सत्त्वात्सञ्जायते ज्ञानं रजसो लोभ एव च ।
प्रमादमोहौ तमसः भवतोऽज्ञानमेव च ॥"

"அறிவு ஸத்துவத்தினின்று பிறக்கின்றது: உலோபம் ரஜஸினின்று (உண்டாகின்றது): தவறும், மயக்கமும், அறியாமையும் தமஸினின்று பிறக்கின்றன"—(பகவ.- கீ - 14 - 17)

(8, 8½)

9, 9½.

அகக்கரணம், புறக்கரணமான இந்திரியங்களை ஆளுகின்றது.—எப்படியெனில்,—உருவம்முதலிய விஷயங்களில் சேர்ந்தவையாய், ஆதலால்,

சக்கிரவட்டையிலே பொருத்தப்பட்ட ஆரைக்கால் போன்ற இந்திரியங்களெல்லாம், அகக்கரணசம்பந்தத்தினால் (தம்தம் தொழில்களைச் செய்கின்றன).

10, 11.

**नाड्योऽन्तःकरणे स्यूताः जालसम्स्यूतसूत्रवत् ॥**
**ताभिस्तु गोलकान्ताभिः प्रसर्पन्ति स्फुलिङ्गवत् ।**
**करणानि समस्तानि यथास्वं विषयं प्रति ॥**

---

உருவம் ஓசை முதலிய விஷயங்கட்கும் கண் செவி முதலிய இந்திரியங்கட்கும் சம்பந்தமுள்வழியும், எதிரிலுள்ள விஷயத்தை அறிவதில்லை. ஒருவனுடைய முன்னிலையிலுள்ள புஸ்தகத்தைக் குறித்து "நீ இப்புஸ்தகத்தைப் பார்த்தனையோ?" எனின்,—அவன் "என்மனம் வேறோரிடத்துச் சென்றிருந்தது; நான் இதனைப் பார்க்கவில்லை" (பிரு - 1 - 5 - 3) என்கிறான்; அவ்வாறே, "நீ இவ்வார்த்தையைக் கேட்டனையோ? எனின்,—"என்மனம் வேறோரிடத்துச் சென்றிருந்தது; நான் இதனைக் கேட்கவில்லை" (பிரு - 1 - 5 - 3) என்கிறான். ஆகவே, இந்திரியங்களோடு அகக்கரணம் சேர்ந்தவழியே, உருவம் ஓசை முதலிய பொருளுணர்ச்சி உண்டாகின்றது: அகக்கரணமானது அந்தந்த இந்திரியங்கட்குரிய பார்த்தல் கேட்டல் முதலிய தொழில்களை நியமிக்கின்றது என்றபடி. கௌஷீ - 3 - 7-ஐப் பார்க்க. (3, 3½)

நாடிகள்.

10, 11.

இனி, ஆத்மா உடம்பாகிய உபாதியினால் நனவு கனவு உறக்கம் என்னும் மூன்று நிலைமைகளோடும் சம்பந்தமுறுதலைக் கூறுபவராய், அவற்றது அநுபவமுண்டாகும் இடத்தை முதலில் விரித்துரைக்கின்றார்:

வலையிலே நன்கு பின்னப்பட்ட நூல்கள்போல, அகக்கரணத்திலே நாடிகள் பின்னப்பட்டிருக்கின்றன. இந்திரியங்களெல்லாம், கோலகம் வரையிற் சென்றுள்ள அவற்றின் வழியாகவே தமக்குரிய விஷயத்தை நோக்கி, தீப்பொறிகள்போலச் சஞ்சரிக்கின்றன.

ஞானசக்திக்கிரியாசக்தியோடமைந்த லிங்கசரீரம் என்று சொல்லப்பட்டதாய், விஷயங்களாகிய மீன்களைப் பிடிப்பதற்குக் கருவியான அகக்கரணம் என்னும் வலையிலே நாடிகளாகிய நூல்கள் ஒன்றோடொன்று குறுக்குமறுக்காகப் பின்னிக்கொண்டு. அந்தந்த இந்திரியகோலகமுடிவுவரை வியாபித்திருக்கின்றன. கீழ்க்கூறிய இந்திரியங்களெல்லாம் அவ்வாறுள்ள அந்நாடிகளின் வழியாகவே சஞ்சரிக்கின்றன; தீப்பொறிகள் பறந்தோடி விழுமாறுபோல, மனோவிருத்தியோடுகூட தம்தம் விஷயங்களிற் செல்லுகின்றன. (10, 11)

இந்திரியங்கள்சஞ்சரிக்கின்ற வழிகள் நாடிகளெனக் கூறப்பட்டது. அதிலே, அந்நாடிகளின் பெயர் இடம் தொழில் முதலியவற்றை 11½ - சுலோகங்களால் கூறுகிறார்:

12.

देहस्य मध्यमं स्थानं मूलाधारमितीर्यते ।
गुदात्तु द्व्यङ्गुलादूर्ध्वं मेढ्रात्तु द्व्यङ्गुलादधः ॥

13, 13½.

त्रिकोणोऽधोमुखाग्रश्च कन्यकायोनिसन्निभः ।
यत्र कुण्डलीनी नाम पराशक्तिः प्रतिष्ठिता ॥
प्राणाग्निबिन्दुनादानां सवित्री सा सरस्वती ।

14, 15, 15½.

मूलाधाराग्रकोणस्था सुषुम्ना ब्रह्मरन्ध्रगा ॥

---

12.

உடம்பினுடைய நடுஇடமானது மூலாதாரம் எனப்படுகின்றது; பாயுவினின்று இரண்டங்குலத்திற்கு மேலாகவும், ஆண்குறியினின்று இரண்டங்குலத்திற்குக் கீழாகவும் உள்ளது.

13, 13½.

(அது) முக்கோணமுடையதாய்த் தலைகீழாகக் கவிழ்ந்து, கன்னிகை-யினது யோனியை நிகர்த்துளது. பிராணன், அக்னி, பிந்து, நாதம் என்றிவற்றைக் கிளப்புவதாகிய குண்டலிநீ என்னும் பராசக்தி அங்கே தங்கியுளது; அது ஸரஸ்வதீ (எனவும்படும்).

அங்கே - மூலாதாரத்தினுள். பராசக்தி - மேலான சக்தி, மூலப்பிரகிருதி; அது மூலாதாரத்தை அதிஷ்டித்துநிற்கும் தேவதை; சர்ப்பகுண்டலவடிவமுடைமையால், அதற்கு "குண்டலிநீ" என்று பெயர். பிராணனென்பது - ஐவகைத் தொழிலோடு உடம்பினுள் சஞ்சரிக்கின்ற ஓர்வகை வாயு. அக்னியாவது - இரைப்பையினுள் உணவை ஜீர்ணப்படுத்துகின்ற ஓர்வகை நெருப்பு. இப்பிராணனும் அக்நியும் யோக நூலினுள் முறையே "சந்திரன்," "சூரியன்" எனப் பெயர் பெறும். இவை, இனிக்கூறப்போகின்ற இலைபிங்கலைகளின் தேவதைகளாம். பிந்துவென்பது - வெளிப்படாத ஓர்வகைச்சப்தநிலைமை. நாதமோ - செவிகளைப் பொத்திக்கொண்டு கேட்கப்படும் ஓங்காரமாய் எல்லா ஒலிகட்கும் பொதுவாய் வெளிப்பட்ட சப்தம். இவற்றையெல்லாம் அந்தப் பராசக்தி கிளப்பி நடத்துகின்றது. அது எழுத்தொலி வடிவமாக வெளிப்படுமளவிலே, ஸரஸ்வதீ எனப்பெயர் பெறுகின்றது. (13, 13½)

14, 15, 15½.

ஸுஷும்நையானது மூலாதாரத்தினுடைய முதல் முனையினின்று ப்ரஹ்மரந்திரத்திற்குச் செல்வது;

मूलेऽर्धच्छिन्नवंशाभा षडाधारसमन्विता ।
तत्पार्श्वकोणयोर्जाते द्वे इडापिङ्गले स्थिते ॥
नाडीचक्रमिति प्राहुः तस्मान्नाड्यः समुद्गताः ।

16 16½.

गान्धारीहस्तिजिह्वाख्ये नयनान्तं प्रधावतः ॥
नाडीचक्रेण सम्स्यूते नासिकान्तमुभे गते ।

17, 18, 19, 19½.

नाभिमण्डलमाश्रित्य कुक्कुटाण्डमिव स्थितम् ॥
पूषा चालम्बुसा नाडी कर्णद्वयमुपाश्रिते ।

---

அடியிலே, பாதிவெடித்த மூங்கிற்குழல் போன்றது; ஆறு ஆதாரங்களை யுடையது. இடைபிங்களையிரண்டும் அதனது பக்கமுனைகளிலே கிளம்பி நிற்கின்றன. (இம்மூன்று நாடிகளும் இவ்வாறமைந்துநிற்றலை யோகிகள்) நாடீசக்கிரம் என்கிறார்கள். (மற்றை) நாடிகள் அதனின்று கிளம்பியுள்ளன.

ஸுஷும்னை என்னும் நாடியானது மூலாதாரத்தினுடைய அடிமுனையினின்று ஒருபடித்தாய் நேராக உச்சித்துவாரம்வரை நீண்டுநிற்கின்றது; உள்ளே வெண்டோடியும் வெண்டோடாது மிருக்கின்ற மூங்கிற்குழல்போல, அடியிலே மிக நுண்ணிய துவாரத்தை யுடையது; மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம் அநாஹதம், விசுத்தம், ஆஜ்ஞை என்னும் ஆறு ஆதாரங்களைக் கொண்டது. ஸுஷும்னை எனினும், மூர்த்தந்யநாடி எனினும், ப்ரஹ்மநாடி எனினும் ஒக்கும். இதற்கு இடப்பக்கத்திலுள்ள மூலாதாரமேல்முனையினின்று கிளம்பியது, இடை என்னும் நாடியாம்; அவ்வாறே, வலப்பக்கத்திலுள்ள மூலாதார மேல்முனையினின்று கிளம்பியது, பிங்களை என்னும் நாடியாம். அவையிரண்டும் நெற்றி அடிவரை சென்றிருக்கின்றன. (14 ... ... 15½)

16, 16½.

நாடீசக்கிரத்தோடு பின்னிநிற்கும் காந்தாரி ஹஸ்திஜிஹ்வை என்னும் பெயருடைய இரண்டு (நாடிகளும்) மூக்குவரை சென்றவையாய்க் கண்வரை ஓடுகின்றன.

இயல்பிலே மூக்குவரை சென்றுள்ள அந்நாடிகள் - இடைபிங்களைகளுள் வாயுநிரம்புதலால் மேலே நிமிர்ந்து கண்வரையிலும் ஓடுகின்றன என்பது, (16, 16½)

17. 18, 19, 19½.

பூஷை, அலம்புஸை என்னும் நாடிகள், கோழிமுட்டைபோன்ற கொப்பூழ்வட்டத்தினின்று இரண்டு செவிகளையும் ஒட்டிநிற்கின்றன;

नाडी शुक्लाह्वया तस्मात् भ्रूमध्यमुपसर्पति ॥
सरस्वत्याह्वया नाडी जिह्वान्ता वाक्प्रसारिणी ।
नाडी विश्वोदरी नाम भुङ्क्तेऽन्नं सा चतुर्विधम् ॥
पीत्वा पयस्विनी तोयं कण्ठस्था कुरुते क्षुतम् ।

20, 20½.

नाडीचक्रात्समुद्भूताः नाड्यस्तिस्रस्त्वधोमुखाः ॥
राका शुक्लं सिनीवाली मूत्रं मुञ्चेत्कुहूर्मलम् ।

21, 21½.

भुक्तान्नरसमादाय शङ्खिनी धमनी पुनः ॥
कपालकुहरं गत्वा मूर्ध्नि सञ्चिनुते सुधाम् ।

---

சுக்லைஎன்னும் நாடி அதனின்று (கிளம்பி) புருவநடுவைக் கிட்டிநிற்கின்றது: ஸரஸ்வதீ என்னும் நாடி நாக்குவரையுள்ளதாய் வாக்கைக் கிளப்புகின்றது; (இரைப்பையிலுள்ள) விச்வோதரீ என்னும் நாடி (எதுவோ), அது நால் வகைத்தான உணவை உண்கின்றது; பயஸ்விநீ (என்னும்) நாடி ஜலத்தைக் குடித்து, தொண்டையிலே நிற்பதாய் இருமலை (அல்லது தும்மலைச்) செய்கின்றது.

நால்வகை உணவைப்பற்றி வே - கீ - 15 - 14 - ஆம் சுலோகத்தின் பாஷ்யத்தைப் பார்க்க. (17 ... ... 19½)

20, 20½.

(ராகை, ஸிநீவாலீ, குகூ என்னும் இம்)மூன்று நாடிகளும் நாடிசக்கிரத்தினின்று கீழ்முகமாகக் கிளம்பியுள்ளன; (அவற்றுள்,) ராகை ரேதஸையும், ஸீநீவாலீ மூத்திரத்தையும், குகூ மலத்தையும் விடும்.

21, 21½.

அன்றியும், சங்கினீ என்னும் நாடியானது, உட்கொண்ட உணவின் ஸாரத்தை எடுத்து, உச்சித்துவராத்திற்குச் சென்று, சிரசிலே அமிருதத்தைப் பெருக்குகின்றது.

சிரசிலே - ஸஹஸ்ராரபத்மம் என்னும் இடத்திலே. இந்த அமிருதத்தை லம்பிகாயோகத்தால் அடைதலாகும் என்று யோகிகள் கூறுகிறார்கள். 9 - 32ஐப் பார்க்க. (21, 21½)

**शतं चैका च नाड्यः स्युः तासामेका शिरोगता ॥**

**तयोर्ध्वमायन्मुक्तः स्यात् इति वेदान्तशासनम् ।**

23, 23½.

**यदा बुद्धिगतैः पुण्यैः प्रेरितेन्द्रियमार्गतः ॥**

**शब्दादीन्विषयान्भुङ्क्ते तदा जागरितं भवेत् ।**

---

22, 22½.

பலவாகச் சொல்லி என்ன ? இன்னும் எத்தனையோ வேறு நாடிகள், பிராண இந்திரியமனங்கட்குச் சஞ்சாரமார்க்கமாக உள்ளன என, நாடீவிஷயத்தை முடிக்கிறார் :

" நூற்றொன்று நாடிகள் உள்ளன. அவற்றுள், ஒன்று உச்சியிற் சென்றிருப்பது. அதன்வழியாக மேலே செல்கிறவன் (கட்டு) நீங்கியவனாவான் " என்பது, வேதாந்தத் தீர்ப்பு.

இவ்வேதாந்தத்தீர்ப்புவாக்கியம் வருமாறு :

" **शतं चैका च हृदयस्य नाड्यस्तासां मूर्धानमभिनिस्सृतैका ।**
**तयोर्ध्वमायन्नमृतत्वमेति विष्वङ्ङन्या उत्क्रमणे भवन्ति ॥**"

" ஹிருதயத்திற்கு நூற்றொரு நாடிகள் உள்ளன ; அவற்றுள், ஒன்று உச்சியை நோக்கிச் சென்றிருப்பது. அதனால் மேலே செல்கின்றவன், சாகாமையை யடைகிறான். மற்றை (நாடிகள்) பலவாகச் செல்பவையாய் (பிராணன்) வெளியே போதற்குக் காரணமாயுள்ளன [ஸம்ஸாரத்தை மீள அடைதற்கே வழியாகின்றன] " (சா - 8 - 6 - 6 ; கட - 6 - 16).

" நூற்றொன்று நாடிகள் " என்றது, முக்கியநாடிகளை ; அவை எண்ணிறந்தவையாதலின். முக்கியநாடிகட்குக் கிளைநாடிகளும், கிளைநாடிகட்குச் சிறுகிளைநாடிகளுமாக இவ்வாறு நாடிகள் கோடிக்கணக்கா யுள்ளன வென்க. ப்ர - 3 - 6 ஐப் பார்க்க.

(22, 22½)

நனவுநிலை.

23, 23½.

இனி, அந்நாடிகளில் திரிகின்ற இந்திரியங்களாலேயே விழிப்பென்னும் நிலை நிகழ்கின்றது என்கிறார் :

(ஆத்மாவானவன்) - புத்தியினுள் பதிந்துகிடக்கும் புண்ணிய (பாவ) கர்மங்களாலே முடுக்கப்பட்ட இந்திரியங்களின் வழியாக ஓசை முதலிய விஷயங்களை எப்பொழுது அநுபவிக்கின்றானோ, அப்பொழுது நனவாம்.

24, 24½.

सम्हृतेष्विन्द्रियेष्वेषु जाग्रत्सम्स्कारजान्पुमान् ॥
मानसान्विषयान्भुङ्क्ते स्वप्नावस्था तदा भवेत् ।

25.

मनसोऽप्युपसम्हारः सुषुप्तिरिति कथ्यते ॥

---

புண்ணியமென்பது, பாவத்திற்கும் உபலக்ஷணம். அகக்கரணத்தினுள் அழுந்திக் கிடக்கும் பிராரப்தவினைகளுள் ஒரு நல்வினையேனும் தீவினையேனும் - தனது பயனைத் தருதற்கு அமைந்தகாலமும் தகுந்தஇடமும் ஏற்றகாரணமும் கூடியவழி, இந்திரியங்களை உசுப்புகின்றது; உசுப்பவே, அவை கீழ்க்கூறிய தம்தம் நாடிகளின்வழியாகத் தம்தம் கோளகத்திற்குச் சென்று வெளியில் போய் ஓசை முதலிய விஷயங்களை அநுபவிக்கின்றன, அவற்றைப் பிரத்தியக்ஷமாகவும் அநுமாநமாகவும் இவைபோன்ற வேறுவிதமாகவும் உணர்கின்றன. இனி, இத்தகைய உணர்வான அநுபவம் எப்பொழுது நிகழ்கின்றதோ, அப்பொழுது அது நனவு என்னும் நிலைமையாம். எனவே, இந்திரியங்களால் ஓசைமுதலியபொருளுணர்ச்சி ஜாகர மென்பதாயிற்று. ஜாகரம் எனினும், நனவு எனினும் ஒக்கும். (23, 23½)

## கனவு நிலை.

24 24½.

இனி, ஸ்வப்நம் நிகழ்தலைக் கூறுகிறார்:

இவ்விந்திரியங்கள் (உள்ளே) ஒடுங்கியவழி, ஆத்மாவானவன் - நனவுவாஸனையினலான மாநஸப்பொருள்களை (எப்பொழுது) அநுபவிக்கின்றானே, அப்பொழுது கனவாம்.

இந்திரியங்கள் நாடிகளின்வழியாகத் தம்தம் கோளகத்தினின்று அகக்கரணத்திற்கு மீளச் சென்று அதனுள் ஒடுங்க, அங்ஙனம் ஆத்மாவானவன் நனவுப் பயிற்சியெல்லாம்பதிந்துகிடக்கும் மனத்தினது விகாரமான ஓசைமுதலிய விஷயங்களை உணர்தல் கனவாம் என்பது. (24, 24½)

## உறக்க நிலை.

25.

இப்பொழுது, உறக்கத்தைக் கூறுகிறார்:

மனமும் ஒடுங்குதல் உறக்கம் எனப்படுகின்றது.

மனம் ஒடுங்குதலாவது - வாஸனையோடமைந்த அகக்கரணம் தனது காரணமான அஜ்ஞாநவடிவமாய் நிற்றல். (25)

## ஆத்மா என்றும் ஸச்சிதாநந்தமாம்.

இவ்வாறாக ஆத்மாவிற்கு நனவு முதலிய நிலைமைகள் உபாதிமூலமாக இருக்கின்றன. உபாதிகளோ, அஸங்கஅறிவான ஆத்மாவிற்கு மாயையினலன்றி வேறுவகையாலமையா:

26.

**तस्मान्मायासमाच्छन्नः सन्मात्रो वर्तते पुमान् ।**
**मूढो मत्तोऽज्ञ इत्येवं मायाऽऽवेशात्प्रकाशते ॥**

27.

**सुखमस्वाप्समित्येवं प्रबोधसमये पुमान् ।**
**सच्चिदानन्दरूपः सन् सम्यगेव प्रकाशते ॥**

---

26.

ஆகவே, ஆத்மா மாயையினால் மறைப்புண்டு உண்மைமாத்திரமாயிருக்கிறான்; மாயாசம்பந்தத்தினால் மயங்கியவனாகவும், பித்தனாகவும், அறியாதவனாகவும் இவ்வாறு புலப்படுகிறான்.

ஆத்மாவும் ப்ரஹ்மமும் ஒன்றாயிருக்க, "நான் ப்ரஹ்மமா யிருக்கிறேன்" என்று ஒருவர்க்கும் புலப்படாவிடினும், ஆத்மா "நான் இருக்கிறேன்" என உண்மை வழக்கிற்கு மாத்திரம் உரியவனாயிருக்கிறான்; எனினும், ப்ரஹ்மத்தினுடைய மற்றைய இயல்பு புலப்படாது, மாயையினால் மறைப்புண்டு நிற்கிறான்; "நான் மூடனாயிருக்கிறேன், நான் அறியாதவனாயிருக்கிறேன்" என விபரீதஉணர்வும் அறியாமையும் காணப்படுகின்றமையின். அல்லாவிடில், ஸச்சிதாநந்த இயல்பிலே மூடத்தன்மை முதலியன எவ்வாறு வருதலாகும்? என்பது கருத்து. (26)

27.

ஆயினும், ஆத்மா எப்பொழுதும் தன்இயல்பிலே ஸ்வப்பிரகாசமான ஸச்சிதா-நந்தமேயாம்; என்பதற்கு அறிகுறியை அருளிச்செய்கிறார்:

"சுகமாகத் தூங்கினேன்" என இவ்வாறு விழிப்புசமயத்திலே ஆத்மா ஸச்சிதாநந்தவடிவமாய்ச் செவ்வனே விளங்குகிறான்.

"சுகமாகத் தூங்கினேன்" என்றவிடத்து, "சுகமாக" என்பது - ஸ்வயம் பிரகாச உண்மையாய், புதிதாக இடையே வந்தமையாது என்றுமுள்ள ஆநந்த வடிவமான ஆத்மஸ்வரூபத்தையும், "தூங்கினேன்" என்பது - உபாதியனைத்தும் ஒழிந்துநிற்றலையும் குறிக்கின்றன. உறக்கத்திலே சுகமானது வெளியிலிருந்து புதிதாக வருவதன்று; உயர்ந்த மேல்மாடமும், மெல்லிய தென்றலும், ஒள்ளிய நிலவும், இனிய வீணையும், மதர்த்த மங்கையும், ஹம்ஸதூலமயில்தோகையினாலான பூமெத்தையும், பிறவுமாகிய பொருள்களை அனுபவித்தற்குக் கருவியான இந்திரியங்கள் அங்ஙனம் ஓய்ந்துவிட்டமையின் என்க. மேலும், உபாதிஒடுங்குவதனாலான தொழி-லொழிவானது சுகத்திற்குக் கருவியாகாது; ஒன்றுபோக மற்றொன்று வருதல் காணப்படாமையானும், இன்மையினின்று உண்மை உண்டாகமாட்டாமையானும் (வே - கீ - 2 - 16) என்க. அன்றியும், துன்பமின்மையே சுகம் என்னும் சொல்லால்

28.

इत्थं जगत्समाविश्य भासमाने महेश्वरे ।
सूर्यादयोऽपि भासन्ते किमुतान्ये घटादयः ॥

29.

तस्मात्सत्ता च भावानां ईश्वराश्रयणाश्रया ।
सत्यं ज्ञानमनन्तं च श्रुत्या ब्रह्मोपदिश्यते ॥

---

கூறப்படுகின்றது என்றல் பொருந்தாது; உறக்கத்திலே துன்பமின்மையை அநுபவித்தற்கான கருவி இல்லாமையாலும், முன் அநுபவியாததைப் பின் நினைவு கூர்தல் செல்லாமையாலுமென்க. ஆகவே, "சுகமாகத்தூங்கினேன்" என்பது அநுபவித்ததை நினைவுகூர்தலாதலால், உறக்கத்திலே அனுபவிக்கப்பெற்ற சுகமானது உள்ளதுஉள்ளபடியான ஸ்வரூபஆநந்தத்தைக் குறிக்கின்றது. தொழிற்பாடில்லாது, உறுப்பில்லாது, திரிபில்லாதிருக்கும் ப்ரஹ்மமான ஆத்மாவிற்கு நிற்றலும், நடத்தலும், உட்காருதலும், படுத்தலும், உறங்கலும், விழித்தலும் இயல்பிலே தாமாகவே இல்லையாதலால், இவை யெல்லாம் உபாதிகளாலானவை என உபாதிகள் ஒடுங்கி நிற்றலே அதற்கு உறக்கமாம்; அது "தூங்கினேன்" எனக் குறிக்கப் படுகின்றது. ஆகவே, இந்த ஆத்மாவானது எல்லா நிலைமைகளினும் ஸச்சிதாநந்த ஸ்வரூபமேயாம் என்றபடி. (27)

ஈச்வரனே ஸ்வயம்பிரகாசஉண்மை.

28.

அப்படிப்பட்ட
மஹேச்வரன் இவ்வாறு ஜகத்தினுள் புகுந்து விளங்க, சூரியன் முதலானவையும் விளங்குகின்றன; குடம்முதலிய மற்றை(ப்பொருள்கள்) எவ்வளவு ?

ப்ரஹ்மமானது கீழேகூறியபடி நனவு கனவு உறக்கம் எனப்பட்ட மூன்று நிலைமைகளிலும் நன்கு விளங்குகின்றது; விளங்கவே, சூரியன்முதலியவை அதனால், அதனது மகிமையினால், அதனது பிரகாசத்தினால் விளங்குகின்றன; தமது சொந்த மகிமையினால், சொந்தப் பிரகாசத்தினால் அல்ல. இங்ஙனம் "பிரகாசத்தன்மையன" எனப்படும் சூரியன்முதலியவற்றிற்கே சொந்தப்பிரகாசம் இல்லையாயின் "அப்பிரகாசத் தன்மையன" எனப்படும் குடம்முதலியவற்றிற்குச் சொந்தப்பிரகாச மில்லையெனச் சொல்லவும் வேண்டுமோ? என்பது பொருள். (28)

இவ்வாறு இப்பிரபஞ்சத்திற்குச் சொந்தப் பிரகாச மில்லை; சொந்த உண்மையு மில்லை :

ஆதலால், பொருள்களுடைய உண்மையும் ஈச்வரனைச் சார்ந்த நிலையுடைத்து. "ப்ரஹ்மம் ஸத்தியமானது, அறிவானது, அளவில்லாதது" என சுருதியினால் உணர்த்தப்படுகின்றது.

29½.

# जाग्रत्स्वप्नोद्भवं सर्वं असत्यं जडमन्धवत् ।

"உண்மையும்" என்பதிலுள்ள உம்மை - விளக்கத்தையும் தழுவிநிற்கின்றது. உண்மையும் விளக்கமும் ஈச்வரனிடத்து உள்ளன. அவை அவனது சம்பந்தத்தால் குடம்முதலிய பொருள்களில் செல்லுகின்றமையின், இந்த ஜடப்பிரபஞ்சம் ஈச்வரனால் உள்ளது, ஈச்வரனால் விளங்குகின்றது என்பதாம். ஆயின், உண்மையும் விளக்கமும் ஈச்வரனிடத்து உள்ளன என்பதற்குச் சுருதிப் பிரமாணம் யாதெனின், அது வருமாறு:

"सत्यं ज्ञानमनन्तं ब्रह्म ।"

"ப்ரஹ்மம் ஸத்தியமானது, அறிவானது, அளவில்லாதது,"—

(தை - உப - 2 - 1)

என்பது, ப்ரஹ்மஸ்வரூபத்தை உணர்த்துகின்ற திருவாக்கு. யாதொன்று எவ்வடிவமாக நிச்சயிக்கப்பட்டதோ அவ்வடிவம் பிறழாதிருக்க, அது ஸத்தியமாம்; அதுதான் உள்ளதென்பதாம். யாதொன்று எவ்வடிவமாக நிச்சயிக்கப்பட்டதோ அவ்வடிவம் பிறழ, அது அஸத்தியமாம், பொய்ம்மையாம். எனவே, ஸத்தியமாகிய உண்மையும், அறிவாகிய விளக்கமும் ப்ரஹ்மத்தினுடைய சிறப்பியல்பாம் என்றவாறு. (29)

29½.

ஆயினும், அவை வேறோர் பொருளினுடைய இயல்பாதல் செல்லாதோ? எனச் சங்கித்து, செல்லாதென்பதைக் காட்டுகிறார்;

நனவுகனவுகளிலே உண்டாவனவெல்லாம் அஸத்தியமாம், குருடன் போல ஜடமாம்.

நனவிலும் கனவிலும் காணப்படுவனவெல்லாம் கானல்நீர்போலப் பிறழ்ந்திடும் ஜடமாதலால், பொய்ம்மையாம் என்க. அவ்வாறே, அவை குருட்டுமுடவன்போல் பராதீனச்செயலுடைமையால், ஜடமாம் என்றபடி. (29½)

"நான்" என்பது.

இந்தப் பொய்ம்மையான ஜடப் பிரபஞ்சமனைத்திற்கும் ஆதாரமாய் எங்குமுள்ள ஈச்வரனே உண்மைப்பிரகாசமாம் என உணர்த்தி, அவ்வீச்வரனே உள்ளேயுள்ள ஆத்மாவுமாம் என அருளிச்செய்கிறார்:

30, 30½.

ईश्वरश्चाहमित्येवं भासते सर्वजन्तुषु ॥
निर्विकल्पश्च शुद्धश्च मलिनश्चेत्यहं त्रिधा ।

31, 31½.

निर्विकल्पं परं ब्रह्म निर्धूताखिलकल्पनम् ॥
धूल्यन्धकारधूमाभ्रनिर्मुक्तगगनोपमम् ।

32, 32½.

विवेकसमये शुद्धं देहादीनां व्यपोहनात् ॥
यथान्तरिक्षं सङ्क्षिप्तनक्षत्रैः किञ्चिदीक्ष्यते ।

---

30, 30½.

எல்லாப்பிராணிகளுள்ளும் (எது) "நான்" என இவ்வாறு புலப்படுகின்றதோ, (அது) ஈச்வரனேதான், "நான்" என்பது-நிர்விகல்பம் [வேற்றுமை யில்லது], சுத்தம், மலினம் [மங்கல்] என மூவகைத்து.

31, 31½.

அவற்றுள், முதல் அகங்காரத்தைக் கூறுகிறுர் :

நிர்விகல்பமாவது - தூசியும், இருளும், புகையும், மேகமும் முற்ற நீங்கிய ஆகாசம்போல், கற்பனையெல்லாம் துடைக்கப்பெற்ற பரப்ரஹ்மமாம்.

தூசிமுதலியமறைப்பெல்லாம் முழுதும் அகன்று பளிச்சென்று வெளிவாங்கி நிற்கும் வானம்போல், வேற்றுமையெல்லாம் போனவிடந்தெரியாது சிதறடிக்கப் பெற்றதாய்த் தன்இயல்பிலே "நான்" என விளங்கும் ஆத்மா, ப்ரஹ்மமே என்றபடி. (31, 31½.)

32, 32½.

இரண்டாம் அகங்காரத்தைக் கூறுகிறுர்.

ஆராய்ச்சிசமயத்திலே உடம்பு முதலியவற்றை அகற்றி நிற்பதனுல், சுத்த (அகங்காரம்) - குறைந்த நக்ஷத்திரங்களால் (குறிக்கப்படும்) ஆகாசம் போல், சிறிதுபொழுது காணப்படுகின்றது.

ஆத்மாவானது யாவர்க்கும் எப்பொழுதும் விளங்காவிடினும், ஆத்மப்ரஹ்ம இயல்பைத் தீர ஆராய்ச்சிசெய்தவனுக்கு அது [ஆத்மா] விளங்கவேவிளங்குகின்றது. அடக்கம், பொறுமை முதலிய நற்குணம்மிக்கவன் சுருதியுக்திகளால் அத்வைத தத்வத்தை ஆராய்ச்சிசெய்யுங்கால், உடம்பு மனம் முதலியவற்றை ஆத்மப்பொருளல் லாதவையாகக் கண்டு தள்ள, அங்ஙனம் ஆத்மாவை வரைசெய்வதொன்று இல்லாமையின் சுத்தமாயிருக்கும் "நான்" என்னும் ஆத்மாவானது ப்ரஹ்மமாக விளங்குகின்றது.

33, 33½.

देहेन्द्रियादिसम्सर्गात् मलिनं कलुषीकृतम् ॥
यथाऽऽकाशं तमोरूढं स्फुरत्यनवकाशवत् ।

34, 34½.

अहमित्यैश्वरं भावं यदा जीवः प्रबुध्यते ॥
सर्वज्ञः सर्वकर्ता च तदा जीवो भविष्यति ।

---

குறைந்த நக்ஷத்திரங்களால் – தோற்றம் குறைந்த விண்ணொளிகளால். "குறைந்த நக்ஷத்திரங்களால் (குறிக்கப்படும்) ஆகாசம்போல்" என்னும் திருஷ்டாந்தமானது - ஆராய்ச்சி சமயத்திலே விளங்குகின்ற ஆத்மவடிவத்தைத் தெளிவிப்பதோடு, நிர்விகல்ப அகங்காரத்திற்கும் சுத்த அகங்காரத்திற்குமுள்ள வேற்றுமையையும் எடுத்துக்காட்டுவதை நோக்குக. (32, 32½)

மூன்றும் அகங்காரத்தைக் கூறுகிறார் :

33, 33½.

இருள்வியாபித்த ஆகாசம் எப்படி இடமல்லாததுபோல் தோற்றுகின்றதோ, (அப்படி) மலின (அகங்காரமானது) உடம்பு இந்திரியம்முதலியவற்றின் கலப்பினால் கலக்கப்பட்டு (ப்ரஹ்மமல்லாததுபோல் புலப்படுகின்றது).

கலப்பினால் - மயக்கத்தினால். இடமல்லாததுபோல் - வரைசெய்யப்பட்டு நிற்பதுபோல். இந்த அகங்காரம் எல்லாப்பிராணிகட்கும் சாதாரணமாயுள்ளது. (33, 33½)

34, 34½.

உடம்பு மனம் முதலியவற்றால் இவ்வாறு மயங்குகின்ற

ஜீவன் எப்பொழுது ஈச்வரநிலையை "நான்" எனத் தெளிகின்றானோ, அப்பொழுது ஜீவன் எல்லாம் அறிபவனாகவும் எல்லாம் செய்பவனாகவும் ஆவான்,

"எப்பொழுது" என்றல், தெளிதலருமையை நோக்கி. (34, 34½.)

ஆயின், மயக்கம் நீங்க ஆத்மாவைக் காணுதல் எப்படி ?—கூறுவோம் :

35, 35½.

मायया ऽधिकसम्मूढः विद्ययेशः प्रकाशते ॥
निर्विकल्पानुसन्धाने सम्यगात्मा प्रकाशते ।

36, 36½.

अविद्याख्यतिरोधानव्यपाये परमेश्वरः ॥
दक्षिणामूर्तिरूपो ऽसौ स्वयमेव प्रकाशते ।

37, 37½.

इति श्रीदक्षिणामूर्तिस्तोत्रार्थप्रतिपादके ॥
प्रबन्धे मानसोल्लासे चतुर्थोल्लाससङ्ग्रहः ।

---

35, 35½.

மாயையினுல் மயங்கிநிற்கும் ஈச்வரன் வித்யையினுல் புலப்படுகிருன். நிர்விகல்பத்தைச் சிந்திக்க, ஆத்மா செவ்வனே விளங்குகிருன்.

மாயையினுல் மயங்கிநிற்பவன் முற்பிறவியிலேனும், இப்பிறவியிலேனும் செய்யப் பட்ட நல்வினையினுல் நன்ருகப் புத்திதிருந்தியவனுய் வேதாந்த நூல்களை ஆராய, ஆங்கவனுக்கு ஞாநமுதிக்கின்றது. அதனுல், ஆத்மா ஒருவாறு புலப்படுகின்றது (4 - 32, 32½). இனி, அவ்வாறு புலப்படும் ஆத்மாவைச் சிந்திக்கச்சிந்திக்க மயக்கம் அறத்தீர்ந்து மேன்மேலும் தெளிவேறுவதனுல், ப்ரஹ்மமான ஆத்மஸ்வரூபம் நிர்விகல்பஅறிவான ஆநந்தமாய், பூர்ணமாய் விளங்குகின்றது (4- 31, 31½). (35, 35½)

36, 36½.

இவ்வுல்லாஸப் பொருளை முடிக்கிருர் :

அவித்யை என்னும் திரையைத் தள்ளினவளவிலே, தக்ஷிணமூர்த்தி வடிவான அப்பரமேச்வரன் தானே விளங்குகிருன் [புலப்படுகிருன்].

37, 37½.

134 - ஆம் பக்கத்திலுள்ள 4 - ஆம் சுலோகத்தின் உரையை இதனேடு முடிக் கிருர் :

ஸ்ரீ தக்ஷிணமூர்த்திஸ்தோத்திரத்தின் பொருளை உணர்த்துகின்ற மாநஸோல்லாஸம் என்னும் நூலினுள் நான்காமுல்லாஸப் பொழிப்புரை

முற்றும்.

---

நான்காம் உல்லாஸம்.

---

பதவுரை.

1.

| | |
|---|---|
| घटपटादयः | "குடம் ஆடை முதலிய |
| भावाः | பொருள்கள் |
| स्वतः | தாமே |
| सन्तः | உள்ளவையாய் |
| प्रकाशन्ते | விளங்குகின்றன ; |
| ईश्वरस्य | ஈச்வரனுடைய |
| समावेशात् | கலப்பினால் |
| न (प्रकाशन्ते) | (விளங்குகின்றன) வில்லை" |
| इति | என்ற |
| अस्य | இதற்கு |
| उत्तरम् | மறுமொழி |
| उच्यते | கூறப்படுகின்றது. |

---

4

| | |
|---|---|
| यस्य तु | எதனுடைய |
| ज्ञानं | அறிவானது |
| नानाच्छिद्र— | பல சில்லிகளையுடைய |
| घटोदरस्थित— | குடத்தின் உள்ளேவைக்கப்பட்ட |
| महादीपप्रभा | பெரிய விளக்கின் ஒளிபோல் |
| भास्वरं | ஒளிர்கின்றதாய் |
| चक्षुरादिकरणद्वारा | கண் முதலிய இந்திரியங்களின் வழியாக |
| बहिः | வெளியில் |
| स्पन्दते | செல்லுகின்றதோ, |

| | |
|---|---|
| जानामि | "அறிகிறேன்" |
| इति | என்று |
| (यत्) | (எது) |
| (स्वयम् एव) | (தானே) |
| (भाति) | (விளங்குகின்றதோ,) |
| भान्तम् | விளங்குகின்ற |
| तम् एव | அதனையே |
| अनु | அடுத்து |
| एतत् | இந்த |
| समस्तम् | எல்லா |
| जगत् | பிரபஞ்சமும் |
| भाति | விளங்குகின்றது ; |
| तस्मै | அந்த |
| श्रीगुरूमूर्तये | ஸ்ரீகுருமூர்த்தி ஸ்வரூபமான |
| श्रीदक्षिणामूर्तये | ஸ்ரீதக்ஷிணாமூர்த்திக்கு |
| इदम् | இந்த |
| नमः | நமஸ்காரம். |

---

| | |
|---|---|
| अस्य | இதற்கு |
| अयम् | இது |
| भावः | அபிப்பிராயம். |

---

2.

| | |
|---|---|
| अहं | " நான் " |
| इति | என்று |
| अनुसन्धाता | நினைப்பவன் |
| जानामि | "அறிகிறேன்" |
| इति | என்று |
| न स्फुरेत् चेत् | விளங்காவிட்டால் |
| कस्य | யாருக்கு |
| कः वा | யார்தான் |
| प्रकाशेत | விளங்கக்கூடும் ? |
| जगत् च | ஜகத்தும் |
| सुषुप्तवत् | தூக்கத்தில் போல |
| स्यात् | இருக்கும். |

---

3.

| | |
|---|---|
| प्राक् | முன்னும் |
| ऊर्ध्वं च | பின்னும் |
| असताम् | இல்லாதவற்றிற்கு |
| सत्त्वम् | உண்மையானது |
| वर्तमाने अपि | நிகழ்காலத்திலும் |
| स्वतः | ஸ்வயமாக |
| न (अस्ति) | இல்லை. |
| तस्मात् | ஆதலால், |
| सत्त्वम् | உண்மையானது |
| प्रागूर्ध्वत्वविवर्जिते | முன்மையும் பின்மையும் இல்லாத |
| ईशे | ஈச்வரனிடத்து |
| स्थितं | நிலைத்தது. |

---

4, 4½.

| | |
|---|---|
| जडाः | ஜடங்கள் |
| ईश्वरं विना | ஈச்வரனில்லாது |
| स्वयम् एव | தாமாகவே |
| प्रकाशेरन् यदि | விளங்குமாகில், |
| सर्वं | எல்லாம் |
| सर्वस्य | எல்லாவற்றிற்கும் |
| भासेत | விளங்கும் ; |
| वा | அல்லது |
| किञ्चन | ஒன்றும் |
| न भासेत | விளங்கமாட்டாது. |
| तस्मात् | ஆகவே, |
| जगत् | ஜகத்தானது |
| सर्वज्ञम् | எல்லாவற்றையும் அறிவதாக வாயினும் |
| अज्ञं वा | (ஒன்றையும்) அறியாததாக வாயினும் |
| एकरूपकं | ஒருபடித்தாய் |
| स्यात् | இருக்கும். |

---

5, 6.

| | |
|---|---|
| जडचेतनयोः | ஜடமும் சேதனமும் |
| स्वयम्प्रकाशत्वे | ஸ்வப்பிரகாசமாயிருத்தல் |
| तुल्ये | ஒரு நிகரானவளவிலே |
| ग्राह्य ग्राहकतादयः | உணரப்படுவதும் உணர்வது மாகிய தன்மை முதலியன |
| मिथः | ஒன்றற்கொன்று |
| तुल्यम् एव | சமமாகவே |
| प्रसज्येरन् | ஆகிவிடும். |

| | |
|---|---|
| इन्द्रियाणाम् | (அங்ஙனம்) இந்திரியங்கட்கு |
| अनियमात् | முறை இன்மையால், |
| रसादयः | சுவை முதலியன |
| चाक्षुषाः | கண்ணால் அறியப்படுவன |
| स्युः | ஆகும். |

---

7, 7½.

| | |
|---|---|
| मलिनामलिनादर्श—<br>पश्चात्प्राग्भागतुल्ययोः | கண்ணாடியினுடைய மங்கலான பின்பக்த்தையும் துலக்கமான முன்பக்கத்தையும் நிகர்த்தவையாய் |
| क्रियाशक्तिज्ञानशक्त्योः | கிரியாசக்தி ஞானசக்திகளான |
| अन्तःकरणभागयोः | அந்தக்கரண பக்கங்களிலே |
| प्रतिबिम्बे | பிரதிபிம்பத்தில்[பிரதிபிம்பத்தோடு ஒன்றாக] |
| स्फुरन् | விளங்கும் |
| ईशः | ஈச்வரன் |
| कर्ता | "செய்பவன்" |
| ज्ञाता | " அறிபவன் " |
| इति | என்று |
| कथ्यते | சொல்லப்படுகிறான். |

---

8, 8½.

| | |
|---|---|
| बुद्धिः | புத்தியானது |
| निर्मलः | அழுக்கில்லாத |
| दर्पणः यथा | கண்ணாடி போல |
| सत्त्वगुणोत्कर्षात् | ஸத்துவகுணமேம்பாட்டினால் (துலக்கமாயுள்ள வளவிலே,) |
| आत्मच्छायानुभावतः | (தன்னிடத்துள்ள) ஆத்மப் பிரதிரூபமகிமையினால் |
| विषयच्छायाम् | விஷயப்பிரதிரூபத்தை |
| गृह्णाति | பிடிக்கின்றது. |

9, 9½.

| | |
|---|---|
| रथाङ्गनेमिवलये | சக்கிரவட்டையிலே |
| कीलिताः | பொருத்தப்பட்ட |
| कीलकाः इव | ஆரைக்கால் போன்ற |
| निखिलानि | எல்லா |
| इन्द्रियाणि अपि | இந்திரியங்களும் |
| अन्तःकरणसम्बन्धात् | அகக்கரண ஸம்பந்தத்திஞல் |
| ( स्वस्वव्यापारान् ) | (தம் தம் தொழில்களை) |
| (कुर्वन्ति) | (செய்கின்றன.) |

10, 11.

| | |
|---|---|
| जालसम्स्यूतसूत्रवत् | வலையிலே நன்கு பின்னப்பட்ட நூல்கள் போல, |
| अन्तःकरणे | அகக்கரணத்திலே |
| नाड्यः | நாடிகள் |
| स्यूताः | பின்னப்பட்டிருக்கின்றன. |
| समस्तानि | எல்லா |
| करणानि | இந்திரியங்களும், |
| गोलकान्ताभिः | கோலகம் வரையிற் சென்றுள்ள |
| ताभिः तु | அவற்றின் வழியாகவே |
| यथास्वं | தமக்குரிய |
| विषयं प्रति | விஷயத்தை நோக்கி, |
| स्फुलिङ्गवत् | தீப்பொறிகள் போல |
| प्रसर्पन्ति | சஞ்சரிக்கின்றன. |

12.

| | |
|---|---|
| देहस्य | உடம்பினுடைய |
| मध्यमं | நடு |
| स्थानम् | இடமானது |

| | |
|---|---|
| मूलाधारम् | மூலாதாரம் |
| इति | என்று |
| ईर्यते | கூறப்படுகிறது ; |
| गुदात् | பாயுவினின்று |
| द्व्यङ्गुलात् | இரண்டங்குலத்திற்கு |
| ऊर्ध्वम् तु | மேலாகவும் |
| मेढ्रात् | ஆண் குறியினின்று |
| द्व्यङ्गुलात् | இரண்டங்குலத்திற்கு |
| अधः तु | கீழாகவும் (உள்ளது). |

---

13, 13½.

| | |
|---|---|
| त्रिकोणः | (அது) முக்கோணமுடையதாய் |
| अधोमुखाग्रः च | தலைகீழாகக் கவிழ்ந்ததுமாய் |
| कन्यकायोनिसन्निभः | கன்னிகையினது யோனியை நிகர்த்ததாய் (உள்ளது). |
| प्राणाग्निबिन्दुनादानाम् | பிராணன், அக்னி, பிந்து, நாதம் என்றிவற்றை |
| सवित्री | கிளப்புவதாகிய |
| कुण्डलीनी नाम | குண்டலினீ என்னும் |
| परा | மேலான |
| शक्तिः | சக்தி |
| यत्र | எங்கே |
| प्रतिष्ठिता | தங்கியுளதோ; |
| सा | அது |
| सरस्वती | ஸரஸ்வதீ (எனவும் படும்.) |

---

14, 15, 15½.

| | |
|---|---|
| सुषुम्ना | ஸுஷும்நையானது |
| मूलाधाराग्रकोणस्था | மூலாதாரத்தினுடைய முதல் முனையிலிருப்பதாய் |
| ब्रह्मरन्ध्रगा | ப்ரஹ்மரந்திரத்திற்குச் செல்வதாய் |

| | |
|---|---|
| मूले | அடியில் |
| अर्धच्छिन्नवम्शाभा | பாதி வெடித்த மூங்கிற்குழல் போன்றதாய் |
| षडाधारसमन्विता (भवति) | ஆறு ஆதாரங்களையுடையதாய் (உள்ளது). |
| इडापिङ्गले | இடை பிங்கலை |
| द्वे | இரண்டும் |
| तत्पार्श्वकोणयोः | அதனது பக்கமுனைகளிலே |
| जाते | கிளம்பியவையாய் |
| स्थिते | நிற்கின்றன. (இவை இவ்வாறமைந்து நிற்றலை யோகிகள்) |
| नाडीचक्रं | நாடீசக்கிரம் |
| इति | என்று |
| प्राहुः | கூறுகிருர்கள். |
| नाड्यः | (மற்றை) நாடிகள் |
| तस्मात् | அதனின்று |
| समुद्गताः | கிளம்பியுள்ளன. |

16, 16 .

| | |
|---|---|
| नाडीचक्रेण | நாடீசக்கிரத்தோடு |
| सम्स्यूते | பின்னி நிற்கும் |
| गान्धारीहस्तिजिह्वाख्ये | காந்தாரி ஹஸ்திஜிக்வை என்னும் பெயருடைய |
| उभे | இரண்டு (நாடிகளும்) |
| नासिकान्तम् | மூக்குவரை |
| गते | சென்றவையாய் |
| नयनान्तं | கண்வரை |
| प्रधावतः | ஓடுகின்றன. |

---

17, 18, 19, 19½.

| | |
|---|---|
| पूषा | பூஷை, |
| अलम्बुसा च | அலம்புஸை என்னும் |
| नाडी | நாடிகள் |
| कुक्कुटाण्डम् इव | கோழிமுட்டைபோல் |
| स्थितम् | உள்ள |
| नाभिमण्डलम् | கொப்பூழ் வட்டத்தை |
| आश्रित्य | சார்ந்து |
| कर्णद्वयम् | இரண்டு செவிகளையும் |
| उपाश्रिते | ஒட்டிநிற்கின்றன ; |
| शुक्लाह्वया | சுக்லை என்னும் |
| नाडी | நாடி |
| तस्मात् | அதனின்று (கிளம்பி) |
| भ्रूमध्यम् | புருவங்களின் நடுவை |
| उपसर्पति | கிட்டி நிற்கின்றது ; |
| सरस्वत्याह्वया | ஸரஸ்வதீ என்னும் |
| नाडी | நாடி |
| जिह्वान्ता | நாக்குவரையுள்ளதாய் |
| वाक्प्रसारिणी | வாக்கைக் கிளப்புவதாய் (உள்ளது); |
| विश्वोदरी नाम | (இரைப்பையிலுள்ள) விச்வோதரீ என்னும் |
| नाडी | நாடி (எதுவோ), |
| सा | அது |
| चतुर्विधम् | நால்வகைத்தான |
| अन्नं | உணவை |
| भुङ्क्ते | உண்கின்றது ; |
| पयस्विनी | பயஸ்வினீ (என்னும் நாடி) |
| तोयम् | ஜலத்தை |

| | |
|---|---|
| पीत्वा | குடித்து, |
| कण्ठस्था | தொண்டையிலே நிற்பதாய் |
| क्षुतम् | இருமலை (அல்லது தும்மலை) |
| कुरुते | செய்கிறது. |

---

20, 20½.

| | |
|---|---|
| तिस्रः | மூன்று |
| नाड्यः तु | நாடிகளும் |
| नाडीचक्रात् | நாடீசக்கிரத்தினின்று |
| अधोमुखाः | கீழ்முகமாக |
| समुद्भूताः | கிளம்பியுள்ளன; |
| राका | (அவற்றுள்,) ராகை |
| शुक्रं | ரேதஸையும், |
| सिनीवाली | ஸிநீவாலீ |
| मूत्रं | மூத்திரத்தையும், |
| कुहूः | குகூ |
| मलं | மலத்தையும் |
| मुञ्चेत् | விடும். |

---

21, 21½.

| | |
|---|---|
| पुनः | அன்றியும், |
| शङ्खिनी | சங்கினீ (என்னும்) |
| धमनी | நாடியானது, |
| भुक्तान्नरसम् | உட்கொண்ட உணவின் ஸாரத்தை |
| आदाय | எடுத்து, |
| कपालकुहरं | உச்சித்துவாரத்திற்கு |
| गत्वा | சென்று, |
| मूर्ध्नि | சிரசிலே |

| | |
|---|---|
| सुधां | அமிருதத்தை |
| सञ्चिनुते | பெருக்குகின்றது. |

---

22, 22 .

| | |
|---|---|
| शतं च एका च | " நூற்றொன்று |
| नाड्यः | நாடிகள் |
| स्युः | உள்ளன. |
| तासां | அவற்றுள், |
| एका | ஒன்று |
| शिरोगता | உச்சியிற் சென்றிருப்பது |
| तया | அதன் வழியாக |
| ऊर्ध्वम् | மேலே |
| आयन् | செல்கிறவன் |
| मुक्तः | (கட்டு) நீங்கியவனாக |
| स्यात् | ஆவான்" |
| इति | என்பது, |
| वेदान्तशासनं | வேதாந்தத் தீர்ப்பு. |

---

23, 23½.

| | |
|---|---|
| बुद्धिगतैः | புத்தியினுள் பதிந்துகிடக்கும் |
| पुण्यैः | புண்ணிய (பாவ) கர்மங்களாலே |
| प्रेरितेन्द्रियमार्गतः | முடுக்கப்பட்ட இந்திரியங்களின் வழியாக |
| शब्दादीन् | ஓசை முதலிய |
| विषयान् | விஷயங்களை |
| यदा | எப்பொழுது |
| भुङ्क्ते | (ஆத்மாவானவன்) அநுபவிக்கின்றானோ, |

| | |
|---|---|
| तदा | அப்பொழுது |
| जागरितं | நனவு |
| भवेत् | ஆகும். |

24, 24½.

| | |
|---|---|
| एषु | இந்த |
| इन्द्रियेषु | இந்திரியங்கள் |
| सम्हृतेषु | (உள்ளே) ஒடுங்கியவழி, |
| पुमान् | ஆத்மாவானவன் |
| जाग्रत्सम्स्कारजान् | நனவுவாஸனையினுலான |
| मानसान् | மனோவிகாரங்களாகிய |
| विषयान् | பொருள்களை |
| भुङ्क्ते | (எப்பொழுது)அனுபவிக்-கின்ருனே, |
| तदा | அப்பொழுது |
| स्वप्नावस्था | கனவுநிலை |
| भवेत् | ஆகும். |

25.

| | |
|---|---|
| मनसः अपि | மனத்தினுடையவும் |
| उपसम्हारः | ஒடுங்குதல் |
| सुषुप्तिः | உறக்கம் |
| इति | என்று |
| कथ्यते | கூறப்படுகின்றது. |

26.

| | |
|---|---|
| तस्मात् | ஆகவே, |
| पुमान् | ஆத்மா |
| मायासमाच्छन्नः | மாயையினுல் மறைக்கப் பட்டவனுய் |

| | |
|---|---|
| सन्मात्रः | உண்மைமாத்திரமாக |
| वर्तते | இருக்கிறான் ; |
| मायाऽऽवेशात् | மாயாசம்பந்தத்தினால் |
| मूढः | மயங்கியவனாகவும், |
| मत्तः | பித்தனாகவும், |
| अज्ञः | அறியாதவனாகவும் |
| इति एवं | இவ்வாறு |
| प्रकाशते | புலப்படுகிறான். |

---

27.

| | |
|---|---|
| सुखं | "சுகமாக |
| अस्वाप्सं | தூங்கினேன்" |
| इति | என |
| एवम् | இவ்வாறு |
| प्रबोधसमये | விழிப்புசமயத்திலே |
| पुमान् | ஆத்மா |
| सच्चिदानन्दरूपः सन् | ஸச்சிதாநந்த வடிவமாய் |
| सम्यक् एव | செவ்வனே |
| प्रकाशते | விளங்குகிறான். |

---

28.

| | |
|---|---|
| महेश्वरे | மஹேச்வரன் |
| इत्थं | இவ்வாறு |
| जगत् | பிரபஞ்சத்தை |
| समाविश्य | புகுந்து |
| भासमाने | விளங்க, |
| सूर्यादयः अपि | சூரியன் முதலானவைகூட |
| भासन्ते | விளங்குகின்றன ; |

| | |
|---|---|
| घटादयः | குடம் முதலிய |
| अन्ये | மற்றை (ப்பொருள்கள்) |
| किमुत | எவ்வளவு ? |

29.

| | |
|---|---|
| तस्मात् | ஆதலால், |
| भावानां | பொருள்களுடைய |
| सत्ता च | உண்மையும் |
| ईश्वराश्रयणाश्रया | ஈச்வரனைச்சார்ந்த நிலை யுடைத்தாய் |
| (वर्तते) | (இருக்கின்றது.) |
| ब्रह्म | " ப்ரஹ்மம் |
| सत्यं | ஸத்தியமாய் |
| ज्ञानं | அறிவாய் |
| अनन्तं च | அளவில்லதுமாய் (உள்ளது) " |
| (इति) | (என்று) |
| श्रुत्या | சுருதியினால் |
| उपदिश्यते | உணர்த்தப்படுகிறது. |

29½.

| | |
|---|---|
| जाग्रत्स्वप्नोद्भवम् | நனவுகனவுகளிலே உண்டாகின்ற |
| सर्वम् | எல்லாம் |
| असत्यं | அஸத்தியமாய் |
| अन्धवत् | குருடன்போல் |
| जडं | ஜடமாய் |
| (भवति) | (இருக்கின்றது.) |

30, 30½.

| | |
|---|---|
| सर्वजन्तुषु | எல்லாப் பிராணிகளுள்ளும் |
| अहं | (எது) "நான்" |
| इति | என |

| | |
|---|---|
| एवम् | இவ்வாறு |
| भासते | புலப்படுகின்றதோ, |
| ईश्वरः च | (அது) ஈச்வரனேதான். |
| अहं | "நான்" (என்பது) |
| निर्विकल्पः च | நிர்விகல்பம் [வேற்றுமையில்லது], |
| शुद्धः च | சுத்தம், |
| मलिनः च | மலினம் [மங்கல்] |
| इति | என |
| त्रिधा | மூவகைத்தாய் |
| (वर्तते) | (உளது.) |

31, 31½.

| | |
|---|---|
| निर्विकल्पम् | நிர்விகல்பமாவது |
| धूल्यन्धकार धूमाभ्र— निर्मुक्त गगनोपमम् | தூசியும், இருளும், புகையும், மேகமும் முற்ற நீங்கிய ஆகாசம் போல், |
| निर्धूताखिलकल्पनम् | கற்பனையெல்லாம் துடைக்கப் பெற்ற |
| परं | மேலான |
| ब्रह्म | ப்ரஹ்மமாய் |
| (भवति) | (உளது.) |

32, 32½.

| | |
|---|---|
| विवेकसमये | ஆராய்ச்சிஸமயத்திலே |
| देहादीनाम् | உடம்பு முதலியவற்றை |
| व्यपोहनात् | அகற்றிநிற்பதனுல், |
| शुद्धम् | சுத்த (அகங்காரம்) |
| संक्षिप्तनक्षत्रैः | குறைந்த நக்ஷத்திரங்களால் (குறிக்கப்படும்) |
| अन्तरिक्षं यथा | ஆகாசம்போல், |

| | |
|---|---|
| किञ्चित् | சிறிதுநேரம் |
| ईक्ष्यते | காணப்படுகின்றது. |

---

33, 33½.

| | |
|---|---|
| तमोरूढं | இருள் வியாபித்த |
| आकाशम् | ஆகாசம் |
| यथा | எப்படி |
| अनवकाशवत् | இடமல்லாததுபோல் |
| स्फुरति | தோற்றுகின்றதோ, |
| मलिनं | (அப்படி) மலின (அகங்கார மானது) |
| देहेन्द्रियादिसम्सर्गात् | உடம்பு இந்திரியம் முதலியவற்றின் கலப்பினுல் |
| कलुषीकृतं | கலக்கப்பட்டுளது. |

---

34, 34½.

| | |
|---|---|
| जीवः | ஜீவன் |
| यदा | எப்பொழுது |
| ऐश्वरम् | ஈச்வரனுடைய |
| भावम् | நிலையை |
| अहं | " நான் " |
| इति | என |
| प्रबुद्ध्यते | அறிகின்ருனே, |
| तदा | அப்பொழுது |
| जीवः | ஜீவன் |
| सर्वज्ञः | எல்லாம் அறிபவனுகவும் |
| सर्वकर्ता च | எல்லாம் செய்பவனுகவும் |
| भविष्यति | ஆவான். |

---

35, 35½.

| | |
|---|---|
| मायया | மாயையினால் |
| अधिकसम्मूढः | மிக மயங்கிநிற்கும் |
| ईशः | ஈச்வரன் |
| विद्यया | வித்யையினால் |
| प्रकाशते | புலப்படுகிறான். |
| निर्विकल्पानुसन्धाने | நிர்விகல்பத்தைச் சிந்திக்க |
| आत्मा | ஆத்மா |
| सम्यक् | செவ்வனே |
| प्रकाशते | விளங்குகிறான். |

37, 37½.

| | |
|---|---|
| अविद्याख्यतिरोधान—व्यपाये | அவித்யை என்னும் திரையைத் தள்ளினவளவிலே, |
| दक्षिणामूर्तिरूपः | தக்ஷிணாமூர்த்திவடிவமான |
| असौ | அந்த |
| परमेश्वरः | பரமேச்வரன் |
| स्वयम् एव | தானே |
| प्रकाशते | விளங்குகிறான் [புலப்படுகிறான்]. |

38, 38½.

| | |
|---|---|
| दक्षिणामूर्तिस्तोत्रार्थ—प्रतिपादके | ஸ்ரீதக்ஷிணாமூர்த்தியினுடைய ஸ்தோத்திரத்தின் பொருளை உணர்த்துகின்ற |
| मानसोल्लासे | மானஸோல்லாஸம் என்னும் |
| प्रबन्धे | நூலினுள் |
| चतुर्थोल्लाससङ्ग्रहः | நான்காம் உல்லாஸப் |
| इति | பொழிப்புரை |

முற்றும்.

अथ

## पञ्चमोल्लासः

1.

**प्रमाणमेकं प्रत्यक्षं तत्त्वं भूतचतुष्टयम् ।
मोक्षश्च मरणान्नान्यः कामार्थौ पुरुषार्थकौ ॥**

## ஐந்தாம் உல்லாஸம்.

இனி, சுருதி ஸ்மிருதி புராணம் இதிஹாஸம் நியாயம் அறிஞரநுபவம் ஆகிய எல்லாவற்றோடும் முரணுகின்ற நூல்களை, தம்தம் புத்திகற்பனைக்கு ஏற்ப பலர் பலவாறு செய்துள்ளமையால் - மந்தபுத்தியர் சிலர் தாம் உறுதியான நலத்தைப் பெறும் பொருட்டு அவற்றைக் கொள்ளுதலாகும். ஆகவே, அவற்றினது கொள்கைகளையும் அக்கொள்கைகளினுடைய ஆபாஸங்களையும் எடுத்துக்காட்டி, அம்மந்த புத்தியர்களை நல்வழிப்படுத்த எழுகின்றது இந்த ஐந்தாம் உல்லாஸம் :

### (1) உடம்பே ஆத்மா என்னும் கொள்கை.

1.

**பிரத்தியக்ஷம் ஒன்றே பிரமாணம் : பூதங்கள் நான்கும் தத்துவங்கள் : மோக்ஷமும் மரணத்தின் வேறுய் இல்லை : இன்பமும் பொருளும் மனிதர்க்கு வேண்டியவை.**

அநுமானம் முதலியவற்றால் அறியப்படும் பொருள்கள் இந்திரியங்கட்குப் புலப் படாமையால், அவை [அநுமானம் முதலியன] பிரமாணமாகா. ஆதலால், காணுத லென்னும் பிரத்தியக்ஷம் ஒன்றே பிரமாணமாம். நான்கு பூதங்கள் - நிலம், நீர், தீ, வாயு என்பன. ஆகாசம் முதலிய பொருள்கள் கண்முதலிய இந்திரியங்கட்கு புலப் படாமையின், இல்லையென்க. இனி, இந்நான்கு பூதங்களின் சேர்க்கையே உடம்பு. வெற்றிலையும் பாக்கும் சுண்ணம்பும் ஒருங்குகூடியவழி செந்நிறம் பிறக்குமாறுபோல, இப்பூதங்களின் கூட்டரவில் ஓர் உணர்வு உண்டாம். இக்கூட்டரவாகிய உடம்பு வளர உணர்வும் வளரும் : அது தேய, உணர்வும் தேயும். ஆகலின், உடம்பே ஆத்மாவாம்; உடம்பிற்கு வேறே ஆத்மா ஒன்று உளதென்பது பொய். நான்குபூதக்கூட்டரவாகிய உடம்பினின்று பிராணவாயுமாத்திரம் நீங்குமாகில், உடம்பு உணர்வு இழந்து நாசமாம்;

1½.

# न कश्चिदीश्वरः कर्ता परलोककथा वृथा ।

2, 2½.

# देहं विनाऽस्ति चेदात्मा कुम्भवद्दृश्यतां पुरः ॥
# ह्रस्वो दीर्घो युवा बालः इति देहोऽभिदृश्यते ।

---

இந்நாசமே மோக்ஷம் ; வேறே மோக்ஷமுண்டென்பது பொய். இளமைப்பருவத்து இனிய மகளிரோடு உண்டு உடுத்து இம்மையின்பங்களை நுகர்ந்து வாழ்தலே மனிதர்க்கு வேண்டியபயனும். இதற்குச் சாதநமா யிருந்தால், பணம் குதிரை வண்டி சோலை முதலிய பொருளும் மனிதர்க்கு வேண்டிய பயனும் என்க. (1)

1½.

அன்றியும்,

(உலகிற்குக்) கர்த்தாவான ஈச்வரன் ஒருவன் இல்லை ; மறுமையுலகப் பேச்சு வீணும்.

பொருள்களெல்லாம் இயல்பாகவே விகாரப்படுகின்றன. மயிலைச் சித்தரித்தாரும் பாலைத் தயிராக்கினாரும், குயிலைக் கூவுவித்தாரும், வேளாளர் விதைத்த விதையை முளையாக தளிராக கொப்பாக இலையாக பூவாக காயாக பழமாகச் செய்வித்தாரும் நமது இந்திரியங்கட்குக் காணப்படாமையின், கடவுள் உண்டென்பது பொய். உடம்பிற்கு இன்பதுன்பங்கள் இயல்பாயுள்ளமையால், இவற்றிற்குக் காரணம் முன்செய்த புண்ணியபாவமென்பதும் பொய். ஆகவே, மறுமையென்று ஒன்று இல்லை. இவ்வுண்மை யுணராத மூடர்கள் மறுமை உண்டெனக்கொண்டு, தவம் விரதம் பட்டினி முதலிய வற்றால் வருந்துவர். பணம் நிலம் உணவு ஆடை முதலிய தானங்களை உயர்த்துக் கூறும் நூல்கள் - பசியால் வருந்தும் தரித்திரர்களால் செய்யப்பட்டன. தண்ணீர்ப் பந்தல் குளம் சோலை முதலியன செய்தலை உயர்த்துக்கூறும் நூல்கள் - வழிச்செல் வோரால் செய்யப்பட்டன. ஆகவே, மறுமையைப்பற்றிய வார்த்தை வீணென்பதாம். (1½.)

2, 2½.

மற்றும், உடம்பிற்கு வேருய் ஆத்மாவைக் கொள்ளுதலும் பிரத்தியக்ஷத்திற்கு விரோதமாம் ; எப்படியெனில்,—

உடம்பிற்குப் புறம்பாக ஆத்மா இருக்குமாகில், குடம்போல எதிரே காணப் படட்டும். உடம்பு - குட்டையாக, நெட்டையாக, யௌவநப்பருவத்ததாக, பாலப்பருவத்ததாக எதிரே காணப்படுகின்றது.

3, 3½.

अस्तिजातः परिणतः वृद्धः क्षीणो जरन्मृतः ॥
इत्येवमुक्ताः षड्भावविकारा देहसम्श्रयाः ।

4, 5.

वर्णाश्रमविभागश्च देहेष्वेव प्रतिष्ठितः ॥

जातकर्मादिसंस्कारः देहस्यैव विधीयते ।
शतं जीवेति देहस्य प्रयुञ्जन्त्याशिषं शुभाम् ॥

---

ஆத்மா உடம்பிற்கு வேருய் உளதாயின், குடம்போல நமது முன்னிலையில் காணப்படுதல் வேண்டும். ஆனல், அப்படிக் காணப்படுதலில்லை. உடம்போ - குட்டையாக, நெட்டையாக, யௌவனப்பருவமுடையதாக, பாலப்பருவமுடையதாக நமக்கு நேரே பிரத்தியக்ஷமாய்க் காணப்படுகின்றமையால், அதுவே [உடம்பே] ஆத்மாவாம். (2, 2½.)

3, 3½.

மேலும்,

இருத்தல், பிறத்தல், மாறுதல், வளர்தல், தேய்தல் (அல்லது) முதிர்தல், அழிதல் எனப்பட்ட பொருள்விகாரங்கள் ஆறும் உடம்பையே சார்ந்தவை.

பொருள்கட்கு ஆறுவகையான வேறுபாடுகள் உண்டு. 1. பிறத்தல், 2. இருத்தல், 3. மாறுதல், 4. வளர்தல், 5. தேய்தல் அல்லது முதிர்தல், 6. அழிதல் என்பது அவற்றின் முறைமை. இவ்விகாரங்களைப் பெறுவது உடம்பேயாதலால் இதற்கு வேருய் ஆத்மா உளதென்று கொள்ள இடமில்லை; அதாவது, உடம்பே ஆத்மா வென்க. (3, 3½)

4, 5.

இன்னும், ஆஸ்திகருடைய சாஸ்திரவியவகாரத்தை நோக்குமிடத்தும் உடம்பே ஆத்மா எனவும், உடம்பிற்கு வேருய் ஆத்மா இல்லையெனவும் நன்கு விளங்கும். எங்ஙன மெனில்,—

ஜாதிவகுப்பும் ஆச்ரமப்பகுப்பும் உடம்புகளின் மேலேயே வைக்கப் பட்டிருக்கின்றன; ஜாதகர்மம் முதலிய சடங்கும் உடம்பிற்கே விதிக்கப் படுகின்றது; "நூற்றுண்டு வாழ்வாயாக" என்னும் மங்கள ஆசீர்வாதத்தை (ஆஸ்திகர்கள்) உடம்பிற்கு வழங்குகிருர்கள்.

"ஜாதகர்மம் முதலிய" என்பதனல் - சௌளம் உபநயநம் முதலியவற்றைக் கொள்க.

5½.

# इति प्रपञ्चं चार्वाकः वाचयत्यल्पचेतनः ।

" वैदिकैः कर्मभिः पुण्यैर्निषेकादिर्द्विजन्मनाम् ।
कार्यः शरीरसंस्कारः पावनः प्रेत्यचेह च ॥ "

" இம்மையிலும் மறுமையிலும் பரிசுத்தப்படுவதாய் [பாவம் தேய்தற்குக் காரணமாய்] வேதத்திற் கூறியுள்ள நல்ல கர்மங்களால் இருபிறப்பாளர்க்கு கர்ப்பாதானம் முதலிய தேகஸம்ஸ்காரமானது செய்யப்படவேண்டியது "—(மநு-2-26)

என்னும் ஸ்மிருதியினல் - சடங்கென்னும் ஸம்ஸ்காரமானது உடம்பிற்கே விதிக்கப் பட்டிருத்தலை நோக்குக.

உடம்பே ஆத்மா என்பது - பிரதிவாதியினுடைய கொள்கையினுலேயும் நிரூபித்தபடியாம். (4, 5)

5½.

பரம நாஸ்திகனுன சார்வாகனுடைய கொள்கையை முடிக்கிருர் :

அற்ப அறிவுள்ள சார்வாகன் பிரபஞ்சத்தை இவ்வாறு கற்பிக்கிருன்.

அற்ப புத்தியுடைய சார்வாகன் பிரபஞ்சத்தைப் பற்றி சிஷ்யர்கட்கு இவ்வாறு பாடம் சொல்லுகிருன் என்பது பொருள். (5½)

(2) இந்திரியமே ஆத்மா என்னும் கொள்கை.

6, 6½.

முழுமூடனுவான் பணம், நிலம், வீடு, மனைவி, மக்கள் முதலானேரை அடைந்த விடத்து " நான் வாழ்கிறேன் " என்கிருன் ; அவர்களை இழந்தவிடத்து " நான் கெட்டேன் " என்கிருன். இவ்வாறு அவன் தனது உடம்பிற்கு வேருய் வெளியிலுள்ள பணம் முதலிய பொருள்களை ஆத்மாவாகக் கொள்கிருன். அவனிலும் மேலானவர் " உடம்பே ஆத்மா " என்கிருர்கள் (5 - 1, 2, 3, 4, 5). அவரிலும் மேலானவர் " இந்திரியங்களே ஆத்மாக்கள் " என்கிருர்கள்.—எப்படி ?—

சிலர் - " நான் கேட்கிறேன், " " காண்கிறேன், " " முகர்கிறேன், " " ருசிபார்க்கிறேன் [உண்கிறேன்] " என இந்திரியங்கள் ஆத்மாக்களென்று அவனினும் மேலாகக் கொள்கிருர்கள்.

அவனினும் - சார்வாகனைக்காட்டிலும். " நான் குடத்தை, ஆடையை...... பார்க்கிறேன் " என்றவழி, " நான் " என்னும் எண்ணமானது கண்ணுகிய

6, 6½.

केचिच्छ्वसिमि जीवामि क्षुधितोऽस्मि पिपासितः ॥
इत्यादिप्रत्ययबलात् प्राण आत्मेति मन्वते ।

7, 7½.

केचिच्छृणोमि पश्यामि जिघ्रामि स्वादयाम्यहम् ॥
इतीन्द्रियाणामात्मत्वं प्रतियन्ति ततोऽधिकम् ।

---

இந்திரியத்தின்மேல் காணப்படுகின்றது. அவ்வண்ணமே, "நான் மல்லிகையை, மாம்பழத்தை ...... முகர்கின்றேன்" என்றவழி, "நான்" என்னும் எண்ணமானது மூக்காகிய இந்திரியத்தின்மேல் காணப்படுகின்றது. அவ்வாறே, செவி முதலிய இந்திரியங்களின்மேலும் அந்த எண்ணம் காணப்படுதலால், இந்திரியங்களே ஆத்மாக்களாம். அன்றியும், செவியினுல் அநுபவிக்கப்படும் சங்கீதத்தை நாக்கு முதலிய இந்திரியங்கள் அநுபவித்தல் காணப்படாமையால், ஒரோரிந்திரியமும் தனித்தனி ஆத்மாவாம். ஆகவே, ஆத்மாக்கள் பல வென்க.

குறிப்பு :—இந்திரியங்களெல்லாம் ஓய்ந்தபொழுது [கனவிலாயினும், உறக்கத்திலாயினும்] பிராணனது செய்கை ஓய்வுருமையின் - இந்திரியாத்மக்கொள்கையை இங்கு முதலில் பெயர்த்துவைத்தோம். வார்த்திககாரருடைய பாட முறையோ

"देहं प्राणमपीन्द्रियाण्यपि चलाम्"

என்னும் மூலச்லோகத்தை யநுஸரித்து, பிராணுத்மக்கொள்கையை முன்ஞகவும் இந்திரியாத்மக்கொள்கையைப் பின்ஞகவும் கொண்டு எழுதப்பட்டதாம். (6, 6½)

(3) பிராணனே ஆத்மா என்னும் கொள்கை.

7, 7½.

இந்திரியாத்மவாதிகளினும் மேலானேர் "பிராணனே ஆத்மா" என்று கூறுகிருர்கள் :

சிலர்-"மூச்சுவிடுகிறேன், ஜீவிக்கிறேன், பசியுடையவஞயிருக்கிறேன், தாகமுடையவஞ யிருக்கிறேன்" என இத்தகைய எண்ணங்களின் வலிமையிஞல் "பிராணனே ஆத்மா" எனக் கொள்கிருர்கள்.

மூச்சுவிடுதல், ஜீவித்தல், பசித்தல், தாகித்தல் முதலியன பிராணனது செயலாகலின் - "நான் மூச்சுவிடுகிறேன், ஜீவிக்கிறேன் ... ..." என்றவிடத்து, "நான்" என்னுமெண்ணமானது பிராணனின்மேல் காணப்படுகின்றது. மேலும், பிராணன் உள்ளவளவிலே, உடம்பு ஜீவிப்பதாம்; அது போனவளவிலே, உடம்பு பிணமாம். ஆதலின், பிராணனே ஆத்மா என்பது. (7, 7½)

8.

जानामिप्रत्ययबलात् बुद्धिरित्यत्यपरे जगुः ॥

8½.

मायाव्यामूढचित्तानां तेषां दूषणमुच्यते ॥

5. देहं प्राणमपीन्द्रियाण्यपि चलां बुद्धिं च शून्यं विदुः
स्त्रीबालान्धजडोपमास्त्वहमिति भ्रान्ता भृशं वादिनः ।
मायाशक्तिविलासकल्पितमहाव्यामोहसंहारिणे
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥

---

(4) புத்தியே ஆத்மா என்னும் கொள்கை.

8.

இனி, பௌத்தமதத்தைக் கூறுகிறார்:

சிலர் - "அறிகிறேன்" என்னும் எண்ணத்தின் வலிமையினால், புத்தி(யே ஆத்மா) எனக் கொள்கிறார்கள்.

அறிதல் புத்தியின் செயலாதலால் - "நான் குடத்தை, ஆடையை, சுவரை ... ... அறிகிறேன்" என்றவிடத்து, "நான்" என்னும் எண்ணமானது புத்தியின்மேல் காணப்படுகின்றது. ஆகலின், புத்தியே ஆத்மா என்பது. (8)

உடம்புமுதலியன ஆத்மாவாகமாட்டா.

8½.

மாயையினால் மதிமயங்கிய அவர்கட்குக் குற்றம் கூறப்படுகின்றது.

கீழ்க்கூறிய கொள்கைகளெல்லாம் அவரவருடைய வெறும்மயக்கத்தாலானமையின், அவற்றை நம்புதல் கூடாதென அவற்றினது குற்றத்தைக் கூறுகிறார்:

5. (எந்த) வாதிகள்-உடம்பையாயினும், பிராணனையாயினும், இந்திரியங்களையாயினும், சஞ்சலமான புத்தியையாயினும், சூந்யத்தையாயினும் "நான்" என்றே அறிகிறார்களோ, (அவர்கள்) பெண்டுகளுக்கும் குழந்தைகளுக்கும் குருடர்களுக்கும் பேய்பிடித்தவர்களுக்கும் சமானராய் மிக்கு மயங்கியுள்ளார். மாயாசக்தித்தளுக்கினாலான பெரும் மயக்கத்தை அறத் துடைக்கும் தன்மையுள்ள அந்த ஸ்ரீமதாசார்யஸ்வரூபமான ஸ்ரீதக்ஷிணாமூர்த்திக்கு இந்த நமஸ்காரம்.

வாதிகள் - வாதமுடையவர்; வாதஞ்செய்பவர், தம்தம் கொள்கையை நிறுத்துவோர் என்றபடி. அவர்கள் - தலை கை கால் முதலியன இயைந்துநிற்கும் பிண்டமே ஆத்மா என்போரும், உருவம் ஓசை முதலியவற்றை உணரும் கண் காது முதலிய இந்திரியங்களே ஆத்மாக்கள் என்போரும், வாய்மூக்குகளின் வழியாகச் சஞ்சரிக்கும் பிராணனே ஆத்மா எண்போரும், கணந்தோறும் தோன்றியழியும் புத்தியே ஆத்மா என்போரும், பாழாகிய சூன்யமே ஆத்மா என்போருமாய்ப் பலதிறத்தாராவர். அவர்கள் இவ்வாறு பெண்டுகள்போல, குழந்தைகள்போல, குருடர்கள்போல, பேய்பிடித்தவர்கள்போல ஆழ்ந்த ஆராய்ச்சியில்லாது தம்தமக்குத் தோன்றியன கூறுபவராய், உண்மைப்பொருளை உள்ளபடி உணராது வேறுவகையாக விபரீதமாய்க் கிரகித்து மிகத் தடுமாறிநிற்கிறார்கள்.

வினா :—ஆயின், அவர்கள் ஏன் இவ்வாறு நாஸ்திகர்களாய், உண்மையொன்றிருக்க வேறொன்றை உண்மையாகக் கொள்கிறார்கள்? எனில்,—

விடை :—நன்று வினாவினாய்! அவர்கள் பகவானைத் தொழாமையினால் அவனது அநுக்கிரகத்தைப் பெறுதலில்லை. இல்லையாகவே, அவனது மாயாசக்தியினுடைய தளுக்குமயக்கத்தின் ஏய்ப்புவலையில் அகப்பட்டுக்கொண்டவராய், உண்மையல்லாததை உண்மையாகக் கொள்கிறார்கள். அவ்வண்ணமே, ஸ்மிருதி கூறுகின்றது:

"न मां दुष्कृतिनो मूढाः प्रपद्यन्ते नराधमाः ।
माययाऽपहृतज्ञाना आसुरं भावमाश्रिताः ॥"

"மாயையினால் அறிவு அபகரிக்கப்பட்டு, அஸுரத்தன்மையை
யடைந்து, மனிதர்களுள் கடைப்பட்டவராய்த் தீவினைகளைச் செய்யும்
மூடர்கள் என்னை யடைவதில்லை"—(வே - கீ - 7 - 15)

ஆனால், எவர்கள் அவன்கூறியுள்ள வைதிகவழியைப் பின்பற்றி அவனைத் தொழுகிறார்களோ, அவர்கட்கு அவனது அருளினால் இத்தகைய மயக்கமில்லையென்பார் "மாயாசக்தித்தளுக்கினலான பெரும்மயக்கத்தை அறத்துடைக்கும் தன்மையுள்ள" என அருளிச்செய்தனர். அவ்வாறே, பகவான்திருவாக்கும் வருமாறு:

"दैवी ह्येषा गुणमयी मम माया दुरत्यया ।
मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति ते ॥"

"(முக்)குணங்களாலாகியதான என்னுடைய இந்தத் தைவமாயையானது
கடக்க அரிதுதான். எவர்கள் என்னையே அடைகிறார்களோ, அவர்கள்
இம் மாயையைக் கடந்துவிடுகிறார்கள்"—(வே-கீ-7-14) (5)

इदमस्य तात्पर्यम्—

9, 9½

देहादीनां जडार्थानां पाषाणवदनात्मनाम् ॥
कथं भवेदहम्भावः समावेशं विनेशितुः ।

10, 10½.

देहस्तावदयं नात्मा दृश्यत्वाज्जाड्यवत्त्वतः ॥
रूपादिमत्त्वात्सांशत्वात् भौतिकत्त्वाच्च कुम्भवत् ।

---

இது இதன் கருத்து :—

9, 9½.

இனி, உடம்பே ஆத்மா என்பதுமுதலாகக் கூறிய கொள்கைகளெல்லாவற்றிற்கும் பொதுவான குற்றத்தைக் கூறுகிருர் :

கல்போல் அநாத்மாவான உடம்புமுதலிய ஜடப்பொருள்கட்கு ஈச்வரன் புகுதலின்றி " நான் " என்னும் எண்ணம் எப்படி நிகழக்கூடும் ?

" உடம்பு " என்ருது " உடம்பு முதலிய " என்றமையால் - இந்திரியங்கள், பிராணன், புத்தி என்றவையும் கொள்ளப்படும். அவையனைத்தும் ஜடமாதலால், கல்போல அநாத்மப்பொருள்களாம், ஆத்மாஅல்லாத பொருள்களாம். ஆகவே, பாவைபோன்ற இவற்றுள் ஸ்வப்பிரகாச அறிவுவடிவான ஈச்வரன் புகுதலில்லையாயின், இவற்றிற்கு 'நான்' என்னும் எண்ணமாகிய சேதநத்தன்மை வாராது. ஆதலால் அவற்றிற்கு வேருய் ஆத்மா ஒன்று உள தென்றபடி. (9, 9½)

(1) உடம்பே ஆத்மா என்னும் கொள்கையை மறுத்தல்.

10, 10½.

இவ்வாறு பொதுவான குற்றத்தைக் கூறி, இனி ஓரோர் மதத்திலும் தனித்தனி குற்றங் கூறுகிருர் :

இனி, உடம்பு ஆத்மாவன்று; காணப்படுவதாதலாலும், ஜடத்தன்மையுடைமையினுலும், நிறம் வடிவம் முதலியவற்றை யுடைமையினுலும், அவயவங்களோடமைந்தமையினுலும், பூதங்களாலாகியதனுலும் என்க : குடம்போல.

1. உடம்பு, குடம்போலப் பார்க்கப்படும்பொருளாய் உள்ளது ; 2. குடம்போல ஜடமானது ; 3. குடம்போல நிறம் வடிவம் முதலியவற்றை யுடையது ; 4. குடம்போல அவயவங்களை யுடையது ; 5. குடம்போல ஐந்து பூதங்களாலாகியது. ஆகவே, அது [உடம்பு] ஆத்மா அன்றென்க. (10, 10½)

11, 11½.

मूर्च्छासुषुप्तिमरणेष्वपि देहः प्रदृश्यते ॥
देहादिव्यतिरिक्तत्वात् तदाऽऽत्मा न प्रतीयते ।

12, 13, 13½.

यथा जगत्प्रवृत्तीनां आदिकारणमंशुमान् ॥
पुमांस्तथैवदेहादिप्रवृत्तौ कारणं परम् ।

ममदेहोऽयमित्येवं स्त्री बालोऽन्धश्च मन्यते ॥
देहोऽहमिति नावैति कदाचिदपि कश्चन ।

---

11, 11½.

இந்த ஐந்து அநுமானங்கட்கும் அநுகூலமான ஓர் நியாயத்தை எடுத்துக் காட்டுகிறார் :

மயக்கம் உறக்கம் மரணம் என்றவற்றிலும் உடம்பு காணப்படுகின்றது. உடம்பு முதலியவற்றிற்கு வேறாயிருத்தலால் அப்பொழுது ஆத்மா காணப்பட வில்லை.

உடம்பே ஆத்மாவாயின், அப்பொழுது முந்தினது விளங்குங்கால், பிந்தினது விளங்காதிருத்தல் கூடாது. உண்மை; விழிப்புநிலைமையிலும் கனவுநிலைமையிலும் ஆத்மா 'நான்' என விளங்குகின்றது. ஆனால், மூர்ச்சை தூக்கம் மரணம் என்னும் நிலைமைகளிலே உடம்பு மட்டும் விளங்குகின்றதேயன்றி ஆத்மா 'நான்' என விளங்க வில்லை. ஆகவே, எல்லா நிலைமைகளிலும் உடம்பு விளங்குவதாயிருக்க, சில நிலைமைகளில் 'நான்' என விளங்கியும் சில நிலைமைகளில் நான் என விளங்காமலும் இருக்கின்ற ஆத்மா - உடம்பிற்கு வேறாகவே உடம்பினுள் உள்ளதென்றமைந்தது. (11, 11½)

12, 13, 13½.

இதற்கு இன்னும் சில வேறு அநுமானங்களைக் கூறுகிறார் :

உலகம் தொழிற்படுதற்குச் சூரியன் எப்படி மூலகாரணமோ, அப்படியே உடம்புமுதலியன தொழிற்படுதற்கு ஆத்மா மூலகாரணமாம்.

"இது என் உடம்பு" என ஸ்திரீ கொள்கிறாள்; குழந்தையும் இப்படியே கொள்கிறான்; குருடனுங்கூட இப்படியே கொள்கிறான். "யான் உடம்பு" என ஒருவனும் ஒருபொழுதும் உணர்கிறானில்லை.

14, 15, 16.

इन्द्रियाण्यपि नात्मानः करणत्वात् प्रदीपवत् ॥
वीणावादनवच्छ्रोत्रं शब्दग्रहणसाधनम् ।
चक्षुस्तेजस्त्रितयवत् रूपग्रहणसाधनम् ॥
गन्धस्य ग्राहकं घ्राणं पुष्पसम्पुटकादिवत् ।
रसस्य ग्राहिका जिह्वा दधिक्षौद्रघृतादिवत् ॥

---

சூரியன் இல்லையாயின், பகலில்லை; பகலில்லையாயின் உலகம் வியாபரித்தல் [தொழிற்படுதல்] இல்லை. அதுபோல, ஆத்மா இல்லையாயின், ஜீவித்தலில்லை; ஜீவித்த லில்லையாயின், உடம்பு வியாபரித்த லில்லை. ஆகவே,உலகம் வியாபரித்தற்குச் சூரியன் அடிக்காரணம் ஆமாறுபோல, உடம்பு வியாபரித்தற்கு ஆத்மா அடிக்காரணமாம்.

மற்றும் உடம்பே ஆத்மாவாயின், அங்ஙனம் "நான் உடம்பு" என விளங்க வேண்டும். ஆனல், அப்படி இல்லை; "என் வீடு," "என் ஆடை," "என் மனைவி," "என் மக்கள்" என்பன போல, "என் உடம்பு" என்றே யாவரும் கொள்கிறார்கள். அதாவது, உடம்பு - 'நான்' என்னும் உணர்ச்சிக்கு இடமாவதில்லை; 'எனது' என்னும் உணர்ச்சிக்கே இடமாகின்றது.

ஆகவே, அது [உடம்பு] ஆத்மாவன்றாம். (12, 13, 13½)

(2) இந்திரியமே ஆத்மா என்னும் கொள்கையை மறுத்தல்.

14, 15, 16.

இனி.

இந்திரியங்களும் ஆத்மாக்களல்ல; கருவியாதலால், விளக்குப்போல.

காது - வீணைவாத்தியம்போல, ஓசையை உணர்தற்குக் கருவியாம். கண் - மூன்று ஒளிகள்போல, உருவத்தை உணர்தற்குக் கருவியாம். மூக்கு - பூக்குடலை முதலியனபோல, நாற்றத்தை உணர்தற்குக் கருவியாம். நாக்கு - தயிர் தேன் நெய் முதலியனபோல, சுவையை உணதற்குக் கருவியாம்.

மூன்று ஒளிகள் - சூரியன், சந்திரன், தீ என்பன. பொருள்களைக் காண்பதற்கு வெளிச்சம் ஸாதகமாயிருப்பதுபோல, உருவம் ஓசை முதலியவற்றை உணர்தற்கு கண் காது முதலிய இந்திரியங்கள் ஸாதனங்களாம். எப்படியெனில்,—உருவம் முதலியவற்றின் உணர்ச்சிகள் குடம்போலக் கார்ய மாதலால், ஸாதநங்களா லமைகின்றன. குடமாகிய கார்யத்திற்கு மண் தண்டம் சக்கிரம் முதலியன ஸாதநங்களாமாறுபோல, ஓசையுணர்ச்சியாகிய கார்யத்திற்கு வீணையும் காதும்

17.

इन्द्रियाणि न मे सन्ति मूकोऽस्मि बधिरोऽस्म्यहम् ।
इत्याहुरिन्द्रियैर्हीनाः जनाः किं ते निरात्मकाः ॥

18, 19.

प्राणोऽप्यात्मा न भवति ज्ञानाभावात्सुषुप्तिषु ।
जाग्रत्स्वप्नोपभोगोत्थश्रमविच्छित्तिहेतवे ॥
सुषुप्तिं पुरुषे प्राप्ते शरीरमभिरक्षितुम् ।
शेषकर्मोपभोगार्थं प्राणश्चरति केवलम् ॥

---

பிறவும் ஸாதநங்களாம்; அவ்வாறே, நாற்ற உணர்ச்சிக்கு பூவும் மூக்கும் பிறவும் ஸாதநங்களாம்.இப்படியே, மற்றையவற்றையும் காண்க.

இவ்வாருகச் செவி முதலிய இந்திரியங்கள் ஓசையுணர்ச்சிகளாகிய கார்யத்திற்கு வீணை முதலியன போலக் கருவிகளாய் நிற்றலின், அவற்றை [இந்திரியங்களாகிய கருவிகளை] 'நான்' என்னும் கர்த்தாவாகக் கூறுதல் ஒவ்வாது. ஆதலால், உடம்பினுள் ஆத்மா இந்திரியங்கட்கு வேருக உண்டென்பது. (16)

17.

மேலும்,

" இந்திரியங்கள் எனக்கு இல்லை; நான் ஊமையா யிருக்கிறேன், நான் செவிடனு யிருக்கிறேன் " என இந்திரியங்களில்லாத மனிதர்கள் கூறுகிருர்கள். அவர்கள் ஆத்மாஇல்லாதவரா ?

இந்திரியங்கள் 'எனது' என்னும் உணர்ச்சிக்குச் சார்பிடமாம்; 'நான்' என்னும் உணர்ச்சிக்கு சார்பிடமன்று. ஆகவே, குருடன் ஊமை முதலான யாவருடைய உடம்பினுள்ளும் இந்திரியங்கட்கு வேருக ஆத்மா உண்டென்று தெளியப்படும் என்றபடி. (17)

(3) பிராணனே ஆத்மா என்னும் கொள்கையை மறுத்தல்.

18, 19.

இனி,

பிராணனும் ஆத்மாவாகமாட்டாது; தூக்கத்திலே அறிவின்மையின் நனவுவாழ்க்கையினுலும் கனவுவாழ்க்கையினுலும் ஆன சிரமத்தைத் தீர்த்துக் கொள்ள புருஷன் நித்திரையை யடைந்தவளவிலே, மிச்சமான கர்மத்தை அநுபவித்தற்காக உடம்பைக் காப்பாற்றும்பொருட்டுப் பிராணன் மாத்திரம் சஞ்சரிக்கின்றது:

20, 21.

प्राणस्य तत्र चैतन्यं करणोपरमे यदि ।
प्राणे व्याप्रियमाणे तु करणोपरमः कथम् ॥
सम्राजि हि रणोद्युक्ते विरमन्ति न सैनिकाः ।
तस्मान्न करणस्वामी प्राणो भवितुमर्हति ॥

---

மிச்சமான கர்மத்தை - புருஷன் இவ்வுடம்பினுல் அநுபவிக்கவேண்டிய கர்மத்தின் பயனில் அநுபவித்துக் கழிந்ததுபோக, இனி அநுபவிக்கக்கடவதாய்மிகுந்து கிடக்கும் கர்மத்தின் பயனை என்றபடி. தூங்கிக்கொண்டிருக்கும்பொழுது பிராணன் மாத்திரம் இருக்கின்றது. இருக்கின்றதாயினும், தலையடியிலிருக்கும் பணப்பெட்டியைத் திருடன் வந்து எடுத்துக்கொண்டுபோதலை அது அறிவதில்லை. ஆகவே, அது ஜடமாதலால் ஆத்மாவன்றும். (18, 19)

20, 21.

சங்கை:—மிச்சமான கர்மத்தை எவன் அநுபவிக்கும் பொருட்டுப் பிராணன் உடம்பைக் காப்பாற்றுகின்றதோ, அந்த வேருேர் புருஷ னில்லை ; பிராணனே தன் சிரமத்தை ஆற்றிக்கொள்ளத் தூங்குகின்றது எனில்,—

ஸமாதானம்:—கூறுவோம் :

பிராணனுக்குச் சேதநத்தன்மையுளதாயின் [பிராணனே ஆத்மாவாயின்], அதிலே இந்திரியங்கட்கு ஓய்வுள்ளவழி (பிராணன் வியாபரியாதிருத்தல் வேண்டும்). அன்றியும், பிராணன் வியாபரித்துக் கொண்டிருக்கும்போது, இந்திரியங்கட்கு ஓய்வு எப்படி யாகும் ? அரசன் போரிலே முனைந்திருக்குங்கால், சேனைஜனங்கள் ஓய்வுறுரன்றே. ஆதலால், பிராணன் இந்திரியங்கட்கு அதிபதியாகமாட்டாது.

அதிலே - உறக்கத்திலே. 'பிராணனே - தூக்கத்தில் சிரமபரிகாரத்தைத் தேடுகின்ற ஆத்மாவாயின்,—அங்ஙனம் அது வியாபரித்தல் கூடாது : தூக்கம் கெடுமாதலின். ஆனுல், அப்படி இல்லை ; தூக்கத்தில் பிராணன் வியாபரித்து நிற்கின்றது. மேலும், பிராணனே ஆத்மாவாயின்,—அங்ஙனம் அது தன் காரியத்தில் முனைந்திருக்கும் பொழுது, இந்திரியங்கள் ஓய்ந்திருத்தல் கூடாது ; அவை அதனது கருவியாதலால், அவற்றினது செய்கை அதனைச் சார்ந்து நிற்றலின். ஆனுல், அப்படி ல்லை; தூக்கத்தில் இந்திரியங்கள் ஓய்ந்திருக்கின்றன.

ஆதலால், இந்திரியங்கட்கு அதிபதி பிராணனன்று ; வேறென்றும் என்பது கருத்து. திருஷ்டாந்தம் - வெளிப்படை. (20, 21)

22.

मनसः प्रेरके पुम्सि विरते विरमन्त्यतः ।
करणानि समस्तानि तेषां स्वामी ततः पुमान् ॥

23.

बुद्धिस्तु क्षणिका वेद्या गमागमसमन्विता ।
आत्मनः प्रतिबिम्बेन भासिता भासयेज्जगत् ॥

24.

आत्मन्युत्पद्यते बुद्धिः आत्मन्येव प्रलीयते ।
प्रागूर्ध्वं चासती बुद्धिः स्वयमेव न सिद्ध्यति ॥

---

22.

இவ்வாருக உடம்பினுள் பிராணனுக்கு வேருய் ஆத்மா உண்டென்பது பரிசேஷப் பிரமாணத்தால் அமைகின்றது :

மனத்தை நடத்துகின்ற புருஷன் ஒய்ந்தவிடத்து, இந்திரியங்களெல்லாம் ஒய்கின்றன. ஆதலால், அவற்றிற்குத் தலைவனுவான் அதனினும் (வேருன) புருஷனும்.

அதனினும் - பிராணனினும். எல்லாவற்றிற்கும் தலைவனுன ஆத்மா ஓய்ந்த விடத்து, மனமும் இந்திரியங்களும் ஓய்வுறுதல் கூடுமாதலால் - மனத்திற்கும் எல்லா இந்திரியங்கட்கும் தலைவனுன ஆத்மா பிராணனுக்கு வேருனவனே என்க.

(4) புத்தியே ஆத்மா என்னும் கொள்கையை மறுத்தல்.

23.

இனி, கணந்தோறும் தோன்றியழியும் புத்தியே ஆத்மா என்னும் க்ஷணிக விஜ்ஞாநாத்மக்கொள்கையைக் கண்டித்துத் தள்ளுகிருர் :

புத்தியோ, க்ஷணமாத்திரமுள்ளதாய்ப் போதலையும் வருதலையுமுடையதாக அறியப்படுகிறது ; ஆத்மாவினுடைய பிரதிபலநத்தினுல் விளங்கப் பெற்றதாய் உலகத்தை விளங்கச்செய்கின்றது.

புத்தி ஆத்மாவாகமாட்டாது ; கணப்பொழுது நிலைத்தலாலும், தோற்றக்கேடுகளை யுடைமையினுலும், தான் பிறிதொன்றைச்சார்ந்து விளங்குதலாலும் என்க.

24.

புத்தி பிறிதொன்றைச் சார்ந்து விளங்குதலை [அதற்கு ஸ்வப்பிரகாசமின்மையை]ச் சாதிக்கிருர் :

புத்தி ஆத்மாவினிடத்துத் தோன்றுகின்றது, ஆத்மாவினிடத்தே மறைகின்றது. முன்னும் பின்னும் இல்லாதபுத்தி தானே அமையாது.

25, 25½.

**ज्ञानाच्चेत्पूर्वपूर्वस्मात् उत्तरोत्तरसम्भवः ।**
**युगपद्बहुबुद्धित्वं प्रसज्येत क्षणे क्षणे ॥**
**बुद्ध्यन्तरं न जनयेत् नाशोत्तरमसत्त्वतः ।**

---

“தனது தோற்றக்கேடுகளைத் தானே அறியமுடியாது” என்னும் நியாயத்தால், புத்தி தனது தோற்றக்கேடுகளைத் தானே அறிதல் செல்லாது; அதாவது, புத்தி தன்னைத் தானே அறியமாட்டாது. என்றாலும், தோற்றம்முதலான புத்திவிகாரங்களெல்லாம் அறியப்படுகின்றன. ஆகவே, புத்தி வேறென்றிருல் அறியப்படுகின்றமையின் ஆத்மாவன்ரும் என்பது பொருள். (24)

25, 25½.

கணப்பொழுதுநிற்கும் புத்தியாகிய ஞானமே ஆத்மாவாகவேண்டாம்; கணந்தோறும் தோன்றி யழியும் புத்திகளின் தொடர்ச்சியே ஆத்மாவாகும் எனில்,— அது செல்லாது எனக் காட்டுகிருர் :

முந்தினமுந்தின ஞானத்தினின்று பிந்தினபிந்தின ஞானம் பிறக்குமாயின், ஒரேகாலத்தில் பல ஞானங்களிருத்தல் க்ஷணந்தோறும் அமையவேண்டும். (ஒரு ஞானம் தனது) அழிவிற்குப் பின் இல்லாமையின், மற்றோர் ஞானத்தைப் பிறப்பிக்கமாட்டாது.

1. முந்தின ஞானத்தோடுகூடிப் பிந்தின ஞானம் பிறக்கின்றதா? அல்லது 2. அதனோடு கூடாது பிறக்கின்றதா?

1. முதற் பக்ஷமாயின்,—அங்ஙனம், ஓரோர் ஞானமும் கணப்பொழுதுமாத்திரமுள்ளமையால், அந்தந்த ஞானமுண்டாகும் க்ஷணங்களிலே எண்ணிறந்த முந்தின ஞானங்கள் தொடர்ந்திருத்தலாகும், அதாவது எண்ணிறந்த ஞானங்கள் ஒரேகாலத்து உள்ளனவாகும். ஒரேகாலத்துள்ளனவாகவே, “ஓரோர் ஞானமும் க்ஷணமாத்திரமுள்ளது” என விஜ்ஞானவாதி தான் மேற்கொண்டதைத் தள்ளவேண்டி வருகின்றதென்க.

2. இரண்டாம் பக்ஷமாயின்,—அங்ஙனம், முன்க்ஷணத்தில் தோன்றிய ஞானம் பின்க்ஷணத்திலில்லாமையினல், ஓரோர் ஞானமும் இன்மையினின்று உண்டாதல் வேண்டும். ஆனல், அது நேரன்று; இன்மையினின்று ஒன்று உண்டாதல் கூடாமையின் என்க.

ஆகவே, கணந்தோறுந் தோன்றி யழியும் ஞானங்களின் தொடர்ச்சியே ஆத்மாவென்றல் ஏலாது என்பது கருத்து. (25, 25½)

26, 26½.

एषां सङ्घात आत्मा चेत् एकदेशे पृथक्कृते ॥
न चैतन्यं प्रसज्येत सङ्घाताभावतस्तदा ।

27, 27½.

भिन्नदिग्गत्यभिप्रायः बहु चेत्तन्न पूजितम् ॥
सद्यो भिन्नं भवेदेतत् निष्क्रियं वा भविष्यति ।

---

**உடம்புமுதலிவற்றின் ஸமுதாயமும் ஆத்மாவாகாது.**

சங்கை :—உடம்பு, இந்திரியங்கள், பிராணன், புத்தி என்பனவற்றுள் ஒவ்வொன்றும் தனித்தனி ஆத்மாவாதல் கீழ்க்கூறியவாறு அமையாதாயினும் அவையனைத்தும் கூடிய ஸமுதாயமே ஆத்மாவாம்.

ஸமாதாநம் :—அப்படியானால், 1. சேதநத்தன்மை ஸமுதாயத்திற்கே உளதா ? 2. அல்லது, ஒவ்வொன்றிற்கும் தனித்தனி உளதா ?

26, 26½.

1. முதற் பக்ஷமாயின், அதற்குக் குற்றங் கூறுகிறார் :

**இவற்றின் ஸமுதாயம் ஆத்மாவாயின்,—அங்ஙனம் ஓர் உறுப்புப் பிரிக்கப்பட்டவளவிலே ஸமுதாயமின்மையால், சேதநத்தன்மை வாராது.**

உறுப்புக்களெல்லாம் நிறைந்தவழி, ஸமுதாயமாம் : அவற்றுள் ஒன்று குறைந்தவழி, ஸமுதாயமின்மையாம். ஆதலின், அதனது உறுப்பாகிய கண்ணாயினும் காதாயினும் இல்லாவிடத்து ஸமுதாயமின்மையால், சேதநத்தன்மை அமையாதிருத்தல் வேண்டும். ஆனால், அப்படி இல்லை ; குருடர்களும் செவிடர்களும் அறிவொடு வாழ்தலைக் காண்கின்றோம். ஆதலால், ஸமுதாயமே ஆத்மா வென்றல் பொருந்தாது என்பது பொருள். (26, 26½)

27, 27½.

2. இரண்டாம் பக்ஷமாயின், அதற்குக் குற்றங் கூறுகிறார் :

**(சேதநப்பொருள்கள்) பல உளவாயின், (அவற்றிற்கு) வெவ்வேறு திசையை நோக்கிச் செல்ல விருப்ப முண்டாகும். அது ஸமஞ்ஜஸ மன்று; (ஏனெனில்,)ஒன்று இது உடனே முறிந்திடுவதாகும், அல்லது செய்கையற்ற தாகும்.**

ஒரே ஸமுதாயத்தில் பல ஆத்மாக்களிருந்தால், அப்பொழுது அவற்றுள் ஒன்று அதனைக் கிழக்கே இழுக்க, மற்றொன்று மேற்கே இழுக்க, வேறொன்று வடக்கே இழுக்க நான்காவது தெற்கே இழுக்க, அந்த ஸமுதாயம் உடனே தெறித்துப்போகும் ;

28, 28½.

देहस्यान्तर्गतोऽप्यात्मा व्याप्त एवेति बुद्ध्यते ॥
अणुप्रमाणश्चेदेषः व्याप्नुयान्नाखिलं वपुः ।

---

அல்லது, ஒன்று அதனை இழுக்க, மற்றொன்று நிறுத்துவதாகும். நிறுத்துவதாகுமளவிலே, ஸமுதாயத்தின் உறுப்புக்களும் தனித்தனி ஆத்மாவாகமாட்டா என்றவாறு. (27, 27½)

**ஆத்மா எங்கும் நிறைந்த பொருள்.**

28, 28½.

இவ்வாருக ஆத்மா உடம்பிற்கும் வேருய், இந்திரியங்கட்கும் வேருய், பிராணனுக்கும் வேருய், புத்திக்கும் வேருய், இவற்றினது ஸமுதாயத்திற்கும் வேருய், இந்த ஸமுதாயத்தினுடைய உறுப்புகட்கும் வேருய், உடம்பினுள் உள்ளது என உணர்த்தப்பட்டது. என்ருலும், ஆத்மாவினுடைய அளவைப்பற்றிச் சந்தேகம் எழுகின்றது. ஏனெனில், ஆத்மா உடம்பளவிற்று என்பார் சிலர் ; ஆத்மா அணுவளவிற்று என்பார் சிலர் ; ஆத்மா வியாபகம் [எங்கும் நிறைந்தது] என்பார் சிலர். எனவே, இவற்றுள் யாது நேரிது என்று நிச்சயிக்கத் தொடங்குகிருர் :

ஆத்மா உடம்பினுள் உள்ளதாயினும், வியாபகப்பொருளே என்று நிர்ணயிக்கப்படுகின்றது. இது அணுஅளவிற்ருயின், உடம்பு முழுவதையும் வியாபித்தலாகாது.

ஆத்மா அணுஅளவை யுடையதாயின், அதுஉடம்பினுள் ஒருஇடத்தில்தான் இருத்தலாகும். அப்பொழுது அது உடம்பினுடைய எந்த இடத்திலிருக்கின்றதோ, அந்த இடத்தில்மாத்திரம் உணர்ச்சியும் செய்கையும் உள்ளனவாகும். மற்றைய இடங்களிலோ இவையிரண்டும் இல்லையாதல் வேண்டும். ஆனால், அப்படி இல்லை ; கோடைகாலத்து நடுப்பகல்வெயிலிலே கரைமரத்து நிழல்படியாத ஒரு ஆற்றின்வழி, குடையும் மிதியடியுமில்லாது ஈரமணலின்மேல் செல்வோனுக்குத் தலையிலே வெப்பத்தின் உணர்ச்சியும், காலிலே குளிர்மையின் உணர்ச்சியும் வெவ்வேருன இரண்டு இடங்களிலே ஒரேகாலத்து உண்டாகின்றன ; அவ்வண்ணமே, காலால் நடத்தலும் கையால் தாளம்போடுதலும் வாயால் பாடுதலும் தலையை ஆட்டுதலும் முதலான செய்கைகளெல்லாம் உடம்பினுடைய (பல இடங்களிலே) பல அங்கங்கட்கு ஒரேகாலத்து உண்டாகின்றன. ஆகவே, ஆத்மா அணுஅளவிற்று என்றல் பொருந்தாது. (28, 28½)

29, 29½.

**देहप्रमाणः चेत् न स्यात् बालस्य स्थविरादिता ॥**
**देहवत्परिणामी चेत् तद्वदेव विनङ्क्ष्यति ।**

---

29, 29½.

ஆத்மா அணுவளவிற்று என்னும் கொள்கைக்குக் குற்றம் கூறப்பட்டது. இனி, ஆத்மா உடம்பளவிற்று என்னும் கொள்கைக்கும் குற்றங் கூறுகிறுர் :

(ஆத்மா) உடம்பளவிற்ருயின், குழந்தைக்கு மூப்பு முதலியன பொருந்தா; உடம்புபோலத் திரிபு உடையதாயின், அதுபோலவே அழிந்துவிடும்.

ஆத்மா சரீர அளவிற்ருயின்,—அங்ஙனம் பாலசரீர அளவிற்ருன ஆத்மாவும் யுவசரீர அளவிற்ருன ஆத்மாவும், வ்ருத்தசரீர அளவிற்ருன ஆத்மாவும் ஒன்றற்கொன்று வேறுபடுதலால், ஆத்மாக்கள் பலவாகும் ; பலவாகவே, பால்யம் யௌவநம் வார்த்தக்யம் என்பன ஒன்றற்கே இல்லையாதல்வேண்டும். ஆனுல், அப்படி இல்லை ; " எந்த நானே பால்யத்தில் பெற்ருேர்களை அநுபவித்தேனே, அந்த நானே யௌவநத்தில் மனைவியையும் மக்களையும் அநுபவிக்கிறேன் " எனவும் " எந்த நானே யௌவநத்தில் மனைவியையும் மக்களையும் அநுபவித்தேனே,அந்த நானே வார்த்தக்யத்தில் பேரன் பேத்திகளை அநுபவிக்கிறேன் " எனவும் மிகத்திடமான ப்ரத்யபிஜ்ஞை உண்டாகின்றது. மேலும், " குட்டிச்சுவரில் தேள் கொட்டினுல், கட்டுத்தறியில் நெறி ஏருது " என்னும் நியாயத்திற்கு இணங்க, ஒன்றனிடத்துள்ள வாஸனையானது தனக்குரிய நினைப்பை வேருென்றனிடத்துப் பிறப்பிக்கமாட்டாதன்ருே. ஆதலால், ஆத்மா உடம்பளவிற்று என்பது, நேரன்ரும். (ப்ரத்யபிஜ்ஞையின் லக்ஷணத்தை, 7 - 3 - ஆம் சுலோகத்தில் காண்க.)

இனி, உடம்பு - பால்யமாக, யௌவநமாக, வார்த்தக்யமாக மாறுங்கால், அதனுள் உள்ள ஆத்மாவும் அதுபோல அதற்கு இயைபத் தானும் மாறுகின்றது எனில்,—அங்ஙனம் ஆத்மா உடம்புபோல் அழிவதாகும் ; அன்றியும், கீழ்க்கூறிய ப்ரத்யபிஜ்ஞை கூடாது. ஆனுல், அப்படி இல்லை ; ஆத்மா அழியாதது ; ப்ரத்யபிஜ்ஞையோ நிகழ்கின்றது. ஆகவே, ஆத்மா உடம்பளவிற்று என்றல் மந்தமாம்.

(29, 29½)

இன்னும், அதற்குக் குற்றம் கூறுபவராய், " ஆத்மா வியாபகமாம் " என்னும் கொள்கையினுடைய அழகை எடுத்துக் காட்டுகிறுர் :

30, 30½.

**कर्मणां परिणामेन क्रिमिहस्त्यादिमूर्तिषु ॥**

**व्याप्तत्वात्प्रविशत्यात्मा घटादिष्वन्तरिक्षवत् ।**

31, 31½.

**परमाणुप्रमाणेऽपि मनसि प्रतिभासते ॥**

**स्वप्ने चराचरं विश्वं आत्मन्येव प्रतिष्ठितम् ।**

---

30, 30½.

வினைகள் மாறுதற்குஏற்ப புழு யானை முதலியவற்றினுடைய உடம்புகளுள் ஆத்மா புகுகின்றது ; வியாபகமாதலால், குடம் முதலியவற்றுள் ஆகாசம்போல.

ஒரு ஆத்மாவிற்குப் பற்பலவகையான கர்மங்களுள்ளமையால், அவை மாறுதற்குத்தக்கபடி ஒன்றற்கொன்று விரோதமான பல உடம்புகளுள் புகுதல்வேண்டி வரும். வரவே, மனித உடம்பளவிற்றன ஆத்மா ஒருகால் ஒருகர்மத்தினுல் யானை ஜன்மத்தை யடையும்பொழுது, அந்த யானையுடம்பினுள் எங்கும் நிறைந்துநிற்காது ; மனிதஉடம்பினும் யானையுடம்பு பெரிதாதலின். அப்படியே, மனிதஉடம்பளவிற்றன ஆத்மா ஒருகால் ஒருகர்மத்தினுல் புழுஜன்மத்தை யடையும்பொழுது, அந்தப் புழு வுடம்பினுள் அடங்காது ; மனிதஉடம்பினும் புழுவுடம்பு சிறிதாதலின். ஆகவே, ஆத்மா உடம்பளவிற்று என்றல் பொருந்திய தன்றும்.

இனிப் பொருந்தியது யாதெனில்,—ஆத்மா வியாபகமாம் என்பது.—எப்படி?—கூறுவோம் ; ஆகாசமானது குடம் சுவர் முதலியவற்றுள் புகுந்து அவ்வவற்றினது அளவிற்குத்தக்கவாறு அவற்றுள் நிரம்பிநிற்குமாறுபோல, வியாபகமான ஆத்மா தனது வினைக்கு ஈடாக வரும் புழுஜன்மம் யானைஜன்மம் மனிதஜன்மம் முதலான உடம்புகளுள் புகுந்து அவ்வவற்றினது அளவிற்குத் தக்கவண்ணம் அவ்வவற்றுள் நிறைந்து நிற்கின்றது என்றபடி. (30, 30½)

31, 31½.

ஆத்ம வியாபக மென்பதற்கு நியாயம் கூறுகிறுர்.

பரமாணு அளவிற்றன மனத்தினுள்ளும் ஆத்மா விளங்குகின்றது. கனவிலே, ஸ்தாவரஜங்கமமான பிரபஞ்சம் ஆத்மாவினிடத்தே தங்கியுளது.

" பரமாணுஅளவிற்றன " என்பதற்கு - " மிகநுண்மையான " என்று உரைக்க; ஏனெனில், இங்குச் சொல்லக்கருதிய பொருள் நையாயிகர்கொண்ட பரமாணு அன்று, மனம் மத்யமபரிமாண மாதலின். 1. ஆத்மா அதிநுண்மையான மனத்தினுள்ளும் விளங்குதலும், 2. கனவிலே கடல் மலை மரம் செடி யானை குதிரை

32, 32½.

देहादिष्वहमित्येवं भ्रमः सम्सारहेतुकः ॥
अन्तः प्रविष्टः शास्तीति मोक्षायोपादिशच्छ्रुतिः ।

33, 33½.

एवमेषा महामाया वादिनामपि मोहिनी ॥
यस्मात्साक्षात्कृते सद्यः लीयते च सदाशिवे ।

---

வண்டி மனிதன் மாடு முதலான ஸ்தாவர ஜங்கமமாய் விரிந்து காணப்படும் ஜகத்து ஆத்மாவினிடத்துத் தங்கிநிற்றலு மாகிய இவ்விரண்டு குறிகளும் - ஆத்மா வியாபக மென்பதை, அர்த்தாபத்திப்பிரமாணத்தினுல் அறிவிக்குமாறு கண்டுகொள்க. (31, 31½)

### மாயை என்னும் மயக்கம்.

32, 32½.

ஆகவே, உடம்பு முதலியவற்றை ஆத்மாவாகக் கொள்ளுதல் வெறும் மயக்கமாம் :

உடம்பு முதலியவற்றிலே 'நான்' என்னும் (எண்ணம்) மயக்கமாம். (இது) ஸம்ஸாரத்திற்கு(க் காரணமான அவித்யையினு) லாகின்றது. "(ஈச்வரன்) உள்ளே புகுந்து ஆளுகிருன்" என்பதை மோக்ஷத்திற்காக சுருதி உபதேசித்துளது.

"अन्तः प्रविष्टः शास्ता जनानाम् ।
एकः सन् बहुधा विचारः"

"(ஈச்வரன்) உள்ளே புகுந்து ஜனங்களை ஆள்பவன், ஒருவனுய்
இருந்து பலவாருக இருப்பவன்"—(தை-ஆ3-11)

என்பது சுருதி. உடம்பு இந்திரியங்கள் பிராணன் மனம் புத்தி எனப் படைக்கப்பட்ட இவையனைத்தும்கூடிய ஸமுதாயத்துள் இவற்றிற்கு வேருன பொருளொன்று புகுதலை அந்த சுருதி கூறுதல் - ஆத்மாவை உடம்புமுதலியவற்றிற்கு வேருகப் பகுத்தறியும் பொருட்டு என்பதாம். (32, 32½)

33, 33½.

இவ்வாறு, ஆத்மா - உடம்பு முதலியவற்றிற்கு வேறென்பது சுருதியினுலும் உணர்த்தப்பட்டது. இனி, ஜனங்கள் உடம்பு முதலியவற்றை ஆத்மாவாக மயங்குதற்குக் காரணத்தையும், அது நீங்குதற்கான உபாயத்தையும் அருளிச்செய்கிருர் :

இவ்வாறு இந்த மஹாமாயை வாதிகளையும் மயக்குகின்றது ; ஏனெனில் ஸதாசிவனை நேரே கண்டவழி (அது) உடனே மறைகின்றது.

34, 34½.

देहेन्द्रियासुहीनाय मानदूरस्वरूपिणे ॥
ज्ञानानन्दस्वरूपाय दक्षिणामूर्तये नमः ॥

35, 35½.

इति श्रीदक्षिणामूर्तिस्तोत्रार्थप्रतिपादके ।
प्रबन्धे मानसोल्लासे पञ्चमोल्लाससंग्रहः ॥

---

இந்த - ஈச்வரனுடைய. 175 - ஆம் பக்கத்தைப் பார்க்க. (33, 33½)

34, 34½.

இனி, எந்த ஈச்வரனை நேரே தரிசித்தவழி மயக்கம் தீர்ந்திடுமோ, அந்த பகவானை வணங்குகிருர் :

உடம்பு இந்திரியம் பிராணன் என்பன இல்லாது பிரமாணங்கட்கு விலக்கமான இயல்புள்ளதாகி, ஞான ஆநந்தவடிவமாய்(த்தானே விளங்கும்) தக்ஷிணமூர்த்திக்கு நமஸ்காரம்.

பிரமாணங்கட்கு விலக்கமான - பிரத்தியக்ஷம் முதலிய பிரமாணங்களால் அளந்தறியவொண்ணுத என்றபடி. வே - கீ - 2 - 18 - ஆம் சுலோகத்தின் பாஷ்யத்தைப் பார்க்க.

35, 35½.

இவ்வுல்லாஸத்தை இதனேடு முடிக்கிருர் :

ஸ்ரீதக்ஷிணமூர்த்தி ஸ்தோத்திரத்தின் பொருளை உணர்த்துகின்ற மாநஸோல்லாஸம் என்னும் நூலினுள் ஐந்தாமுல்லாஸப் பொழிப்புரை முற்றும்.

## ஐந்தாம் அத்தியாயம்.

### பதவுரை.

1.

| | |
|---|---|
| प्रत्यक्षम् एकम् | பிரத்தியக்ஷம் ஒன்றே |
| प्रमाणम् | பிரமாணமாய் (உள்ளது) ; |
| भूतचतुष्टयं | நான்கு பூதங்களும் |
| तत्वं | தத்துவங்களாய் (உள்ளன) ; |
| मोक्षः च | மோக்ஷமும் |
| मरणात् | சாதலைக் காட்டிலும் |
| अन्यः | வேருக |
| न (अस्ति) | இல்லை ; |
| कामार्थौ | இன்பமும், பொருளும் |
| पुरुषार्थकौ | புருஷார்த்தங்களாய் (உள்ளன). |

1½.

| | |
|---|---|
| कर्ता | கர்த்தாவான |
| ईश्वरः | ஈச்வரன் |
| कश्चित् | ஒருவன் |
| न (अस्ति) | இல்லை ; |
| परलोककथा | மறுமையுலகவார்த்தை |
| वृथा | வீணாய் (உளது). |

2, 2½.

| | |
|---|---|
| आत्मा | ஆத்மா |
| देहं विना | உடம்பின்றி |

| | |
|---|---|
| अस्ति चेत् | இருக்குமானால், |
| कुम्भवत् | குடம்போல |
| पुरः | எதிரே |
| दृश्यतां | காணப்படட்டும். |
| देहः | உடம்பு |
| ह्रस्वः | குட்டையானது |
| दीर्घः | நெட்டையானது |
| युवा | யௌவநமுடையது |
| बालः | பால்யமுடையது |
| इति | என்று |
| अभिदृश्यते | எதிரே காணப்படுகின்றது. |

---

3, 3½.

| | |
|---|---|
| अस्ति | இருக்கின்றது |
| जातः | பிறந்தது |
| परिणतः | திரிந்தது |
| वृद्धः | வளர்ந்தது |
| क्षीणः | தேய்ந்தது |
| जरन् | முதிர்கின்றது |
| मृतः | இறந்தது |
| इति | என |
| एवं | இவ்வாறு |
| उक्ताः | கூறப்பட்ட |
| षड्भावविकाराः | பொருள்விகாரங்கள் ஆறும் |
| देहसम्श्रयाः | உடம்பைச் சார்ந்தவையாய் (உள்ளன). |

---

4, 5.

| | |
|---|---|
| वर्णाश्रमविभागः च | ஜாதிவகுப்பும், ஆச்ரமவகுப்பும் |
| देहेषु एव | சரீரங்களிலேயே |

| | |
|---|---|
| प्रतिष्ठितः | நிலைத்துளது. |
| जातकर्मादिसम्स्कारः | ஜாதகர்மம் முதலிய சடங்கானது |
| देहस्य एव | சரீரத்திற்கே |
| विधीयते | விதிக்கப்படுகின்றது. |
| (आस्तिकाः) | (ஆஸ்திகர்கள்) |
| शतं | "நூறு (வருஷம்) |
| जीव | வாழ்க" |
| इति | என்று |
| शुभां | மங்களமான |
| आशिषं | ஆசீர்வாதத்தை |
| देहस्य | உடலுக்கு |
| प्रयुञ्जन्ति | வழங்குகிறுர்கள். |

5½.

| | |
|---|---|
| अल्पचेतनः | அற்பஅறிவுள்ள |
| चार्वाकः | சார்வாகன் |
| प्रपञ्चं | ஜகத்தை |
| इति | இவ்வாறு |
| वाचयति | கற்பிக்கிறுன். |

6, 6½..

| | |
|---|---|
| केचित् | சிலர்,— |
| श्वसिमि | "மூச்சுவிடுகிறேன், |
| जीवामि | ஜீவிக்கிறேன், |
| क्षुधितः | பசியுள்ளவனுக |
| अस्मि | இருக்கிறேன், |
| पिपासितः | தாகமுடையவனுக |
| (अस्मि) | (இருக்கிறேன்)" |
| इत्यादि प्रत्ययबलात् | என்பன முதலான உணர்ச்சிகளின் வலிமையால் |

| | |
|---|---|
| प्राणः | பிராணன் |
| आत्मा | ஆத்மா |
| इति | என்று |
| मन्वते | கொள்கிருர்கள். |

---

7, 7½.

| | |
|---|---|
| केचित् | சிலர்,— |
| अहं | "நான் |
| शृणोमि | கேட்கிறேன், |
| पश्यामि | காண்கிறேன், |
| जिघ्रामि | முகர்கிறேன், |
| स्वादयामि | ருசிபார்க்கிறேன்" |
| इति | என்று |
| ततः | அவனைக்காட்டிலும் |
| अधिकं | மேலாக |
| इन्द्रियाणां | இந்திரியங்கட்கு |
| आत्मत्वं | ஆத்மத்தன்மையை |
| प्रतियन्ति | கொள்கிருர்கள். |

---

8..

| | |
|---|---|
| अपरे | மற்றையோர்கள் |
| जानामिप्रत्ययबलात् | "அறிகிறேன்" என்னும் உணர்ச்சியின் வலிமையினுல் |
| बुद्धिः | புத்தி |
| (आत्मा) इति | (ஆத்மா) என்று |
| जगुः | கூறினுர்கள். |

---

8½.

| | |
|---|---|
| मायाव्यामूढचित्तानां | மாயையினுல் மயங்கிய மனத்தையுடைய |

| | |
|---|---|
| तेषां | அவர்கட்கு |
| दूषणं | குற்றம் |
| उच्यते | கூறப்படுகின்றது. |

5.

| | |
|---|---|
| ये | (எந்த) |
| वादिनः | வாதிகள் |
| देहं | உடம்பையாயினும் |
| प्राणम् अपि | பிராணனையாயினும் |
| इन्द्रियाणि अपि | இந்திரியங்களையாயினும் |
| चलां | சஞ்சலமான |
| बुद्धिं च | புத்தியையாயினும் |
| शून्यं | சூந்யத்தையாயினும் |
| अहम् इति तु | 'நான்' என்றே |
| विदुः | அறிகிறார்களோ, |
| (ते) | (அவர்கள்) |
| स्त्रीबालान्धजडोपमाः | ஸ்திரீ, பாலன், குருடன், பேய் பிடித்தவன் (ஆகிய இவர்கட்கு) ஒப்பானவராய் |
| भृशं | மிகவும் |
| भ्रान्ताः | மயங்கியிருக்கிறார்கள். |
| मायाशक्तिविलास- | மாயாசக்தியினுடைய தளுக்கினால் |
| कल्पित- | ஆன |
| महाव्यामोह- | பெரிய மயக்கத்தை |
| संहारिणे | முற்றும் தொலைக்கின்ற |
| तस्मै | அந்த |
| श्री गुरुमूर्तये | ஸ்ரீமதாசார்யஸ்வரூபமான |
| श्री दक्षिणामूर्तये | ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திக்கு |

| | |
|---|---|
| इदम् | இந்த |
| नमः | நமஸ்காரம். |

---

| | |
|---|---|
| इदं | இது |
| अस्य | இதனுடைய |
| तात्पर्यं | அபிப்பிராயம். |

---

9, 9½.

| | |
|---|---|
| पाषाणवत् | கல்போல |
| अनात्मनां | அநாத்மாவான |
| देहादीनां | உடம்பு முதலிய |
| जडार्थानां | ஜடப்பொருள்கட்கு |
| ईशितुः | ஈச்வரனுடைய |
| समावेशं विना | புகுதலின்றி |
| अहम्भावः | 'நான்' என்னும் எண்ணம் |
| कथं | எப்படி |
| भवेत् | நிகழும் ? |

---

10, 10½.

| | |
|---|---|
| तावत् | இனி |
| अयं | இந்த |
| देहः | சரீரம் |
| कुम्भवत् | குடம்போல |
| दृश्यत्वात् | காணப்படுவதாதலாலும் |
| जाड्यवत्त्वतः | ஜடத்தன்மையையுடைமையினாலும் |
| रूपादिमत्त्वात् | நிறம் வடிவம் முதலியவற்றையுடைமையினாலும் |
| सांशत्वात् | அவயவங்களோடு கூடியுள்ளமையினாலும் |
| भौतिकत्वात् च | பூதங்களாலாகியதனாலும் |
| आत्मा | ஆத்மாவாக |
| न भवेत् | ஆகாது. |

---

11, 11½..

| | |
|---|---|
| देहः | சரீரம் |
| मूर्छासुषुप्तिमरणेषु अपि | மூர்ச்சை, தூக்கம், இறப்பு என்றவற்றிலும் |
| प्रदृश्यते | காணப்படுகின்றது |
| आत्मा | ஆத்மா |
| देहादिव्यतिरिक्तत्वात् | சரீரம் முதலியவற்றிற்கு வேருயிருத்தலால் |
| तदा | அப்பொழுது |
| न प्रतीयते | காணப்படவில்லை. |

---

12, 13, 13½.

| | |
|---|---|
| यथा | எப்படி |
| अम्शुमान् | சூரியன் |
| जगत्प्रवृत्तीनां | உலகம் தொழிற்படுதற்கு |
| आदिकारणं | ஆதிகாரணமாய் |
| (भवति) | (இருக்கின்றதோ) |
| तथा एव | அப்படியே |
| पुमान् | ஆத்மாவானது |
| देहादिप्रवृत्तौ | உடம்பு முதலியன தொழிற்படுதற்கு |
| परं | முதன்மையான |
| कारणं | காரணமாய் |
| (भवति) | (இருக்கின்றது.) |
| स्त्री | ஸ்திரீயும் |
| बालः | சிறுவனும் |
| अन्धः च | குருடனும் |
| अयं | "இது |
| मम | என்னுடைய |
| देहः | சரீரம்" |

| | |
|---|---|
| इति | என்று |
| एवं | இப்படி |
| मन्यते | நினைக்கிறான். |
| अहं | "நான் |
| देहः | சரீரம்" |
| इति | என்று |
| कश्चन | ஒருவனும் |
| कदाचित् अपि | ஒருபொழுதும் |
| न अवैति | உணர்கிறானில்லை. |

---

14, 15, 16.

| | |
|---|---|
| इन्द्रियाणि अपि | இந்திரியங்களும் |
| प्रदीपवत् | விளக்குப்போல |
| करणत्वात् | கருவியாதலால் |
| आत्मानः | ஆத்மாக்களாக |
| न (भवन्ति) | ஆகமாட்டா. |
| श्रोत्रं | காது |
| वीणावादनवत् | வீணா வாத்தியம் போல |
| शब्दग्रहणसाधनं | ஓசையை உணர்தற்குக் கருவியாம். |
| चक्षुः | கண் |
| तेजस्त्रितयवत् | மூன்று ஒளிகள் போல |
| रूपग्रहणसाधनं | உருவத்தை யுணர்தற்குக் கருவியாம். |
| घ्राणं | மூக்கு |
| पुष्पसम्पुटकादिवत् | பூக்குடலை முதலியன போல |
| गन्धस्य | நாற்றத்தை |
| ग्राहकं | உணர்வதாக |
| ( भवेत् ) | (ஆகும்.) |

| | |
|---|---|
| जिह्वा | நாக்கு |
| दधिक्षौद्रघृतादिवत् | தயிர், தேன், நெய் முதலியன போல |
| रसस्य | சுவையை |
| ग्राहिका | உணர்வதாக |
| ( भवेत् ) | (ஆகும்.) |

---

17.

| | |
|---|---|
| इन्द्रियैः | இந்திரியங்களால் |
| हीनाः | குறைந்த |
| जनाः | மனிதர்கள் |
| इन्द्रियाणि | "இந்திரியங்கள் |
| मे | எனக்கு |
| न सन्ति | இல்லை ; |
| अहं | நான் |
| मूकः | ஊமையாக |
| अस्मि | இருக்கிறேன், |
| बधिरः | செவிடனாக |
| अस्मि | இருக்கிறேன்" |
| इति | என்று |
| आहुः | சொல்லுகிறார்கள் , |
| ते | அவர்கள் |
| निरात्मकाः | ஆத்மா இல்லாதவராக |
| (भवन्ति) किं | ஆகிறார்களா ? |

---

18, 19.

| | |
|---|---|
| सुषुप्तिषु | தூக்கங்களிலே |
| ज्ञानाभावात् | அறிவின்மையால் |
| प्राणः अपि | பிராணனும் |
| आत्मा | ஆத்மாவாக |
| न भवति | ஆகாது. |

| | |
|---|---|
| पुरुषे | புருஷன் |
| जाग्रत्स्वप्नोपभोगोत्थ- | நனவு கனவு வாழ்க்கையினுலான |
| श्रमविच्छित्तिहेतवे | இளைப்பு நீங்கும் பொருட்டு |
| सुषुप्तिं | நித்ரையை |
| प्राप्ते | அடைந்தபோது, |
| शेषकर्मोपभोगार्थं | மிச்சமான கர்மத்தை அநுபவித்தற்காக |
| शरीरं | தேகத்தை |
| अभिरक्षितुं | காக்க |
| प्राणः केवलं | பிராணன் மாத்திரம் |
| चरति | சஞ்சரிக்கின்றது. |

---

20, 21.

| | |
|---|---|
| प्राणस्य | பிராணனுக்கு |
| चैतन्यं | சேதநத்தன்மை |
| (अस्ति) यदि | இருக்குமாயின், |
| तत्र | அதிலே [தூக்கத்திலே] |
| करणोपरमे | இந்திரியங்கட்கு ஒய்வு |
| (सति) | (உள்ளபோது) |
| (प्राणः) | (பிராணன்) |
| (निर्व्यापारः) | (செய்கையில்லதாய்) |
| (स्यात्) | (இருக்கவேண்டும்.) |
| तु | மற்று |
| प्राणे | பிராணன் |
| व्याप्रियमाणे | வியாபரித்திருக்கும்பொழுது |
| करणोपरमः | இந்திரியங்கட்கு ஓய்வு |
| कथं | எப்படி |
| (भवेत्) | (ஆகும் ?) |

| | |
|---|---|
| सम्राजि | அரசன் |
| रणोद्युक्ते | போரிலேமுனைந்திருக்கும்பொழுது |
| सैनिकाः | சேனைஜனங்கள் |
| न विरमन्ति हि | ஓயமாட்டார்களன்றோ. |
| तस्मात् | ஆதலால், |
| प्राणः | பிராணன் |
| करणस्वामी | இந்திரியங்கட்கு அதிபதியாக |
| भवितुं | ஆக |
| न अर्हति | தக்கதன்று. |

22.

| | |
|---|---|
| मनसः | மனத்தை |
| प्रेरके | செலுத்துகின்ற |
| पुंसि | புருஷன் |
| विरते (सति) | ஓய்ந்தபொழுது, |
| समस्तानि | எல்லா |
| करणानि | இந்திரியங்களும் |
| विरमन्ति | ஓய்கின்றன. |
| अतः | ஆதலால் |
| ततः | அதனினும் |
| (अन्यः) | (வேறான) |
| पुमान् | புருஷன் |
| तेषां | அவற்றிற்கு |
| स्वामी | உடையவனாக |
| ( स्यात् ) | (ஆவான்.) |

23.

| | |
|---|---|
| बुद्धिः तु | புத்தியோ |
| क्षणिका | க்ஷணமாத்திர முள்ளதாக |
| गमागमसमन्विता | போதலோடும் வருதலோடும் கூடியதாக |

| | |
|---|---|
| वेद्या | அறியப்படுவது ; |
| आत्मनः | ஆத்மாவினுடைய |
| प्रतिबिम्बेन | பிரதிபலநத்திஞல் |
| भासिता | விளக்கப்பட்டதாய் |
| जगत् | பிரபஞ்சத்தை |
| भासयेत् | விளங்கச்செய்யும். |

---

24.

| | |
|---|---|
| बुद्धिः | புத்தி |
| आत्मनि | ஆத்மாவினிடத்து |
| उत्पद्यते | உண்டாகின்றது ; |
| आत्मनि एव | ஆத்மாவினிடத்தே |
| प्रलीयते | மறைகின்றது. |
| प्राक् | முன்னும் |
| ऊर्ध्वं च | பின்னும் |
| असती | இல்லாத |
| बुद्धिः | புத்தி |
| स्वयम् एव | தானே |
| न सिद्ध्यति | அமைகிறதில்லை. |

---

26, 26½.

| | |
|---|---|
| पूर्वपूर्वस्मात् | முந்தின முந்தின |
| ज्ञानात् | ஞானத்தினின்று |
| उत्तरोत्तरसम्भवः | பிந்தின பிந்தின (ஞானம்) உண்டாதல் |
| (अस्ति) चेत् | இருக்குமாயின், |
| युगपत् | ஒரேகாலத்தில் |
| बहुबुद्धित्वं | பல புத்திகளிருத்தல் |
| क्षणे क्षणे | க்ஷணந்தோறும் |
| प्रसज्येत | ஆகவேண்டும். |

| | |
|---|---|
| (किञ्चित्) | (ஒரு) |
| (ज्ञानं) | (ஞாநம்) |
| (स्वस्य) | (தனது) |
| नाशोत्तरं | அழிவிற்குப் பின் |
| असत्त्वतः | இல்லாமையின் |
| बुद्ध्यन्तरं | மற்றோர் ஞாநத்தை |
| न जनयेत् | பிறப்பிக்கமாட்டாது. |

---

26, 26½.

| | |
|---|---|
| एषां | இவற்றின் |
| सङ्घातः | ஸமுதாயம் |
| आत्मा | ஆத்மாவாக |
| (स्यात्) चेत् | (இருக்கு)மாயின், |
| तदा | அப்பொழுது |
| एकदेशे | ஓர் உறுப்பு |
| पृथक्कृते (सति) | பிரிக்கப்பட்டவளவிலே |
| सङ्घाताभावतः | ஸமுதாயமின்மையின் |
| चैतन्यं | சேதநத்தன்மை |
| न प्रसज्येत | வாராது. |

---

27, 27½.

| | |
|---|---|
| (चेतनं) | (சேதநப்பொருள்) |
| बहु | அனேகமாக |
| (स्यात्) चेत् | (இருக்கு)மாயின் |
| भिन्नदिग्गत्यभिप्रायः | வெவ்வேறு திசையை நோக்கிச் செல்லுதலிலே விருப்பம் |
| (स्यात्) | (உண்டாகும்.) |
| तत् | அது |
| न पूजितं | ஸமஞ்ஜஸமன்று. |

| | |
|---|---|
| (यतः) | (ஏனெனில்) |
| एतत् | இது |
| सद्यः | உடனே |
| भिन्नं | முறிந்திடுவது |
| भवेत् | ஆகும் ; |
| वा | அல்லது |
| निष्क्रियं | செய்கையற்றது |
| भविष्यति | ஆகும். |

28, 28½.

| | |
|---|---|
| आत्मा | ஆத்மா |
| देहस्य | உடம்பினுடைய |
| अन्तः | உள்ளே |
| गतः अपि | உள்ளதாயினும் |
| व्याप्तः एव | வியாபகப்பொருளே |
| इति | என்று |
| बुध्यते | அறியப்படுகின்றது. |
| एषः | இது |
| अणुप्रमाणः | அணுஅளவு உள்ளதாக |
| (स्यात्) चेत् | (இருக்கு)மாயின் |
| अखिलं | எல்லா |
| वपुः | உடம்பையும் |
| न व्याप्नुयात् | வியாபியாது. |

29, 29½.

| | |
|---|---|
| (आत्मा) | (ஆத்மா) |
| देहप्रमाणः | உடம்பு அளவு உள்ளதாக |
| स्यात् चेत् | இருக்குமாயின் |
| बालस्य | குழந்தை |

| | |
|---|---|
| स्थविरादिता | மூப்புமுதலியவற்றை யுடைமை |
| न स्यात् | கூடா ; |
| देहवत् | உடம்புபோல |
| परिणामी | திரிபு உடையதாக |
| स्यात् चेत् | இருக்குமாயின் |
| तद्वत् एव | அதுபோலவே |
| विनङ्क्ष्यति | அழிந்திடும். |

30, 30½.

| | |
|---|---|
| आत्मा | ஆத்மா |
| व्याप्तत्वात् | வியாபகமாயிருத்தலால் |
| घटादिषु | குடம்முதலியவற்றுள் |
| अन्तरिक्षवत् | ஆகாசம்போல |
| क्रिमिहस्त्यादि मूर्तिषु | புழு யானை முதலியவற்றினுடைய உடம்புகளுள் |
| कर्मणां | வினைகளுடைய |
| परिणामेन | மாறுபாட்டிற்குத்தக்கபடி |
| प्रविशति | புகுகின்றது. |

31, 31½.

| | |
|---|---|
| (आत्मा) | (ஆத்மா) |
| परमाणुप्रमाणेन | பரமாணு அளவு உள்ள |
| मनसि अपि | மனத்தினுள்ளும் |
| प्रतिभासते | விளங்குகின்றது. |
| स्वप्ने | கனவிலே |
| चराचरं | ஸ்தாவர ஜங்கமமான |
| विश्वं | ப்ரபஞ்சம் |
| आत्मनि एव | ஆத்மாவினிடத்தே |
| प्रतिष्ठितं | தங்கியுளது. |

32, 32½.

| | |
|---|---|
| देहादिषु | உடம்புமுதலியவற்றிலே |
| अहम् इति एवं | 'நான்' என்ற இவ்வாருன |
| भ्रमः | மயக்கம் |
| सम्सारहेतुकः | ஸம்ஸாரத்திற்குக் காரணமாக |
| (भवति) | (இருக்கின்றது.) |
| (ईश्वरः) | (ஈச்வரன்) |
| अन्तः | உள்ளே |
| प्रविष्टः | புகுந்தவனாய் |
| ( जनान् ) | (ப்ராணிகளை) |
| शास्ति | ஆளுகிறான் |
| इति | என்று |
| श्रुतिः | சுருதியானது |
| मोक्षाय | முக்திக்காக |
| उपादिशत् | உபதேசித்துளது. |

33, 33½.

| | |
|---|---|
| एवं | இப்படி |
| एषा | இந்த |
| महामाया | மகாமாயை |
| वादिनाम् अपि | வாதிகளையும் |
| मोहिनी | மயக்குவதாய் |
| (अस्ति) | (இருக்கின்றது.) |
| यस्मात् | ஏனெனில் |
| सदाशिवे | ஸதாசிவன் |
| साक्षात्कृते (सति) | நேரே காணப்பட்டவளவிலே |
| सद्यः | உடனே |
| लीयते च | மறைகின்றது. |

34, 34½.

| | |
|---|---|
| देहेन्द्रियासुहीनाय | உடம்பு இந்திரியங்கள் ப்ராணன் என்பன இல்லாததாய் |
| मानदूरस्वरूपिणे | ப்ரமாணங்கட்கு எட்டாத இயல்பினதாய் |
| ज्ञानानन्दस्वरूपाय | அறிவான ஆநந்தவடிவாகிய |
| दक्षिणामूर्तये | தக்ஷிணமூர்த்திக்கு |
| नमः | நமஸ்காரம். |

---

35, 35½.

| | |
|---|---|
| श्रीदक्षिणमूर्तिस्तोत्र-अर्थप्रतिपादके | ஸ்ரீதக்ஷிணமூர்த்தியினுடைய ஸ்தோத்திரத்தின் பொருளை உணர்த்துகின்ற |
| मानसोल्लासे | மாநஸோல்லாஸம் என்னும் |
| प्रबन्धे | நூலினுள் |
| पञ्चमोल्लाससंग्रहः | ஐந்தாம் உல்லாஸப்பொழிப்புரை |
| इति | முற்றும். |

---

अथ

## षष्ठोल्लासः

---

### 1.

**स्वप्ने विश्वं यथा तत्स्थं जाग्रत्यपि तथेति चेत् ।**
**सुषुप्तौ कस्य किं भाति कः स्थायी तव चेतनः ॥**

---

### ஆறும் உல்லாஸம்.

---

எப்படிக் கனவிலே தோற்றுவனவெல்லாம், ஆத்மஸ்வரூபமான பரமேச்வர-னிடத்துக் கற்பிக்கப்படுகின்றனவோ, அப்படியே நனவில் தோற்றுவனவும் அதனிடத்தே கற்பிக்கப்படுகின்றன எனக் கீழே விளக்கப்பட்டது; அன்றியும், உடம்பே ஆத்மா என்னும் கொள்கையினையும் மற்றுமிதுபோன்றவற்றையும் மறுத்தலால், ஆத்மாவென்பது அத்தோற்றங்கட்கெல்லாம் அடிக்காரணமாகிநிற்கும் தனி முதலான நிர்விகாரப்பொருளாம் என உணர்த்தப்பட்டது. அதிலே,—பௌத்தராவார் ஆத்மஉண்மையிலே நிகழ்த்துகின்ற ஆக்ஷேபங்கட்கு ஸமாதாநம் கூறுவதாய், அதுவே [ஆத்மாவே] நிலையான உண்மையென்று இவ்வுல்லாஸம் சாதிக்கின்றது:

பௌத்தமதத்தார் - மாத்யமிகர் யோகாசாரர் ஸௌத்திராந்திகர் வைபாஷிகர் என நால்வகைப்படுவர். இந் நால்வரும் ஆதிபுத்தனுடைய மாணுக்கர். இவருள், மாத்யமிகர் - எல்லாப்பொருளும் பாழ் என்பர்; யோகாசாரர், கணந்தோறும் தோன்றி யழியும் அறிவே ஆத்மா என்பர்; ஸௌத்திராந்திகரும் வைபாஷிகரும், ஜகத்துமுழுதும் புறம் அகம் என்னும் இருவகைச்சமுதாயமே என்பர்.

### (1) சூந்யவாதம்.

இனி, இக்கொள்கைகளை மறுக்கும்பொருட்டு, முதலில், மாத்யமிகனுடைய ஆக்ஷேபத்தைக் கூறுகிறார்:

எப்படிக் கனவிலே ப்ரபஞ்சம் அதனிடத்துத் தங்கியுளதோ அப்படியே நனவிலுமாம் எனில்,—உறக்கத்திலே யாருக்கு யாது விளங்குகின்றது? அதிலே, எது நிலையான அறிவுப்பொருள்? (கூறுவாயாக.)

1½.

सर्वं च क्षणिकं शून्यं सर्वमेव स्वलक्षणम् ।

2.

सङ्घातः परमाणूनां मह्यम्ब्वग्निसमीरणाः ॥

---

அதனிடத்து - என்றுமுள்ள ஈச்வரனுன ஆத்மாவினிடத்து. கனவுப்பிரபஞ்சம் போல, நனவுப்பிரபஞ்சமும் நித்யமான ஆத்மாவைச் சார்ந்துநிற்கின்றது என்பது அப்படியே இருக்கட்டும். ஆயினும், உறக்கத்திலே பார்ப்பவன் யார்? அவனல் பார்க்கப்படும் பொருள் யாது? அதிலே எது நிலையான அறிவுப்பொருள்?— உறக்கத்திலே எத்தகைய அறிவுப்பொருளும் இல்லை; அங்கனம் எதற்கும் எதுவும் விளங்கவில்லை. ஆகவே, வேதாந்திகொண்ட ஆத்மா இல்லை என்பது சூந்யவாதிகளின் கருத்து.

(2) க்ஷ ணி க வி ஜ் ஞா ந வா த ம்.

இனி. யோகாசாரனுடைய மதத்தைக் கூறுகிருர்:

எல்லாம் க்ஷணிகமானது, சூந்யமானது; எல்லாமே தனக்குரிய தன்மைத்து. (1)

ஆத்மாஉள்பட ஸகலமான பொருளும் கணப்பொழுதுமாத்திரம் உள்ளவை; அவ்வாறே சூந்யமானவை; முற்கணத்திலும் பிற்கணத்திலும் இல்லாதவை; அவ்வண்ணமே தமக்குரிய தன்மையுடையவை, தம்தமக்கே இன்றியமையாமல் உரியதாய்நிற்கும் இயல்பினை யுடையவை. (1½)

(3) ஸ மு தா ய வா த ம்.

இனி, ஸௌத்திராந்திக வைபாஷிகருடைய சமுதாயவாதத்தை விரித்துக் காட்டுபவராய், புறம் அகம் என்னும் இருவகைச் சமுதாயத்துள் புறச்சமுதாயத்தைக் கூறுகிருர்:

நிலம், நீர், நெருப்பு, வாயு என்பன - பரமாணுக்களின் சமுதாயமாம்.

புறச்சமுதாயமாவது, நிலம் நீர் முதலியன. இவற்றிற்குக் காரணம் பரமாணுக்கள். அவை, நிலவணு நீரணு தீயணு வாயுவணு என நால்வகைப்படும். அவை ஒருங்கு பலகூடித் திரண்டவழிப் புறச்சமுதாயம் தோன்றும் என்பது. இவர் தார்க்கிகர்போல பரமாணுகாரணவாதிகளாயினும், பரமாணுக்கள் ஒருங்கு பலகூடிக் காரியமாம் என்பர்.

3.

**मनुष्यादिशरीराणि स्कन्धपञ्चकसम्हतिः ।**
**स्कन्धाश्च रूपविज्ञानसम्ज्ञासम्स्कारवेदनाः ॥**

3½.

**रूप्यन्त इति रूपाणि विषयाश्चेन्द्रियाण्यपि ।**

---

தார்க்கிகரோ அவ்வாறன்றி ஈச்வரனிச்சை வசத்தால் பரமாணுக்களில் கிரியைதோன்றி இவ்விரண்டு பரமாணுக்கள் தம்முள் சேர்ந்து இரட்டையணுவாய் அவை மும்மூன்று தம்முள் சேர்ந்து மும்மையணுவாய் இவ்வாறே ஒன்றினுக்கொன்று அவயவமும் அவயவியுமாய் முறையே தோன்றிக் காரியப்படும் என்றும், ஒடுங்கும் பொழுதும் ஈச்வரனிச்சை வசத்தால் அம்முறையே ஒடுங்கும் என்றும் கொள்வர், (2)

3.

இனி, அகச்சமுதாயத்தைக் கூறுகிறார் :

மனிதர்முதலானோருடைய உடம்புகள், ஐந்து ஸ்கந்தங்களின் சமுதாயமாம். ஸ்கந்தங்களாவன - ரூபம் விஜ்ஞானம் ஸம்ஜ்ஞை வாஸனை வேதனை (என ஐந்து).

அகச்சமுதாயமாவது, ரூபம்முதலிய ஸ்கந்தங்கள். அவை - ரூபஸ்கந்தம், விஜ்ஞானஸ்கந்தம், ஸம்ஜ்ஞாஸ்கந்தம், வாஸநாஸ்கந்தம், வேதநாஸ்கந்தம் என ஐவகைப்படும். இவ்வைந்தும் ஒருங்கு தொகுதலால் அகச்சமுதாயம் தோன்ற, அதுவே உலகவாழ்க்கையனைத்தையும் கொண்டுசெலுத்துவது. (3)

3½.

அவற்றுள், ரூபஸ்கந்தத்தைக் கூறுகிறார் :

ரூபிக்கப்படுகின்றன என்பன, ரூபங்கள்; (அவை) விஷயங்களும் இந்திரியங்களுமாம்.

ரூபிக்கப்படுகின்றன-சுட்டி யறியப்படுகின்றன. விஷயங்கள் எந்த இந்திரியங்களால் ரூபிக்கப்படுகின்றனவோ அவை ரூபங்கள். அன்றியும், எந்த விஷயங்கள் ரூபிக்கப்படுகின்றனவோ அவை ரூபங்கள். இவ்வாறு, ரூபம் என்னும் சொல்-கரணவ்யுத்பத்தியினால் இந்திரியத்தையும், கர்மவ்யுத்பத்தியினால் விஷயத்தையும் உணர்த்த, இந்திரியங்களும் விஷயங்களும் ரூபஸ்கந்தமாம். விஷயங்கள் புறத்துள்ளன வாயினும், உடம்பிலுள்ள இந்திரியங்களால் உணரப்படுகின்றமையின் அச்சமுதாயத்துள் வைத்து எண்ணப்பட்டன. (3½)

4.

विषयेन्द्रिययोर्ज्ञानं विज्ञानस्कन्ध उच्यते ॥

5.

सञ्ज्ञागुणक्रियाजातिविशिष्टप्रत्ययात्मिका ।
पञ्चधा कल्पना प्रोक्ता सञ्ज्ञास्कन्धस्य सौगतैः ॥

6, 7.

गवां गौरिति सञ्ज्ञोक्ता जातिर्गोत्वं तु गोगतम् ।
गुणाः शुक्लादयस्तस्य गच्छत्याद्यास्तथा क्रियाः ॥

---

4.

விஜ்ஞாநஸ்கந்தத்தைக் கூறுகிருர் :

விஷயஇந்திரியங்களுடைய உணர்ச்சி விஜ்ஞாநஸ்கந்தமாகச் சொல்லப்படுகின்றது.

உருவம்முதலிய விஷயங்களைப்பற்றி இந்திரியம்முதலியவற்ருலுண்டாகும் அறிவே விஜ்ஞாநஸ்கந்தமாம் என்பது. (4)

5.

ஸம்ஜ்ஞாஸ்கந்தத்தைக் கூறுகிருர் :

பெயர் பண்பு செயல் ஜாதி சிறப்புணர்ச்சி என்ற வடிவிற்ருன ஐந்துவகைக்கற்பனையானது பௌத்தர்களால் ஸம்ஜ்ஞாஸ்கந்தத்திற்குக் கூறப்பட்டிருக்கின்றது.

ஸம்ஜ்ஞாஸ்கந்தமென்பது - ஸவிகல்பமான உணர்வு. 1. பெயர் - சாத்தன் கொற்றன் மரம் மலை மாடு முதலிய சொற்கள். 2. பண்பு - நிறம் முதலிய குணம். 3. செயல் - அந்தந்தக் காரியத்தைப் பிறப்பிக்கும் ஆற்றல். 4. ஜாதி - வரைசெய்துநிற்கும் ஓர்வகைத் தன்மை. 5. சிறப்புணர்ச்சி - பல உறுப்புக்களின் அமைப்பினுலாகும் உணர்வு. இவ்வாறு பௌத்தர்கள் ஸம்ஜ்ஞாஸ்கந்தத்தை ஐந்து திறமாகப் பகுக்கிருர்கள். (5)

6, 7.

இந்த ஐந்து விதத்தையும் உதாரணத்தால் காட்டுகிருர் :

ஆக்களின் பெயர் ஆ எனப்படுகின்றது. ஜாதியாவது ஆவினிடத்துள்ள ஆத்தன்மை. அதனது குணங்கள், வெண்மை முதலியன.

श्रृङ्गी चतुष्पाल्लाङ्गूली विशिष्टप्रत्ययो ह्यसौ ।
एवं पञ्चविधा क्लृप्तिः सम्ज्ञास्कन्ध इतीर्यते ॥

7½.

रागाद्याः पुण्यपापे च सम्स्कारस्कन्ध उच्यते ।

8.

सुखं दुःखं च मोक्षश्च स्कन्धः स्याद्वेदनाह्वयः ॥

8½.

पञ्चभ्य एव स्कन्धेभ्यः नान्य आत्माऽस्ति कश्चन ।

---

அப்படியே (அதனது) செயல்கள், செல்லுதல்முதலியன. அது கொம்புடையது, நான்குகாலுடையது, வாலுடையது (என்பது) சிறப்புணர்ச்சி. இவ்வாறு ஐவகைத்தான கற்பனை ஸம்ஜ்ஞாஸ்கந்தம் எனப்படுகின்றது.

அதனது - ஆவினது. அது - ஆ. (6, 7.)

7½.

வாஸநாஸ்கந்தத்தைக் கூறுகிறார் :

பற்று முதலியனவும் புண்ய பாவங்களும் வாஸநாஸ்கந்தமாகச் சொல்லப்படுகின்றது.

பற்று - விஷயங்களின்மேல் செல்லும் அவா. (7½)

8.

வேதநாஸ்கந்தத்தைக் கூறுகிறார் :

இன்பமும் துன்பமும் (அவற்றின்) நீக்கமும் - வேதனை என்னும் பெயருடைய ஸ்கந்தமாம்.

(அவற்றின்) நீக்கம் - இன்பதுன்ப மிரண்டுமில்லாத நொதுமல் என்னும் நிலை. இன்பம் முதலியவற்றின் உணர்வு, வேதநாஸ்கந்தமென்பது. (8)

ஜகத்திற்குக் கர்த்தா இல்லை.

8½.

இனி, இவ்வைந்து ஸ்கந்தத்திற்கும் வேருய் நிலையான ஆத்மா உண்டோ எனின்,—அஃதொன்று உள்ளதற்கு ப்ரமாண மின்மையின், அது இல்லை என்று பௌத்தர் கூறுகிறார் :

ஐந்து ஸ்கந்தங்களினுமே வேருய் ஆத்மா ஒன்று இல்லை.

न कश्चिदीश्वरः कर्ता स्वगतातिशयं जगत् ॥

10.

स्कन्धेभ्यः परमाणुभ्यः क्षणिकेभ्योऽभिजायते ।
पूर्वपूर्वक्षणादेव क्षणः स्यादुत्तरोत्तरः ॥

---

9.

அப்படியே இருக்கட்டும். இருந்தாலும், நிலவணு நீரணு முதலியவற்றைச் சேர்த்தமைப்பவன் இல்லாக்கால், சமுதாயம் அமையாது. ஆகவே, அவற்றைச் சேர்த்தமைப்பவனான ஈச்வரனைக் கொள்ளவேண்டும்; வேண்டவே, அவனேதான் ஆத்மாவாம் எனில்,—அப்படியன்று :

கர்த்தாவான ஈச்வரன் ஒருவனில்லை. ஜகத்திற்கு உதவி தன்னிடத்தே உள்ளது.

நிலவணு நீரணு முதலியவற்றைச்சேர்த்தமைத்து ஒழுங்காக வரைசெய்து உலகத்தை நடத்த, சேதநப்பொருளான கர்த்தா என்னும் ஈச்வரனொருவன் வேண்டா; ஏனெனில், ப்ரபஞ்சம் தானே ஆனது, தனக்கு வேண்டிய உதவியெல்லாம் தன்னிடத்தே அமையப்பெற்றது, ஆகவே வேறொன்றின் உதவியை வேண்டாதது, தானே மாறிமாறி வேறுபடுவது, தன்னையே சார்ந்தது, தானாகவே செல்வது என்பதாம். (9)

10.

ஆதலின்,

கணப்பொழுதுமாத்திரமுள்ள ஸ்கந்தங்களினின்று (அகச்சமுதாயமும்), கணப்பொழுதுமாத்திரமுள்ள பரமாணுக்களினின்று (புறச்சமுதாயமும்) உண்டாகின்றன. முந்தினமுந்தின க்ஷணத்தினின்றே பிந்தினபிந்தின க்ஷணம் தோன்றுவதாம்.

ஈச்வரன் (1) வேறொன்றையும் அபேக்ஷியாது ப்ரபஞ்சத்தைப் படைக்கின்றானா ? அல்லது, (2) அபேக்ஷித்துப் படைக்கின்றானா ?

(1) முதற்பக்ஷமாயின்,—அது அநுபவத்திற்கு விரோதமாம்; தச்சன்முதலானோர் மரம்முதலியவற்றை வேண்டாமலே வீடுமுதலியவற்றைக் கட்டுவோராகக் காணப்படவில்லையன்றோ. மேலும், படைப்பவனுதலென்பது - படைத்தற்குவேண்டிய ஸாமக்ரியை வேண்டிநிற்றலால், அந்த ஸாமக்ரி இல்லாவழி அமையாதென்க,

11.

पूर्वस्मादेव हि ज्ञानात् जायते ज्ञानमुत्तरम् ।
स एवायमिति ज्ञानं सेयं ज्वालेतिवद्भ्रमः ॥

(2) இரண்டாம் பக்ஷமாயின்,— (1) தாமே சேர்ந்தமையும் ஆற்றலுடைய பொருள்களை ஈச்வரன் சேர்த்தமைக்கின்றனா? அல்லது, (2) அந்த ஆற்றலில்லாத பொருள்களைச் சேர்த்தமைக்கின்றனா?

(1) முதற்பக்ஷமாயின்,— அது பொருந்தாது; தாமேசேர்ந்தமையும் பொருள் கட்குப் பிறிதொன்று வேண்டாமையின்.

(2) இரண்டாம் பக்ஷமாயின,— அதுவும் ஒவ்வாது; நீரினாலும் தயிரை உண்டாக்குதல் வேண்டுமாதலின்.

ஆகவே, ஜகத்திற்குக் கர்த்தாவான ஈச்வரனொருவன் வேண்டா.

அன்றியும், ஒருகாரியத்தைப் பிறப்பிக்கும் தன்மையானது கணப்பொழுது மாத்திரமுள்ள அணுக்களுக்கும் ஸ்கந்தங்களுக்கும் தம்மிடத்தே உள்ளமையால், ஒன்றும் செய்யாத ஈச்வரனொருவன் உண்டு என்பது ஏலாது.

ஆதலால், முந்தினக்ஷண இருப்பினின்றே பிந்தினக்ஷண இருப்பு அவற்றிற்கு அமைவதாம் என்க. (10)

**விஷயஞானம்போல, விஷயிஞானமும் க்ஷணிகமாம்.**

11.

இன்னும், பௌத்தமதத்தைக் கூறுகிறார்:

முந்தின அறிவினின்றே பிந்தின அறிவு பிறக்கின்றது. 'இது அதேதான்' என்னும் அறிவும் - 'இது அதேசுடர்' என்பதுபோல, மயக்கமாம்.

ஆக்ஷேபம்:— ஞானம் நிலையாய் நிற்றலின் க்ஷணிக மன்று. எங்ஙன மெனில்,— நேற்று ஓர் சித்திரத்தைக் கண்டுவைத்தவன் இன்று அதனை மறுபடியும் காணுங்கால், அவனுக்கு "இச்சித்திரம் அதேதான்" என சித்திரமாகிய விஷயத்தின் அறிவு என்னும் ப்ரத்யபிஜ்ஞை நிலையாய் நிற்கின்றது. அப்படியே,—சிறுபிராயத்து வீதியில் விளையாடிப் பின்பு யௌவநத்திலே மனைவியை மணந்து மக்களைப் பெற்று மூப்பிலே நிற்பவன் தன் மக்களது மக்களைக் கொஞ்சும்பொழுது, அவனுக்கு "எந்த நான் சிறுபிராயத்திலே வீதியிலே ஓடி விளையாடினேனோ, அந்த நானே இப்பொழுது பேரன்மார்களை அநுபவிக்கின்றேன்" என 'நான்' என்னும் விஷயியின் அறிவாகிய ப்ரத்யபிஜ்ஞை நிலையாய் நிற்கின்றது. ஆகவே, அறிவு க்ஷணிகமாமென்றல் ப்ரத்யபிஜ்ஞைக்கு முரணும்.

12.

अस्ति भातीति धीर्भ्रान्तैः आत्मानात्मसु कल्प्यते ।
हानोपादानराहित्यात् आकाशः किं प्रकाशते ॥

12½.

इत्येवं बौद्धसिद्धान्ती भाषमाणो निषिध्यते ।

---

ஸமாதாநம்:—அப்படியன்று; ப்ரத்யபிஜ்ஞை மயக்கமாதலின். அறிவு, சுடர் போல இடையறுது தோன்றிக்கொண்டிருக்க, முற்கணத்துஅறிவிற்கும் பிற்கணத்து அறிவிற்குமுள்ள வேற்றுமையை உணராமையிஞல் அம்மயக்கமுண்டாகின்றது என்பது. (11)

உண்மையும் விளக்கமும் இல்லை.

12.

இதனேடு, பௌத்தமதத்தை முடிக்கிருர்:

ஆத்மாவிலும் அநாத்மாவிலும் 'உள்ளது' 'விளங்குகின்றது' என்னும் எண்ணமானது மயங்கியவர்களால் கொள்ளப்படுகின்றது; தள்ளுதலும் கொள்ளுதலும் இன்மையால் (அது மயக்கமாம்). ஆகாசம் விளங்குகின்றதா ?

ஆத்மாவிலும் - விஷயியிலும், அநாத்மாவிலும் - விஷயத்திலும். ஒருவன் ஆகாசத்தைக்கொள்ளவாவது தள்ளவாவது முயலுகின்ருனில்லையாதலால், அஃதோர் பொருளில்லை என்பது பௌத்தரது கொள்கை. அதுபோலவே,— 'குடம் உள்ளது, விளங்குகின்றது' 'நான் இருக்கிறேன், விளங்குகிறேன்' என இவ்வாறு விஷயவிஷயிகளைப்பற்றிய உண்மைவிளக்கங்களை ஒருவன் கொள்ளவாவது தள்ளவாவது முயலுகின்ருனில்லையாதலால், அவ்வுண்மைவிளக்கங்கள் இல்லையாம்; அவை ஆகாசம்போல அவஸ்துவாம், வஸ்துஇல்லையாம் என்றபடி. (12)

பௌத்தமதமறுதலை.

12½.

இங்ஙனம் விரிக்கப்பட்ட பூர்வபக்ஷத்தை மறுக்கவேண்டி, மாணுக்கனை மூலச்லோகத்திற்குக் கொண்டுபோய்விடுகிருர்:

என்று இவ்வாறு கூறுகின்ற பௌத்தஸித்தாந்தி மறுக்கப்படுகின்ருன்;

**6. राहुग्रस्तदिवाकरेन्दुसदृशो मायासमाच्छादनात्
सन्मात्रः करणोपसम्हरणतो योऽभूत्सुषुप्तः पुमान् ।
प्रागस्वाप्समिति प्रबोधसमये यः प्रत्यभिज्ञायते
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥**

---

**6. எந்தப் புருஷனானவன் கரணம் ஒடுங்க உறங்கியவனாய், மாயையினால் மறைப்புண்டு, ராகுவினால்பிடிக்கப்பட்ட சூரியனையும் சந்திரனையும் நிகர்த்தவனாய் உண்மைமாத்திரமாய் நின்றானோ; எவன், '(நான்) முன் தூங்கினேன்' என விழிப்புஸமயத்திலே நினைப்பூட்டிக் கொள்கின்றானோ; அந்த ஸ்ரீமதாசார்ய ஸ்வரூபமான ஸ்ரீதக்ஷிணாமூர்த்திக்கு இந்த நமஸ்காரம்.**

புருஷன் - ஆத்மா. கரணமாவது - அகக்கரணமாகிய மனம்முதலியனவும், புறக்கரணமாகிய கண்முதலியனவுமாம். ஒடுங்க - தன்காரணத்துள் மறைய.

சிறப்புணர்ச்சிக்குக் காரணமான கண் காது முதலிய இந்திரியங்களெல்லாம் மனம் புத்தி முதலியவற்றோடு ஒடுங்குங்கால், புருஷன் ஸ்வப்பிரகாசமான உண்மைமாத்திரமாய் உறங்குவோனாகிறான், சிறப்புணர்ச்சியில்லாதவனாகிறான் என்றபடி. இவ்வாறு உண்மைமாத்திரமாய்த் தன்ஒளியினால் தானே விளங்குவோனாலும், அங்ஙனம் தனது ப்ரஹ்மாத்மஸ்வரூபமானது அநாதிஇருட்டான மாயையினால் மறைப்புண்டுகிடத்தலின் அவன் பூர்ணப்பிரகாசமாக விளங்குகிறானில்லை; எப்படி ராகுவினால்பிடிக்கப்பட்ட சூரியனும் சந்திரனும் நன்கு விளங்கவில்லையோ, அதுபோல நன்கு விளங்குகிறானில்லை. அவன் உள்ளபடி தெளிவாய் விளங்குவோனில்லையாயினும், உண்மைமாத்திரமாயிருக்கிறான்; எப்படி ராகுவினால் பிடிக்கப்பட்ட சூரியசந்திரர் தெளிவாய் விளங்கவில்லை என்பதனால் - சூரியனுக்காயினும் சந்திரனுக்காயினும் உண்மை இல்லையென்பது இல்லையோ, அதுபோலவே,— அகக்கரணபுறக்கரணங்களின் ஒடுக்கத்தாலும் மாயையினால் மறைப்புண்டுநிற்றலாலும் உறக்கத்திலே ஆத்மா தெளிவாய் விளங்கவில்லை என்பதனால் - ஆத்மாவிற்கு உண்மை இல்லையென்பது இல்லை. எனவே, அவன் இருக்கவே இருக்கிறான் என்பதாம்.

வினா:— ஆயின், அவன் தூக்கத்தில் இருக்கவேஇருக்கிறான் என எப்படி, அறியப்படுகின்றது ?

விடை:— ப்ரத்யபிஜ்ஞானப்பிரமாணத்தினால் அறியப்படுகின்றது. உறக்கம் தெளிந்து

अस्यायमाशयः

13, 13½.

शून्यं चेज्जगतो हेतुः जगदेव न सिद्ध्यति ॥
घटःशून्यः पटःशून्यः इति कैः प्रतिपाद्यते ।

---

எழுந்தபோது, "எந்த நான் இதற்குமுன் இவ்வளவு நேரம் சுகமாகத் தூங்கினேனோ : எந்த நான் இவ்வளவு காலம் அவ்வாறு தூக்கத்திலுள்ளவனாய் ஒருவிசேஷத்தையும் அறியாது உண்மைமாத்திரமாய் இருந்தேனோ ; அந்த நான் இப்பொழுது தெளிந்தவனாய், அகக்கரணபுறக்கரணமெல்லாம் விரிந்து வெளிவந்துள்ளமையின் விழித்துக்கொண்டிருக்கிறேன்" என அவன் தான் தூக்கத்தில் அநுபவித்ததை நினைவுகூர்கின்றான்; அநுபவியாததை நினைவுகூர்தல் நிகழாமையாலும், ஒருவன் அநுபவித்ததை வேறொருவன் நினைவுகூர்தலைக் காணாமையாலுமென்க.

ஆகவே, ஆத்மாவானது தானேவிளங்கும் உண்மையாதலால் சூந்யப்பொருளன்று, க்ஷணிகப்பொருளன்று, ஜடப்பொருளுமன்று என்பது தேர்ந்த கருத்து.

இனி, உறக்கத்திலே ஆத்மா இருத்தற்கு,

"सुषुप्तिकाले सकले विलीने तमोभिभूतः सुखरूपमेति ॥
पुनश्च जन्मान्तरकर्मयोगात् स एव जीवः स्वपिति प्रबुद्धः ॥"

"எல்லாம் ஒடுங்கித் தூங்குஞ்சமயத்திலே இருட்டால் மூடுண்டு ஸுகஸ்வரூபத்தை யடைகிறான் ; மீண்டும், முந்தின பிறவிகளின் கர்மப்படி அவனே ஜீவனாய்க் கனவுகாண்கிறான் ; அல்லது விழித்துக்கொண்டவனாகிறான்" (கை - 13, 14)

என்பது முதலான சுருதிப்பிரமாணத்தையும் காண்க.

மற்றையவற்றிற்குக் கீழே பொருள் உரைக்கப்பட்டது. (6.)

இது இதன் கருத்து :—

சூந்யவாதமறுதலை.

13, 13½.

'ஜகத்திற்குக் காரணமான ஈச்வரனாகிய ஆத்மா இல்லை ; ஜகத்தினுடைய முதல்நிலைமை சூந்யமேயாதலின், அதற்கு அதுவே [ஜகத்திற்கு சூந்யமே] உபாதாநகாரணம் என்னும் முதற்காரணமாம்' எனப் பௌத்தர் கூறுவதை மறுக்கத் தொடங்குகிறார் :

ஜகத்திற்கு சூந்யம் காரணமாயின், ஜகத்தே அமையாது. 'குடம் சூந்யம்,' 'ஆடை சூந்யம்' என யாரால் சொல்லப்படுகின்றது ? [அப்படி ஒருவரும் சொல்லக் காணோம்.]

## 14, 14½.

**नैव भासेत शून्यं चेत् जगन्नरविषाणवत् ॥**
**वस्त्वर्थी किमुपादद्यात् भारार्तः किं परित्यजेत् ।**

---

எந்தக் காரியத்திற்கு எது உபாதானகாரணமோ, அது அதுவாக வழங்கப் படுவதாம்; பொன்னுலாகிய கணையாழியைப் பொன்னுகச் சொல்வதுபோல. அவ்வண்ணமே, ஜகத்திற்கு சூந்யம் உபாதானகாரணமாயின், அதனை சூந்யமாகவே வழங்குதல் வேண்டும்; 'வீடு சூந்யம், பணம் சூந்யம், உணவு சூந்யம், ஆடை சூந்யம், என இவ்வாறு வியவகரித்தல் வேண்டும். ஆனால், அப்படி இல்லை: யாவரும் ஜகத்தை உள்ளதாகவே வழங்குகிறார்கள்; 'வீடு உள்ளது, பணம் உள்ளது, உணவு உள்ளது, ஆடை உள்ளது' என இவ்வாறு வியவகரிக்கிறார்கள். ஆகவே, சூந்யமானது ஜகத்திற்குக் காரணமாகமாட்டாது என்பதாம். (13, 13½.)

### 14, 14½.

(ப்ரதிவாதி) :—ஜகத்திற்குக் காரணம் சூந்யமாதலின், ஜகத்தும் சூந்யமே தான். என்றாலும், அது மயக்கத்தால் காட்சிப்பொருளாகப் புலப்படுகின்றது எனில்,—

(வாதி) :—கூறுவோம்:

ஜகத்து சூந்யமாயின், மனிதன்கொம்புபோலப் புலப்படவேகூடாது ஒருபொருளை வேண்டிநிற்போன் எதனை(த் தேடி)க் கொள்ள வேண்டும்? சுமையினால் பீடிக்கப்பட்டவன் எதனைக் (கீழே) தள்ள வேண்டும்?

சூந்யமென்பது மலடிமகன்போலும் மனிதன்கொம்புபோலும் இல்பொருளாதலால், அந்த இல்பொருளாகிய சூந்யத்தை ஜகத்தாக மயங்குதல் ஏலாது; மலடிமகனையாயினும், மனிதன்கொம்பையாயினும் பிறிதொன்ருக மயங்குதலில்லாமை போல என்பது.

அன்றியும், உலகம் சூந்யமேயாயின்,—உணவு தண்ணீர் சுமை குடம் வீடு முதலியனவெல்லாம் இல்லாதிருத்தல்வேண்டும்; வேண்டவே, பசியுள்ளவன் பசியோடும், நீர்வேட்கையுற்றவன் நீர்வேட்கையோடும், பாரத்தினால் பீடிக்கப் பெற்றவன் பாரத்தோடும் வருந்திக்கொண்டேஇருக்கவேண்டும். ஆனால், அப்படி இல்லை: அவர் உணவை உண்பதனாலும், தண்ணீரைப் பருகுவதனாலும், சுமையை இறக்குவதனாலும் வருத்தம் தீர்கிறார்கள்.

ஆகவே, சூந்யமானது ஜகத்திற்குக்காரணமாகாதென்றவாறு. (14, 14½)

15, 15½.

कोविदध्यान्निषिद्धयेद्वा शून्यत्वात् स्वस्य चात्मनः ॥
अवसीदेन्निराकृतं तस्मात्सर्वमिदं जगत् ।

16, 16½.

स्कन्धानां परमाणूनां न सङ्घातयिताऽस्ति चेत् ॥
सङ्घातो न विना हेतुं जडा घटपटादयः ।

---

15, 15½.

சூந்யவாதமறுதலையை முடிக்கிறார் :

அன்றியும், தன்ஆத்மா சூந்யமாதலின், யார் விதிப்பான் ? அல்லது மறுப்பான் ? ஆகவே, இந்தப் பிரபஞ்சமெல்லாம் காரணமில்லதாய், அழியவேண்டும்.

குடம் ஆடை முதலான வியவகரிக்கப்படும்பொருள்போல, அவற்றை வியவகரிக்கும்பொருளும் சூந்யவாதத்திலே இல்லையாதலால், ஒன்றனைச் செய்தலும் தவிர்தலும் முதலிய வியவகாரமெல்லாம் அமையாதிருக்கவேண்டும்; வேண்டவே, உலகம் தான் இருத்தற்கு யாதொரு காரணமுமில்லையாய், அழிந்துபோகவே வேண்டும். ஆனால், அப்படி இல்லை. ஆகவே, சூந்யவாதம் போலியாம் என்று ஒழிக. (15, 15½)

ஸமுதாயவாதமறுதலை.

16, 16½.

இனி,

ஸ்கந்தங்களையும் பரமாணுக்களையும் சேர்த்தமைப்பவன் இல்லையாயின், —சேர்க்கையென்பது காரணமின்றி [சேர்த்தமைப்பவனின்றி] அமையாது. குடம் ஆடை முதலியன ஜடங்களாம்.

குயவனான சேதநனன்றோ மண் தடி முதலியவற்றைக்கொண்டு, ஸமுதாயமாகிய குடத்தை வனைபவனாகக் காணப்படுகிறான். மண் தடி முதலியவற்றைத் தொழிற்படுத்தும் சேதநனான குயவனில்லாவழி, அசேதநங்களான மண் தடி முதலியன தாமே தொழிற்பட்டு ஒருபொழுதும் குடத்தை வனையமாட்டா. அன்றியும், நெய்வோன் இல்லாவழி, நூல் நாடா வேமா முதலியன ஆடையை நெய்யமாட்டா. ஆகவே, ஒருகாரியமுண்டாதல் சேதநனைச் சார்ந்ததே என்றும், அவனில்லாவழி அஃதில்லை யென்றும், ஜடங்களான மண்முதலியன தாமே ஒரு காரியத்தை உண்டாக்கமாட்டா என்றும் முடிந்தன. முடியவே, இந்த ஸமுதாயவாதம் பொருந்தியதாகாதென்றவாறு. (16, 16½).

17, 17½.

# महानुभावो भूयासं इति भ्रान्तश्च मन्यते ॥
# आत्मापलापको बौद्धः किमर्थं चरति व्रतम् ।

---

क्ष ணி க வி ஜ் ஞா ந வா த ம று த லை.

17, 17½.

இனி, கணந்தோறும் தோன்றி யழியும் அறிவே ஆத்மாவாம் என்னும் பௌத்தரது கொள்கையிலே நேரின்மையைக் காட்டுகிறார் :

மேலும், மயங்கிய (பௌத்தனானவன், "நான்) மாட்சிமையுடையோனாகவேண்டும்" என எண்ணிக்கொண்டிருக்கிறான். ஆத்மாவை மறுக்கின்ற பௌத்தன் எதற்காக வ்ரதத்தை அநுஷ்டிக்கிறான் ?

மயங்கிய - கண்டதைமாத்திரம் நம்புகின்ற. நான் என்னும்ஆத்மா க்ஷணந்தோறும் தோன்றி யழிவதனால், அதற்கு அனேக க்ஷணங்களில் நிலையான இருப்பு இல்லை : அதாவது, ஒவ்வொரு க்ஷணத்திலும் ஓரோர் புதியபுதிய வேறு வேறு ஆத்மா உண்டாகிக் கெடுவதாம். ஆகவே,—முதலில் எவனோ பசியினால் வருந்தினானோ அவனே பின்பு உணவை உண்டவனல்லன் எனவும், முதலில் எவனோ பணத்தைத் திருடினானோ அவனே பின்பு கையும் களவுமாக அகப்பட்டுக் கொண்டவனல்லன் எனவும், முதலில் எவனோ மனைவியை மணம்புரிந்தானோ அவனே பின்பு அவளை அநுபவிப்போனல்லன் எனவுமாம் : முன்னர் பசியினால் வருந்தினவன் ஒருவன், பின்னர் உணவை உட்கொண்டவன் வேற்றுவன் ; முன்னர் பணத்தைத் திருடினவன் ஒருவன், பின்னர் அகப்பட்டுக்கொண்டவன் வேற்றுவன் ; முன்னர் மனையாளை மணம்புரிந்தவன் ஒருவன், பின்னர் அவளை அநுபவிப்பவன் வேற்றுவன் என்பதாம். இவ்வாறே, பிறவற்றிலும் கண்டுகொள்க. இது பௌத்தமதம்.

இனி, இப்படிக் கொண்ட பௌத்தன் தான் உயர்ந்தோனாகவேண்டு மென்று முயலுதலும், மறுமைக்கான சைத்ய வந்தநம் முதலிய தர்மத்தை அநுஷ்டித்தலும் வீண் என்பது சொல்லாமையே அமையும் ; செய்வோனும் அநுபவிப்போனும் ஒருவனே இல்லையாதலின் என்க. (17, 17½)

ப்ர த் ய பி ஜ் ஞை ம ய க் க மா கா து.

விளக்குச்சுடரின் ப்ரத்யபிஜ்ஞைபோல அந்த நான்என்னும்ப்ரத்யபிஜ்ஞை மயக்கமாம் என்று கீழ் (6 - 11)க் கூறியதைக் கண்டிக்கிறார் :

18.

प्रत्यभिज्ञा यदि भ्रान्तिः भोजनादि कथं भवेत् ॥

19.

इष्टसाधनमेवैतत् अन्नं गतदिनान्नवत् ।
इति निश्चित्य बालोऽपि भोजनादौ प्रवर्तते ॥

---

18.

ப்ரத்யபிஜ்ஞை மயக்க மாயின், உண்ணல்முதலியன எப்படி நிகழும்? [நிகழமாட்டா.]

19.

எப்படி உண்ணல்முதலியன நிகழமாட்டா? எனின்,—கூறுவோம்:

“இவ்வுணவு (எனக்கு) வேண்டியதை ஸாதிப்பதேதான்; சென்ற தினத்து உணவுபோல” எனக் குழந்தையும் நிச்சயித்து, உண்ணல் முதலியவற்றிலே செல்லுகின்றது.

“நான் பார்க்கின்ற இவ்வுணவு எனக்கு நலத்தைச் செய்வது; உணவாதலால், நேற்று உண்ட உணவுபோல” என்பது அநுமானம். இனி, ‘எந்த நானே நேற்று உணவை உண்டேனே அந்த நானே இப்பொழுது இவ்வுணவைப் பார்க்கின்றேன்’ என்னும் ப்ரத்யபிஜ்ஞை மயக்கமாயின்,—அதாவது, நேற்று உணவை உண்டோனும் இங்ஙன மிவ்வுணவைப் பார்ப்போனும் ஒருத்தனேயல்லாது வெவ் வேறனவராயின்,— அந்த அநுமானம் நிகழாது. அது நிகழாதவழி, உண்ணுதலைத் தலைப்படாதிருத்தல் வேண்டும். ஆனால், அப்படி இல்லை: குழந்தையுங்கூட அவ்வாறு அநுமானித்துத் துணிந்தே, உண்ணுதலைத் தலைப்படுகின்றது. ஆகவே, பிரத்யபிஜ்ஞை மயக்க மன்று; பின்னை, அது ப்ரத்யக்ஷப்ரமாணமாம் என்பது தேர்ந்த பொருள்.

(பூர்வபக்ஷம்):—அப்படியன்று; சுடரில்போல, ஒப்புமையா லாகின்றமையின். பிற்கணத்துள்ளசுடர் முற்கணத்துள்ளசுடர்க்கு ஒப்பாகநிற்றலால், பிந்தினசுடர் முந்தினசுடர்போலவே இருத்தலால்,—‘இது அதேசுடர் [முற்கணத்துள்ளசுடர்தான், பிற்கணத்துள்ளசுடரும்]’ என இரண்டு சுடரையும் ஒன்றாகமயங்குதலாகின்றது. ஆகவே, ப்ரத்யபிஜ்ஞை மயக்கமாம் என்பது.

(ஸித்தாந்தம்):— அப்படியன்று; உனது கொள்கைப்படி அறிவு கணந்தோறும் தோன்றி யழிகின்றமையால், ஒப்புமையுணர்ச்சி கூடாமையின். ஒரு பொருளைக் கண்டவன் வேறோர்பொருளைக் காணுங்கால், அந்த ஒருவனுக்கேயன்றோ

## 20.

## अवकाशप्रदातृत्वं आकाशार्थक्रिया यथा ।
## तथैवार्थक्रिया पुंसः कर्तृत्वज्ञातृतादिका ॥

---

இது அதற்கு ஸமானம்' என்னும் ஒப்புமையுணர்ச்சி உண்டாகும். ஆனால், ஒருபொருளைப் பார்க்கின்ற ஒருவன் மற்றோர்பொருளைப் பார்க்க அடுத்தக்ஷணம் இருப்பதில்லை; அறிவு க்ஷணிகமாதலால், ஒருபொருளை ஒருதரம் பார்த்தவுடனேயே அழிந்திடுவதின் என்க.

இனி, ஒருத்தனே முற்கணத்தும் பிற்கணத்தும் காண்பவனாய் நில்லாவழி, அங்ஙனம் ஒப்புமையை உணர்வோன் இல்லை. இல்லையாகவே, பௌத்தனுக்கு - ப்ரத்யபிஜ்ஞை மயக்கமாம் என்பதும் ஏலாமை காண்க. (19)

**ஆத்மா நிலையான உண்மை.**

20.

இனி, ஆத்மாவானது ஆகாசம்போல் ஒன்றற்கும் பயன்படுதலில்லாத இல்பொருளாம் என்னும் பௌத்தரது கொள்கையை மறுக்கும் கருத்தோடு ஆத்மாவினிடத்து உபயோகத்தைச் சாதிக்கிறார்:

இடத்தைக் கொடுப்பதென்பது எப்படி ஆகாசத்தின் உபயோகமோ, அப்படியே, செய்பவனாதல் அறிபவனாதல் முதலியன ஆத்மாவின் உபயோகமாம்.

ஆகாசம் இல்பொருளன்று; யாதொன்றற்கும் பயன்படாத இன்மைநிலையன்று.—மற்றென்னவெனில், அது - ஸ்தாவரம் ஜங்கமம் என்ற யாவற்றிற்கும் இடத்தைக் கொடுப்பதாய்ப் பரவிநிற்கும் உள்பொருளாம். ஆத்மாவோ செய்பவனாக அநுபவிப்பவனாக அறிபவனாக இருக்கிறான் என்பது யாவர்க்கும் தம்தம் அநுபவத்தால் நன்றாகத் தெரிந்துளது. ஆகலின், இவ்வாறு பயன்பட்டுநிற்கும் ஆத்மா நிலையான உண்மையாம் என்பது முடிந்த கருத்து. (20)

ஆக்ஷேபம்:—உண்மை; ஆத்மாவினது உபயோகம் நனவிலும் கனவிலும் உள்ளமையின், ஆத்மா அந்த இரண்டுசமயத்தில் மாத்திரம் இருக்கின்றது. மற்று, உறக்கத்திலோ அதனது உபயோகமொன்று மின்மையால், அஃது [ஆத்மா] அப்பொழுது இல்லையாம் எனின்,—

ஸமாதாநம்:—வருமாறு:

21.

सुषुप्तिसमयेऽप्यात्मा सत्यज्ञानसुखात्मकः।
सुखमस्वाप्समित्येवं प्रत्यभिज्ञायते यतः॥

22.

प्रत्यभिज्ञायत इति प्रयोगः कर्मकर्तरि।
आत्मा स्वयम्प्रकाशत्वात् जानात्यात्मानमात्मना॥

---

21.

ஆத்மா உறக்கத்திலுங்கூட உண்மையும் அறிவும் ஸுகமுமாகிய ஸ்வரூப முடைத்து; ஏனெனில், "நான் ஸுகமாகத் தூங்கினேன்" என்றிவ்வாறு நினைவுகூர்ந்தறிகின்றது.

"நான் ஸுகமாகத் தூங்கினேன்" என்பது, உண்மையையும் அறிவையும் ஸுகத்தையும் காட்டுகின்றது. எங்ஙன மெனில்,— "நான் ஸுகமாகத் தூங்கி-னேன்" என்றறிது, "நான் தூக்கத்தை அறிபவனாய் [அநுபவிப்பவனாய்] ஸுகமாய் இருந்தேன்" என்பது. இவ்வாக்கியத்தினுள்ளே, "அறிபவனாய்" என்பது ஆத்ம அறிவையும், "ஸுகமாய்" என்பது ஆத்மஸுகத்தையும், "இருந்தேன்" என்பது ஆத்மஉண்மையினையும் நன்கு எடுத்துக்காட்டுதல் காண்க. அவ்வாறே, 215 - ஆம் பக்கத்தில் கூறியுள்ள கைவல்யோபநிஷத் முதலிய சுருதிகளும், உறக்கத்திலே ஆத்மாவிற்கு உண்மை அறிவான ஆநந்தவடிவத்தைக் கூறுகின்றன.

22.

சங்கை :— ஆயின், 'ஆத்மா நினைவுகூர்ந்தறியப்படுகின்றது' (6 - 21) என்றவளவிலே, அது குடம்போல விஷயமாதல் கூறப்பட்டது; 'நினைவுகூர்ந்தறியப்படுகின்றது என்னும் வினையிலுள்ள 'படு' என்னும் விகுதியினை லெண்க. எனவே, ஆத்மா ஸ்வப்ரகாசமான விஷயியாம் என்னும் வேதாந்தமுடிபிற்கு விரோதமாகின்றது எனில்,—

பரிகாரம் :— கூறுவோம் :

'நினைவுகூர்ந்தறியப்படுகின்றது' எனக் கர்மகர்த்தாவில் வழங்குவதாம். ஆத்மா ஸ்வப்ரகாசமாதலால் தன்னைத் தன்னால் அறிகின்றது.

நினைவுகூர்ந்தறியப்படுகின்றது என்பது, நினைவுகூர்ந்தறிகின்றது எனக் கர்மகர்த்தாவில் வரும்; கன்று விட்டுக்கொண்டது, சோறு அட்டது, கரி பொரித்தது,

23.

सुषुप्तौ मायया मूढः जडोऽन्ध इव लक्ष्यते ।
अप्रकाशतयाऽऽभाति स्वप्रकाशतयाऽपि च ॥

23½.

जडात्मनि च देहादौ साक्षादीशो विविच्यते ।

---

கூரை மேய்ந்தது என்பனபோல. இவ்வாறு வழங்குதலானது ஆத்மா ஸ்வயம்பிரகாசமென்பதற்கு முரணாகாது; அது குடம்போல, விஷயமும் ஆகாது. விளக்கு தன்னைத் தன்னால் விளக்குகின்றதுபோல, ஆத்மா தன்னைத் தன்னால் அறிகின்றது; ஸ்வயம்பிரகாச மாதலின். என்பது, இந்தக் கர்மகர்த்திருப்பிரயோகத்தின்கருத்து. (22)

23.

இந்த ஆத்மா,

உறக்கத்திலே மாயையினால் மயங்கி ஜடம்போன்று, குருடன் போன்று காணப்படுகின்றது; அப்ரகாசமாகவும், ஸ்வப்ரகாசமாகவும் விளங்குகின்றது.

ஜடம் - அசேதநம், உணர்ச்சியில்லாதது. குருடன் - அறியாதவன். தூக்கத்திலே சிறப்புணர்ச்சி இல்லாமையால், ஆத்மா ப்ரகாசமில்லதாக விளங்குகின்றது; மற்று, ஸ்வரூபஅறிவு உள்ளமையால், ஸ்வப்ரகாசமாகவும் விளங்குகின்றது என்பது பொருள். அப்படியே,

"न हि द्रष्टुर्दृष्टेर्विपरिलोपो विद्यतेऽविनाशित्वात् ।"

"பார்க்கும்பொருளின் பார்வைக்குக் கேடு இல்லை; அழியா இயல்பினதாதலின்"—(ப்ரு - 4 - 3 - 23)

என்னும் சுருதியை நோக்குக. (23)

23½.

அன்றியும், ஜடமாகிய உடம்புமுதலியவற்றுள் (ஆத்மாவானது) ஸாக்ஷாத் ஈச்வரனாகப் பகுத்தறியப்படுகின்றது.

உடம்பு இந்திரியங்கள் மனம் புத்தி என்கின்ற இவை, தம்மையாயினும் தமது செயலையாயினும், பிறிதொன்றையாயினும் பிறிதொன்றன் செயலையாயினும் அறியாத ஜடங்களா யுள்ளன. மற்று, அவற்றினுள் உள்ள ஆத்மாவோ எல்லாவற்றையும்

24, 24½.

एषैव मोहिनी नाम मायाशक्तिर्महेशितुः ॥
मोहापोहः प्रमातॄणां मोक्ष इत्यभिधीयते ।

25.

अवस्थात्रयनिर्मुक्तः देहादिभिरनाविलः ॥

---

விளக்குகின்றது. 'எந்த நான் பார்த்தேனோ அந்த நான் முகர்கின்றேன், கேட்கின்றேன், பேசுகின்றேன், நினைக்கின்றேன், அறிகின்றேன், நடக்கின்றேன், நிற்கின்றேன்' என இவ்வாறு யாவற்றையும் விளக்குவதாய் நினைவுகூர்ந்தறியும் ஆத்மாவானது அவற்றிற்கு வேருகப் பகுத்தறியப்படுகின்றது, அவற்றை ஆளும் ஈச்வரனும் என்று தெளியப்படுகின்றது என்பது பொருள். (23½)

24, 24½.

ஆத்மாவினுடைய இந்த வாஸ்தவமான ஈச்வரஇயல்பை எது மறைக்கின்றதோ ; பௌத்தர் எதனால் மயக்குண்டு, ஆத்மா இல்லை எனக் கொண்டாரோ ; அந்த

இதுவே, மயக்குவதான மகேச்வரனுடைய மாயாசக்தி என்பது. (இம்) மயக்கம்தீர்தலானது ஜீவர்கட்கு மோக்ஷம் எனப்படுகின்றது.

ஆத்மஸ்வரூபத்தை மறைத்துநிற்கும் மூட்டமாகிய மயக்கம் நீங்கியவளவிலே வேற்றுமை இன்மையால் ஸம்ஸாரம் தொலைந்திடுகின்றது ; தொலைந்திடவே, அங்ஙனம் ஆத்மஸ்வரூபமான ஆநந்தமாய்நிற்றலே மோக்ஷ மென்பது.

ஆ த் ம இ ய ல் பு.

25.

ஆத்மா இல்லை என்னும் பௌத்தமதத்தை இவ்வாறு மறுத்து, அவ்வாத்மாவிற்கு நிலையான உண்மை சாதிக்கப்பட்டது.

(வினு) :—இனி, அந்த ஆத்மா எத்தன்மைத்து ? என்பது.

(விடை) :—இதுமுதல் 31 - ஆம் சுலோகமளவும் ஆத்மஇயல்பை உணர்த்துவோம் ; கேட்பாயாக :

(ஆத்மாவானது) மூன்று நிலையினின்றும் அகன்றுநிற்பது, உடம்பு முதலியவற்றால் கலக்கப்படாதது.

26.

इषीक इव सन्मात्रः न्यग्रोधकणिकोपमः ।
बाह्याद्बाह्यदलोन्मुक्तकदलीकन्दसन्निभः ॥

27.

निरंशो निर्विकारश्च निराभासो निरञ्जनः ।
पुरुषः केवलः पूर्णः प्रोच्यते परमेश्वरः ॥

---

மூன்று நிலையினின்றும் அகன்றுநிற்பது - நனவு கனவு உறக்கம் என்னும் மூன்று நிலைமைகளையும் பார்த்துக்கொண்டிருக்கும் ஸாக்ஷியாகவே இருத்தலால், அம் மூன்றுநிலைமையும் இல்லாதது. உடம்புமுதலியவற்றால் கலக்கப்படாதது - தன்னால் பார்க்கப்படும் உடம்பு மனம் முதலியவற்றால் கறைப்படுத்தப்படாதது, அஸங்கமாதலின் என்க. (25)

26.

மேலும், அது

உண்மைமாத்திரமானது, முஞ்ஜக்குருத்துப்போன்றது, ஆலமரத்து விதைபோன்றது, வெளியிலிருந்து வெளிமட்டைகள்உரிக்கப் பெற்ற வாழைத்தண்டுபோன்றது.

முஞ்ஜம் என்னும் புல்லின் இளங்குருத்துப்போல, ஆத்மா ஒருபடித்தாய் உளது. அன்றியும், ஆலமரத்துவிதைபோல, அது மிகநுண்மையானது ; இந்த உபமையைப் பற்றி சாந்தோக்ய உபநிஷத்தின் 6 - 12 ஐப் பார்க்க. வாழைத்தண்டுபோல, ஆத்மா உள்ளே உள்ளது ; வெளியிலிருந்து மேல்மட்டைகளை ஒவ்வொன்றாக உரித்துத் தள்ளி உள்ளே வாழைத்தண்டைத் தேடுவதுபோல், வெளியிலிருந்து உடம்பு இந்திரியம் ப்ராணன் மனம் முதலியவற்றைப் பிரித்துத்தள்ளி உள்ளேயே ஆத்மாவைத் தேடவேண்டும் என்பதாம். (26)

27.

அன்றியும், அந்தப்

புருஷன், அவயவமில்லாது வேறுபாடில்லாது ஆபாஸமில்லாது மாசில்லாது நிற்கும் தனிப்பொருளாய் (எங்கும்) மறைந்த பரமேச்ரவன் எனப்படுகிறான்.

ஆபாஸமாவது - குடம்போல, வ்ருத்திஞானத்திற்கு எட்டுதல். (27)

28, 29.

वाचो यत्र निवर्तन्ते मनो यत्र विलीयते ।
एकी भवन्ति यत्रैव भूतानि भुवनानि च ॥
समस्तानि च तत्त्वानि समुद्रे सिन्धवो यथा ।
कःशोकस्तत्र को मोहः एकत्वमनुपश्यतः ॥

30.

वाच्य वाचकरूपत्वात् सविकल्पोऽपि सन्नहम् ।

---

28, 29.

இன்னும்,

சொற்கள் எங்கே பின்வாங்குகின்றனவோ ; மனம் எங்கே ஒடுங்குகின்றதோ, எல்லாப் பொருள்களும் உலகங்களும் ஜீவர்களும், கடலிலே ஆறுகள்போல, எங்கேயே ஒன்ருகிருர்களோ ; அங்குத் துயரம் யாது, மயக்கம் யாது, ஒன்ருயிருத்தலைக் காண்பவனுக்கு ? [அவனுக்கு ஸம்ஸாரக் கட்டனைத்தும் விட்டுப்போகின்றது என்பதாம்.]

இப்படி ஆத்மஇயல்பைக் கூறும் சுருதிகள் சில வருமாறு :

" यतो वाचो निवर्तन्ते । अप्राप्य मनसा सह ॥ "

" சொற்கள் மனத்தோடுகூட (எதனை) அடையமுடியாது எதனினின்று மீளுகின்றனவோ "—(தை - உப - 2 - 6)

" आत्मेत्येवोपासीतात्र ह्येते सर्व एकं भवन्ति "

" ஆத்மா என்றே தொழவேண்டும் ; இதிலேயன்றே எல்லாம் ஒன்ருகின்றன " —(ப்ரு - 3 - 4 - 2)

" परेऽव्यये सर्व एकी भवन्ति "

" அழியாப் பரம்பொருளிலே எல்லாம் ஒன்ருகின்றன "—(முண் - 3 - 2 - 7)
" அங்குத் துயரம் யாது, மயக்கம் யாது, ஒன்ருயிருத்தலைக் காண்பவனுக்கு ?" என்பது, ஈசாவாஸ்யோபநிஷத்தினுள் ஏழாவது மந்திரம். (28, 29)

30.

இனி, ஆத்மா எவ்வாறு இத்தன்மைத்தாகும் ? எனில்,—அருளிச்செய்கிருர் :

நான்என்பது பொருளைக் கூறும் சொல்வடிவிற்ருதலால்

देहादीनां व्यपोहेन लक्षयेन्निर्विकल्पकम् ॥

31.

असन्नेव भवेद्विद्वान् असद्ब्रह्मेति वेद चेत् ।
अस्ति ब्रह्मेति चेद्वेद सन्तमेनं ततो विदुः ॥

32.

इति श्रीदक्षिणामूर्तिस्तोत्रार्थप्रतिपादके ।
प्रबन्धे मानसोल्लासे षष्ठोल्लासस्य संग्रहः ॥

---

வேற்றுமையுள்ளதாயினும், உடம்புமுதலியவற்றை நீக்குவதனல் வேற்றுமையில்லதை அறிவிக்கும்.

நான் என்னும் சொல்லுக்கு -' உடம்புமுதலியவற்ருேடு நிற்கும் ஆத்மா ' என்பது பொருள். இச்சொல் - உடம்புமுதலியவற்ருல் விசேடிக்கப்பட்ட ஆத்மாவைக் கூறுவதாயினும், அவற்றை [உடம்புமுதலியவற்றைத் தனித்தனி சோதித்து இஃது ஆத்மாவன்று இஃது ஆத்மாவன்று என்று நீக்கிச்செல்லும்வழி முடிவில் உண்மைமாத்திரமாய்த் தானேவிளங்கும் கேவலஆத்மஸ்வரூபத்தை லக்ஷணையால் அறிவிப்பதாம் என்க. (20)

31.

(சங்கை) :—இவ்வாறு உடம்புமுதலியவற்றைச் சோதனைசெய்து நீக்கிச் செல்லும்வழி சூந்யம் முடிவாய்த் தலைப்படக் காண்கின்ருேம். ஆகலான், அங்ஙனம் நிர்விசேஷமான ஆத்மா அமைதல் எவ்வாறு? எனில்,—

(ஸமாதாநம்) :—அதிலே சுருதி ஆராய்ச்சிசெய்து நிர்ணயித்துத் தந்திருக்கும் அவ்வாத்மஉண்மையைக் கேட்பாயாக :

புத்தியுள்ள(வனொருவன் ப்ரஹ்மமில்லை என்று அறிவானுகில், இல்லாதவனே ஆகிருன் ; ப்ரஹ்மம் உள்ளது என்று அறிவானுகில், அதனுல் இவனை (ஞானிகள்) உள்ளவனுக அறிகிருர்கள். (தை-உப-2-6)

இல்லாதவனே ஆகிருன் - ப்ரஹ்மமே ஆத்மாவாதலால், அஃதில்லாவழித் தானே இல்லாதவனுகிருன் என்றபடி. (31)

32.

இதனேடு, இவ்வுல்லாஸத்தை முடிக்கிருர் :

ஸ்ரீதக்ஷிணமூர்த்திஸ்தோத்திரத்தின் பொருளை உணர்த்துகின்ற மாநஸோல்லாஸம் என்னும் நூலினுள் ஆரும் உல்லாஸப் பொழிப்புரை முற்றும்.

---

## ஆறும் உல்லாஸம்.

### பதவுரை.

1.

| | |
|---|---|
| यथा | எப்படி |
| स्वप्ने | கனவில் |
| विश्वं | ஜகத்து |
| तत्स्थं | அதனிடத்துத் தங்கியதாய் |
| (भवति) | (இருக்கின்றதோ) |
| तथा | அப்படியே |
| जाग्रति अपि | நனவிலும் |
| (तत्स्थं) | (அதனிடத்துத் தங்கியதாய்) |
| (भवति) | (இருக்கின்றது) |
| इति (उच्यते) चेत् | என்று (சொல்லப்படுகிற) —தானல், |
| सुषुप्तौ | உறக்கத்திலே |
| कस्य | யாருக்கு |
| किं | எது |
| भाति | விளங்குகின்றது ? |
| तत्र | அதிலே |
| कः | யார் |
| स्थायी | நிலையான |
| चेतनः | அறிவுப்பொருளாய் |
| (भवति) | (இருக்கின்றது ?) |

1½.

| | |
|---|---|
| सर्वं च | எல்லாமே |
| क्षणिकं | க்ஷணப்பொழுதுமாத்திர முள்ளதாய் |

| | |
|---|---|
| शून्यं | பாழாய் |
| (अस्ति) | (இருக்கின்றது.) |
| सर्वम् एव | எல்லாமே |
| स्वलक्षणं | தனக்குரிய தன்மைத்தாய் |
| (अस्ति) | (இருக்கின்றது.) |

2.

| | |
|---|---|
| मह्यम्बग्निसमीरणाः | நிலம் நீர் நெருப்பு வாயு என்பன |
| परमाणूनां | பரமாணுக்களின் |
| सङ्घातः | ஸமுதாயம் |
| ( स्यात् ) | (ஆகும்.) |

3.

| | |
|---|---|
| मनुष्यादिशरीराणि | மனிதர்முதலானோருடைய தேகங்கள் |
| स्कन्धपञ्चकसम्हतिः | ஐந்து ஸ்கந்தங்களின் ஸமுதாயம் |
| ( स्यात् ) | (ஆகும்.) |
| स्कन्धाः च | ஸ்கந்தங்கள் |
| रूपविज्ञानसम्ज्ञा-सम्स्कारवेदनाः | ரூபம், விஜ்ஞானம், ஸம்ஜ்ஞை, வாஸனை, வேதனை |
| (इति) | (என்று) |
| (पञ्च) | (ஐந்து) |
| (स्युः) | (ஆகும்.) |

3½.

| | |
|---|---|
| रूपाणि | 'ரூபங்கள்' |
| (इति) | (என்னும்) |
| (शब्दस्य) | (சொல்லுக்கு) |
| रूप्यन्ते | ரூபிக்கப்படுகின்றன |
| इति | என |

| | |
|---|---|
| (व्युत्पत्तिः) | (சொற்பொருளுரைத்தல்) |
| ( स्यात् ) | (ஆகும்.) |
| (तानि) | (அவை) |
| विषयाः च | விஷயங்களாயும் |
| इन्द्रियाणि अपि | இந்திரியங்களாயும் |
| (भवन्ति) | (உள்ளன.) |

---

4.

| | |
|---|---|
| विषयेन्द्रिययोः | விஷயங்கள் இந்திரியங்கள் என்றவற்றினுடைய |
| ज्ञानं | அறிவு |
| विज्ञानस्कन्धः | விஜ்ஞாநஸ்கந்தமாக |
| उच्यते | சொல்லப்படுகின்றது. |

---

5.

| | |
|---|---|
| सञ्ज्ञागुणक्रियाजाति-विशिष्टप्रत्ययात्मिका | பெயர் குணம் தொழில் ஜாதி சிறப்புணர்ச்சி என்ற வடிவிற்ருன் |
| पञ्चधा | ஐந்துவகை |
| कल्पना | கற்பனையானது |
| सौगतैः | பௌத்தர்களால் |
| सञ्ज्ञास्कन्धस्य | ஸம்ஜ்ஞாஸ்கந்தத்திற்கு |
| प्रोक्ता | சொல்லப்பட்டிருக்கின்றது. |

---

6,7.

| | |
|---|---|
| गवां | ஆக்களுடைய |
| सञ्ज्ञा | பெயர் |
| गौः | ஆ |
| इति | என்று |

| | |
|---|---|
| उक्ता | கூறப்பட்டிருக்கின்றது. |
| जातिः तु | ஜாதியோ |
| गोगतं | ஆவினிடத்துள்ள |
| गोत्वं | ஆத்தன்மை |
| (स्यात्) | (ஆகும்.) |
| तस्य | அதனுடைய |
| गुणाः | குணங்கள் |
| शुक्लादयः | வெண்மை முதலியன |
| (स्युः) | (ஆகும்.) |
| तथा | அப்படியே |
| क्रियाः | வினைகள் |
| गच्छत्याद्याः | செல்லுதல் முதலியன |
| (स्युः) | (ஆகும்.) |
| असौ हि | அது |
| शृङ्गी | கொம்புள்ளதாக |
| चतुष्पात् | நான்கு காலுள்ளதாக |
| लाङ्गूली | வாலுடையதாக |
| (भवति) | (இருக்கின்றது) |
| (इति) | (என்ற) |
| (एतत्) | (இது) |
| विशिष्टप्रत्ययः | சிறப்புணர்ச்சியாக |
| (स्यात्) | (ஆகும்.) |
| एवं | இவ்வாறு |
| पञ्चविधा | ஐந்துவகை |
| क्लृप्तिः | கற்பனையானது |
| सञ्ज्ञास्कन्धः | ஸம்ஜ்ஞாஸ்கந்தம் |
| इति | என்று |
| ईर्यते | சொல்லப்படுகின்றது. |

7½.

| | |
|---|---|
| रागाद्याः | அவா முதலியனவும் |
| पुण्यपापे च | புண்ய பாபங்களும் |
| सम्स्कारस्कन्धः | வாஸநாஸ்கந்தமாக |
| उच्यते | சொல்லப்படுகின்றது. |

---

8.

| | |
|---|---|
| सुखं | இன்பமும் |
| दुःखं च | துன்பமும் |
| मोक्षः च | (அவற்றின்) நீக்கமும் |
| वेदनाह्वयः | வேதனை என்னும் பெயருடைய |
| स्कन्धः | ஸ்கந்தமாக |
| स्यात् | ஆகும். |

---

8½.

| | |
|---|---|
| आत्मा | ஆத்மாவென்பது |
| पञ्चभ्यः एव | ஐந்தேயான |
| स्कन्धेभ्यः | ஸ்கந்தங்களினும் |
| अन्यः | வேருய் |
| कश्चन | ஒன்று |
| न अस्ति | இல்லை. |

---

9.

| | |
|---|---|
| कर्ता | கர்த்தாவான |
| ईश्वरः | ஈச்வரன் |
| कश्चित् | ஒருவன் |
| न (अस्ति) | இல்லை. |

| | |
|---|---|
| जगत् | ப்ரபஞ்சம் |
| स्वगतातिशयं | தன்னிடத்தேயுள்ள உதவியை உடையதாய் |
| (वर्तते) | (இருக்கின்றது.) |

---

10.

| | |
|---|---|
| क्षणिकेभ्यः | கணப்பொழுதுமாத்திரமுள்ள |
| स्कन्धेभ्यः | ஸ்கந்தங்களினின்று |
| (आध्यात्मिक सङ्घातः) | (அகச்சமுதாயம்) |
| अभिजायते | உண்டாகின்றது. |
| क्षणिकेभ्यः | கணப்பொழுதுமாத்திரமுள்ள |
| परमाणुभ्यः | பரமாணுக்களினின்று |
| (बाह्यसङ्घातः) | (புறச்சமுதாயம்) |
| अभिजायते | உண்டாகின்றது. |
| पूर्वपूर्वक्षणात् एव | முந்தின முந்தின க்ஷணத்தினின்றே |
| उत्तरोत्तरः | பிந்தினபிந்தின |
| क्षणः | க்ஷணம் |
| स्यात् | உண்டாகும். |

---

11.

| | |
|---|---|
| पूर्वस्मात् एव | முந்தினதேயான |
| ज्ञानात् हि | அறிவினின்றன்றோ |
| उत्तरं | பிந்தின |
| ज्ञानं | அறிவு |
| जायते | பிறக்கின்றது. |
| अयं | ‘ இது |
| सः एव | அதேதான் ’ |
| इति | என்ற |
| ज्ञानं | அறிவு |

| | |
|---|---|
| इयं | ' இது |
| सा | அதே |
| ज्वाला | சுடர் ' |
| इतिवत् | என்பதுபோல |
| भ्रमः | மயக்கம் |
| (स्यात्) | (ஆகும்.) |

---

12.

| | |
|---|---|
| आत्मानात्मसु | ஆத்மாவிலும், அநாத்மாவிலும் |
| अस्ति | ' இருக்கின்றது |
| भाति | விளங்குகின்றது ' |
| इति | என்ற |
| धीः | புத்தியானது |
| भ्रान्तैः | மயங்கியவர்களால் |
| कल्प्यते | கொள்ளப்படுகின்றது. |
| हानोपादानराहित्यात् | தள்ளுதலும் கொள்ளுதலும் இன்மையால் |
| आकाशः | ஆகாசம் |
| प्रकाशते किं | விளங்குகின்றதா ? |

---

12½.

| | |
|---|---|
| इति | என்று |
| एवं | இவ்வாறு |
| भाषमाणः | கூறுகின்ற |
| बौद्धसिद्धान्ती | பௌத்தஸிந்தாந்தியானவன் |
| निषिध्यते | மறுக்கப்படுகின்றான். |

6.

| | |
|---|---|
| यः | எந்த |
| पुमान् | புருஷன் |
| करणोपसम्हरणतः | கரணம்ஒடுங்குவதனால் |
| सुषुप्तः | தூங்கியவனாய் |
| मायासमाच्छादनात् | மாயைமறைப்பதனால் |
| राहुग्रस्तदिवाकरेन्दु-सदृशः | ராகுவினால்பிடிக்கப்பட்டசூரிய-சந்திரர்கட்கு ஸமானனாய் |
| सन्मात्रः | உண்மைமாத்திரமாய் |
| अभूत् | இருந்தானோ ; |
| यः | எவன் |
| प्रबोधसमये | விழிப்புசமயத்திலே |
| प्राक् | ' முன் |
| अस्वाप्सं | தூங்கினேன் ' |
| इति | என்று |
| प्रत्यभिज्ञायते | நினைவுகூர்ந்தறிகின்றானோ ; |
| तस्मै | அந்த |
| श्रीगुरुमूर्तये | ஸ்ரீமதாசார்யஸ்வரூபமான |
| श्रीदक्षिणामूर्तये | ஸ்ரீதக்ஷிணமூர்த்திக்கு |
| इदं | இந்த |
| नमः | நமஸ்காரம். |

---

| | |
|---|---|
| अयं | இது |
| अस्य | இதனது |
| आशयः | கருத்தாக |
| (भवति) | (இருக்கின்றது.) |

13, 13½.

| | |
|---|---|
| जगतः | ப்ரபஞ்சத்திற்கு |
| शून्यं | பாழ் |
| हेतुः | காரணமாக |
| ( स्यात् ) चेत् | இருந்தால் |
| जगत् एव | ப்ரபஞ்சமே |
| न सिध्यति | அமைகிறதில்லை. |
| घटः | 'குடம் |
| शून्यः | பாழ்' |
| पटः | 'ஆடை |
| शून्यः | பாழ்' |
| इति | என்று |
| कैः | யாவரால் |
| प्रतिपाद्यते | சொல்லப்படுகின்றது ? |

14, 14½.

| | |
|---|---|
| जगत् | ப்ரபஞ்சம் |
| शून्यं | பாழாக |
| ( स्यात् ) चेत् | இருந்தால் |
| नरविषाणवत् | மனிதன்கொம்புபோல |
| न भासेत एव | புலப்படவேகூடாது. |
| वस्त्वर्थी | ஒருபொருளை வேண்டுவோன் |
| किं | எதனை |
| उपाददात् | கொள்வான் ? |
| भारार्तः | சுமையினுல் பீடிக்கப்பட்டவன் |
| किं | எதனை |
| परित्यजेत् | தள்ளுவான் ? |

15, 15½.

| | |
|---|---|
| च | அன்றியும் |
| स्वस्य | தன்னுடைய |
| आत्मनः | ஆத்மா |

| | |
|---|---|
| शून्यत्वात् | சூந்யமாயிருத்தலால் |
| कः | யார் |
| (किञ्चित्) | (ஒன்றனை) |
| विदध्यात् | விதிப்பான் ? |
| वा | அல்லது |
| निषिध्येत् | மறுப்பான் ? |
| तस्मात् | ஆதலால் |
| इदं | இந்த |
| सर्वं | எல்லா |
| जगत् | ப்ரபஞ்சமும் |
| निराकृतं | காரணமில்லதாய் |
| अवसीदेत् | அழிந்துவிடும் ? |

16, 16½.

| | |
|---|---|
| स्कन्धानां | ஸ்கந்தங்களையும் |
| परमाणूनां | பரமாணுக்களையும் |
| सङ्घातयिता | சேர்த்தமைப்பவன் |
| न अस्ति चेत् | இல்லையானல், |
| सङ्घातः | சேர்க்கையென்பது |
| हेतुं विना | காரணமில்லாது |
| न (भवेत्) | ஆகாது. |
| घटपटादयः | குடம் ஆடை முதலியன |
| जडाः | ஜடங்களாய் |
| (भवन्ति) | (உள்ளன.) |

17, 17½.

| | |
|---|---|
| च | மற்றும் |
| भ्रान्तः | மயங்கிய |
| (बौद्धः) | (பௌத்தன்) |
| (अहं) | (நான்) |
| महानुभावः | மாட்சிமையுடையோனுக |

| | |
|---|---|
| भूयासं | ஆகவேண்டும் |
| इति | என்று |
| मन्यते | நினைத்துக்கொண்டிருக்கிறான். |
| आत्मापलापकः | ஆத்மாவை மறுக்கின்ற |
| वौद्धः | பௌத்தன் |
| किमर्थं | எதற்காக |
| व्रतं | வ்ரதத்தை |
| चरति | அநுஷ்டிக்கிறான் ? |

18.

| | |
|---|---|
| प्रत्यभिज्ञा | ப்ரத்யபிஜ்ஞை |
| भ्रान्तिः | மயக்கமாக |
| ( स्यात् ) यदि | (இருக்கு)மானால் |
| भोजनादि | உண்ணல் முதலியன |
| कथं | எப்படி |
| भवेत् | ஆகும் ? |

19.

| | |
|---|---|
| एतत् | இந்த |
| अन्नं | உணவு |
| गतदिनान्नवत् | சென்ற தினத்து உணவுபோல |
| इष्टसाधनम् एव | வேண்டியதை ஸாதிப்பதாகவே |
| (भवति) | (இருக்கின்றது) |
| इति | என்று |
| बालः अपि | குழந்தையும் |
| निश्चित्य | துணிந்து |
| भोजनादौ | உண்ணல் முதலியவற்றிலே |
| प्रवर्तते | தலைப்படுகின்றது. |

20.

| | |
|---|---|
| अवकाशप्रदातृत्वं | இடத்தைக் கொடுப்பதென்பது |
| यथा | எப்படி |
| अकाशार्थक्रिया | ஆகாசத்தின் உபயோகமாக |
| (अस्ति) | (இருக்கிறதோ) |
| तथा एव | அப்படியே |
| कर्तृत्वज्ञातृतादिका | செய்பவனுதல் அறிபவனுதல் முதலியன |
| पुम्सः | ஆத்மாவினுடைய |
| अर्थक्रिया | உபயோகமாக |
| (अस्ति) | (இருக்கின்றது.) |

21.

| | |
|---|---|
| आत्मा | ஆத்மா |
| सुषुप्तिसमये अपि | தூக்கத்திலுங்கூட |
| सत्यज्ञानसुखात्मकः | உண்மையும் அறிவும் ஆநந்தமு-மாகிய ஸ்வரூபமுடையதாய் |
| (भवति) | (இருக்கின்றது.) |
| यतः | ஏனெனில் |
| (सः) | (அது) |
| (अहं) | (நான்) |
| सुखं | ஸுகமாக |
| अस्वाप्सं | தூங்கினேன் |
| इति | என்று |
| एवं | இவ்வாறு |
| प्रत्यभिज्ञायते | நினைவுகூர்ந்தறியப்படுகின்றது. |

22.

| | |
|---|---|
| प्रत्यभिज्ञायते | நினைவுகூர்ந்தறியப்படுகின்றது |
| इति | என்பது |

| | |
|---|---|
| कर्मकर्तरि | கர்மகர்த்தரியில் |
| प्रयोगः | வழங்குதல் |
| (स्यात्) | (ஆகும்.) |
| आत्मा | ஆத்மா |
| स्वयम्प्रकाशत्वात् | ஸ்வப்ரகாசமாதலால் |
| आत्मानं | தன்னை |
| आत्मना | தன்னால் |
| जानाति | அறிகின்றது. |

---

23.

| | |
|---|---|
| (आत्मा) | (ஆத்மா) |
| सुषुप्तौ | உறக்கத்திலே |
| मायया | மாயையினால் |
| मूढः | மயங்கியதாய் |
| जडः इव | ஜடம்போல |
| अन्धः (इव) | குருடன்(போல) |
| लक्ष्यते | காணப்படுகின்றது ; |
| अप्रकाशतया | அப்ரகாசமாகவும் |
| स्वप्रकाशतया अपि च | ஸ்வப்ரகாசமாகவும் |
| भाति | விளங்குகின்றது. |

---

23½.

| | |
|---|---|
| च | மேலும் |
| (सः) | (அது) |
| जडात्मनि | ஜடமாகிய |
| देहादौ | உடம்பு முதலியவற்றுள் |
| साक्षात् ईशः | ஸாக்ஷாத் ஈச்வரனாக |
| विविच्यते | பகுத்தறியப்படுகின்றது. |

---

24, 24½.

| | |
|---|---|
| एषा एव | இதுவே |
| मोहिनी | மயக்குவதான |
| महेशितुः | மகேச்வரனுடைய |
| मायाशक्तिः नाम | மாயாசக்தியாக |
| (भवति) | (இருக்கின்றது.) |
| प्रमातॄणां | ஜீவர்கட்கு |
| मोहापोहः | மயக்கம் நீங்குதல் |
| मोक्षः | முக்தி |
| इति | என்று |
| अभिधीयते | சொல்லப்படுகின்றது. |

---

25.

| | |
|---|---|
| (आत्मा) | (ஆத்மா) |
| अवस्थात्रयनिर्मुक्तः | மூன்று நிலைமையினின்றும் நீங்கியதாக |
| देहादिभिः | உடம்பு முதலியவற்றால் |
| अनाविलः | கலக்கப்படாததாக |
| (अस्ति) | (இருக்கிறது.) |

---

26

| | |
|---|---|
| (सः) | (அது) |
| सन्मात्रः | உண்மைமாத்திரமாய் |
| इषीकः इव | முஞ்ஜக்குருத்துப்போல |
| (भवति) | (இருக்கின்றது) ; |
| न्यग्रोधकणिकोपमः | ஆலமரவிதையை உவமையாக உடையதாய் |

| | |
|---|---|
| बाह्यात् | வெளியிலிருந்து |
| बाह्यदलोन्मुक्तकदलीकन्द- | மேல்மட்டைகள் உரிக்கப்பட்ட |
| सन्निभः | வாழைத்தண்டுக்கு ஸமானமாய் |
| (अस्ति) | (உள்ளது.) |

27.

| | |
|---|---|
| पुरुषः | ஆத்மா |
| निरंशः | உறுப்பில்லதாய் |
| निर्विकारः च | வேறுபாடில்லதாய் |
| निराभासः | ஆபாஸமில்லதாய் |
| निरञ्जनः | குற்றமில்லதாய் |
| केवलः | தனியாய் |
| पूर्णः | நிறைந்த |
| परमेश्वरः | பரமேச்வரனாக |
| प्रोच्यते | சொல்லப்படுகிறான். |

28, 29.

| | |
|---|---|
| वाचः | வார்த்தைகள் |
| यत्र | எங்கே |
| निवर्तन्ते | பின்வாங்குகின்றனவோ, |
| मनः | மனம் |
| यत्र | எங்கே |
| विलीयते | ஒடுங்குகின்றதோ, |
| समस्तानि | எல்லா |
| भूतानि | பொருள்களும் |
| भुवनानि च | உலகங்களும் |
| तत्त्वानि च | ஜீவர்களும் |
| समुद्रे | கடலிலே |
| सिन्धवः यथा | ஆறுகள்போல |

| | |
|---|---|
| यत्र एव | எங்கேயே |
| एकी भवन्ति | ஒன்றாகின்றனவோ, |
| तत्र | அங்கே |
| एकत्वं | ஒன்றாயிருத்தலை |
| अनुपश्यतः | காண்பவனுக்கு |
| शोकः | துயரம் |
| कः | யாது ? |
| मोहः | மயக்கம் |
| कः | யாது ? |

---

30.

| | |
|---|---|
| अहं | நான் என்பது |
| वाच्यवाचकरूपत्वात् | அர்த்தத்தைச் சொல்லும் சொல் வடிவிற்றாதலால் |
| सविकल्पः अपि सन् | வேற்றுமையுள்ளதாயினும் |
| देहादीनां | உடம்பு முதலியவற்றை |
| व्यपोहेन | நீக்குவதனால் |
| निर्विकल्पकं | வேற்றுமையில்லதை |
| लक्षयेत् | அறிவிக்கும். |

---

31.

| | |
|---|---|
| विद्वान् | கற்றறிந்தோன் |
| ब्रह्म | ப்ரஹ்மம் |
| असत् | இல்லாதது |
| इति | என்று |
| वेद चेत् | அறிவானானால், |
| असन् एव | இல்லாதவனே |
| भवेत् | ஆவான் ; |

| | |
|---|---|
| ब्रह्म | ப்ரஹ்மம் |
| अस्ति | இருக்கின்றது |
| इति | என்று |
| वेद चेत् | அறிவானுனல், |
| ततः | அதனுல் |
| एनं | இவனை |
| (ज्ञानिनः) | (ஞானிகள்) |
| सन्तं | உள்ளவனுக |
| विदुः | அறிகிருர்கள். |

---

32.

| | |
|---|---|
| श्रीदक्षिणामूर्तिस्तोत्र-अर्थप्रतिपादके | ஸ்ரீ தக்ஷிணுமூர்த்தியினுடைய ஸ்தோத்திரத்தின் பொருளை உணர்த்துகின்ற |
| मानसोल्लासे | மாநஸோல்லாஸம் என்னும் |
| प्रबन्धे | நூலினுள் |
| षष्ठोल्लासस्य | ஆருவது உல்லாஸத்தின் |
| संग्रहः | பொழிப்புரை |
| इति | முற்றும். |

---

अथ

# सप्तमोल्लासः

1.

प्रत्यभिज्ज्ञाबलादात्मा स्थायी निर्धार्यते यदि ।
का नाम प्रत्यभिज्ञैषा किं वा तस्याश्च कारणम् ॥

2.

प्रत्यक्षादिप्रमाणेषु प्रत्यभिज्ञा न पठ्यते ।
कथं तस्याः प्रमाणत्वम्

---

## ஏழாம் உல்லாஸம்.

வினு.

1.

ஆத்மா நிலையானபொருள் என்று - ப்ரத்யபிஜ்ஞையாகிய பிரமாணத்தினுலே சென்ற அத்தியாயத்தினுள் கூறப்பட்டது. அதில், ப்ரத்யபிஜ்ஞை ப்ரமாணமாவதிலே மாணுக்கன் ஐயமுற்றவனுய் வினவலாயினுன் :

ப்ரத்யபிஜ்ஞையின் வலிமையினுல், ஆத்மா நிலையானதாக நிர்ணயிக்கப் படுமாயின்,—ப்ரத்யபிஜ்ஞை என்பது யாது ? அதற்குக்காரணமும் யாது ?

2.

அவன், தான் வினவியதை விளங்கக் கூறுகிருன் :

ப்ரத்யபிஜ்ஞையானது ப்ரத்யக்ஷம்முதலிய ப்ரமாணங்களுள் கூறப்படவில்லை. (ஆகவே,) அது ப்ரமாணமாதல் எப்படி ?

ப்ரத்யபிஜ்ஞையென்பது, ப்ரத்யக்ஷம் அநுமானம் முதலிய ஆறு ப்ரமாணங்களுள்ளும் யாதாயினும் ஒன்ருக வைத்து எண்ணப்படுவதில்லை. அன்றியும் அஃதோர் ஸ்வதந்திரமான ஏழாவது ப்ரமாணமாதலும் இல்லை. ஆகவே, அது ஆத்மாவினுடைய நிலையானதன்மையை நிரூபித்தலிலே ப்ரமாணமாகாது என்பது பொருள்.

इति पृच्छन् प्रबोध्यते ॥

बाल्यादिष्वपि जाग्रदादिषु तथा सर्वास्ववस्थास्वपि
व्यावृत्तास्वनुवर्तमानमहमित्यन्तः स्फुरन्तं सदा ।
स्वात्मानं प्रकटीकरोति भजतां यो भद्रया मुद्रया
तस्मै श्री गुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥

---

விடை.

இவ்வாறு வினவுகின்ற (மாணுக்கன்) அறிவுறுத்தப்படுகிருன் :

எ. இளமை முதலியனவும் அவ்வாறே நனவு முதலிய எல்லா நிலைமைகளும் பிறழத் (தான்) தொடர்ந்துநிற்பதாய் எப்பொழுதும் உள்ளே நான்என விளங்கும் சொந்த ஆத்மாவை எவன் (தன்னைத்) தொழுவோர்க்கு பத்ராமுத்ரையினுல் காட்டுகின்ருனே, அந்த ஸ்ரீமதாசார்யஸ்வரூபமான ஸ்ரீதக்ஷிணமூர்த்திக்கு இந்த நமஸ்காரம்.

இளமைமுதலியன - பாலப்பருவம், குமாரப்பருவம், யௌவநம், மூப்பு என்பன. நனவு முதலிய - நனவு, கனவு, உறக்கம் என்ற. எல்லா நிலைமைகளும் - மூர்ச்சை நோய், வறுமை, செல்வம், பார்த்தல், கேட்டல், நினைத்தல், நிற்றல், படுத்தல் முதலிய ஸகல நிலைமைகளும். சொந்த - பரப்ரஹ்மஸ்வரூபமாகிய. பத்ரா முத்ரையாவது - பெருவிரலையும் சுட்டுவிரலையும் அவற்றினது நுனிகளிலே சேர்க்க அதனுலாகும் வட்டமாம். தர்க்கமுத்ரை எனினும், சிந்முத்ரை எனினும், ஞாநமுத்ரை எனினும், வ்யாக்யாநமுத்ரை எனினும், பத்ராமுத்ரை எனினும் ஒக்கும்.

குழந்தைப்பருவம் குமாரப்பருவம் கனவு நனவு பிணி மூப்பு வறுமை செம்மை பார்த்தல் படுத்தல் நிற்றல் நினைத்தல் என்ற இவைபோன்ற நிலைமைகளின் அநுபவமே ப்ராணிகளின் வாழ்க்கையென்பது. அவையோ தமது இயல்பிலே ஜடமாய் பொய்ம்மையாய் துன்பமாய் மாறிமாறிச் செல்லுகின்றன.

செல்லுங்கால்,—" எந்தநான் கனவைக் கண்டேனே,பின்னர் யாது மறியாது சுகமாகத் தூங்கினேனே, அந்த நான் இப்பொழுது விழித்துக்கொண்டிருக்கிறேன்" எனக் கனவு நனவு உறக்கம் என்னும் மூன்று நிலைமைகளிலும், அவ்வாறே " எந்த நான், குழந்தையாய்க் கிடந்தேனே, குமாரனுய் இருந்தேனே, யௌவநத்தை யடைந்தேனே அந்தநான் இப்பொழுது கிழவனுயிருக்கின்றேன்" எனப்பால்யம் கௌமாரம் யௌவநம் வார்த்தக்யம் என்னும் நான்கு நிலைமைகளிலும், புருஷனுவான் இடைவிடாது தொடர்ந்துநிற்கும் நிலையான உண்மையா யிருக்கின்ருன். அவ்வண்ணமே, பார்த்தல் கேட்டல் நினைத்தல் முதலியவற்றைச் செய்கின்ற கண் காது மனம் முதலியன மாறிமாறிப்போகத் தான் மாருதவனுய் அவையனைத்திற்கும் ஸாக்ஷியாய் எப்பொழுதும் இடையருது தொடர்ந்துநிற்கும் அறிவாய் அவன் விளங்குகிருன். அப்படியே, அவன் பிரியமாகக்கொண்ட பணம் வீடு மக்கள் முதலியன மாறிப்போக, எப்பொழுதும் தான் தனக்குப் பிரியமானவனுய், தன்னிடத்துள்ள அந்தப் பிரியத்திற்கு ஏற்றக்குறைவு இன்மையால் எப்பொழுதும் இடை விடாது தொடர்ந்துநிற்கும் ஆநந்தமா யிருக்கிருன். அதுபோலவே, நான் என்னும் மனம் முதலியன மாறிப்போக அவன் அந்த நான்என்னும் எண்ணத்தைத்தான் மாருதவனுய் எப்பொழுதும் இடையருது தொடர்ந்துநிற்கும் ஆத்மாவா யிருக்கிருன்.

ஆகவே, உண்மையாயிருத்தலையும், அறிவாயிருத்தலையும், ஆநந்தமாயிருத்தலால் பிரியமாயிருத்தலையும், நான்என்னும் எண்ணத்திற்கு விஷயமாயிருத்தலால் உள்ளேயுள்ளதன்மையையும் எது ஒருபொழுதும் பிறழ்வதில்லையோ, அதுவே த்வம்என்னும்சொல்லால் அறிவிக்கப்படும் ஆத்மாவாம் என்பது.

**"तं वा एतमात्मानं जाग्रत्यस्वप्नमसुषुप्तं स्वप्नेऽजाग्रतमसुषुप्तं सुषुप्तेऽजाग्रतमस्वप्नं तुरीयेऽजाग्रतमस्वप्नमसुषुप्तमव्यभिचारिणं नित्यानन्तसदेकरसं ह्येवं चक्षुषो द्रष्टा श्रोत्रस्य द्रष्टा वाचो द्रष्टा मनसो द्रष्टा बुद्धेर्द्रष्टा प्राणस्य द्रष्टा तमसो द्रष्टा सर्वस्य द्रष्टा ततः सर्वस्मादस्मादन्यो विलक्षणश्चक्षुषः साक्षी श्रोत्रस्य साक्षी वाचः साक्षी मनसः साक्षी बुद्धेः साक्षी प्राणस्य साक्षी तमसः साक्षी सर्वस्य साक्षी ततोऽविक्रियो महाचैतन्योऽस्मात् सर्वस्मात् प्रियतम आनन्दघनं ह्येवम्"**

एतदुक्तं भवति—

3.

भातस्य कस्यचित्पूर्वं भासमानस्य साम्प्रतम् ।
सोऽयमित्यनुसन्धानं प्रत्यभिज्ञानमुच्यते ॥

---

"அந்த இவ்வாத்மாவை, நனவிலே கனவில்லாததை உறக்கமில்லாததை, கனவிலே நனவில்லாததை உறக்கமில்லாததை, உறக்கத்திலே நனவில்லாததை கனவில்லாததை, துரீயத்திலே[நான்காம் நிலைமையிலே]நனவில்லாததை கனவில்லாததை உறக்கமில்லாததை,பிறழாததை, இவ்வாறு நித்யமாய் முடிவில்லதாய் உண்மையாய் ஒரு படித்தானதை. கண்ணைப் பார்ப்பது, காதைப் பார்ப்பது, வாக்கைப் பார்ப்பது, மனத்தைப் பார்ப்பது, புத்தியைப் பார்ப்பது, ப்ராணனைப் பார்ப்பது, இருட்டைப் பார்ப்பது, யாவற்றையும் பார்ப்பது. ஆகவே, இந்த எல்லாவற்றிற்கும் வேறுனது, வேற்றியல்புடையது. கண்ணுக்கு ஸாக்ஷி, காதுக்கு ஸாக்ஷி, வாக்குக்கு ஸாக்ஷி, மனத்திற்கு ஸாக்ஷி, புத்திக்கு ஸாக்ஷி, ப்ராணனுக்கு ஸாஷி, இருட்டிற்கு ஸாக்ஷி, ஸகலத்திற்கும் ஸாக்ஷி. ஆகவே, மாறுபாடில்லது, பெருமையான அறிவானது, இந்த எல்லாவற்றினும் மிகப் பிரியமானது, இவ்வாறு ஆநந்தக்கட்டியானதை"—(நிரு - உத் - தா - 2).

'நல்லோர்களே! பலநிலைமையனவாய்ப் பலபடி மாறுகின்ற உடம்புமுதலியவற்றை விளக்கும் மாருத ஒரே உண்மையாய் ஆநந்தஅறிவான ப்ரஹ்மமாகிய ஆத்மாவே நான் என்று தெரிந்துகொள்ளுங்கள்' எனச் சிஷ்யர்கட்கு முஞ்ஜைப் புல்லினின்றும் இளங்குருத்தைப்போல உடம்புமுதலியவற்றினின்றும் ஆத்மாவை ப்ரஹ்மஸ்வரூபமாகப் பிரித்தெடுத்துக்காட்டி விளங்கஉணர்த்தியருளும் குருவான ஈச்வரனுக்கு நமஸ்காரம் என்பது பொருள். (7)

இது உணர்த்தப்பட்டதாகின்றது.

ப்ரத்யபிஜ்ஞை இன்ன தென்பது.

3.

"ப்ரத்யபிஜ்ஞையென்பது யாது?" (7 - 1) எனக் கீழே வினவிய வினுவிற்கு விடையை அருளிச்செய்கிருர்:

முந்தி விளங்கியதாய் இப்பொழுது விளங்குகின்ற ஒன்றை 'இது அது' என நினைவுகூர்ந்தறியும் உணர்வு ப்ரத்யபிஜ்ஞை எனப்படுகின்றது.

4.

तद्देशकालाकारादीन् अवधूयाऽऽनुषङ्गिकान् ।
यथैकं वस्त्वनुस्यूतं प्रत्यभिज्ञानमात्मनः ॥

5.

मायानुषङ्गसञ्जातकिञ्चिज्ज्ञत्वाद्यपोहनात् ।
सर्वज्ञत्वादिविज्ञानं प्रत्यभिज्ञानमात्मनः ॥

6.

पूर्वजन्मानुभूतार्थस्मरणान्मृगशावकः ।
जननीस्तन्यपानाय स्वयमेव प्रवर्तते ॥

---

ப்ரத்யபிஜ்ஞையாவது - முன்னும் பின்னுமுள்ள இடம் காலம் முதலியவற்ருல் விசேடிக்கப்பட்ட பாகங்களை நீக்கி, முன்னும் பின்னும் தொடர்ந்துநிற்கின்ற விசேடிக்கப்படாத பொருளைமாத்திரம் நினைவொடு அறிதலாம் என்றவாறு. (3)

4.

அதனை விவரித்து ஆத்மாவினிடத்துக் காட்டுகிருர் :

செயற்கையினுலான அந்த இடம் காலம் வடிவம் முதலியவற்றைத் தள்ளி, எப்படி ஒரேபொருள் தொடர்ந்துநிற்பதாய் (அறியப்படுகின்றதோ ; அப்படியே ஆகின்றது) ஆத்மாவின் ப்ரத்யபிஜ்ஞை.

5.

ஆத்மாவின் ப்ரத்யபிஜ்ஞையாகிய தார்ஷ்டாந்திகத்தை உணர்த்துகிருர் :

மாயையின் செயற்கையினுலான சிற்றுணர்வுடைமை முதலியவற்றைத் தள்ளி, முற்றுணர்வுடைமைமுதலியவற்றை அறிதல் ஆத்மாவின் ப்ரத்யபிஜ்ஞையாம்.

மாயையினையும் அதனது காரியங்களையும் நீக்கியவளவிலே, அளவுபடா அறிவான அழிவிலா ஆநந்தப்பொருளை நேரே கண்டுணர்தல் எதுவோ அதுவே ஆத்மாவின் ப்ரத்யபிஜ்ஞையாம் என்க. (5)

## ஆத்மா நித்யப்பொருள்.

6.

இனி, ஆத்மா நிலையாயிருத்தலை ப்ரத்யபிஜ்ஞையினுல் சாதிக்கிருர் :

ஒருமிருகக்கன்ருனது முந்தின பிறவியிலே அநுபவித்த பொருளின் நினைப்பினுல் தாயின் பாலை ஊட்டத் தானே தலைப்படுகின்றது.

7.

तस्मान्निश्चीयते स्थायीत्यात्मा देहान्तरेष्वपि ।
स्मृतिं विना न घटते स्तन्यपानं शिशोर्यतः ॥

8.

पूर्वत्रानुभवे काले स्मृतिकाले परत्र सन् ।
आत्मा सम्स्काररूपेण स्मरत्यर्थं स्वनिष्ठितम् ॥

---

அப்பொழுதுதான் ஈன்ற ஒருமிருகக்கன்ருனது உடனே [அப்பொழுதே] தன் தாயின் பாலை ஊட்டச் செல்லுதல் எதுவோ அது முந்தின பிறவியிலே அநுபவித்த பொருளின் நினைவினுலேயே ஆகின்றது ; அல்லாக்கால், அங்ஙனமே தன் தாயொடு கூட ஓடித் திரியவும் தலைப்படுதல் வேண்டும் என்று ஒழிக.

உடம்பு குழந்தைப்பருவம் முதல் கிழப்பருவம்வரையிலும் விகாரப்படுவதாயினும் ஆத்மா விகாரப்படாததாய், வேறுவேறுநிலைமைகளிலே தான் வேருகாததாய் எப்படி உளதோ, அப்படியே அது - தேவர் மனிதர் விலங்கு முதலிய அனேக உடம்புகள் பிறக்குங்கால் தான் பிறவாததாய், அவை இறக்குங்காலும் தான் இறவாததாகவே உளதாம். எனவே, ஆத்மா நித்யமென்று அமைந்தது. (6)

7.

ஆத்மா நித்யமென்று நிரூபித்ததை முடிக்கின்ருர் :

ஆதலால், ஆத்மா வேற்றுடம்புகளினுள்ளும் நித்யமாம் என்று நிர்ணயிக்கப்படுகின்றது. ஏனெனில், (தன் தாயின்) முலைப்பாலைக் குடித்தல் குழந்தைக்கு நினைவின்றி அமையாது.

குழந்தை பிறந்தவுடனே தன் தாயின் முலைப்பாலைக் குடிக்கப் பிறரது உபதேசமில்லாமலே தானே தலைப்படுகின்றது. இது, முந்தின பிறவியில் உண்டு அநுபவித்த உணவின் வாஸனையினுலாகின்றது. அல்லாக்கால், குழந்தை அவ்வாறுசெல்லுதல் அமையாததாக, அது பாவைபோல் கிடத்தல் வேண்டும். ஆனுல் அப்படி இல்லை. ஆகவே,—கௌமாரஉடம்பு போய் யௌவநஉடம்பு வருங்கால் ஆத்மா எப்படி விகாரப்படாததாய் ஒன்ருய் ஒருபடித்தாகவே உளதோ அப்படியே, இவ்வுடம்புபோய் வேருேர்உடம்பு வருங்காலும் அது விகாரப்படாததாய் ஒன்ருய் ஒருபடித்தாகவே உளதாம். எனவே, அது நித்யமென்று நிலைத்தது. (7)

8.

கீழ்க்கூறியதையே விளங்கக் காட்டுகின்ருர் :

முன் அநுபவசமயத்திலும், பின் நினைவுசமயத்திலும் இருக்கின்ற ஆத்மா தன்னிடத்து வாஸனைவடிவாய்த் தங்கிநிற்கும் பொருளை நினைவு கூர்கின்றது. (7)

9.

प्रत्यभिज्ञेति भावानां स्मृतिश्चेदभिधीयते ।
आत्मस्थैर्ये प्रमाणत्वं स्मृतिश्च प्राप्नुयात्कथम् ॥

10, 11.

स्मृतौ प्रकाशो नार्थस्य न चार्थानुभवस्य वा ।
न चाप्यर्थानुभवयोः अङ्गुल्योरिव सम्भवेत् ॥

नानुभूतिविशिष्टस्य पदार्थस्य च दण्डिवत् ।
सर्वत्राप्येवमित्येवं प्रसङ्गादिति

---

நினைவுகூர்கின்றது - நினைவுகூர்ந்தறிகின்றது. (8)

நினைவுகூர்தல் என்னும் ஸ்மிருதி ப்ரமாணமாகாது.

9.

"நினைவுகூர்கின்றது" (7:- 8) என்னும் சொல்லைக் கேட்டு, பூர்வவாதி ஆக்ஷேபிக்கிறான் :

ப்ரத்யபிஜ்ஞையென்பது பொருள்களின் நினைவு என்றால்,— 'ஆத்மா நிலையானதாம்' என்பதிலே நினைவு ப்ரமாணமாதலை எப்படி யடையும் ?

நினைவு ப்ரமாண மாகாமை, வாதிகட்கெல்லாம் சம்மதமாதலால் என்க. (9)

10, 11.

நினைவு என்னும் ஸ்மிருதி ப்ரமாணமாகாமையை அவனே சாதிக்கிறான் :

நினைவிலே (1) பொருளுக்கு விளக்க மில்லை : (2) பொருளின் அநுபவத்திற்கும் இல்லை : (3) இரண்டு விரல்கட்குப்போல, பொருளுக்கும் (அதனது) அநுபவத்திற்கும் இல்லை :

(4) தடியை யுடையவன்போல அநுபவத்தையுடைய பொருளுக்கும் இல்லை. ஏனெனில், எங்கும் இப்படியே என இவ்வாறுதல் வேண்டு மென்க.

(1) முன் அநுபவிக்கப்பட்டதோர்பொருளை நினைவுகூரும்பொழுது அது இந்திரியங்கட்குப் புலப்படாமையின், நினைவிலே அப்பொருளின் ஸ்வரூபம் உள்ளவாறு விளங்குவதில்லை. ஆதலால், நினைவு ப்ரத்யக்ஷப்ரமாண மாகாது.

(2) முன் அநுபவித்த பொருளை நினைக்கும்பொழுது அதனது அநுபவம் அழிந்திட்டமையால், நினைவிலே அவ்வநுபவமும் விளங்குவதில்லை.

12.

तच्छृणु ॥

प्राक्तनानुभवे नष्टे तदवष्टम्भसम्भवात् ।
सम्स्कारसञ्ज्ञात्सामग्र्यात् पौरुषाज्जायते स्मृतिः ॥

---

இனி, "न चाप्यर्थस्य निश्चयः ॥ [ பொருளில் நிர்ணயமும் இல்லை ]" என்னும் பாடத்திலே - 'நினைவுசமயத்திலே முன் அநுபவித்தபொருளினுடைய உண்மையினை நிச்சயித்தல் இல்லையாகலின், நினைவு அநுமாநாதி ப்ரமாணமுமாகாது' என்பது கருத்து.

(3) கீழ்க்கூறியவாறு நினைவுசமயத்திலே முன் அநுபவித்தபொருளாயினும் அதனது அநுபவமாயினும் விளங்குவதில்லையாதலால், நினைவிலே அவ்விரண்டும் விளங்கா ; எப்படி விரலும் விரலும் சேர்ந்துநின்று விளங்குகின்றனவோ, அப்படி விளங்கமாட்டா என்க.

(4) ஒருவன் தடியொடு சேர்ந்து விளங்குமாறுபோல, முன்அநுபவிக்கப்பட்ட பொருள் நினைவிலே அவ்வநுபவத்தோடு சேர்ந்தும் விளங்குவதில்லை. விளங்குமாயின், எங்குமே இப்படி இருத்தல் வேண்டும். உதாரணமாக, ஒரு சொல்லினுல் அதனது பொருளை நினைந்தவிடத்தும், அநுபவிக்கப்பட்ட பொருள் விளங்கவேண்டும். ஆனுல், அப்படி இல்லை என்று ஒழிக. இனி, " அநுபவத்தையுடைய பொருளுக்கும் " என்ற உம்மையினுல், பொருளையுடைய அநுபவத்தையும் கொள்க. அப்படியே, முந்தின அநுபவமும் முன்அநுபவிக்கப்பட்ட பொருளொடு சேர்ந்தாயினும் நினைவிலே விளங்குவதில்லை.

ஆகவே, நினைவு என்னும் ஸ்மிருதி ப்ரமாணமாகாதென்றவாறு. (10, 11.)

நி னை வு எ ன் னு ம் ஸ் மி ரு தி.

ஸித்தாந்தி தனது கருத்தை விரித்துரைக்கிருன் :

அதனைக் கேட்பாயாக :

12.

யாம் நினைவாகிய ஸ்மிருதியை ப்ரமாணமாகச் கொள்வதில்லை. மற்று, நினைவென்பது வேறோர்விதத்தால் பொருந்தாமையின், அதனையே [அப்பொருந்தாமையையே] ஆத்மாவின் நிலையானதன்மைக்கு ப்ரமாணமாகக் கொள்கிறோம். ஆகவே, நீகூறிய குற்றமொன்றும் எமது கொள்கையிலே இல்லை என, முதலில், நினைவு எழுதற்கு ஸாமக்ரியையைக் கூறுகிருர் :

முந்தின அநுபவம் அழிய அந்த ஆதாரத்திலே கிளம்புதலையுடையதாய் ஆத்மாவினுல் அதிஷ்டிக்கப்பட்டதாகி ஸம்ஸ்காரம் என்னும் பெயருடைத்தான காரணத்தினின்றும் நினைவென்பது உண்டாகின்றது.

13.

आवेद्यानुभवे नष्टे तदीयं विषयं प्रति ।
अनुभावकमात्मानं बोधयत्यनपायिनम् ॥

14.

विषये च प्रमुषिते नष्टे चानुभवे सति ।
स्वविश्रान्तं स्मरत्यर्थं देवोऽप्रमुषितस्सदा ॥

---

முந்தின அநுபவமாவது - முன் யாதாயினும் ஓர்காலத்து ஒருபொருளை அநுபவித்த அநுபவம். அந்த ஆதாரத்திலே-முந்தின அநுபவத்திற்கு ஆதாரமான இடத்திலே. (12)

13.

இவ்வாறு உண்டாகும் நினைவு என்ன செய்கிறது? எனின்,— கூறுவோம்:

(இந்த நினைவானது) - நன்கு அறியப்படும் பொருளினுடைய அநுபவம் அழிய, அதனது விஷயத்திலே அநுபவிக்கும்பொருளான ஆத்மாவை அழியாததாக அறிவிக்கின்றது.

அறியப்படும்பொருளினுடைய - விஷயத்தினுடைய. அதனது - அநுபவத்தினது. அழியாததாக - நிலைத்துநிற்பதாக, நித்தியமானதாக, ஒன்றாக என்றபடி.

முன் அநுபவிக்கப்பட்ட விஷயத்தை முந்தின அநுபவத்தாலான ஸம்ஸ்காரத்தினால் நினைவுகூரும் புருஷன் இப்பொழுதுள்ள விஷயத்தை அநுபவித்த உடனே இவ்வாறு எண்ணுகின்றான்: "எந்த நான் முன் அரசனாயிருந்து ராஜ்யத்தை அநுபவித்தேனோ அந்த நான் இப்பொழுது துறவியாய் ஹிமாலயபர்வதத்திலே கங்கையாற்றின்ஓசையை அநுபவிக்கின்றேன்" என ஆத்மாவை நினைவுகூர்ந்தறிகின்றான். இனி, பிறந்தவுடனேயே குழந்தைக்கு மகிழ்ச்சியும் வருத்தமும் பயமும் உண்டாகக் காண்கிறோம்: இவை உண்டாதல் முந்தின ஸம்ஸ்காரத்தாலன்றி நிகழமாட்டாது - 7 - 6, 7 - ஆம் சுலோகங்களைப் பார்க்க. ஆகவே, இவ்வாறாக ஸம்ஸ்காரத்தினாலாகும் நினைவு ப்ரத்யபிஜ்ஞைக்கு வழியாதலின், நினைவே ப்ரத்யபிஜ்ஞை எனப்பட்டது. என்பது கருத்து. (13)

ஆத்மா நிலையானது.

14.

இக்காரணத்தாலும் ஆத்மா நித்யமாம்:

விஷயமும் மறைய, (அதனது) அநுபவமும் மறைய, ஒருபொழுதும் மறையாததாய் எம்பொழுதும் விளங்கும் ஆத்மா தன்னிடத்துத் தீர்ந்த பொருளை நினைவுகூர்கின்றது.

14½.

**प्रमोषणं प्रमातॄणां मायया तमसा कृतम् ।**

15.

**मायाविद्ये प्रभोः शक्ती भानोश्छाया प्रभोपमे ॥**

---

மறைய - அழிய. தன்னிடத்துத் தீர்ந்த - ஆத்மாவினிடத்து ஸம்ஸ்கார வடிவமாய் ஒடுங்கிய என்றபடி.

அறியப்படுவதும் அறிதலும் பிறழ்கின்றனவாயினும், அறிபவன் பிறழ்கின்றானில்லை: அதாவது, அறியப்படுவதாகிய விஷயமும் அறிதலாகிய அநுபவமும் இல்லாமற்போகவும், அறியும்பொருளாகிய ஆத்மா இல்லாமற்போவதில்லை. ஆகலின், அது நித்யமாம் என்க.

14½.

ஆத்மாவிற்கு உறக்கத்திலே மறைதல் நிகழ்கின்றமையால், அது ஒருபொழுதும் மறையாதது (7 - 14) என எப்படிக் கூறுதலாகும்? எனில்,—கூறுவோம்:

ஜீவர்கட்கு மறைவு இருட்டாகிய மாயையினாலாவதாம்.

உறக்கத்திலே புத்திமுதலிய உபாதிகள் ஒடுங்க, ஆத்மாவும் ஒடுங்கி மறைகின்றது என்பது மயக்கமாம். எப்படியெனின்,— அங்கு அது சிறப்புவடிவமாய் விளங்காவிடினும், அதனது ஸ்வரூபம் எப்பொழுதும்போல் அப்பொழுதும் விளங்கிக்கொண்டே இருக்கின்றது. ஆகவே, ஆத்மாவின் மறைவு மாயமேயன்றி வாஸ்தவமில்லை என்பது. (14½)

அ வி த் தை யு ம், வி த் தை யு ம்.

15.

அந்த மாயையென்பது யாது?—

மாயையும் வித்யையும், சூரியனுடைய நிழலும் வெளிச்சமும் போல, பிரபுவினுடைய சக்திகளாம்.

மாயை - அவித்யை. பிரபுவினுடைய - ஆத்மாவினுடைய. மாயையினை நீக்குவது வித்யையாதலால், அதனையும் உடன்கூறினார். ஆத்மா அவித்யையினால் பந்தத்தையும், வித்யையினால் மோக்ஷத்தையும் தன்னிடத்து அநுபவித்தலால், அவித்யையும் வித்யையும் ஆத்மாவினது சக்தியென்றல் உபசாரவழக்காம்; அவையிரண்டும் கற்பிதமாதலால், வாஸ்தவமல்லவென்க. (15)

15½.

**सर्वानाच्छादयेन्माया विद्या व्याक्षिप्य दर्शयेत् ।**

16.

**प्रत्यभिज्ञैव सर्वेषां प्रमाणानां च साधनम् ॥**

17.

**ईश्वरोऽन्योऽहमप्यन्यः इति विच्छेदकारिणीम् ।**
**व्याक्षिप्य विद्यया मायां ईश्वरोऽहमिति स्मृतिः ॥**

---

15½.

இனி, அவற்றின் காரியத்தைக் கூறுகிறார் :

மாயை யாவரையும் மறைக்கும்; வித்யை திறந்து காட்டும்.

யாவரையும் என்றது, ஜீவர்களை. (15½)

ஆத்மாவின் ப்ரத்யபிஜ்ஞை.

16.

மாயாமூட்டத்தை வித்யை திறந்து காட்ட,—எதனால்

எல்லா ப்ரமாணங்களும் ஸித்தித்தலாகின்றதோ, (அந்த ஆத்மாவின்) ப்ரத்யபிஜ்ஞையே (பிறக்கின்றது).

'ப்ரமாணங்களும்' என்ற உம்மையினால், அப்ரமாணங்களையும் ஸம்சயங்களையும் கொள்க; இவை ஸித்தித்தற்கு முன்னரே ஆத்மா ஸ்வதஸ்ஸித்தமாய்த்தானே அமைந்திருத்தலின் என்க. இங்கு, ப்ரத்யபிஜ்ஞையாவது - நேரே கண்டுணர்தல் என்னும் ஸாக்ஷாத்காரம். (16)

17.

அது யாது? எனின்,—குறிப்பிட்டுக்காட்டுகிறார் :

'ஈச்வரன் வேறு, நான் வேறு' என்னும் பிரிவைச் செய்கின்ற மாயையை நீக்க, 'நான் ஈச்வரன்' என்னும் (தன்) நினைவு - (ப்ரத்ய பிஜ்ஞையாம் என்க.)

எனவே, வேற்றுமைக்குக் காரணமான மாயை வித்யையினால் தொலைந்த வளவிலே, ஆத்மா ப்ரஹ்மஸ்வரூபமாகத் தானே வெளிப்படுதல் ப்ரத்யபிஜ்ஞை என்பதாயிற்று. இனி, சுருதியும் ஸ்மிருதியும் - இந்த ஸ்மிருதி என்னும் சொல்லை இந்த அர்த்தத்திலேயே வழங்குதலும் காண்க :

18.

ईषत्प्रकाशोऽभूदीशः मायायवनिकाऽऽवृतः ।
सम्यगावरणापाये सहस्रांशुरिव स्फुरेत् ॥

19, 20.

न कारणानां व्यापारात् प्रमाणानां न वा पुनः ।
प्रत्यभिज्ञापनं नाम मोहापसरणं परम् ॥

---

"स्मृतिलम्भे सर्वग्रन्थीनां विप्रमोक्षः"

"(தன்) நினைவை அடைந்தவளவிலே, எல்லா (அநர்த்த) முடிச்சுக்களும் நன்கு நீங்குதலாகின்றது"— (சா - 7 - 26 - 2)

"नष्टो मोहः स्मृतिर्लब्धा त्वत्प्रसादान्मयाऽच्युत ।"

"மயக்கம் தீர்ந்துளது; அச்யுத! உமது அருளினுலே என்னுல் (தன்) நினைவு அடையப்பெற்றுளது"—(வே - கீ - 18 - 73) (17)

18.

ஆகவே, வித்யையினுல் அவித்யைமாத்திரம் தொலைக்கப்படுகின்றது; ஸ்வரூபம் விளக்கப்படுகின்றதில்லை:

மாயையென்னும் திரையினுலே மறைக்கப்பட்ட ஈச்வரன் ஒருசிறிது விளங்கலானுன்; திரையை முழுதும் தள்ளிட்டவளவிலே, சூரியன்போல விளங்குவான்.

மேகமூட்டம் நீங்கியவளவிலே எப்படி சூரியன் எப்பொழுதுமுள்ள தன்பிரகாசத்தினுலேயே விளங்குகின்ருனே,—அதுபோல, வித்யையினுல் மாயா மூட்டம் நீங்கியவளவிலே, தானே அமைந்துள்ள ஸ்வப்ரகாசத்தினுலேயே ஆத்மா விளங்கு மென்பது. இவ்வாருக, முன்னரே அமைந்துள்ள விளக்கத்தினுலேயே ஸ்வரூபம் உள்ளபடி வெளிப்படுதல்மாத்திரம் ப்ரத்யபிஜ்ஞை என்பது தேர்ந்த கருத்து. (18)

19, 20.

எப்படி? —

(இந்த ப்ரத்யபிஜ்ஞையானது) காரணங்களின் செய்கையினுல் (உண்டாக்கப்படுவ) தில்லை; அல்லது, ப்ரமாணங்களின் செய்கையினுல்

यावन्ति सन्ति मानानि व्यवहारप्रवृत्तये ।
तेषां मोहापसरणात् व्यापारोऽन्यो न विद्यते ॥

21, 21½.

जडानृतपरिच्छिन्नदेहधर्मश्चिदात्मनि ।
सत्यज्ञानसुखात्मत्वं मोहाद्देहेऽपि कल्प्यते ॥
शुक्तौ रजतमित्येवं यथा व्यामुह्यतेऽन्यथा ।

---

(அறிவிக்கப்படுவ)தில்லை. மற்று, ப்ரத்யபிஜ்ஞாபகம் [நினைவு கூர்ந்தறியச் செய்தல்] என்பது, அறியாமையை நீக்குதல்மாத்திரமாம்.

வியவகாரம் தலைப்படுதற்காக எத்தனை ப்ரமாணங்கள் இருக்கின்றனவோ, அவற்றின் செயலானது அறியாமையை நீக்குவதைக்காட்டிலும் வேறு இல்லை.

ஓரோர் ப்ரமாணமும், தன்தன் விஷயத்தை மறைத்துநிற்கும் அஜ்ஞானத்தை மாத்திரம் போக்குகின்றது; வேறொன்றும் அதிகமாகச் செய்வதில்லை. அதாவது, ப்ரமாணமெல்லாம் பொருள்கள்வெளிப்படுதற்குக் காரணமாம் என்பது. அவ்வண்ணமே, வேதாந்தப்ரமாணமானது - ஆத்மாவை மறைத்துநிற்கும் அஜ்ஞானத்தையும் அதனது காரியமாகிய ஸம்ஸாரபந்தத்தையும் வித்யையினால் துடைக்கின்றது; துடைக்கவே, ப்ரஹ்மமான ஆத்மஸ்வரூபம் தானே வெளியாகின்றதென்பது உட்கருத்து. (19, 20)

அத்யாஸம் அல்லது மயக்கம்.

21, 21½.

இனி, இதனையே தெளிவாக உணர்த்துபவராய், ஸம்ஸாரபந்தத்தைக் கூறுகிறார்:

ஜடமாய்ப் பொய்ம்மையாய் அளவுபட்ட உடம்பின் இயல்பு அறிவான ஆத்மாவினிடத்தும், மெய்ம்மையாய் அறிவாய் ஆநந்தமான ஆத்மாவின் இயல்பு உடம்பினிடத்தும் மயக்கத்தால் கொள்ளப்படுகின்றன; இப்பியிலே வெள்ளியென இவ்வாறு மாறாக மயங்குவது போல.

"இது வெள்ளி" என வெள்ளித்தன்மையை இப்பியோடும், இப்பியிலுள்ள இதுத்தன்மையை வெள்ளியோடும் மயங்குமாறுபோல, — "நான் சிறுத்தேன், பருத்தேன், கருத்தேன், நடக்கிறேன், நிற்கிறேன்" என உடம்பியல்பை ஆத்மாவோடும், ஆத்ம இயல்பை உடம்போடும் மயங்க,

22.

सदेव रूप्यं चेद्भाति विलयस्तु न सिद्ध्यति ॥

22½.

नात्यन्तासत् प्रकाशेत नरश्रृङ्गादिवत् क्वचित् ।

---

ஸம்ஸாரக்கட்டானது—இது காரணமாகவே, இவ்வாறு ஒன்ருேடொன்று மயங்குவதனுலேயே உளதாம். ஆகலின், அது[ஸம்ஸாரக்கட்டு] பொய்ம்மையாம், மெய்ம்மையன்று என்றபடி. (21½)

22.

இனி, இப்பியிலே தோற்றும் வெள்ளியைச் சோதிக்கத் தொடங்குகிருர் ;

வெள்ளி உள்பொருளாகவே விளங்குமாயின், (அதற்கு அழிவு அமையாது.

இப்பியில் காணப்படும் வெள்ளி உண்மைப்பொருளாயின்; அங்ஙனம் அவ்வுண்மைப்பொருளுக்குக் கேடு வாராது. அவ்வாறே, பகவானும் அருளிச் செய்துள்ளார் :

"नाभावो विद्यते सतः।"

"உண்மைக்கு இன்மை இல்லை"—(வே கீ-- 2 - 16) (22)

22½.

ஆயின், அது[அந்தவெள்ளி]இல்பொருளாம், எனில்—பொருந்தாது :

முழுதும்இல்லாதபொருள், மனிதன்கொம்புமுதலியனபோல ஓரிடத்தும் விளங்காது.

(பூர்வபக்ஷம்) :—வெள்ளியின் அழிவை அறிந்தவழி அது முழுவதுமின்மையே விளங்குகின்றது. ஆகவே, அது இல்பொருளாம் எனின்,—

(ஸித்தாந்தம்) :—அப்படியன்று ; இல்பொருளான மலடிமகன் மனிதன்கொம்பு முதலியனவும் அந்த வெள்ளிபோல விளங்கவேண்டுமாதலின் என்க. ஆனுல், அப்படி இல்லை. ஆதலால், இப்பியிலே வெள்ளி இல்பொருளாம் என்றல் ஒவ்வாது.

இவ்வாருக, அது உள்பெர்ருளாதலும் இல்பொருளாதலும் மறுக்கப்பட்டன : படவே, அது இரண்டுமாதல் முரணுதலால், அதுவும் [அதுவே உள்பொருளும் இல்பொருளுமாதலும்] சொல்லாமையே மறுக்கப்பட்ட தாயிற்று. (22½)

23.

**कान्ताकरादौ रजतं इति स्यात् स्मरणं भ्रमे ॥**

24.

**तेनेदं तुल्यमित्येवं स्यात्सादृश्याद्यदि भ्रमः ।**
**पीतः शङ्खो गुडस्तिक्तः इत्यादौ नास्ति तुल्यता ॥**

---

23.

(பிரதிவாதி)—"இது வெள்ளி" என்பதிலே - 'இது' என்பது ப்ரத்யக்ஷ உணர்வு; 'வெள்ளி' என்பது நினைவு உணர்வு : ஆக இரண்டு உணர்வு உள்ளன. கண்நோய் முதலியவற்றால் இவற்றைப் பகுத்தறிதல் இல்லை. ஆகவே, இப்பகுத்தறியாமை என்னும் அக்யாதியே மயக்கமாம்.

(வாதி) :—அப்படியன்று ; ஏனெனின்,

(இம்)மயக்கத்திலே, "ஸ்திரீயின் கையின்மீதும் பிறவற்றின்மீதும் வெள்ளியாம்" என நினைவு வரவேண்டும்.

முன் காணப்பட்ட பொருளே மயக்கத்தில் விளங்குமாயின், எது எங்கே காணப்பட்டதோ அது அங்குள்ளதாக விளங்கவேண்டும். முன் மனைவியின்கையில் காணப்பட்ட வெள்ளி அவளது கையிலுள்ளதாக நினைவு வரவேண்டும் : அந்த வெள்ளி இப்பொழுது எதிரிலுள்ளதாக விளங்குதல் கூடாது, ஆனால், அப்படி இல்லை : 'இது வெள்ளி' என நேரே விளங்குகின்றது, ஆகவே, அக்யாதி நேரன்றாம். (23)

24.

(பிரதிவாதி):—இனி, வேறோர்வகை கூறுவேன் : முன் பார்த்த வெள்ளியின் ஒப்புமையைக் காணுமளவிலே அதனது ஸம்ஸ்காரம் எழும்ப, அவ்வெள்ளி நினைவிற்கு வருகின்றது ; வரவே, நினைவிற்குவந்த அவ்வெள்ளியை எதிரிலுள்ளதிலே ஏற்ற, "இது வெள்ளி" எனத் தெரிதலாகின்றது என்பதாம்.

(வாதி) :—அது நேரன்று : எப்படியெனில்,—

**மயக்கமென்பது ஒப்புமையினாலாவதாயின், "இது அதற்கு ஒப்பானது" என இவ்வாறு நிகழ்தல் வேண்டும். (அன்றியும்,) "சங்கு பொன்மையாயுளது" "சர்க்கரை கைப்பாயுளது" என்பனமுதலியவற்றிலே ஒப்புமை இல்லை.**

"இது வெள்ளி" என்னும் மயக்கம் வெள்ளியினுடைய ஒப்புமையினால் உண்டாவதாயின்,— அங்ஙனம் "அதனோடு [வெள்ளியோடு] இது [எதிரிலுள்ளது] ஸமானம்"

25.

## तादात्म्येन स्फुरति चेत् रजतत्वेन शुक्तिका ।
## विभ्रमो निरधिष्ठानो बाधो निरवधिर्भवेत् ॥

---

என்றாயினும், "இதனோடு [எதிரிலுள்ளதனோடு] அது [வெள்ளி] ஸமானம்" என்றாயினும் மயக்கத்தைக் கூறுதல் வேண்டும். ஆனால், அப்படி இல்லை: அதாவது, "இது வெள்ளி" என்றலாகின்றது. என்பது பொருள்.

இனி, ஒப்புமையில்லாமலே மயக்கம் நிகழ்கின்றது. எங்ஙனமெனில்,—காமாலை என்னும் கண்நோயுற்றவனுக்கு வெண்மையான சங்கு பொன்மையாகப் புலப்படு-கின்றது, அவ்வாறே, பித்தத்தால் சீர்குலைந்த நாக்குடையோனுக்குச் சர்க்கரை கசப்பாகத் தெரிகின்றது. இங்கு, வெண்மைக்கும் பொன்மைக்கும் ஒப்புமை இல்லை; அப்படியே, இனிப்பிற்கும் கசப்பிற்கும் ஒப்புமை இல்லை. மற்று, வெண்மையைப் பொன்மையாகவும், இனிப்பைக் கசப்பாகவும் மயங்குதலாகின்றது.

ஆதலின், மயக்கம் ஒப்புமையினாலாவதென்றல் ஒவ்வாது. (24)

25.

அல்லது,

இப்பியானது தாதாத்ம்யத்தினால் வெள்ளியாக விளங்குமாயின், மயக்க-மென்பது அதிஷ்டானமில்லாததாகும்; முடிவு எல்லையில்லாததாகும்.

அபேத உணர்ச்சிக்கு விஷயம் எதுவோ, அது தாதாத்ம்யம் எனப்படும். இப்பிக்கும் வெள்ளிக்குமுள்ள தாதாத்ம்யமே, 'இப்பியிலே வெள்ளி' என்னும் மயக்கத்-திற்கும் பற்றுக்கோடாம் [அவலம்பநமாம்]. ஆதலின், "இது வெள்ளி" என்றவழி, "இது" என்பது - தாதாத்ம்யத்தையும், "வெள்ளி" என்பது - முன்கடையிலே பார்க்கப்பட்டு இப்பொழுது நினைவிற்குவந்த வெள்ளியையும் குறிக்கின்றன. இனி, இம்மயக்கத்தை நீக்குவது யாதோ? எனின், அது - "இது வெள்ளி இல்லை" என்னும் பிந்தின உணர்ச்சியாம். இதற்கு - "எது வெள்ளியோ, அது இது இல்லை" என்பது பொருள். ஆகவே, தாதாத்ம்யமானது பிந்தின உணர்ச்சியினால் இவ்வாறு மறுக்கப்படுவதாகின்றது.

எனவே, மயக்கமாகிய அறிவிற்கு நிலையான அடி உண்மையொன்று காணப்பட-வில்லை எனவும், அதனைச் சோதித்தவழி அதனது முடிவிற்கு எல்லையொன்று தலைப்பட-வில்லை எனவும் தீர்ந்தன. இவ்வாறு நம்முடைய ஓர் அநுபவமானது சுவரில்லாச் சித்திரம்போல் அடிஉண்மை இல்லாததாக - அங்ஙனம் இத்திருஷ்டாந்தத்தைக் கொண்டே மற்றைய எல்லா அநுபவங்களையும் இவ்வண்ணமே அநுமானித்தல்

26.

बुद्धिस्थितं चेत् रजतं बाह्यत्वेन प्रतीयते ।
गुञ्जादौ ज्वलनारोपे देहदाहः प्रसज्यते ॥

27.

युक्तिहीनप्रकाशत्वात् भ्रान्तेर्न ह्यस्ति लक्षणम् ।
यदि स्याल्लक्षणं किञ्चित् भ्रान्तिरेव न सिद्ध्यति ॥

---

செல்லுமாதலால், ப்ரயாஸமின்றியே பௌத்தமதம் அமைதலாயிற்று. அல்லது, அஸத்க்யாதியை அஞ்சி அந்யதாக்யாதியைக் கொள்ள, அது - சுங்கக்குடிசையிலே பொழுது விடிந்ததை நிகர்த்த தென்க. (சுங்கக்குடிசையிலே பொழுதுவிடிதல் என்பது, கட்டகுடீப்ரபாதம் என்னும் வடமொழிநியாயமாம். ஒருவன் சுங்கம் கொடுக்காது கள்ளமாகச் சரக்கை ஊருக்குள் கொண்டு வரவேண்டி, சுங்கக்குடிசைக்கு நேரே செல்லாது வேறோர் வழியைச் சென்று இரவுமுழுதும் சுற்றித்திரிந்தான்; திரியாநிற்கையில், பொழுதும் விடிந்தது: அவனும் வந்துசேர்ந்தான் அந்தச் சுங்கக்குடிசையின் வாசலுக்கே!)

ஆகவே, மயக்கத்தை அந்யதாக்யாதி என்றலும் ஏலாது என்பது கருத்து. (25)

26.

அல்லது, கணந்தோறும் தோன்றியழியும் அறிவே ஆத்மா எனக்கொண்ட க்ஷணிகவிஜ்ஞாநவாதிகள் என்னும் பௌத்தர்கள் கூறுமாறு

புத்தியினுள் உள்ள வெள்ளி வெளியிலுள்ளதாகப் புலப்படுமாயின்,— குன்றிமணிமுதலியவற்றிலே நெருப்பை ஆரோபிக்க, உடம்பு எரிந்திடுதலாகும்.

‘ ஆரோபிக்கப்படும்பொருள் உள்ளேயுள்ளதாம், வெளியிலில்லை ’ எனின்,— அப்பொழுது, குன்றிமணிக்குவியலைக் கண்டு தீயாக மயங்கியவழி உடம்பு தீப்பற்றிக் கொண்டு எரிந்துபோகவேண்டும்; அங்ஙனம் உள்ளே தீ யுள்ளமையின் என்க. ஆனால், அப்படி இல்லை. ஆகலின், இப்பௌத்தக்கொள்கையும் நேரன்றாம். (26)

27.

இவ்வாறு இப்பியிலே வெள்ளிக்குக் கீழ் எடுத்துக்காட்டிய எவ்வகையாலும் நியாயம்சொல்ல இயலவில்லை. ஆதலின், ப்ரமம் என்னும் மயக்கத்திற்கு லக்ஷணம் யாதோ ? எனின்,—

யுக்தியில்லாத் தோற்றமாதலால் மயக்கத்திற்கு லக்ஷணம் இல்லை. லக்ஷணமொன்று இருக்குமாயின், மயக்கமென்பதே அமையாது.

## 28.

### जलचन्द्रवदेकस्मिन् निर्भये रज्जुसर्पवत् ।
### प्रतीयते यथा स्वर्णे कारणे कटकादिवत् ॥

---

மயக்கமாவது பொருந்துமாறில்லாத தோற்றம். ஆகலின், அதனை இன்னதென்று சொல்லுதல் இயலாது. இயலுமாயின், அது ப்ராமாணிக மாகும் [ப்ரமாணத்தாலமைந்ததாகும்]. ஆகவே, அங்ஙனம் அதற்குக் கேடு நிகழாது. கேடு நிகழாமையின், இப்பியிலே வெள்ளியென்றல் மயக்கமாகாது. ஆனல்- அப்படி இல்லை : இப்பியுணர்வினல் வெள்ளிக்குக் கேடு நிகழ்கின்றது. ஆகவே, மயக்கத்தின் காட்சிக்குப் பொருந்துமாறில்லையாதலின், அதற்கு[மயக்கத்திற்கு] லக்ஷணமில்லை என்பது கருத்து. (27)

28.

இவ்வாறு திருஷ்டாந்தத்திலே மயக்கத்தை விரித்துக் காட்டினர். இனி, அதனை வேறு திருஷ்டாந்தங்களோடு தார்ஷ்டாந்திகத்தில் கூறுகிறர் :

1. ஜலசந்திரனிலேபோல ஏகத்திலே (அனேகமும்), 2. ரஜ்ஜுஸர்ப்பத்திலேபோல நிர்ப்பயத்திலே (பயமும்) புலனுகின்றன. 3. பொன்னிலே காப்புமுதலியன போலக் காரணத்திலே காரியமும் புலனுகின்றது).

1. எப்படி ஒரேசந்திரனனது ஜலமாகிய உபாதியினல் பலவாகக் காணப்படுகின்றதோ, அப்படி ஆநந்தஅறிவான ஒரே ஆத்மாவானது உடம்பாகிய உபாதியினல் பலவாகக் காணப்படுகின்றது.

2. பயத்திற்குக் காரணமில்லாத கயிற்றிலே எப்படி ஸர்ப்பபயம் தோற்றுகின்றதோ, அப்படியே பயத்திற்குக் காரணமில்லாத ஆத்மாவிலே ஸம்ஸாரபயம் தோற்றுகின்றது.

3. இனி, உலகப்பிரஸித்ததமாயுள்ள காரியகாரணவாதத்தை நோக்குமிடத்தும், காப்புமுதலிய கார்யம் பொன்னகிய காரணத்திற்கு வேருய் இல்லாதவாறு போல, ஜகத்தாகிய கார்யம் காரணமாகிய ஆத்மாவிற்கு வேருய் இல்லை என்க.

எனவே, காணப்படும்பொருள்கட்கு இருப்பென்பது ஆத்மாவிற்கு வேருய் இல்லை எனவும், ஜகத்தானது ப்ராந்தி என்னும் மயக்கத்தினலே அமைந்ததாம் எனவும் முடிந்தன. (28)

29, 29½.

उपात्ते रूप्यवत् शुक्तौ व्याप्ते यक्षपुरीव खे ।
रश्म्यम्बुवत् स्फुरद्रूपे स्थाणौ चोरवदक्रिये ॥
असत्कल्पमिदं विश्वं आत्मन्यारोप्यते भ्रमात् ।

30, 31.

स्वयम्प्रकाशं सद्रूपं भ्रान्तिबाधविवर्जितम् ॥
प्रत्यभिज्ञायते वस्तु प्राग्वन्मोहे व्यपोहिते ।
देहाद्युपाधौ निर्धूते स्यादात्मैव महेश्वरः ॥

---

29, 29½.

இனி, இதனைத் திருஷ்டாந்தங்களால் விளங்கவைக்கிறார் :

இல்பொருளுக்குச் சமமான இப் பிரபஞ்சமானது மயக்கத்தினால் ஆத்மாவின்மீது ஆரோபிக்கப்படுகின்றது—தானே அமைந்துநிற்கும் ஆத்மாவிலே, இப்பியிலே வெள்ளிபோல: வியாபகமான ஆத்மாவிலே, ஆகாசத்திலே கந்தர்வநகரம்போல: ஸ்வயம்பிரகாசமான ஆத்மாவிலே, கானலிலே நீர்போல: கிரியையில்லா ஆத்மாவிலே, தூணிலே கள்ளன் போல.

மயக்கத்தினால் - பொய்யுணர்வினால். ஆரோபிக்கப்படுகின்றது - ஏற்றப்படுகின்றது, வழங்கப்படுகின்றது என்றபடி. வியாபகமான - எங்குமுள்ள. கந்தர்வ நகரம் - மனத்தால் கற்பிக்கப்பட்ட ஆகாசபட்டணம். (29. 29½)

30, 31.

இனி, மெய்யுணர்வாகிய வித்யையினால் இந்தப் பொய்யுணர்வாகிய

மயக்கத்தை நீக்கியவளவிலே, ஸ்வப்ரகாசமாய் மயக்கமும்கேடும் இல்லாத உண்மைப்பொருளானது உள்ளபடி நேரே உணரப்படுகின்றது. உடம்புமுதலிய உபாதியினை உதறிட்டவளவிலே, ஆத்மாவே மகேச்வரனும்.

காரணமாகிய அஜ்ஞானமும் அதனது கார்யமும் ஞானத்தினால் அகன்ற வழி உள்ளேயுள்ள ஆத்மாவே எங்குமுள்ள ப்ரஹ்மஸ்வரூபமாகின்றது என்பதாம். (30, 31)

32.

**स्मृतिः प्रत्यक्षमैतिह्यं इत्यादीन्यपराण्यपि ।**
**प्रमाणान्याप्तवागाह प्रत्यभिज्ञाप्रसिद्धये ॥**

---

32.

இவ்வாறு யுக்தியினுல் நிரூபித்த விஷயத்திற்கு ப்ரமாணங்களை அருளிச் செய்கிருர் :

ஆப்தனுடைய திருவாக்கானது - ப்ரத்யபிஜ்ஞையைச் சாதிக்கும் பொருட்டு ஸ்மிருதி ப்ரத்யக்ஷம் ஐதிஹ்யம் என்பனமுதலிய மற்றை ப்ரமாணங்களையும் கூறுகின்றது.

ஆப்தனென்பான் - உண்மைப்பொருளை உள்ளவாறு உரைப்போன். இங்கு ஆப்தன் என்றது, சுருதியை. அது

**" स्मृतिः प्रत्यक्षमैतिह्यं अनुमानं चतुष्टयम् ।**
**एतैरादित्यमण्डलं सर्वैरेव विधास्यते ॥ "**

" ஸ்மிருதி, ப்ரத்யக்ஷம், ஐதிஹ்யம், அநுமாநம் (என ப்ரமாணங்கள்) நான்கு. சூரியமண்டலமானது[உள்ளிலும் வெளியிலுமுள்ள ஆத்மப்ரஹ்ம உண்மையானது] இந்த எல்லாவற்ருலுமே அறியப்படுகின்றது "—(தை-ஆ-1-2),

என வரும். ப்ரத்யபிஜ்ஞையை என்பதற்கு - 'நான் ப்ரஹ்மம்' 'ப்ரஹ்மமே நான்' என ஆத்மாவும் ப்ரஹ்மமும் ஒன்ருயிருத்தலை என்பது பொருள்.

**" सकलमिदमहं च वासुदेवः "**

" இஃதனைத்தும் நானும் வாஸுதேவனும். "

**" क्षेत्रज्ञं चापि मां विद्धि "**

" க்ஷேத்ரஜ்ஞனை நானுகவும் அறி "—(வே - கீ - 13 - 2)

**" वासुदेवः सर्वम् "**

" எல்லாம் வாஸுதேவன், "—(வே - கீ - 7 - 19).

**" सर्वभूतस्थितम् . . . माम् "**

" ஸகல பூதங்களிடத்தும் உள்ள என்னை "—(வே - கீ - 6 - 31)

33

# इति श्रीदक्षिणामूर्तिस्तोत्रार्थप्रतिपादके ।
# प्रबन्धे मानसोल्लासे सप्तमोल्लास संग्रहः ॥

---

---

**" ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति "**

" அர்ஜுந ! ஈச்வரனுனவன் எல்லாப் பிராணிகளுடைய ஹிருதய ஸ்தாநத்தினுள் தங்கிநிற்கின்ருன் "—(வே - கீ - 18 - 61).

என்பன ஸ்மிருதியாம். ப்ரத்யக்ஷமாவது, ' நான் ப்ரஹ்மமா யிருக்கிறேன் ' என்னும் அறிஞரநுபவம். ஐதிஹ்யமாவது - ஸம்ப்ரதாயமாக வரும் ' தத்த்வமஸி ' என்னும் குருபதேசவாக்யம். " முதலிய " என்பதனுல், அநுமாநத்தைக் கொள்க. அது - " ஆத்மா ப்ரஹ்மமேயாம், உண்மையாதலாலும் அறிவாதலாலும் ஆநந்தமாத-லாலும் அவிகாரியாதலாலும் அஸங்கமாதலாலும் என்க; எது இப்படியன்ரு அஃது அப்படியன்று, புத்திமுதலியனபோல " எனவும், " ஜீவனுக்கும் ஈச்வரனுக்கும் உள்ள வேற்றுமை அஸத்யமாம், உபாதியினுல் கற்பிக்கப்பட்டமையின் ; குடாகாசமும் மகாகாசமும்போல " எனவும், " ஜீவனுடைய உபாதி பொய்ம்மையாம், மாயையின் கார்யமாதலால் ; கனவுப்பொருள்போல " எனவும் வரும். (32)

33.

ஏழாவது மூலச்லோகத்தின் உரையை இதனேடு முடிக்கின்ருர் :

ஸ்ரீ தக்ஷிணமூர்த்திஸ்தோத்திரத்தின் பொருளை உணர்த்துகின்ற மாநஸோல்லாஸம் என்னும் நூலினுள் ஏழாம் உல்லாஸப்பொழிப்புரை முற்றும்.

---

## ஏ ழா ம் உ ல் ல ா ஸ ம்.

### ப த வு ரை.

1.

| | |
|---|---|
| आत्मा | ஆத்மா |
| स्थायी | நிலையானதாக |
| प्रत्यभिज्ञाबलात् | ப்ரத்யபிஜ்ஞையின் வலிமையினால் |
| निर्धार्यते यदि | நிச்சயிக்கப்படுமாகில், |
| एषा | இந்த |
| प्रत्यभिज्ञा नाम | ப்ரத்யபிஜ்ஞையென்பது |
| का | யாது ? |
| तस्याः | அதற்கு |
| कारणं च | காரணமும் |
| किं वा | யாது ? |

2.

| | |
|---|---|
| प्रत्यभिज्ञा | ப்ரத்யபிஜ்ஞையானது |
| प्रत्यक्षादि प्रमाणेषु | ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களில் |
| न पठ्यते | படிக்கப்படவில்லை. |
| तस्याः | அதற்கு |
| प्रमाणत्वं | ப்ரமாணத்தன்மை |
| कथं | எப்படி |
| ( स्यात् ) | (ஆகும்) ? |
| इति | என்று |
| पृच्छन् | வினவுகின்ற |
| (शिष्यः) | (மாணுக்கன்) |
| प्रबोध्यते | அறிவுறுத்தப்படுகிறன். |

7.

| | |
|---|---|
| बाल्यादिषु अपि | பால்யம் முதலியனவும் |
| तथा | அப்படியே |
| जाग्रदादिषु | நனவு முதலிய |
| सर्वासु | எல்லா |
| अवस्थासु अपि | நிலைமைகளும் |
| व्यावृत्तासु (सत्सु) | மாறிக்கொண்டிருக்கும்பொழுது |
| अनुवर्तमानम् | தொடர்ந்து நிற்கின்றதாய் |
| सदा | எப்பொழுதும் |
| अन्तः | உள்ளே |
| अहम् इति | நான் என |
| स्फुरन्तं | விளங்குகின்ற |
| स्वात्मानं | சொந்த ஆத்மாவை |
| यः | எவன் |
| भजतां | தொழுவோர்க்கு |
| भद्रया | பத்ரை என்னும் |
| मुद्रया | முத்ரையினுல் |
| प्रकटी करोति | வெளிப்படுத்துகின்ருனே |
| तस्मै | அந்த |
| श्रीगुरुमूर्तये | ஸ்ரீ மதாசார்யஸ்வருபமான |
| श्रीदक्षिणामूर्तये | ஸ்ரீ தக்ஷிணமூர்த்திக்கு |
| इदं नमः | இந்த நமஸ்காரம். |

| | |
|---|---|
| एतत् | இது |
| उक्तं | சொல்லப்பட்டது |
| भवति | ஆகின்றது. |

3.

| | |
|---|---|
| पूर्वं | முன் |
| भातस्य | விளங்கியதாய் |
| साम्प्रतं | இப்பொழுது |
| भासमानस्य | விளங்குகின்ற |
| कस्यचित् | ஒன்றை |
| अयं | ' இது |
| सः | அது' |
| इति | என்று |
| अनुसन्धानं | நினைவுகூர்ந்தறிதல் |
| प्रत्यभिज्ञानं | ப்ரத்யபிஜ்ஞாநமாக |
| उच्यते | சொல்லப்படுகின்றது. |

4.

| | |
|---|---|
| आनुषङ्गिकान् | செயற்கையினுலான |
| तद्देशकालाकारादीन् | அந்த இடம் காலம் வடிவம் முதலியவற்றை |
| अवधूय | தள்ளி, |
| यथा | எப்படி |
| एकं | ஒரே |
| वस्तु | பொருள் |
| अनुस्यूतं | தொடர்ந்து நிற்பதாய் |
| (अवगम्यते) | (அறியப்படுகின்றதோ) |
| (तथा) | (அப்படி) |
| आत्मनः | ஆத்மாவினுடைய |
| प्रत्यभिज्ञानं | ப்ரத்யபிஜ்ஞை |
| (भवति) | (ஆகின்றது.) |

5.

| | |
|---|---|
| मायाऽनुषङ्ग | மாயையின் செயற்கையினுல் |
| सञ्जात- | ஆன |
| किञ्चिज्ज्ञत्वादि- | சிற்றுணர்வுடைமை முதலியவற்றை |
| अपोहनात् | தள்ளுவதனுல், |
| सर्वज्ञत्वादि- | முற்றுணர்வுடைமை முதலியவற்றை |
| विज्ञानं | அறிதல் |
| आत्मनः | ஆத்மாவின் |
| प्रत्यभिज्ञानं | ப்ரத்யபிஜ்ஞை |
| (स्यात्) | (ஆகும்.) |

---

6.

| | |
|---|---|
| मृगशावकः | மிருகக்கன்றுனது |
| पूर्वजन्म- | முந்தின பிறவியிலே |
| अनुभूतार्थ- | அநுபவிக்கப்பட்ட பொருளின் |
| स्मरणात् | நினைவினுல் |
| जननीस्तन्यपानाय | தாயின் முலைப்பாலை ஊட்டுதற்கு |
| स्वयं एव | தானே |
| प्रवर्तते | தலைப்படுகின்றது. |

---

7.

| | |
|---|---|
| तस्मात् | ஆதலால் |
| आत्मा | ஆத்மா |
| देहान्तरेषु अपि | வேறு உடம்புகளிலும் |
| स्थायी | நிலையானதாக |
| (भवति) | (இருக்கின்றது) |
| इति | என்று |
| निश्चीयते | நிர்ணயிக்கப்படுகின்றது ; |

| | |
|---|---|
| यतः | ஏனெனில் |
| स्तन्यपानं | முலைப்பாலைக் குடித்தல் |
| शिशोः | குழந்தைக்கு |
| स्मृतिं विना | நினைவின்றி |
| न घटते | அமையாது. |

8.

| | |
|---|---|
| पूर्वत्र | முன் |
| अनुभवे काले | அநுபவசமயத்திலும் |
| परत्र | பின் |
| स्मृतिकाले | நினைவுசமயத்திலும் |
| सन् | இருக்கின்ற |
| आत्मा | ஆத்மா |
| सम्स्काररूपेण | வாஸனைவடிவமாக |
| स्वनिष्ठितं | தன்னிடத்துத் தங்கியுள்ள |
| अर्थं | பொருளை |
| स्मरति | நினைக்கின்றது. |

9.

| | |
|---|---|
| प्रत्यभिज्ञा | ப்ரத்யபிஜ்ஞையானது |
| भावानां | பொருள்களுடைய |
| स्मृतिः | நினைவாக |
| (भवति) | (இருக்கின்றது) |
| इति | என்று |
| अभिधीयते चेत् | சொல்லப்படுகின்றதானால், |
| स्मृतिः च | நினைவானது |
| आत्मस्थैर्ये | ஆத்மாவின் நிலையான தன்மையிலே |
| प्रमाणत्वं | ப்ரமாணமாதலை |
| कथं | எப்படி |
| प्राप्नुयात् | அடையும் ? |

10, 11.

| | |
|---|---|
| स्मृतौ | ஸ்மிருதியிலே |
| अर्थस्य | பொருளுக்கு |
| प्रकाशः | விளக்கம் |
| न (अस्ति) | இல்லை ; |
| वा | அல்லது |
| अर्थानुभवस्य च | பொருளினுடைய அநுபவத்திற்கும் |
| न (अस्ति) | இல்லை. |
| अङ्गुल्योः इव | இரண்டு விரல்கட்குப்போல, |
| अर्थानुभवयोः अपि | பொருளுக்கும் (அதனது) அநுபவத்திற்கும் |
| (प्रकाशः) | (விளக்கம்) |
| न सम्भवेत् च | இல்லை. |
| दण्डिवत् | தடியையுடையவன்போல, |
| अनुभूतिविशिष्टस्य | அநுபவத்தையுடைய |
| पदार्थस्य च | பொருளுக்கும் |
| (प्रकाशः) | (விளக்கம்) |
| न (अस्ति) | இல்லை ; |
| सर्वत्र अपि | எங்கும் |
| एवं | இப்படியே |
| इति | என |
| एवं | இவ்வாறு |
| प्रसङ्गात् | ஆதலால் |
| इति | என்பது. |
| तत् | அதனை |
| शृणु | கேள். |

12.

| | |
|---|---|
| प्राक्तनानुभवे | முந்தின அநுபவம் |
| नष्टे | அழிய |
| तदवष्टम्भ सम्भवात् | அந்த ஆதாரத்திலே கிளம்புதலை-யுடையதாய் |
| पौरुषात् | ஆத்மாவினால் அதிஷ்டிக்கப்-பட்டதாய் |
| सम्स्कारसम्ज्ञात् | ஸம்ஸ்காரம்என்னும்பெயருடைய |
| सामग्र्यात् | காரணத்தினின்றும் |
| स्मृतिः | நினைவானது |
| जायते | உண்டாகின்றது . |

13.

| | |
|---|---|
| (एषा) | (இந்த) |
| (स्मृतिः) | (நினைவானது) |
| आवेद्यानुभवे | நன்கு அறியப்படும் பொருளினுடைய அநுபவம் |
| नष्टे | அழிய |
| तदीयं | அதனது |
| विषयं प्रति | விஷயத்திலே |
| अनुभावकं | அநுபவிக்கும்பொருளான |
| आत्मानं | ஆத்மாவை |
| अनपायिनं | அழிவில்லதாக |
| बोधयति | அறிவிக்கின்றது |

14.

| | |
|---|---|
| विषये च | விஷயமும் |
| प्रमुषिते (सति) | மறைந்திருக்கும்போது |
| अनुभवे च | அநுபவமும் |

| | |
|---|---|
| नष्टेसति | மறைந்திருக்கும்போது |
| सदा | ஒருகாலத்தும் |
| अप्रमुषितः | மறையாததாய் |
| देवः | விளங்கும் ஆத்மா |
| स्वविश्रान्तं | தன்னிடத்து முடிந்துகிடக்கும் |
| अर्थं | பொருளை |
| स्मरति | நினைக்கின்றது |

---

14½.

| | |
|---|---|
| प्रमातृणां | ஜீவர்கட்கு |
| प्रमोषणं | மறைவு |
| तमसा | இருட்டாகிய |
| मायया | மாயையினுல் |
| कृतं | செய்யப்பட்டதாய் |
| (भवति) | (இருக்கின்றது.) |

---

15.

| | |
|---|---|
| भानोः | சூரியனுடைய |
| छायाप्रभोपमे | நிழலையும் வெளிச்சத்தையும் உபமையாகவுடைய |
| माया विद्ये | மாயையும் வித்யையும் |
| प्रभोः | பிரபுவினுடைய |
| शक्ती | சக்திகளாக |
| (भवतः) | (உள்ளன.) |

---

15½.

| | |
|---|---|
| माया | மாயை |
| सर्वान् | எல்லோரையும் |
| आच्छादयेत् | மறைக்கும் ; |

| | |
|---|---|
| विद्या | வித்யை |
| व्याक्षिप्य | திறந்து |
| दर्शयेत् | காட்டும். |

16.

| | |
|---|---|
| (यतः) | (எதனுல்) |
| सर्वेषां | எல்லா |
| प्रमाणानां च | ப்ரமாணங்களும் |
| साधनं | ஸித்தித்தல் |
| (भवति) | (ஆகின்றதோ) |
| (तस्य) | (அந்த) |
| (आत्मनः) | (ஆத்மாவின்) |
| प्रत्यभिज्ञा एव | ப்ரத்யபிஜ்ஞையே |
| (भवति) | (உண்டாகின்றது.) |

17.

| | |
|---|---|
| ईश्वरः | 'ஈச்வரன் |
| अन्यः | வேற்றுவனுக |
| (अस्ति) | (இருக்கிறுன்), |
| अहम् अपि | நானும் |
| अन्यः | வேற்றுவனுக |
| (अस्मि) | (இருக்கிறேன்)' |
| इति | என்று |
| विच्छेदकारिणीं | பிரிவைச் செய்கின்ற |
| मायां | மாயையை |
| विद्यया | வித்யையினுல் |
| व्याक्षिप्य | நீக்கி |
| अहं | நான் |
| ईश्वरः | ஈச்வரனுய் |
| (अस्मि) | (இருக்கிறேன்) |

| | |
|---|---|
| इति | என்னும் |
| स्मृतिः | நினைவு |
| (प्रत्यभिज्ञा) | (ப்ரத்யபிஜ்ஞையாக) |
| (भवति) | (உளது.) |

---

18.

| | |
|---|---|
| ईशः | ஈச்வரன் |
| मायायवनिकाऽऽवृतः | மாயையாகிய திரையினால் மறைக்கப்பட்டவனாய் |
| ईषत्प्रकाशः | சிறிதுபிரகாசமுள்ளவனாய் |
| अभूत् | இருந்தான் ; |
| सम्यक् | நன்றாக |
| आवरणापाये (सति) | திரையைத் தள்ளினவளவிலே |
| सहस्राम्शुः इव | ஆயிரம் கிரணங்களையுடைய (சூரியன்) போல |
| स्फुरेत् | விளங்குவான். |

---

19, 20.

| | |
|---|---|
| (एषा) | (இந்த) |
| (प्रत्यभिज्ञा) | (ப்ரத்யபிஜ்ஞையானது) |
| कारणानां | காரணங்களுடைய |
| व्यापारात् | செய்கையினால் |
| (उत्पाद्या) | (உண்டாக்கப்படுவதாக) |
| न (अस्ति) | இல்லை ; |
| वा | அல்லது |
| प्रमाणानां | ப்ரமாணங்களுடைய |
| (व्यापारात्) | (செய்கையினால்) |
| (ज्ञाप्या) | (அறிவிக்கப்படுவதாக) |
| न (अस्ति) | இல்லை. |

| | |
|---|---|
| पुनः | மற்று |
| प्रत्यभिज्ञापनं नाम | நினைவுகூர்ந்தறியச்செய்தல் என்பது |
| मोहापसरणं परं | அறியாமையை நீக்குதல் மாத்திரமாய் |
| (भवति) | (உளது.) |
| व्यवहारप्रवृत्तये | வியவகாரம் செல்லுதற்காக |
| यावन्ति | எத்தனை |
| मानानि | ப்ரமாணங்கள் |
| सन्ति | உள்ளனவோ |
| तेषां | அவற்றின் |
| व्यापारः | செய்கையானது |
| मोहापसरणात् | அறியாமையை நீக்குவதைக் காட்டிலும் |
| अन्यः | வேறு |
| न विद्यते | இல்லை. |

---

21, 21½.

| | |
|---|---|
| जडानृतपरिच्छिन्नदेह-धर्मः | ஜடமாய் பொய்ம்மையாய் அளவு-பட்ட உடம்பின் தன்மை |
| चिदात्मनि | அறிவான ஆத்மாவினிடத்து |
| मोहात् | மயக்கத்தினால் |
| कल्प्यते | கொள்ளப்படுகின்றது ; |
| सत्यज्ञानसुखात्मत्वं | மெய்ம்மையாய் அறிவாய் ஆநந்த-மான ஆத்மாவின் தன்மை |
| देहे अपि | உடம்பினிடத்தும் |
| (मोहात्) | (மயக்கத்தினால்) |
| (कल्प्यते) | (கொள்ளப்படுகின்றது) |

| | |
|---|---|
| यथा | எப்படி |
| (कश्चित्) | (ஒருவன்) |
| शुक्तौ | இப்பியிலே |
| रजतं | வெள்ளி |
| इति | என |
| एवं | இவ்வாறு |
| अन्यथा | மாறாக |
| व्यामुह्यते | மயங்குகின்றானோ |
| (तद्वत्) | (அதுபோல.) |

---

22.

| | |
|---|---|
| रूप्यं | வெள்ளி |
| सत् एव | உள்பொருளாகவே |
| भाति चेत् | விளங்குமாகில் |
| (तस्य) | (அதற்கு) |
| विलयः तु | அழிவோ |
| न सिद्ध्यति | அமைகிறதில்லை. |

---

22½.

| | |
|---|---|
| अत्यन्तासत् | முழுதுமில்லாதபொருள் |
| नरशृङ्गादिवत् | மனிதன்கொம்புபோல |
| क्वचित् | ஓரிடத்தும் |
| न प्रकाशेत | விளங்கமாட்டாது |

---

23.

| | |
|---|---|
| कान्ताकरादौ | 'ஸ்திரீயின் கை முதலியவற்றிலே |
| रजतं | வெள்ளி |
| (वर्तते) | (இருக்கின்றது)' |

| | |
|---|---|
| इति | என்னும் |
| स्मरणं | நினைவு |
| भ्रमे | மயக்கத்தில் |
| स्यात् | இருக்கவேண்டும். |

---

24.

| | |
|---|---|
| भ्रमः | மயக்கம் |
| सादृश्यात् | ஒப்புமையினுல் |
| (स्यात्) यदि | (ஆகு)மாயின் |
| इदं | ‘ இது |
| तेन | அதனேடு |
| तुल्यं | ஸமானமாய் |
| (भवति) | (இருக்கின்றது)’ |
| इति | என |
| एवं | இவ்வாறு |
| स्यात् | ஆகும். |
| शङ्खः | ‘ சங்கு |
| पीतः | பொன்மையாய் |
| (भवति) | (இருக்கின்றது), ’ |
| गुडः | ‘ சர்க்கரை |
| तिक्तः | கசப்பாய் |
| (भवति) | (இருக்கின்றது)’ |
| इति आदौ | என்பன முதலியவற்றிலே |
| तुल्यता | ஒப்புமை |
| न अस्ति | இல்லை. |

---

25.

| | |
|---|---|
| शुक्तिका | இப்பியானது |
| तादात्म्येन | தாதாத்ம்யத்தால் |

| | |
|---|---|
| रजतत्वेन | வெள்ளியாக |
| स्फुरति चेत् | விளங்குமானால் |
| विभ्रमः | மயக்கம் |
| निरधिष्ठानः | அதிஷ்டானமில்லாததாய் |
| भवेत् | ஆகும் ; |
| बाधः | கேடு |
| निरवधिः | எல்லையில்லாததாய் |
| (भवेत्) | (ஆகும்.) |

---

26.

| | |
|---|---|
| बुद्धिस्थितं | புத்தியினுள் உள்ள |
| रजतं | வெள்ளி |
| बाह्यत्वेन | வெளியிலுள்ளதாக |
| प्रतीयते चेत् | தோற்றுமாயின், |
| गुञ्जादौ | குன்றிமணிமுதலியவற்றிலே |
| ज्वलनारोपे | தீமை ஆரோபித்தல் |
| (सति) | (இருக்கும்பொழுது) |
| देहदाहः | உடம்பு எரிதல் |
| प्रसज्यते | செல்லுகின்றது. |

---

27.

| | |
|---|---|
| युक्तिहीनप्रकाशत्वात् | யுக்தியில்லா விளக்கமாதலால் |
| भ्रान्तेः | மயக்கத்திற்கு |
| लक्षणं | லக்ஷணம் |
| न हि अस्ति | இல்லை. |
| (तस्याः) | (அதற்கு) |
| किञ्चित् | ஒரு |
| लक्षणं | லக்ஷணம் |
| स्यात् यदि | இருக்குமாகில் |

| | |
|---|---|
| भ्रान्तिः एव | மயக்கமே |
| न सिद्ध्यति | அமையாது. |

---

28.

| | |
|---|---|
| जलचन्द्रवत् | ஜலசந்திரனிலேபோல |
| एकस्मिन् | ஒன்றிலே |
| (अनेकत्वं) | (அனேகத்தன்மை) |
| प्रतीयते | புலப்படுகின்றது. |
| रज्जुसर्पवत् | ரஜ்ஜு—ஸர்ப்பத்திலேபோல |
| निर्भये | பயமில்லாததிலே |
| (भयं) | (பயம்) |
| (प्रतीयते) | (புலப்படுகின்றது.) |
| स्वर्णे | பொன்னிலே |
| कटकादिवत् यथा | காப்புமுதலியனபோல |
| कारणे | காரணத்திலே |
| (कार्यं) | (கார்யம்) |
| (प्रतीयते) | (புலப்படுகின்றது.) |

---

29, 29½.

| | |
|---|---|
| असत्कल्पं | இல்லாதபொருளுக்குஸமமான |
| इदं | இந்த |
| विश्वं | ப்ரபஞ்சமானது |
| भ्रमात् | மயக்கத்தினுல் |
| आत्मनि | ஆத்மாவின்மீது |
| आरोप्यते | ஆரோபிக்கப்படுகின்றது— |
| उपात्ते | தானே அமைந்துநிற்கும் |
| (आत्मनि) | (ஆத்மாவின்மீது) |

| | |
|---|---|
| शुक्तौ | இப்பியிலே |
| रूप्यवत् | வெள்ளிபோல ; |
| व्याप्ते | வியாபகமான |
| (आत्मनि) | (ஆத்மாவின் மீது) |
| खे | ஆகாசத்திலே |
| यक्षपुरी इव | கந்தர்வநகரம்போல ; |
| स्फुरद्रूपे | விளங்கும்ஸ்வரூபமுடைய |
| (आत्मनि) | ஆத்மாவின் மீது) |
| रश्म्यम्बुवत् | கானலிலே நீர்போல ; |
| अक्रिये | கிரியையில்லாத |
| (आत्मनि) | (ஆத்மாவின் மீது) |
| स्थाणौ | தூணிலே |
| चोरवत् | கள்ளன்போல. |

30, 31.

| | |
|---|---|
| मोहे | மயக்கம் |
| व्यपोहिते (सति) | நீக்கப்பெற்றபொழுது |
| स्वयम्प्रकाशं | தானே விளங்குவதாய் |
| भ्रान्तिबाधविवर्जितं | மயக்கமும்கேடும் இல்லாததாய் |
| सद्रूपं | உண்மைவடிவிற்றான |
| वस्तु | பொருள் |
| प्राग्वत् | முன்போல[உள்ளபடி] |
| प्रत्यभिज्ञायते | நேரே அறியப்படுகின்றது. |
| देहाद्युपाधौ | உடம்பு முதலிய உபாதி |
| निर्धूते (सति) | உதறப்பெற்றபொழுது |
| आत्मा एव | ஆத்மாவே |
| महेश्वरः | மகேச்வரனாக |
| स्यात् | ஆகும். |

32.

| | |
|---|---|
| आप्तवाक् | ஆப்தனுடைய திருவாக்கானது |
| प्रत्यभिज्ञाप्रसिद्धये | ப்ரத்யபிஜ்ஞையைச் சாதிக்கும் பொருட்டு |
| स्मृतिः | ஸ்மிருதி |
| प्रत्यक्षं | ப்ரத்யக்ஷம் |
| ऐतिह्यं | ஐதிஹ்யம் |
| इति आदीनि | என்பன முதலிய |
| अपराणि | மற்றைய |
| प्रमाणानि अपि | ப்ரமாணங்களையும் |
| आह | சொல்லுகின்றது. |

---

33.

| | |
|---|---|
| श्रीदक्षिणामूर्तिस्तोत्र-अर्थप्रतिपादके | ஸ்ரீதக்ஷிணமூர்த்தியினுடைய ஸ்தோத்திரத்தின் பொருளை உணர்த்துகின்ற |
| मानसोल्लासे | மானஸோல்லாஸம் என்னும் |
| प्रबन्धे | நூலினுள் |
| सप्तमोल्लाससंग्रहः | ஏழாம் உல்லாஸத்தின் பொழிப்புரை |
| इति | முற்றும். |

---

अथ

# अष्टमोल्लासः

1.

प्रकाशव्यतिरेकेण पदार्थः कोऽपि नास्ति चेत् ।
परमार्थोपदेशान्तः व्यवहारः कथं भवेत् ॥

---

எட்டாம் உல்லாஸம்.

---

சுருதி ஸ்மிருதி இதிஹாஸம் புராணம்என்னும் ஸகல சாஸ்திரங்களினுடைய ஸாரமானது, சென்ற ஏழு மூலச்லோகங்களால் திரட்டி எடுத்து உணர்த்தப்பட்டது. இனி, எட்டாவது மூலச்லோகமோ அதனை முடிக்க எழுகின்றது. என்பது, முந்தின ச்லோகங்ளோடு இதற்கு உள்ள இயைபாம்.

என்ற இதனை வார்த்திககாரர் எடுத்துக்காட்டத் தொடங்குகிறுர் :

**உண்மை ஒன்றே என்றவழி, உலகவ்யவஹாரமும்**
**வேதவ்யவஹாரமும் முரணுதல்.**

1.

ப்ரகாசத்திற்கு வேருய் ஒருபொருளும் இல்லையாயின், பரம்பொருளை உபதேசித்தல்வரையிலுள்ள வ்யவஹாரம் எப்படி நிகழும் ?

" இந்த ஜகத்தானது விளக்கத்தினும் வேருகாததாகவே யாவர்க்கும் விளங்கு-கின்றது "—(3 - 5),

" ஆதலால், ஒரே ப்ரகாசமாயிருப்பது (எதுவோ, அதுவே) எல்லாவற்றிலுமுள்ள ஆத்மஸ்வரூபமாம் என நிலைத்தது "— (3 - 34½)

எனக் கீழே நிர்ணயித்தவாறு, பூதப்பொருளும் பௌதிகப்பொருளுமாகிய எதுவும் ஸ்வயம்பிரகாச அறிவான ப்ரஹ்மத்திற்கு வேருய் இல்லையானுல்,—அங்ஙனம் குருவினிடத்தினின்று மெய்யுணர்வைப் பெறுதற்கு முன்னருள்ள ஸம்ஸார வ்யவஹாரமெல்லாம் எப்படிப் பொருந்தும் ? அதாவது, அவற்றிற்கு அவலம்பநம் யாது ? (1)

2,3.

कस्य बन्धश्च मोक्षश्च बद्ध्यते केन हेतुना ।
मायाया लक्षणं किं स्यात् इत्येवं परिपृच्छतः ॥

प्रश्नस्याप्युत्तरं वक्तुं प्रतिपत्तुं सुखेन च ।
उक्तोऽर्थः सप्तभिः श्लोकैः पुनः सङ्क्षिप्य कथ्यते ॥

4.

पौनरुक्त्यं न दोषोऽत्र शब्देनार्थेन वा भवेत् ।
अभ्यासेन गरीयस्त्वं अर्थस्य प्रतिपाद्यते ॥

---

2, 3.

அன்றியும்,

கட்டுளென்பதும், விடுதலையென்பதும் யாருக்கு? (ஒருவன்) எக்காரணத்தால் கட்டப்படுகிறான்? மாயை என்பதற்கு லக்ஷணம் யாது? என இவ்வாறு வினவுகின்ற (மாணாக்கனுடைய)

வினாவிற்கு விடை கூறவும் (அவன் அதனை) எளிதே உணரவும் வேண்டி, (முன்) ஏழு ச்லோகங்களால் கூறப்பட்ட பொருள் மீண்டும் சுருக்கிக் கூறப்படுகிறது.

கட்டினின்று நீங்குதலே விடுதலையாதலால், கட்டு இல்லாவழி விடுதலையும் யாருக்கு? இவையெல்லாம் மாயாமயமென்றால், அங்ஙனம் மாயை என்பது யாது?

மீண்டும் - இந்த எட்டாம் ச்லோகத்திலே. (2, 3.)

இங்குக் கூறினதுகூறல் குற்றமன்று.

4.

(சங்கை) :—எல்லா சாஸ்திரங்களிலும் கூறப்பெற்ற விஷயமானது சென்ற ஏழு ச்லோகங்களால் நிர்ணயிக்கப்பட்டதாயின், அப்பொழுது அதனை மீளக்கூறுதல் வீணாம் எனின்,—

(ஸமாதாநம்) :—அப்படியன்று ;

சொல்லினாலேனும் அர்த்தத்தினாலேனும் மீளக்கூறுதல், இங்கே குற்றமாகாது. அடுத்தடுத்துச் சொல்வதனால், விஷயத்தின் பெருமை உணர்த்தப்படுகின்றது.

8. विश्वं पश्यति कार्यकारणतया स्वस्वामिसम्बन्धतः
शिष्याचार्यतया तथैव पितृपुत्राद्यात्मना भेदतः ।
स्वप्ने जाग्रति वा य एष पुरुषो मायापरिभ्रामितः
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥

---

இங்கே - இந்நூலினுள்ளே. விஷயத்தின் - உணர்த்தஎடுத்துக்கொண்ட ப்ரஹ்மாத்மப்பொருளின். உணர்த்தவேண்டிய இப்பொருளானது மிக நுண்மையாயிருக்கின்றது. ஆதலால், ஒருமுறைகூறினவளவிலேயே அதனை அறிதல் அரியதாகும். ஆகவே, மீளமீளக் கூறுதல் இன்றியமையாததாயிற்று. எனவே, இது இவ்வாறு குற்றமாகாததாய், மற்று ஆநந்தஅறிவான ஆத்மாவின் அருமையையும் பெருமையையும் எடுத்துக்காட்டவந்த அழகாம் என்றபடி. (4)

8. எந்த இப் புருஷன் மாயையினால் முற்றும் மயக்கப்பெற்றவனாய், கார்யம் காரணம் எனவும் உடைமை உடையவன் எனவும் மாணாக்கன் ஆசிரியன் எனவும் அவ்வண்ணமே தந்தை மகன் எனவும் முதலான ரூபத்தினால் ப்ரபஞ்சத்தை கனவிலும் நனவிலும் வேற்றுமையாகக் காண்கின்றானோ, அந்த ஸ்ரீமதாசார்யஸ்வரூபமான ஸ்ரீதக்ஷிணாமூர்த்திக்கு இந்த நமஸ்காரம்.

முற்றும் மயக்கப்பெற்றவனாய் - பலவாறு மயக்கத்தை அடைவிக்கப் பெற்றவனாய். கார்யம் - பிறப்பிக்கப்படுவது; காரணம் - பிறப்பிப்பது. உடைமை - வீடு, நிலம், பணம்முதலியன; உடையவன் - அந்த வீடு முதலியவற்றையுடையவன், அவற்றிற்குச் சொந்தக்காரன். "முதலான" என்றமையால் - மனைவி, மகள், மாமன், மைத்துனன், சகோதரன், பகைவன், நண்பன் முதலானோரையும், தேவர் விலங்கு மனிதர் முதலானோரையும் கொள்க.

## अस्यायमभिसन्धि :—

வாஸ்தவத்திலே ஒன்றும் ப்ரஹ்மத்திற்கு வேருய் இல்லேயேஇல்லே. ஆயினும், நித்ரையினுல் மயங்கியவன் பலவிதமான கனவைக் காணுமாறுபோல, ஆதியில்லா அநிர்வசநீயமயக்கத்தால் மயங்கிய ஜீவன் ப்ரபஞ்சத்தைப் பல வேறுபட்டதாகக் காண்கிருன் :

கார்யமாக காரணமாக ஊழியஞக தலேவஞக நிலமாக மலேயாக கடலாக ஆருக காடாக நாடாக குழந்தையாக தந்தையாக மாமஞக மனேவியாக தீயோஞக நல்லோஞக மனிதஞக மாடாக மற்றுமிவைபோன்ற எண்ணிறந்த வேற்றுமையாக ஜகத்தைக் காண்கிருன். கனவுநிலேமையிலே புலியைக் காண்பதஞலுண்டாகும் பயத்திஞல் விழித்துக்கொண்டவழி அக்கனவு நீங்குமாறு போல, மயக்கநிலேமையிலே ஆத்மாவை ஆராய்வதஞலுண்டாகும் அறிவிஞல் தெளிந்தவழி அம்மயக்கம் நீங்குகின்றது. நீங்கவே, ஜீவன் ஸம்ஸாரத்தினின்றும் தப்பியவஞய், தன்ஸ்வரூபமாகிய ஆநந்தஅறிவான உண்மையிலே நிரதிசயப் பெருமையொடு இன்புற்று நிற்கிருன் என்பது. அவ்வண்ணமே, ஸர்வஜ்ஞபாதரும் அருளிச் செய்துள்ளார்.

"तस्मात्ब्रह्माविद्यया जीवभावं प्राप्य स्थित्वा तावके तु स्वरूपे ।
......................................आकाशादि क्ष्मावसानं च पश्येत् ॥"

"स्वीयाविद्याकल्पिताचार्यवेदन्यायादिभ्यो जायते तस्य विद्या ।
विद्याजन्मध्वस्तमोहस्य तस्य स्वीये रूपेऽवस्थितिः स्वप्रकाशे ॥"

"ஆதலால், ப்ரஹ்மம் ஜீவத்தன்மையைப் பெற்று, உன் ஸ்வரூபமாக நின்று,..............விண்முதலாக மண்ஈருகவுள்ளதைக் காண்கின்றது. "தனது மயக்கத்தால் கற்பிக்கப்பட்ட குருவிஞலும் சுருதியிஞலும் நியாயத்திஞலும் மற்றுமித்தன்மையவற்ருலும் அதற்கு [ஸம்ஸாரியான ப்ரஹ்மத்திற்கு]த் தெளிவு பிறக்கின்றது. பிறந்த தெளிவிஞல் மயக்கம் தொலேந்த அதற்கு ஸ்வப்ரகாசமான தன்ஸ்வரூபத்திலே நிற்றல் (அமைகின்றது)"— (ஸம் - சா - 2 - 162, 163)

எனவே, தன்ஆத்மாவை ப்ரஹ்மமாக நேரே கண்டு உணர்தற்கு முன்னருள்ள வியவகாரமெல்லாம் மாயை என்னும் மயக்கத்திஞல் பொருந்துவதாம் என்றபடி. (8)

இது இதன் கருத்து :

5,6.

स्वयंप्रकाशे सद्रूपेऽप्येकस्मिन् परमेश्वरे ।
कार्यकारणसम्बन्धाद्यनेकविधकल्पना ॥
राहोः शिरः शुषिः खस्य ममाऽऽत्मा प्रतिमावपुः।
इत्यादिकल्पनातुल्या न पृथग्वस्तुगोचरा ॥

---

வேற்றுமையுணர்ச்சி பொய்ம்மையாம்.

5. 6.

பரமேச்வரனென்பான் தானேவிளங்கும் உண்மைவடிவிற்ரன தனிப் பொருளாயினும் (அந்த மஹேச்வரனுன ஒரேபொருளின்மேல்), கார்யகாரண-ஸம்பந்தம் முதலாகப் பல விதங்களைக் கொள்ளுதலானது

'ராகுவின் தலை,' 'ஆகாயத்தின் வெளி,' 'என் ஆத்மா,' 'விக்கிரகத்தின் உடம்பு' என்பனமுதலான கற்பனைக்குச் சமமாகி, (வாஸ்தவத்திலே) வேருேர்பொருளைக் குறிப்பதன்று.

அபேதத்திலே பேதத்தை ஏற்றுங்கால் பொருளுக்குப் பேதம்என்று ஒன்று இல்லாமையின், பேதத்தோற்றம் கற்பனை எனப்படும். எங்ஙன மெனின்,—'ராகுவின் தலை' என்றவிடத்து, 'ராகு'எனவும் 'தலை'எனவும் இரண்டுபொருள்கள் இல்லை ; தலையே ராகுவாதலால், ராகுவிற்கு வேருய்க் குறிக்கப்படும்பொருளொன்று இல்லை : அதாவது, அங்கு ராகு என்னும் ஒரேபொருள்தான் குறிக்கப்படுவதாகின்றது. அப்படியே, 'ஆகாயத்தின் வெளி'என்றவிடத்து, 'ஆகாயம்'எனவும் 'வெளி'எனவும் இரண்டு பொருள்கள் இல்லை : வெளியே ஆகாயமாதலால் ஆகாயத்திற்குவேருய்க் குறிக்கப் படும் பொருளொன்று இல்லை அதாவது, அங்கு ஆகாயம் என்னும் ஒரேபொருள்தான் குறிக்கப்படுவதாகின்றது. பொருள் ஒன்ருயினும், அது இவ்வாறு கற்பனையினல் பலவாறு வழங்கப்படுகின்றது.

அதுபோலவே,—தானேவிளங்கும் ஒரேஉண்மையான ஈச்வரன்மீது வழங்கப்படும் கார்யகாரணம் முதலிய பலவிதமான கற்பனையெல்லாம் வாஸ்தவத்திலே அவனுக்கு வேருய் யாதோர்பொருளையும் குறிப்பதில்லை என்பது பொருள்.

ஆகவே, உண்மைப்பொருள் ஒன்றே என்றபடி.

பல உதாரணங்களை எடுத்துக்காட்டியது கற்பனையைச் செவ்வனே உணர்த்தும் பொருட்டு. (5, 6)

7.

उपास्योपासकत्वेन गुरुशिष्यक्रमेण च ।
स्वामिभृत्यादिरूपेण क्रीडति स्वेच्छयेश्वरः ॥

8.

पितरं प्रति पुत्रो यः पुत्रं प्रति पितैव सः ।
एक एव हि नानेव कल्प्यते शब्दमात्रतः ॥

9.

तस्मात्प्रकाश एवास्ति परमार्थनिरूपणे ।
भेदप्रतीतिर्मिथ्यैव माययाऽऽत्मनि कल्पिता ॥

---

7.

அந்த நிறைந்த ஆநந்தமான,

ஈச்வரன் - தொழப்படுவோனுகவும் தொழுவோனுகவும், குருவாகவும் சிஷ்யனுகவும், யஜமானனுகவும் வேலைக்காரனுகவும் தனது இச்சைப்படி விளையாடுகின்ருன்.

2 - 49, 50, 51 ஆம் சுலோகங்களைப் பார்க்க! எப்படி இன்புற்றிருப்பவன் சிரிப்போனுகப் பாடுவோனுகக் காணப்படுகின்ருனே, அப்படி ஆநந்தஸ்வரூபமான ஈச்வரன் குருவாக சிஷ்யனுகப் பலவிதமாய்க் காணப்படுகின்ருன் என்பது கருத்து, (7)

8.

தந்தை என்பதும் மகன்என்பதும் பிறவும் ஒன்றனிடத்து நியதமாய்க் காணப்படவில்லை. அதனுலும், அவை கற்பிதமாம் ;

எவன் (தன்) தகப்பனை நோக்கி மகனு யிருக்கின்ருனே, அவன் (தன்) மகனை நோக்கித் தகப்பனுகவே இருக்கிருன். ஒன்றேயன்றே வேறுபட்டது போலச் சொல்மாத்திரத்தால் கொள்ளப்படுகின்றது.

தகப்பன்என்பதும் மகன்என்பதும் கணவன்என்பதும் மனைவிஎன்பதும் இன்னு மிவைபோன்றதும் பிறிதொன்றை நாடிநிற்றலால், பரமார்த்தம் என்னும் வாஸ்தவ மாகாது என்பதாம்.

9.

ஆகவே, வாஸ்தவத்தை ஆராயுங்கால் விளக்கம்மாத்திரம் உள்ளது. வேற்றுமையுணர்ச்சி பொய்ம்மையேதான்; (அது) மாயையினுல் ஆத்மாவின் மேல் கற்பிக்கப்பட்டதாம்.

9½.

मिथ्यात्वं नाम बाध्यत्वं सम्यग्ज्ञानोदये सति ।

10.

शिष्याचार्योपदेशादि स्वप्नवत् प्रतिभासते ॥

---

ஆராய்ச்சிசெய்யுமிடத்து;— 'எது பிறிதொன்றை நாடிநிற்பதாகக் காணப்படுகின்றதோ அது கனவுபோல மாயமேயாம், வாஸ்தவமன்று' எனவும், 'தானே விளங்கும் உண்மைப்பொருளொன்றே உள்ளதாம்' எனவும் முடிகின்றன என்றவாறு. (9)

மித்யை அல்லது பொய்ம்மை.

9½.

"வேற்றுமையுணர்ச்சி பொய்ம்மையேதான்" (8 - 9) என்று கூறப்பட்டது, அதில், பொய்ம்மை என்பதற்கு லக்ஷணம் யாது?

**பொய்ம்மை என்பது - நேரறிவு பிறக்குமளவிலே, இல்லாமற்போதற்கு உரியதாயிருத்தல்.**

எனவே. எது மெய்யுணர்விஞல் துடைக்கப்பெறுவதாகின்றதோ அதுபொய்ம்மை என்பது. நேரறிவு - ஸம்யக்தர்சநம் என்னும் நேரான உணர்வு. இல்லாமற் போதற்கு - எது எங்கே உணரப்பட்டதோ அது அங்கே இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் முக்காலத்தும் இல்லை என்னும் உணர்ச்சியின் வியவகாரத்திற்கு உரியதாய் மறைந்துபோதற்கு. (9½)

10.

இவ்வாறு பொய்ம்மைக்கு லக்ஷணம் கூறி, பொய்ம்மையான பேதப்ரபஞ்சம் விளங்குதலைக் கூறுகிருர்:

**சிஷ்யன்என்பதும் குருஎன்பதும் உபதேசம்என்பதும் பிறவும், கனவு போன்று விளங்குகின்றன.**

பொய்ம்மையான கனவு விளங்குமாறுபோல, பொய்ம்மையான சிஷ்யன் குரு சாஸ்திரம் உபதேசம் முதலிய வேற்றுமைப்ரபஞ்சம் விளங்குகின்றது என்பதாம். (10)

**பொய்ம்மையிஞல் மெய்ம்மையுணர்ச்சி உண்டாதல்.**

(சங்கை):—ஆயின், உள்ளேயுள்ள ஆத்மாவை ப்ரஹ்மமாக உணர்த்தும் மோக்ஷ சாஸ்திரம் எப்படி ப்ரமாணமாகும்?

11.

मिथ्याभूतोऽपि वेदान्तः सत्यमर्थं प्रबोधयेत् ।
देवताप्रतिमावच्च चित्रवत् प्रतिबिम्बवत् ॥

12.

सर्वोऽपि व्यवहारोऽयं मायायाः परिजृम्भणम् ।
सुषुप्तिसदृशी माया स्वप्रबोधेन बाध्यते ॥

---

11.

(பரிகாரம்) :—கூறுவோம் :

வேதாந்தம் பொய்ம்மையாயினும், தேவவிக்கிரகம்போலும் சித்திரம் போலும் பிரதிபிம்பம்போலும் ஸத்யப்பொருளை அறியச்செய்யும்.

வேதாந்தமானது தான் பொய்யாயிருந்தாலும், ஒருவனை ஸத்யமான ப்ரஹ்மாத்மஸ்வரூபத்தை நேரே அறியும்படி செய்யக்கூடும்; எப்படிக் கடவுளல்லாத விக்ரகத்திலே பூஜகனால் கடவுள் ஏற்றப்பட்டவனாயினும், அவனுக்கு ஸத்யமான பயனைக் கொடுக்கின்றானோ, அப்படிப்போல: அல்லது, எப்படிச் சித்திரத்திலுள்ள யானை புலி முதலியன குழந்தைக்கு ஸத்யமான பயத்தை உறுத்துகின்றனவோ, அப்படிப்போல: அல்லது, எப்படிக் கண்ணாடியிலுள்ள பிரதிபிம்பமானது முகத்தி-லுள்ள ஸத்யமான அழுக்கையேனும் ஸத்யமான அழகையேனும் காட்டுகின்றதோ, அப்படிப்போல. (11)

ஞானத்தினால் மாயை இல்லாமற்போதல்.

12.

வெகுவாகச் சொல்லி என்ன ? என முடிக்கிறார் :

இந்த எல்லா வியவகாரமும் மாயையின் பகட்டாம். உறக்கம்போன்ற மாயை, தன் அறிவினாலே விள்ளப்படுகின்றது.

இந்த வியவகாரமெல்லாமே கள்ளமான வெறும் மாயாமினுக்காம் என்பதிலே யாதொரு தடையும் இல்லை என்பது கருத்து. பகட்டு - விவர்த்தம். தன் அறிவினாலே - வேதாந்தத்தினாலுண்டாகும் ப்ரஹ்மாத்மஸ்வரூபஉணர்வினாலே. விள்ளப்படுகின்றது - துடைக்கப்படுகின்றது, இல்லாமற்போகின்றது என்றபடி.

மாயையின் லக்ஷணம்.

இனி, மாயையின் லக்ஷணத்தைக் கூறுகிறார் :

13.

युक्तिहीनप्रकाशस्य सञ्ज्ञा मायेति कथ्यते।
नासती दृश्यमाना सा बाध्यमाना न वा सती ॥

14.

न प्रकाशादियं भिन्ना छायेवार्कस्य तामसी।
न चाभिन्ना जडत्वेन विरोधान्नोभयात्मिका ॥

---

13

யுக்தியில்லா விளக்கத்திற்கு மாயை என்னும் பெயர் சொல்லப் படுகின்றது. அது காணப்படுகின்றது; (ஆதலால்), இல்லதன்று. (அது) அழிக்கப்படுகின்றது; (ஆதலால்,) உள்ளது மன்று.

எவ்வாற்றுலும் பொருந்துமாறு இல்லாதிருந்தும் விளங்குதலென்பது எதுவோ அது மாயையாம்.—அது பொருந்துமாறில்லாத தோற்றமாயிருத்தல் எப்படி?—கூறுவோம்: ப்ரத்யக்ஷமாக எதிரே காணப்படுகின்றமையின், அதனை ஆகாயத் தாமரைபோல இல்பொருளாகச் சொல்லுதல் ஆகாது. ஆத்மாவையறிந்தவளவிலே இல்லாமற்போகின்றமையின், அதனை ஆத்மாபோல உள்பொருளாகச் சொல்லுதலும் ஆகாது. (13)

14.

அன்றியும்,

சூரியனுடைய இருண்ட நிழல்போல, இது ப்ரகாசத்தினும் வேறுன தன்று; ஜடமாதலால், வேருகாதது மன்று; விரோதத்தால், இருதன்மைத்து மன்று.

ப்ரகாசத்தினும் - ஆத்மாவான ப்ரஹ்மத்தினும். சூரியனுடைய இருண்ட நிழலாவது - கண்இருண்டுகிடக்கும் பகல்குருடர்களால் சூரியன்மீது ஏற்றப்பட்டதாய் சூரியனை மறைத்துநிற்கும் நிழலாம். இங்கு, சூரியப்ரகாசமே நிழலாகத் தோற்று கின்றது. ஆகவே, நிழலானது சூரியப்ரகாசத்திற்கு வேருகாது. அதுபோலவே, மாயையென்பது ஆத்மாவிற்கு வேருகாது. அன்றியும், அது ஜடமாதலால், அறிவான ஆத்மாவிற்கு வேருகாதது மன்று. மேலும், ஒன்றே வேறுனதும் வேருகாததுமா யிருத்தல் முரணுதலால் மாயை இவ்விருதன்மை யினையும் உடையதன்று. (14)

15.

स्वहेत्ववयवाभावात् नेयं सावयवोच्यते।
न चावयवहीना सा कार्येष्ववयवान्विता॥

16.

अविचारितसिद्धेयं मायावेश्या विलासिनी।
पुरुषं वञ्चयत्येव मिथ्याभूतैः स्वविभ्रमैः॥

---

15.

மற்றும்,

தனக்குக் காரணமான உறுப்புக்களின்மையால், இது உறுப்புடைத்து எனப்படவில்லை. (மற்று,) அது கார்யங்களிலே உறுப்புடைத்து ; (ஆதலின்,) உறுப்பில்லதுமன்று.

தனக்குக் காரணமான உறுப்புக்களின்மையால் - உறுப்புக்கள் தம்முள் சேர்ந்து மாயையை உண்டாக்கவில்லை யாதலால், அநாதியாதலால் என்பது பொருள். மாயையின் கார்யமான யானை குதிரை முதலியன அவயவமில்லாதவையாய் இல்லை என்பார், " கார்யங்களிலே உறுப்புடைத்து " என்றார். (15)

16.

ஆகவே வேறோர்வகை இல்லையாதலின், யுக்தியில்லாத் தோற்றமே மாயைக்கு லக்ஷணமாம் என அமைந்தது. என்றஇதனை முடிக்கிறார் :

இந்த மாயையாகிய பகட்டுவேச்யை, ஆராயப்பெறாது அமைந்தவளாய் போலியான தன்தளுக்குகளால் புருஷனை ஏமாற்றியேவிடுகிறாள்.

ஆராயப்பெறாது அமைந்தவளாய் - எவ்வளவுகாலம் ஆராய்ச்சி செய்யப்பட வில்லையோ அங்வளவுகாலம் தோன்றுகிறவளாய் என்றபடி. (16)

இந்த மாயாவேச்யையைத் தொலைத்திடுதலே மோக்ஷமென்பது.

மாயாவேச்யையின் ஸரஸ விலாஸங்களால் இந்திரியஉல்லாஸம்மேலிடப் பெற்ற எந்த ஜனங்கள் அவளைத் தொலைக்க முயலவில்லையோ, அவர்களை இரங்கிக் கூறுகிறார் :

17.

न तस्या मूलविच्छेदं अभिवाञ्छन्ति केचन ।
तेषां पक्षे कथं मोक्षः मनसः सम्भविष्यति ॥

18.

तिस्रोप्यवस्था मनसः जाग्रत्स्वप्नसुषुप्तयः ।
चक्रवत् परिवर्तन्ते भेदभ्रान्त्येकहेतवः ॥

19.

ताभिः करोति कर्माणि पुनस्तैर्बध्यते मनः ।
मनसः केवलः साक्षी भानुवत् पुरुषः परः ॥

---

17.

சிலர் அவளுடைய வேரை அறுத்தலை விரும்புகிறாரில்லை. அவரது கொள்கையிலே, மனம் (விஷயங்களினின்றும்) நீங்குதல் எப்படியாகும்? [ஆகமாட்டாது].

18.

ஆகமாட்டாதாகவே,

மனத்தினுடைய நனவு கனவு உறக்கம் என்னும் மூன்று நிலைமைகளும் வேற்றுமைமயக்கத்திற்குத் தலைக்காரணமாகி, சக்கிரம்போலச் சுற்றிச் சுற்றிச் செல்லுகின்றன:

மனம் இந்திரியங்களோடு வெளியே திரிதல் நனவு என்னும் நிலைமையாம்; அவை ஒடுங்குங்கால், தான்மாத்திரம் உள்ளே திரிதல் கனவு என்னும் நிலைமையாம்; தானும் தன்காரணத்தினுள் ஒடுங்குதல் உறக்கம் என்னும் நிலைமையாம். என இவ்வாறு நிகழும் மனோவியாபாரத்தினாலே வேற்றுமைமயக்க முண்டாகின்றன. (18)

19.

உண்டாகவே, செய்கை செய்யுங்கருவி செய்பவன் பயன் என்பவற்றைச் சார்ந்துநிற்கின்ற

அவைகளால் மனம் கர்மங்களைச் செய்கின்றது; மீண்டும் அவற்றால் கட்டப்படுகின்றது. ஆத்மா மனத்திற்கு அப்பாலுள்ளதாய், சூரியன்போல வெறும்ஸாக்ஷியாய் (நிற்கின்றது).

20.

यथा प्राणिकृतैरर्कः कर्मभिर्नैव बध्यते ।
तथा मनः कृतैरात्मा साक्षित्वान्नैव बध्यते ॥

21.

आत्मा करोति कर्माणि बध्यते मुच्यते च तैः

---

அவைகளால் - வேற்றுமைமயக்கங்களால். அவற்ருல் - கர்மங்களால். அப்பாலுள்ளதாய் - வேருனதாய். வெறும்ஸாக்ஷியாய் - நிர்விகாரமான கண்காணியாய்.

எவ்வாறு சூரியன் ப்ராணிகளின் செய்கைகட்கு ஸாக்ஷிமாத்திரமா யிருக்கின்ருனே, அவ்வாறு ஆத்மா - பல விகாரமுடைய மனத்திற்கு ஸாக்ஷிமாத்திரமாயுளது ; விகாரியான அம்மனத்திற்கு வேருய் நிர்விகாரியாயிருக்கின்றது. (19)

20.

இதனையே விளக்கமாக உணர்த்துகின்ருர் :

எப்படி சூரியன் ப்ராணிகளால் செய்யப்பட்ட கர்மங்களால் கட்டப்பெறுவதேஇல்லையோ, அப்படி ஆத்மா மனத்தால் செய்யப்பட்ட (கர்மங்களால்) கட்டப்பெறுவதே இல்லை ; ஸாக்ஷியாதலால் என்க.

இந்த ஆத்மா கர்மங்கட்கெல்லாம் ஸாக்ஷியா யிருத்தலாலன்ரே அவற்ருல் பிணிப்புண்ணுதல் இல்லை. அவ்வாறே, சுருதியும் அருளிச்செய்கின்றது :

“ सूर्यो यथा सर्वलोकस्य चक्षुः
न लिप्यते चाक्षुषैर्बाह्यदोषैः ।
एकस्तथा सर्वभूतान्तरात्मा
न लिप्यते लोकदुःखेन बाह्यः ॥ ”

“ எப்படி சூரியன் ஸகல ப்ராணிகட்கும் கண்ணுகி, கண்ணினுடைய குற்றங்களாலும் வெளியிலுள்ள குற்றங்களாலும் ஒட்டப்படுகிருனில்லையோ அப்படியே (மயக்கத்தினின்று) அகன்றுநிற்கும் தனிப்பொருளாய் எல்லாப் பொருள்களினுள்ளும் உள்ள ஆத்மாவானது ப்ராணிகளின் துன்பத்தால் பற்றப்படுகிறதில்லை ”—(கட - 5 - 11) (20)

21.

ஆகவே,

“ ஆத்மா கர்மங்களைச் செய்கின்றது ; அவற்ருல் கட்டப்படுகின்றது,

इत्यौपचारिकी क्लृप्ति भ्रममात्रैव केवलम् ॥

22.

धूमाभ्रधूली नीहारैः अस्पृष्टोऽपि दिवाकरः ।
यथा छन्न इवाभाति तथैवात्माऽपि मायया ॥

23, 24.

यथा लीलावशात्कैश्चित् भ्राम्यमाणः कुमारकः
भ्रमात्तत्पश्यति जगत् शतचन्द्रं नभःस्थलम् ॥

---

விடவும்படுகின்றது" என்பது உபசாரவழக்கினுலான கொள்கை; (அது) வெறும் மயக்கமாத்திரமாகவே உள்ளது.

ஆத்மா கர்த்தாவாதல் முதலியன, மனம்முதலிய உபாதிகளாலாகின்றன; வாஸ்தவத்திலே இல்லை என்பது கருத்து. (21)

22.

ஆத்மா - மனம்முதலிய உபாதிகளின் ஸம்பந்தத்தினுல் உள்ளபடி விளங்குவதில்லையாயின், அங்ஙனம் அது [ஆத்மா] அஸங்கமான நிர்விகாரப்பொருளாயிருத்தல் எப்படி? என்னும் சங்கையைத் திருஷ்டாந்தத்தால் போக்குகிருர்:

எப்படி சூரியனுனவன் புகை மேகம் தூசி பனி என்றவற்ருல் தொடப்பெருதவனுயினும், (அவற்ருல்) மறைக்கப்பட்டவன்போல் தோற்றுகின்ருனே; அப்படியே, ஆத்மாவும் மாயையினுல் (தொடப்பெருததாயினும், அதனுல் மறைக்கப்பட்டதுபோல் தோற்றுகின்றது).

(அவற்ருல்) - புகை மேகம் முதலியவற்ருல். மாயையினுல் - மாயையினுலும், அதனது கார்யங்களாலும் என்றபடி. (22)

23, 24.

மறைப்பென்பது ஆத்மாவிற்கு வாஸ்தவத்திலே இல்லையாயினும், அது[ஆத்மா] மறைக்கப்பட்டதாகத் தோற்றுதல் திருஷ்டாந்தத்தினுல் நிரூபிக்கப்பட்டது. இனி அப்படியே, விக்ஷேபத்தோற்றமும் ஆத்மாவிற்கு வாஸ்தவத்திலே இல்லை என்பதை திருஷ்டாந்தத்தோடு அருளிச்செய்கிருர்:

எப்படி விளையாட்டிற்காகச் சிலரால் சுற்றப்படுகின்ற சிறுவன் - அந்த ஜகத்துச் சுற்றுவதாகவும், ஆகாசத்திலே நூறு சந்திரன் உள்ளனவாகவும் காண்கின்ருனே;

तथैवमायया जीवः भ्रामितो वासनावशात् ।
नानाकारमिदं विश्वं भ्रममाणं च पश्यति ॥

25.

सम्सृज्य मनसा देवः सम्सरन्निव लक्ष्यते
यथाऽर्को जलसम्सर्गात् चलन्नानेव लक्ष्यते ।

26.

योगाभ्यासवशाद्येन मनो निर्विषयं कृतम्
निवृत्तः स पुमान् सद्यः जीवन्मुक्तो भविष्यति ॥

---

அப்படியே, வாஸனையின் வலிமையினுலே மாயையினுல் மயக்கப்பட்ட ஜீவன் இந்த ஜகத்தைப் பலவடிவிற்ருய்ச் சுழல்வதாகக் காண்கின்ருன்.

அந்த - முன் சுற்ருததாகக் கண்டுவைக்கப்பட்ட. வாஸனையின் - முந்தின முந்தின மயக்கத்தினுலாகும் ஸம்ஸ்காரத்தின். பலவடிவிற்ருய் - தேவர்மனிதர் விலங்கு முதலிய அனேக வடிவங்களை யுடையதாய். (23, 24)

25.

மாயையினுல் மயக்கப்பட்டவனுயினும் ஜீவனுக்கு வாஸ்தவத்திலே மயக்க மில்லை :

ஆத்மா மனத்தொடு சேர, பிறந்திறந்துஉழல்கிறவன்போல் காணப் படுகின்ருன் ; எப்படி சூரியன் ஜலத்தொடு சேர, பலவாக அசைகிறவன் போல் காணப்படுகின்ருனே (அதுபோல). (25)

26.

அறிவான ஆத்மாவாகிய ஜீவனுக்கு இவ்வாறு மாயையின்வழியாக பந்தத்தை வர்ணித்து, இனி மெய்யுணர்வின் வழியாக ஸாதநத்தோடு மோக்ஷத்தை அருளிச் செய்கிருர் :

எவனுல் (தன்) மனமானது யோகப்பயிற்சியின் தேர்ச்சியினுலே விஷயம் அகன்றதாய்ச் செய்யப்பட்டதோ, அந்தப் புருஷன் (ஸம்ஸாரத்தினின்றும்) நீங்கியவனுய் உடனே ஜீவந்முக்தனுவான்.

27.

द्वा सुपर्णौ च सयुजौ अभवन्मायया शिवः।
अजामेकां जुषन्नेकः नानेवासीदिति श्रुतिः॥

28.

इति श्रीदक्षिणामूर्तिस्तोत्रार्थप्रतिपादके।
प्रबन्धे मानसोल्लासे अष्टमोल्लाससंग्रहः॥

---

யோகப்பயிற்சியின் - நிதித்யாஸநத்தின்; 13 - ஆம் பக்கத்தைப் பார்க்க விஷயம் அகன்றதாய்ச் செய்யப்பட்டதோ - பிடிப்புஒன்று இல்லாததாகச் செய்யப் பட்டதோ, விஷயமல்லாத ப்ரஹ்மத்தின் வடிவமாகச் செய்யப்பட்டதோ என்பது பொருள். உடனே - ப்ரஹ்மாத்மஅறிவு உண்டானவளவிலேயே. (26)

?7.

இனி, ஜீவனுக்கும் ஈச்வரனுக்குமுள்ள பேதம் மாயையினாலானதாம் என்பதிலே, இரண்டு ரிக்குக்களை எடுத்தாளுகின்றார்:

'மாயையினாலே சிவன், சேர்ந்துநிற்கின்ற இரண்டு பக்ஷிகளானான்" (ச்வே- 4 - 6; மு - 3 - 1 - 1), "ஒரேபொருள் பிறவாத ஒன்றைச் சார்ந்து அனேகம்போலாயிற்று" (ச்வே - 4 - 5; மகா - நா - உப - 9 - 2) எனச் சுருதி (கூறுகின்றது).

பிறவாத ஒன்றை - மூலப்ரகிருதியை. (27)

28.

எட்டாவது மூலச்லோகத்தின் உரையை இதனோடு முடிக்கின்றார்:

ஸ்ரீதக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரத்தின் பொருளை உணர்த்துகின்ற மாநஸோல்லாஸம் என்னும் நூலினுள் எட்டாம் உல்லாஸப்பொழிப்புரை முற்றும்.

---

## எட்டாம் உல்லாஸம்.

### பதவுரை.

1.

| | |
|---|---|
| कः अपि | ஒரு |
| पदार्थः | பொருளும் |
| प्रकाशव्यतिरेकेण | ப்ரகாசத்திற்கு வேருய் |
| न अस्ति चेत् | இல்லையாயின் |
| परमार्थोपदेशान्तः | பரம்பொருளை உபதேசித்தல் வரையிலுள்ள |
| व्यवहारः | வ்யவஹாரம் |
| कथं | எப்படி |
| भवेत् | நிகழும் ? |

2, 3.

| | |
|---|---|
| बन्धः च | பந்தமும் |
| मोक्षः च | மோக்ஷமும் |
| कस्य | யாருக்கு |
| (भवतः) | (இருக்கின்றன ?) |
| (सः) | (அவன்) |
| केन | எந்த |
| हेतुना | காரணத்தினல் |
| बध्यते | கட்டப்படுகிருன் ? |
| मायायाः | மாயையினுடைய |
| लक्षणं | லக்ஷணம் |
| किं | யாது |
| स्यात् | ஆகும் ? |
| इति | என்று |

| | |
|---|---|
| एवं | இவ்வாறு |
| परिपृच्छतः | வினவுகின்ற |
| (शिष्यस्य) | (மாணாக்கனுடைய) |
| प्रश्नस्य | வினாவிற்கு |
| उत्तरं | விடையை |
| वक्तुम् अपि | சொல்லவும் |
| सुखेन | எளிதாய் |
| प्रतिपत्तुं च | உணரவும்வேண்டி |
| (पूर्वं) | (முன்) |
| सप्तभिः | ஏழு |
| श्लोकैः | சுலோகங்களால் |
| उक्तः | சொல்லப்பட்ட |
| अर्थः | பொருள் |
| पुनः | மீண்டும் |
| सङ्क्षिप्य | சுருக்கி |
| कथ्यते | சொல்லப்படுகின்றது. |

---

4.

| | |
|---|---|
| शब्देन | சொல்லினால் |
| वा | அல்லது |
| अर्थेन | அர்த்தத்தினால் |
| पौनरुक्त्यं | மீளக் கூறுதல் |
| अत्र | இங்கே |
| दोषः | குற்றம் |
| न भवेत् | ஆகாது. |
| अभ्यासेन | அடுத்தடுத்துக் கூறுவதனால் |
| अर्थस्य | விஷயத்தின் |
| गरीयस्त्वं | பெருமை |
| प्रतिपाद्यते | உணர்த்தப்படுகின்றது. |

---

8.

| | |
|---|---|
| यः | எந்த |
| एषः षुरुषः | இப் புருஷன் |
| मायापरिभ्रामितः | மாயையினால் முற்றும் மயக்கப்பட்டவனாய் |
| कार्यकारणतया | கார்யமாக காரணமாக |
| स्वस्वामिसम्बन्धतः | உடைமைக்கும் உடையவனுக்குமுள்ள ஸம்பந்தத்தோடு |
| शिष्याचार्यतया | சிஷ்யனாக குருவாக |
| तथा एव | அப்படியே |
| पितृपुत्राद्यात्मना | தகப்பன் மகன் முதலான ரூபத்தினால் |
| विश्वं | ஜகத்தை |
| स्वप्ने | கனவிலே |
| वा | அல்லது |
| जाग्रति | நனவிலே |
| भेदतः | வேற்றுமையாக |
| पश्यति | காண்கின்றானோ |
| तस्मै | அந்த |
| श्रीगुरुमूर्तये | ஸ்ரீமதாசார்யஸ்வருபமான |
| श्रीदक्षिणामूर्तये | ஸ்ரீதக்ஷிணாமூர்த்திக்கு |
| इदं | இந்த |
| नमः | நமஸ்காரம். |

---

| | |
|---|---|
| अस्य | இதற்கு |
| अयं | இது |
| अभिसन्धिः | கருத்து |
| (स्यात्) | (ஆகும்.) |

5, 6.

| | |
|---|---|
| स्वयम्प्रकाशे | தானே விளங்குவதாய் |
| सद्रूपे | உண்மைவடிவிற்றாய் |
| परमेश्वरे | பரமேச்வரன் என்னும் |
| एकस्मिन् अपि | ஒரேபொருளினிடத்தும் |
| कार्य कारणसम्बन्धादि- | கார்யகாரணஸம்பந்தம் முதலான |
| अनेकविधकल्पना | பலவகைக் கற்பனையானது |
| राहोः | 'ராகுவின் |
| शिरः | தலை,' |
| खस्य | 'ஆகாசத்தின் |
| सुषिः | வெளி,' |
| मम | 'என்னுடைய |
| आत्मा | ஆத்மா,' |
| प्रतिमावपुः | 'விக்கிரகத்தின் உடம்பு' |
| इत्यादिकल्पनातुल्या | என்பனமுதலிய கற்பனைகட்குச் சமமாய் |
| (भवति) | (இருக்கின்றது ;) |
| पृथग्वस्तुगोचरा | வேறோர் பொருளைக் குறிப்பதாய் |
| न (भवति) | இல்லை. |

---

7.

| | |
|---|---|
| ईश्वरः | ஈச்வரன் |
| उपास्योपासकत्वेन | தொழப்படுவோனாகவும் தொழுவோனாகவும் |
| गुरुशिष्यक्रमेण | குரு சிஷ்யன் என்ற முறையாகவும் |
| स्वामिभृत्यादिरूपेण च | உடையவன் ஊழியன் முதலிய ரூபமாகவும் |
| स्वेच्छया | தனது இச்சைப்படி |
| क्रीडति | விளையாடுகிறான். |

---

8.

| | |
|---|---|
| यः | எவன் |
| पितरं प्रति | தகப்பனை நோக்கி |
| पुत्रः | மகனாய் |
| (भवति) | (இருக்கின்றானோ) |
| सः | அவன் |
| पुत्रं प्रति | மகனை நோக்கி |
| पिता एव | தகப்பனே |
| (भवति) | (ஆகின்றான்.) |
| एकः एव हि | ஒன்றேயன்றோ |
| नाना इव | வேறுபட்டதுபோல் |
| शब्दमात्रतः | சொல்மாத்திரையால் |
| कल्प्यते | கொள்ளப்படுகின்றது. |

9.

| | |
|---|---|
| तस्मात् | ஆகவே |
| परमार्थनिरूपणे | வாஸ்தவத்தை ஆராயும்பொழுது |
| प्रकाशः एव | விளக்கம்மாத்திரம் |
| अस्ति | இருக்கின்றது. |
| भेदप्रतीतिः | வேற்றுமையுணர்ச்சி |
| मिथ्या एव | பொய்ம்மையாகவே |
| (भवति) | (உளது ;) |
| मायया | மாயையினால் |
| आत्मनि | ஆத்மாவினிடத்து |
| कल्पिता | கற்பிக்கப்பட்டது. |

9½.

| | |
|---|---|
| मिथ्यात्वं नाम | பொய்ம்மை என்பது |
| सम्यग्ज्ञानोदये | நல்லறிவு உதித்தல் |
| सति | ஆகும்போது |

| | |
|---|---|
| बाध्यत्वं | கெடுதற்கு உரியதாயிருத்தல் |
| (इति) | (என்று) |
| (उच्यते) | (சொல்லப்படுகின்றது.) |

10.

| | |
|---|---|
| शिष्याचार्योपदेशादि | சிஷ்யன், குரு, உபதேசம் என்பன முதலியன |
| स्वप्नवत् | கனவுபோல |
| प्रतिभासते | விளங்குகின்றன. |

11.

| | |
|---|---|
| वेदान्तः | வேதாந்தம் |
| मिथ्याभूतः अपि | பொய்ம்மையாயினும் |
| देवताप्रतिमावत् | கடவுள்விக்கிரகம்போலும் |
| चित्रवत् | சித்திரம்போலும் |
| प्रतिबिम्बवत् च | பிரதிபிம்பம்போலும் |
| सत्यं | ஸத்யமான |
| अर्थं | பொருளை |
| प्रबोधयेत् | அறிவிக்கும். |

12.

| | |
|---|---|
| अयं | இந்த |
| सर्वः | எல்லா |
| व्यवहारः अपि | வியவகாரமும் |
| मायायाः | மாயையினுடைய |
| परिजृम्भणं | விலாஸமாக |
| (भवति) | (இருக்கின்றது.) |

| | |
|---|---|
| सुषुप्तिसदृशी | உறக்கத்திற்கு ஸமானமான |
| माया | மாயை |
| स्वप्रबोधेन | தன் அறிவினுல் |
| बाध्यते | தொலைக்கப்படுகின்றது. |

13.

| | |
|---|---|
| युक्तिहीनप्रकाशस्य | யுக்தியில்லாதவிளக்கத்திற்கு |
| माया | மாயை |
| इति | என்னும் |
| सञ्ज्ञा | பெயர் |
| कथ्यते | சொல்லப்படுகின்றது. |
| सा | அது |
| दृश्यमाना | காணப்படுகின்றதாய் |
| (वर्तते) | (இருக்கின்றது ;) |
| (अतः) | (ஆதலால்) |
| असती | இல்லாததாக |
| न (भवति) | இல்லை ; |
| वा | அல்லது |
| बाध्यमाना | அழிக்கப்படுகின்றதாய் |
| (वर्तते) | (இருக்கின்றது ;) |
| (अतः) | (ஆதலால்) |
| सती | உள்ளதாக |
| न (भवति) | இல்லை. |

14.

| | |
|---|---|
| अर्कस्य | சூரியனுடைய |
| तामसी | இருண்ட |
| छाया इव | நிழல்போல |
| इयं | இது |

| | |
|---|---|
| प्रकाशात् | ப்ரகாசத்தினும் |
| भिन्ना | வேறானது |
| न (भवति) | அன்று ; |
| जडत्वेन | ஜடமாதலால் |
| अभिन्ना च | வேறாகாததும் |
| न (भवति) | அன்று ; |
| विरोधात् | விரோதத்தினால் |
| उभयात्मिका | இருதன்மைகளையும்உடையது |
| न (भवति) | அன்று. |

15.

| | |
|---|---|
| इयं | இது |
| स्वहेत्ववयवाभावात् | தனக்குக் காரணமான உறுப்புக்களின்மையால் |
| सावयवा | உறுப்புக்களோடு கூடியதாக |
| न उच्यते | கூறப்படுகின்றதில்லை. |
| सा | அது |
| अवयवहीना च | உறுப்புக்களில்லாததாயும் |
| न (अस्ति) | இல்லை ; |
| (किं तु) | (மற்று) |
| कार्येषु | கார்யங்களிலே |
| अवयवान्विता | உறுப்புக்களோடு கூடியதாய் |
| (भवति) | (இருக்கின்றது.) |

16.

| | |
|---|---|
| विलासिनी | விலாஸத்தையுடைய |
| इयं | இந்த |
| मायावेश्या | மாயையாகிய வேச்யை |
| अविचारितसिद्धा | விசாரிக்கப்பெறாது அமைந்தவளாய் |

| | |
|---|---|
| मिथ्याभूतैः | பொய்யான |
| स्वविभ्रमैः | தன் தளுக்குகளால் |
| पुरुषं | புருஷனை |
| वञ्चयति एव | ஏமாற்றியேவிடுகிருள். |

17.

| | |
|---|---|
| केचन | சிலர் |
| तस्याः | அவளுடைய |
| मूलविच्छेदं | வேரை அறுத்தலை |
| न अभिवाञ्छन्ति | வேண்டுகிருரில்லை. |
| तेषां | அவர்களுடைய |
| पक्षे | கொள்கையிலே |
| मनसः | மனம் |
| (विषयेभ्यः) | (விஷயங்களினின்றும்) |
| मोक्षः | நீங்குதல் |
| कथं | எப்படி |
| सम्भविष्यति | ஆகும் ? |

18.

| | |
|---|---|
| मनसः | மனத்தினுடைய |
| जाग्रत्स्वप्नसुषुप्तयः | நனவு கனவு உறக்கம் என்ற |
| तिस्रः | மூன்று |
| अवस्थाः अपि | நிலைமைகளும் |
| भेदभ्रान्त्येकहेतवः | வேற்றுமைமயக்கத்திற்கு முக்கிய காரணமாய் |
| चक्रवत् | சக்கிரம்போல |
| परिवर्तन्ते | சுற்றிச்சுற்றிச் செல்லுகின்றன. |

19.

| | |
|---|---|
| मनः | மனம் |
| ताभिः | அவைகளால் |
| कर्माणि | கர்மங்களை |
| करोति | செய்கின்றது ; |
| पुनः | மறித்து |
| तैः | அவற்றால் |
| बध्यते | கட்டப்படுகின்றது. |
| पुरुषः | ஆத்மா |
| परः | அப்பாலுள்ளதாய் |
| भानुवत् | சூரியன்போல |
| मनसः | மனத்திற்கு |
| केवलः | வெறும் |
| साक्षी | ஸாக்ஷியாய் |
| (तिष्ठति) | (நிற்கின்றது) |

---

20.

| | |
|---|---|
| यथा | எப்படி |
| अर्कः | சூரியன் |
| प्राणिकृतैः | ப்ராணிகளால் செய்யப்பட்ட |
| कर्मभिः | கர்மங்களால் |
| न बध्यते एव | கட்டுண்கிறானே இல்லையோ |
| तथा | அப்படி |
| आत्मा | ஆத்மா |
| साक्षित्वात् | ஸாக்ஷியாதலால் |
| मनःकृतैः | மனத்தினால் செய்யப்பட்ட |
| (कर्मभिः) | (கர்மங்களால்) |
| न बध्यते एव | கட்டுண்கிறதேயில்லை. |

---

21.

| | |
|---|---|
| आत्मा | " ஆத்மா |
| कर्माणि | கர்மங்களை |
| करोति | செய்கின்றது ; |
| तैः | அவற்ருல் |
| बध्यते | கட்டப்படுகின்றது, |
| मुच्यते च | விடவும்படுகின்றது" |
| इति | என்பது |
| औपचारिकी | உபசாரவழக்கினுலான |
| कॢप्तिः | கொள்கை |
| (स्यात्) | (ஆகும்.) |
| (सा) | (அது) |
| केवलं | முற்றும் |
| भ्रममात्रा एव | மயக்கமாத்திரமாகவே |
| (भवति) | (உள்ளது.) |

---

22.

| | |
|---|---|
| यथा | எப்படி |
| दिवाकरः | சூரியன் |
| धूमाभ्रधूली नीहारैः | புகை, மேகம், தூசி, பனி என்றவற்ருல் |
| अस्पृष्टः अपि | தொடப்பெருதவனுயினும் |
| (तैः) | (அவற்ருல்) |
| छन्नः इव | மறைக்கப்பட்டவன்போல் |
| आभाति | தோற்றுகின்ருனே |
| तथा एव | அப்படியே |
| आत्मा अपि | ஆத்மாவும் |
| मायया | மாயையினுல் |
| (अस्पृष्टः अपि) | (தொடப்படாததாயினும்) |
| (तया) | (அதனுல்) |
| (छन्नः इव) | (மறைக்கப்பட்டதுபோல்) |
| (आभाति) | (தோற்றுகின்றது.) |

23, 24.

| | |
|---|---|
| यथा | எப்படி |
| लीलावशात् | விளையாட்டிற்காக |
| कैश्चित् | சிலரால் |
| भ्राम्यमाणः | சுற்றப்படுகின்ற |
| कुमारकः | சிறுவன் |
| तत् | அந்த |
| जगत् | ஜகத்தை |
| भ्रमत् | சுற்றுவதாக |
| पश्यति | காண்கின்றானே ; |
| | |
| नभः स्थलं | வானத்தை |
| शतचन्द्रं | நூறு சந்திரனுடையதாக |
| (पश्यति) | (காண்கின்றானே) ; |
| तथा एव | அப்படியே |
| वासनावशात् | வாஸனையின் வலிமையினால் |
| मायया | மாயையினாலே |
| भ्रामितः | மயக்கப்பட்ட |
| जीवः | ஜீவன் |
| इदं | இந்த |
| विश्वं | ஜகத்தை |
| नानाकारं | பலவடிவிற்றாகவும் |
| भ्रममाणं च | சுற்றுகிறதாகவும் |
| पश्यति | பார்க்கிறான்; |

25.

| | |
|---|---|
| यथा | எப்படி |
| अर्कः | சூரியன் |
| जलसम्सर्गात् | ஜலத்தோடு சேர்வதனுல் |
| चलन् इव | அசைகிறதுபோல |
| नाना (इव) | வேறுபட்டது (போல) |
| लक्ष्यते | காணப்படுகின்றதோ |
| (तथा) | (அப்படி) |
| देवः | விளங்குகின்ற(ஆத்மா) |
| मनसा | மனத்தொடு |
| सम्सृज्य | சேர்ந்து |
| सम्सरन् इव | பிறந்துஇறந்துஉழல்கிறவன் போல் |
| लक्ष्यते | காணப்படுகிருன். |

26.

| | |
|---|---|
| येन | எவனுல் |
| मनः | மனம் |
| योगाभ्यासवशात् | யோகப்பயிற்சியின் வன்மையினுலே |
| निर्विषयं | விஷயம்நீங்கியதாய் |
| कृतम् | செய்யப்பட்டதோ |
| सः | அந்த |
| पुमान् | புருஷன் |
| सम्सारात् | (ஸம்ஸாரத்தினின்றும்) |
| निवृत्तः | நீங்கியவனுய் |
| सद्यः | உடனே |
| जीवन्मुक्तः | ஜீவன்முக்தனுக |
| भविष्यति | ஆவான். |

27.

| | |
|---|---|
| मायया | மாயையினுல் |
| शिवः | சிவன் |
| सयुजौ | சேர்ந்துநிற்கின்ற |
| द्वौ | இரண்டு |
| सुपर्णौ | அழகிய இறகுள்ள (பக்ஷிகளாக) |
| अभवत् च | ஆனுன் ; |
| एकः | ஒரே (பொருள்) |
| अजां | பிறவாத |
| एकां | ஒன்றை |
| जुषन् | சார்ந்துநிற்கிறதாய் |
| नाना इव | அனேகம்போல் |
| आसीत् | ஆயிற்று ; |
| इति | என்று |
| श्रुतिः | சுருதி |
| ब्रूते | (கூறுகின்றது.) |

---

28.

| | |
|---|---|
| श्रीदक्षिणामूर्तिस्तोत्र- | ஸ்ரீ தக்ஷிணமூர்த்தியினுடைய ஸ்தோத்திரத்தின் |
| अर्थप्रतिपादके | பொருளை உணர்த்துகின்ற |
| मानसोल्लासे | மானஸோல்லாஸம் என்னும் |
| प्रबन्धे | நூலினுள் |
| अष्टमोल्लास- | எட்டாம் உல்லாஸத்தின் |
| संग्रहः | பொழிப்புரை |
| इति | முற்றும். |

---

अथ

# नवमोल्लासः

1.

कथमेवम्विधा माया निवर्तेतेति पृच्छतः ।
ईश्वरोपासनारूपः तदुपायः प्रकीर्त्यते ॥

2.

षट्त्रिम्शत्तत्त्वरूपासु परमेश्वरमूर्तिषु ।
प्रत्यक्षेणोपलभ्यन्ते सर्वैरप्यष्टमूर्तयः ॥

## ஒன்பதாம் உல்லாஸம்.

ஆத்மாவான ப்ரஹ்மத்தை ஆராய்தலானது ஞாநத்திற்கு ஸாதனமாம் என்று சென்ற எட்டு ச்லோகங்களால் உத்தமாதிகாரிக்கு உபதேசம் செய்யப்பட்டது. இனி அந்த ஆத்மாவான ப்ரஹ்மத்தை ஆராயத்திறமையில்லா மந்தாதிகாரிக்கோ, ஈச்வரனைத் தொழுதலே ஞாநஸாதனமாம் என்று அவனுக்கு அதனை உபதேசிக்க எழுகின்றது இந்த ஒன்பதாம் ச்லோகம்:

### உல்லாஸ இயைபு.

1.

இனி, ஆத்மாவான ப்ரஹ்மஸ்வரூபத்தை ஆராய்தலிலே வல்லமையில்லாதவர்க்கு.

இத்தகைய மாயை எவ்வாறு நீங்கக்கூடும்?—என்று வினவுகின்றோனுக்கு, ஈச்வரனைத் தொழுதலானது அதற்கு ஸாதநமாக உணர்த்தப்படுகின்றது.

### அஷ்டமூர்த்திவடிவினனான ஈச்வரனைத் தொழுதல்.

2.

முப்பத்தாறு தத்துவங்களான பரமேச்வரனது வடிவங்களுள், எட்டு வடிவங்கள் யாவராலும் ப்ரத்யக்ஷமாய் அறியப்படுகின்றன.

பூதங்கள் ஐந்து, ப்ராணன்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து, அகக்கரணம் நான்கு, மஹத் காலம் ப்ரதாநம் மாயை வித்யை புருஷன் என்பன ஆறு, பிந்து நாதம் சக்தி சிவன் சாந்தம் அதீதம் என்பன ஆறு; ஆகத் தத்துவங்கள் முப்பத்தாறு. இவை சைவாகமத்தினுள் கூறப்பட்டவை. இவற்றை இந்நூலின் இரண்டாம் உல்லாஸத்தினுள் விரிவாகக் காணலாம்.

3.

अमेयासु मनः क्षिप्रं आरोढुं नार्हतीत्यतः ।
मूर्त्यष्टकमयीं ब्रूते गुरुः सर्वात्मभावनाम् ॥

9. भूरम्भांस्यनलोऽनिलोऽम्बरमहर्नाथो हिमांशुः पुमान्
इत्याभाति चराचरात्मकमिदं यस्यैव मूर्त्यष्टकम् ।
नान्यत्किञ्चन विद्यते विमृशतां यस्मात्परस्माद्विभोः
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥

---

எட்டுவடிவங்கள் - இனி ஒன்பதாம் மூலச்லோகத்தினுள் கூறப்படும் நிலம் நீர் நெருப்பு முதலியன. ஆகாசம் மனத்திற்கு விஷயமாகின்றது, அல்லது ஸாக்ஷிக்கு மட்டும் விஷயமாகின்றது என்னும் கொள்கையினைக் கொண்டு, " ப்ரத்யக்ஷமாய் அறியப்படுகின்றன " எனப்பட்டது. (2)

3.

ஈச்வரனுக்கு முப்பத்தாறு வடிவங்கள் இருக்க, அவற்றுள் இந்த எட்டு வடிவங்களை மாத்திரம் ஏன் எடுத்துக்கொள்ளவேண்டும்? மற்றையவற்றைக் கூடாது? எனில், —கூறுவோம் :

அளவிடவொண்ணாதவற்றிலே மனம் விரைவாக ஏறுதல் ஏலாது என்பதனால், ஆசார்யர் அஷ்டமூர்த்திமயமாகிய ஸர்வாத்மஸ்வரூபபாவனையை அருளிச்செய்கிறார் :

அளவிடவொண்ணாதவற்றிலே - அறிதற்கு அரியவையாயுள்ளவற்றிலே. மூர்த்தி - உருவம். பாவனை - தியானம். (3)

9. நிலம் நீர் நெருப்பு வாயு ஆகாயம் சூரியன் சந்திரன் புருஷன் என ஸ்தாவரஜங்கமமாய் (எது) விளங்குகின்றதோ, (அந்த) இவ்வெட்டு வடிவங்களும் எவனுக்கே உள்ளனவோ ; (உண்மையினை) ஆராய்வோர்க்கு எந்த வியாபகமான பரம்பொருளைக்காட்டிலும் வேறொன்று இல்லையோ ; அந்த ஸ்ரீமதாசார்ய ஸ்வரூபமான ஸ்ரீதக்ஷிணமூர்த்திக்கு இந்த நமஸ்காரம்.

अस्यैवं सिद्धान्तः—

4.

विराट्छरीरे ब्रह्माण्डे प्राणिनामपि विग्रहे ।
षट्त्रिम्शत्तत्त्वसङ्घातः सर्वत्राप्यनुवर्तते ॥

---

இந்தப் பிரபஞ்சமானது ஈச்வரனுக்கு வேருயிருத்தலால், எப்படி அவனது உடம்பாகும்? எனச் சங்கித்து, ஆராயுங்கால் இது அவனுக்கு வேருகச் சுதந்திரமாய் இல்லை என்பார், "ஆராய்வோர்க்கு எந்த வியாபகமான பரம்பொருளைக் காட்டிலும் வேருென்று இல்லையோ" என்ருர். (9)

இதனது ஸித்தாந்தம் இப்படியாம்:

நம்மால் காணப்படுகின்ற ஜகத்தெல்லாம் அஷ்டமூர்த்திவடிவிற்ருயுளது. அது முப்பத்தாறு தத்துவவடிவிற்ருன ஈச்வரனது உடம்பாம். அது, அதிதைவம் அத்யாத்மம் என இருவகைப்படும். அவற்றுள், முந்தினது பதினுலுலோகங்களாகிய ப்ரஹ்மாண்டமென்பது. பிந்தினதோ ஜீவனுடைய உடம்பாகிய பிண்டமென்பது. அண்டபிண்டமாகிய இவ்விரண்டும் கார்யகாரணமாய்நிற்றலால் இவற்றிற்குப் பேதமில்லை. இனி, உபாஸகனுவான், வ்யஷ்டியாகிய பிண்டத்தின் அவயவங்களை ஸமஷ்டியாகிய அண்டத்தின் அவயவங்களோடும், பிண்டத்தின் அவயவியை அண்டத்தின் அவயவியோடும் ஒன்ருக்கிக்கொண்டு இவ்வாறு ஈச்வரனைத் தன் ஆத்மாவாகத் தியானிப்பவனுய், முந்தின எட்டு மூலச்லோகங்களால் அருளிச் செய்யப்பட்ட ப்ரஹ்மாத்மாவை அந்த ஈச்வரனது அருளினுலே நேரே கண்டுணர்ந்து ஈடேறுகிருன் என்பது இங்குச் சொல்லுவோன் குறிப்பாதலால், இவையனைத்தையும் எடுத்துக்காட்டத் தொடங்குகிருர்:

4.

ப்ரஹ்மாண்டமாகிய விராட்சரீரத்திலும் ப்ராணிகளுடைய சரீரத்திலும் முப்பத்தாறு தத்துவங்களின் சேர்க்கையானது எங்கும் தொடர்ந்துளது.

முப்பத்தாறு தத்துவங்கள், 9 - 2 - ஆம் சுலோகத்து உரையினுள் கூறப்பட்டன. பிண்டமானது ப்ரஹ்மாண்டத்திற்கு வேருய் இல்லை, அதுவும் அஷ்டமூர்த்திகட்கு வேருய் இல்லை என்பது பொருள். (4)

5.

व्याप्तिर्व्यष्टिशरीरेऽस्मिन् मनसो व्यष्टिरूपिणः ।
तस्मात्सर्वात्मकमिदं स्वशरीरं विचिन्तयेत् ॥

6.

व्यष्ट्युपासनया पुम्सः समष्टिव्याप्तिमाप्नुयात् ।
उपसङ्क्रामतीत्येवं दशकृत्व उपादिशत् ॥

7.

ब्रह्माण्डस्योदरे लोकाः सप्तभूरादयः स्थिताः ।
मूलादिब्रह्मरन्ध्रान्तेष्वाधारेषु वसन्ति ते ॥

---

5.

வ்யஷ்டியான உடம்பிலே வ்யஷ்டியான மனம் வியாபித்திருத்தலால், இந்தத் தன்உடம்பை எல்லாவடிவிற்றுகத் தியானிக்கவேண்டும்.

6.

(உபாஸகன்) ஈச்வரனை வ்யஷ்டியாக உபாஸித்தலால் ஸமஷ்டி வியாப்தியை யடைவான். (சுருதியானது) "அடைகிறுன்" என இவ்வாறு பத்துமுறை உபதேசித்துளது.

இங்குக் குறிக்கப்பட்ட சுருதி தை - உப - 2 - 8 ; 3 - 10. (6)

(1) அண்டத்திலுள்ள நிலம் பிண்டத்திலும் அமைந்திருத்தல்.

7.

ப்ரஹ்மாண்டத்தினுள்ளே பூர்லோகம்முதலான எழு உலகங்கள் உள்ளன. அவை (உடம்பினுள்ளே) மூலாதாரம்முதலாக ப்ரஹ்ம ரந்திரம் ஈருகவுள்ள ஆதாரங்களிலே வஸிக்கின்றன.

மூலாதாரத்திலே பூர்லோகமும், ஸ்வாதிஷ்டாநத்திலே புவர்லோகமும், மணி-பூரகத்திலே ஸ்வர்லோகமும், அநாஹதத்திலே மஹர்லோகமும், விசுத்தத்திலே ஜநர்லோகமும், ஆஜ்ஞையிலே தபர்லோகமும். ஸஹஸ்ராரத்திலே ஸத்யலோகமும் வஸிக்கின்றன என்பதாம். (7)

7½.

वीणादण्डो महामेरुः अस्थीनि कुलपर्वताः ।

8, 9.

गङ्गा तु पिङ्गला नाडी यमुनेडा प्रकीर्तिता ॥
सरस्वती सुषुम्नोक्ता नाड्योऽन्याः पुण्यनिम्नगाः ।
द्वीपाः स्युर्धातवः सप्त स्वेदबाष्पादयोऽब्धयः ॥

10.

मूलेतिष्ठति कालाग्निः अस्थिमध्ये च बाडवः ।
वैद्युतोऽग्निः सुषुम्नायां पार्थिवो नाभिमण्डले ॥

---

7½

முதுகெலும்பு மஹாமேருவாம். (அதற்குப் பக்கத்திலுள்ள) எலும்புகள் குலபர்வதங்களாம்.

குலபர்வதங்கள் - பாரியாத்ரம் முதலியன. (7½)

(2) அண்டத்திலுள்ள நீர் பிண்டத்திலும் அமைந்திருத்தல்.

8, 9.

இனி, பிங்கலை என்னும் நாடி கங்கையாக, இடை யமுனையாக, ஸுஷும்நை ஸரஸ்வதியாகக் கூறப்பட்டுள்ளன. மற்றை நாடிகள் மற்றைப் புண்யநதிகளாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. ஏழு தாதுக்களும் ஏழு தீவுகளாம். வியர்வை கண்ணீர் முதலியன ஏழு ஸமுத்ரங்களாம்.

ஏழு தாதுக்கள் - த்வக் முதலியன. தீவுகள் - ஜம்பூத்வீபம் முதலியன. ஸமுத்ரங்கள் - தீவுகளைச் சூழ்ந்துநிற்கும் கடல்கள். (8, 9)

(3) அண்டத்திலுள்ள நெருப்பாயினும் ஒளியாயினும் பிண்டத்திலும் அமைந்திருத்தல்.

10.

மூலாதாரத்திலே (ப்ரளய)காலநெருப்பு உள்ளது. எலும்புகளினுள்ளே பாடபநெருப்பும், ஸுஷும்நையிலே மின்னல்நெருப்பும், கொப்பூழ் வட்டத்திலே நிலநெருப்பும் உள்ளன.

11.

हृदि तिष्ठति सूर्याग्निः कपाले चन्द्रमण्डलम् ।
नक्षत्राण्यपराण्याहुः नेत्रादीनीन्द्रियाण्यपि ॥

12.

धार्यन्ते वायुभिर्लोकाः यथा प्रवहणादिभिः ।
प्राणादिभिर्दशविधैः धार्यते वायुभिर्वपुः ॥

13.

प्राप्येडापिङ्गले प्राणः मूलात्सूर्यस्वरूपतः ।
नासिकाभ्यां बहिर्गत्वा लीयते द्विषडङ्गुले ॥

---

11.

சூரியநெருப்பு ஹிருதயத்திலே உள்ளது. சந்திரமண்டலம் மண்டையிலே உள்ளது. அன்றியும், (யோகிகள்) கண்முதலிய இந்திரியங்களை மற்றைய ஒளிகளாகக் கூறுகிறார்கள்.

மற்றைய ஒளிகளாக - அச்விநீ முதலிய நக்ஷத்திரங்களாகவும், செவ்வாய் புதன் முதலிய கிரகங்களாகவும் உள்ள. (11)

(4) அண்டத்திலுள்ள வாயு பிண்டத்திலும் அமைந்திருத்தல்.

12.

எப்படி உலகங்கள் ப்ரவஹணன் முதலிய வாயுக்களால் தாங்கப்படுகின்றனவோ, (அப்படி) உடம்பானது ப்ராணன்முதலான பத்துவகை வாயுக்களால் தாங்கப்படுகின்றது.

ப்ரவஹணன் என்பது ஓர்வகை வாயுவின் பெயர். (12)

சுருதியினுள் கூறிய வாயு ஐந்து : யோகநூலினுள் கூறிய வாயு ஐந்து : ஆக வாயுக்கள் பத்து. இவற்றுள், முந்தின ஐந்தையும் அவ்வவற்றினது தொழிலொடு பகுத்து உணர்த்துகிறார் ;

13.

ப்ராணன் மூலாதாரத்தினின்று இடை பிங்கலைகளை அடைந்து, சூரியவடிவத்தால் மூக்குத்துவாரங்களின்வழியாக வெளியே சென்று, ஈராறு அங்குலத்திலே மறைகின்றது.

சூரியவடிவத்தால் — சூரியன்போல, சூட்டிற்குத் தங்குமிடமாகி. ஈராறு அங்குலத்திலே - பன்னிரண்டு அங்குல தூரத்திலே. (13)

14.

अष्टाङ्गुलेन सोमात्मा नाडीभ्यामन्तराविशेत् ।
मलमूत्रमरुच्छुक्राण्यपानो विसृजेद्बहिः ॥

15.

अग्नीषोममयो भूत्वा सुषुम्नारन्ध्रमाश्रितः ।
आब्रह्मरन्ध्रमुद्गच्छन् उदानो वर्धते स्वयम् ॥

16.

व्यापयेद्वपुषि व्यानः भुक्तान्नरसमन्वहम् ।
सन्धुक्षणं समानस्तु कायाग्नेः कुरुते सदा ॥

---

14.

(அதே ப்ராணனே) சந்திரவடிவிற்ருய் எட்டங்குலதூரத்தினின்று இரண்டு நாடிகளின்வழியாக உள்ளே புகுந்திடும்; அபாநனுகிய மலத்தையும் மூத்திரத்தையும் வாயுவையும் ரேதஸையும் வெளியே தள்ளிவிடும்.

இரண்டு நாடிகளின்வழியாக - இடை பிங்கலைகளாகிய மூக்குத்துவாரங்களின் வழியாக. உள்ளே - உடம்பினுள்ளே. (14)

15.

(ப்ராணன்) அக்நிமயமாய் சந்திரமயமாய் ஆகி ஸுஷும்நையின் துவாரத்தைச் சேர்ந்து, ப்ரஹ்ம ரந்திரம்வரை மேலே செல்கிறதாய்த்தானே உதாநனுக விரிகின்றது.

16.

உண்ட உணவின் ஸாரத்தை (எது) தினந்தோறும் உடம்பினுள் எப்புறத்தும் பரவச் செய்கின்றதோ (அது) வ்யாநனும். இனி, (எது) உடம்புநெருப்பை எப்பொழுதும் எரியச் செய்கின்றதோ (அது) ஸமாநனும்.

இவ்வாறு முந்தின ஐந்து வாயுக்களும் காட்டப்பட்டன. இப்பொழுது, பிந்தின ஐந்து வாயுக்களையும் அவ்வவற்றினது தொழிலொடு பிரித்துரைக்கிருர்:

17.

नागो हिक्काकरः कूर्मः निमेषोन्मेषकारकः ।
क्षुतं करोति कृकरः देवदत्तो विजृम्भणम् ॥

17½.

स्थौल्यं धनञ्जयः कुर्यात् मृतं चापि न मुञ्चति ।

18.

आकाशो बहिरप्यन्तः अवकाशं प्रयच्छति ॥

19.

चन्द्रार्कौ कालनेतारौ प्राणापानौ शरीरिणाम् ।

---

17.

நாகன் விக்கலைச் செய்வது. கூர்மன் கண்மூடுதலையும் திறத்தலையும் செய்வது. கிருகரன் தும்மலைச் செய்கிறது. தேவதத்தன் கொட்டாவி விடுதலைச் செய்கிறது.

கொட்டாவிவிடுதலை - சோம்புதல்வலிமையினால் வாய் பிளத்தலை. (17)

17½.

தநஞ்ஜயன் ஊதலைச் செய்யும்; பிணத்தையும் விடுகிறதில்லை.
ஊதலை - வீங்கலை, பருத்தலை. (17½)

(5) அண்டத்திலுள்ள ஆகாசம் பிண்டத்திலும் அமைந்திருத்தல்.

18.

ஆகாசமானது வெளியிலும் உள்ளிலும் இடத்தைத் தருகின்றது.
எனவே, ஒரே ஆகாசந்தான் ஸமஷ்டியிலும் வ்யஷ்டியிலும் உள்ளது என்றவாறு. (18)

(6, 7) அண்டத்திலுள்ள சூரியனும் (6) சந்திரனும் (7) பிண்டத்திலும் அமைந்திருத்தல்.

19.

காலத்தைச் செலுத்துகின்ற சந்திரனும் சூரியனும், தேகிகளுடைய (உடம்பினுள்ளே உள்ள) ப்ராணனும் அபானனுமாம்.

தேகிகளுடைய - உடம்பை யுடைய ப்ராணிகளுடைய.

साक्षी पुरुषः
इत्येवं मूर्त्यष्टकमिदं वपुः ॥

20.

समनस्कमिदं योगी सेवमान उपासनम् ।
अष्टाङ्गयोगयुक्तः सन् अमनस्कं स गच्छति ॥

21.

मनः प्रसादः सन्तोषः मौनमिन्द्रियनिग्रहः ।
दयादाक्षिण्यमास्तिक्यं आर्जवं मार्दवं क्षमा ॥

---

(8) அண்டத்திலுள்ள புருஷன் பிண்டத்திலும் அமைந்திருத்தல்.

(உடம்பினுள்ளே நின்று யாவற்றையும் பார்த்துக்கொண்டிருக்கும்)

ஸாக்ஷி (எதுவோ, அது வெளியிலுள்ள) புருஷனும்.

ஒரே புருஷனே ஸமஷ்டியிலும் வ்யஷ்டியிலும் இருக்கிருன் என்றபடி.

என இவ்வாறு இச்சரீரம் எட்டு வடிவுடைத்து என்க.

ஸமநஸ்கயோகம் அமநஸ்கத்தை யடையச் செய்கின்றது.

20.

கீழ்க்கூறியபடி அஷ்டமூர்த்தி ஸ்வரூபத்தை உடம்பிலேயே வைத்துத்தியானிப் போனுக்கு அதனுலாகும் பயனை அருளிச்செய்கிருர் :

ஸமநஸ்கமான இந்தத் தியாநத்தை அப்யஸிக்கின்ற (எந்த) யோகி யானவன் அஷ்டாங்கயோகத்தைக் கூடியவனுய் இருக்கின்ருனே, அவன் அமநஸ்கத்தை யடைகின்ருன்.

ஸமநஸ்கமான - மனத்தோடுகூடிய, மனத்தால் வியாபிக்கப்பெற்ற. இந்த- அஷ்டமூர்த்தியாகிய. அஷ்டாங்கயோகத்தை - எட்டு உறுப்புக்களையுடைய யோகத்தை. அமநஸ்கத்தை - மனம்இல்லாததை; ஈச்வரனை, பரம்பொருளை என்றபடி. (20)

யோகத்தினுடைய எட்டு உறுப்புக்கள்.

(1) யமம்.

21.

இனி, யோகத்தினுடைய எட்டு உறுப்புக்களையும் பகுக்கிருர் :

மனஅமைதி, திருப்தி, மௌநம், இந்திரியஅடக்கம், தயை, தாக்ஷிண்யம், நம்பிக்கை, நேர்மை, மென்மை, பொறுமை,

22.

भावशुद्धिरहिंसा च ब्रह्मचर्यं स्मृतिर्धृतिः ।
इत्येवमादयोऽन्ये च मनस्साद्ध्या यमाः स्मृताः ॥

23, 23½.

स्नानं शौचं क्रतुः सत्यं जपो होमश्च तर्पणम् ।
तपो दानं तितिक्षा च नमस्कारः प्रदक्षिणम् ॥
व्रतोपवासाद्याश्चान्ये कायिका नियमाः स्मृताः ।

---

22.

மனச்சுத்தம், அஹிம்ஸை, ப்ரஹ்மசர்யம், நினைப்பு, தைர்யம் என்பன முதலியவையும் மற்றையவையும் மனத்தினால் செய்யப்படும் யமங்களாகக் கருதப்பட்டுள்ளன.

மனஅமைதி - மனம் அலையாது ஒருகுறியிலே நிற்றல். மௌநம் - வீண்வார்த்தை பேசாமை. தாக்ஷிண்யம் - வியவகாரத்திலே தேர்ச்சியுடைமை, பிடிவாதமின்மை என்க. நம்பிக்கை - சாஸ்திரமும் ஆசார்யனும் உரைக்கின்ற விஷயத்திலே விச்வாஸம். நேர்மை - கோணலில்லாமை. மென்மை - கடிநமாயிராமை.

மனச்சுத்தம் - வார்த்தைபேசுதல் முதலியவற்றிலே மனக்கள்ளமில்லாமை. நினைப்பு - பிறப்பு இறப்பு பிணி மூப்பு முதலியவற்றிலே துன்பத்தை மீளமீளச் சிந்தித்தல். தைர்யம் - மனம் ப்ராணன் இந்திரியங்கள் என்ற இவை அயர்ந்திட்ட வழியும் உறைத்துநிற்றல். "முதலியவையும்" என்றதனால் - மாநியாகாமை வே-கீ- 13 - 7, 8, 9, 10, 11) முதலியவற்றையும், "மற்றையவையும்" என்றதனால் - பகைப்போனாகாமை (வே - கீ - 12 - 13, 14, 15, 16, 17, 18, 19) முதலியவற்றையும் கொள்க. (22)

(2) நியமங்கள்.

23, 23½.

இனி, உடம்புவாக்குக்களால் செய்யப்படும் நியமங்களைக் கூறுகிறார்-

ஸ்நாநம், சுத்தம், ஈச்வரபூஜை, ஸத்யம், ஜபம், ஹோமம், தர்ப்பணம், தவம், கொடை, ஸஹித்தல், நமஸ்காரம், ப்ரதக்ஷிணம், வ்ரதம், பட்டினி என்பனமுதலியவையும் மற்றையவையும் உடம்பினால் செய்யப்படும் நியமங்களாகக் கருதப்பட்டுள்ளன.

கீழே (9 - 22) 'மனச்சுத்தம்' என உள்பரிசுத்தம் உரைக்கப்பட்டமையால், இங்கு 'ஸ்நாநம்' 'சுத்தம்', என்றவற்றால் வெளிஸ்நாநத்தையும் வெளிப்பரிசுத்தத்தையும் கொள்க.

24, 25, 25½.

स्वस्तिकं गोमुखं पद्मं हम्साख्यं ब्राह्ममासनम् ॥
नृसिम्हं गरुडं कूर्मं नागाख्यं वैष्णवासनम् ।
वीरं मयूरं वज्राख्यं सिद्धाख्यं रौद्रमासनम् ॥
योन्यासनं विदुः शाक्तं शैवं पश्चिमतानकम् ।

26.

निरालम्बनयोगस्य निरालम्बनमासनम् ॥

26½.

निरालम्बतया ध्यानं निरालम्बः सदाशिवः ।

---

ஸஹித்தல்-குளிர் வெப்பம்முதலிய த்வந்த்வங்களைத் தாங்குதல். மற்றையவையும்-யோகத்திற்கு விரோதமில்லாத ஆஹாரம் முதலியன எவையோ அவையும். 'உடம்பினுல்' என்பது, வாக்கிற்கும் உபலக்ஷணம்.

(3) ஆஸநங்கள்.

24, 25, 25½.

ஆஸநங்களைக் கூறுகிறுர்:

ஸ்வஸ்திகம் கோமுகம் பத்மம் ஹம்ஸம் என்பன ப்ராஹ்ம ஆஸநங்களாம். ந்ருஸிம்ஹம் கருடம் கூர்மம் நாகம் என்பன வைஷ்ணவ ஆஸநங்களாம். வீரம் மயூரம் வஜ்ரம் ஸித்தம் என்பன ரௌத்ர ஆஸநங்களாம். (யோகிகள்) யோநி என்னும் ஆஸநத்தை சாக்தமாகவும், பச்சிமதாநகம் (என்னும் ஆஸநத்தை) சைவமாகவும் அறிகிறுர்கள்.

26.

ஒருயோகவிசேஷத்திற்கு ஓர்ஆஸநவிசேஷத்தை அருளிச்செய்கிறுர்:

நிராலம்பயோகத்திற்கு நிராலம்பநம் என்னும் ஆஸநமாம்.

நிலாம்பநமாவது-கை கால் முதலியவற்றை இன்ன இன்னவாறு வைக்க வேண்டும் என்னும் நியமப்பற்றில்லாதது. (26)

26½.

நிராலம்ப யோகமென்பது யாது? எனில்,

நிராலம்பனைத் தியானித்தலாம். நிராலம்பன் - ஸதாசிவன்.

27.

रेचकः पूरकश्चैव कुम्भकः प्राणसंयमः ॥

28.

इन्द्रियाणां समस्तानां विषयेभ्यो निवारणम् ।
प्रत्याहार इति प्रोक्तं प्रत्याहारार्थवेदिभिः ॥

28½.

आधारे क्वापि मनसः स्थापनं धारणोच्यते ।

---

எனவே, நிர்க்குணமான பரமார்த்த உண்மையிலேயே மனம் ஒருப்பட்டுநிற்றல் எதுவோ, அது நிராலம்பயோகமாம் என்பதாயிற்று. (26½)

(4) ப்ராணாயாமம்.

27.

ப்ராணாயாமத்தைக் கூறுகிறார்:

ப்ராணாயாமமாவது ரேசகம் பூரகம் கும்பகம் என்பனவாம்.

ரேசகம் பூரகம் கும்பகம் என மூவகைத்தான ப்ராணஅடக்கமே ப்ராணாயாமம் என்பது கருத்து. (27)

(5) ப்ரத்யாஹாரம்.

28.

ப்ரத்யாஹாரத்தைக் கூறுகிறார்:

எல்லா இந்திரியங்களையும் விஷயங்களினின்றும் விலக்குதல் ப்ரத்யாஹாரமாம் என்று ப்ரத்யாஹாரப்பொருளை அறிந்தவராலே கூறப்பட்டுளது.

(6) தாரணை.

28½.

தாரணையைக் கூறுகிறார்:

ஒரு ஆதாரத்திலே மனத்தை நிறுத்தல் தாரணை எனப்படுகிறது.

ஒரு ஆதாரத்திலே - தியானிக்கப்படும்பொருளிலே: மணிபூரகம் முதலிய சக்கிரத்திலே: அல்லது, ஹிருதயத்தினுள் தோன்றும் சிவ ராம கிருஷ்ணாதி மூர்த்தியிலே. (28½)

29.

ब्रह्मविष्णुशिवादीनां चिन्ता ध्यानं प्रचक्षते ॥

29½.

ध्यानादस्पन्दनं बुद्धेः समाधिरभिधीयते ।

30.

अमनस्कसमाधिस्तु सर्वचिन्ताविवर्जितम् ॥

---

(7) த்யாநம்.

29.

த்யாநத்தைக் கூறுகிறுர்:

ப்ரஹ்மா விஷ்ணு சிவன் முதலானேர்களைச் சிந்தித்தல் த்யாந (மாம் என்று யோகிகள்) கூறுகிறுர்கள்.

தாரணையென்பது மனத்தையும் ப்ராணனையும் ஓரிடத்து நிலைபெறுத்தல் மாத்திரமாம்; த்யாநமோ விஷ்ணுமுதலான ஓர்விஷயத்தின்மீது மனத்தின் வ்ருத்தி தாரையாக ஓடுதலாம், என்பது வேறுபாடு. (29)

(8) ஸமாதி.

29½.

எட்டாவது உறுப்பான ஸமாதியைக் கூறுகிறுர்:

த்யாநத்தினின்றும் புத்தி அசையாமையானது ஸமாதியாகச் சொல்லப் படுகின்றது.

யோகத்தினுடைய இந்த எட்டாவது அங்கமானது, அறிவது அறியப்படுவது என்னும் வேற்றுமை எண்ணத்தின் லேசத்தினை யுடையதாய் மனத்தொடு சேர்ந்து நிற்கும் ஸவிகல்பம் என்னும் ஸமாதியாம். (29½)

30.

இந்த அங்கங்களால் சாதிக்கப்படும் அங்கியாகிய யோகத்தை அருளிச் செய்கிறுர்:

அமநஸ்கஸமாதியோ எண்ணமெல்லாம் ஒழிந்தது.

அமநஸ்கஸமாதி - நிர்விகல்பம் என்னும் ஸமாதி. எண்ணமெல்லாம் - அறிவது அறியப்படுவது என்னும் வேற்றுமைஎண்ணமனைத்தும். (30)

31.

चित्ते निश्चलतां याते प्राणो भवति निश्चलः ।
चित्तस्य निश्चलत्वाय योगं सध्यानमभ्यसेत् ॥

32.

आकुञ्चनमपानस्य प्राणस्य च निरोधनम् ।
लम्बिकोपरि जिह्वायाः स्थापनं योगसाधनम् ॥

33.

चित्ते निश्चलतां याते प्राणे मध्यपथं गते ।
चिह्नान्येतानि जायन्ते पञ्चभूतजयात् पृथक् ॥

---

**மனமும் ப்ராணனும் அசையாமைக்கு யோகம் ஆவச்யகம்.**

31.

மனம் அசையாமையை யடைந்தவழி, ப்ராணன் அசையாததாகின்றது. மனம் அசையாமைக்காக யோகத்தைத் தியானத்தோடு அப்யஸிக்க வேண்டும்.

ப்ராணன் அசையாமைக்கு மனம்அசையாமை காரணம். மனம்அசையாமைக்கோ அஷ்டாங்கயோகமே காரணம். ஆகவே, அதனை ஊக்கத்தொடு பயிலவேண்டும் என்பது கருத்து. "தியானத்தோடு" எனத் தியானத்தைமட்டும் எடுத்துக்கூறியது, அதிலே ஆதரமிகுதியைக் குறிப்பிக்கும்பொருட்டு. (31)

**லம்பிகாயோகம்.**

32.

மீண்டும் யோகத்திற்கு வேறோர் ஸாதநத்தைக் கூறுகிருர்:

அபாநனைச் சுருக்குதலும், ப்ராணனை அடக்குதலும், உள்நாக்கின்மேல் நாக்கைநிறுத்துதலும் யோகத்திற்கு ஸாதநமாம்.

**பூதஜயயோகத்தின் லக்ஷணங்கள்.**

33.

இனி, அப்யாஸத்திஞல் சித்தத்தையும் ப்ராணனையும் வசப்படுத்திக் கொண்ட யோகியின் அடையாளங்களைக் கூறுகிருர்:

சித்தம் அசையாமையை யடைய ப்ராணன் நடுவழியைச் சேர்ந்தவளவிலே, ஐந்து பூதங்களையும் முறையே ஜயிக்க, இந்த அடையாளங்கள் உண்டாகின்றன.

34.

मलमूत्रकफाल्पत्वं आरोग्यं लघुता तनोः ।
सुगन्धस्वरवर्णत्वं प्रथमं योगलक्षणम् ॥

35.

कण्टकाग्रेष्वसङ्गत्वं जलपङ्केष्वमज्जनम् ।
क्षुत्तृडादिसहिष्णुत्वं द्वितीयं योगलक्षणम् ॥

36.

बह्वन्नपानभोक्तृत्वं आतपादिसहिष्णुता ।

---

உடம்பிலே கால்முதல் முழங்கால்வரை நிலத்தின் இடம்; முழங்கால்முதல் கொப்பூழ்வரை நீரின் இடம்: கொப்பூழ்முதல் தொண்டைவரை தீயின் இடம்; தொண்டைமுதல் புருவநடுவுவரை வாயுவின் இடம்; புருவநடுவுமுதல் உச்சித்துவாரம் வரை ஆகாசத்தின் இடம். இவ்விடங்களிலே தாரணையை அப்யஸிக்க, இவற்றை வெல்லுதலாகின்றது. ஆகவே, அங்ஙனம் இனிக்கூறப்படும் குறிகள் நிகழ்கின்றன என்பது. (33)

34.

நிலம் என்னும் முதல்இடத்தை வெல்லுதல்வரையிலுள்ள யோகத்தின் குறிகளைக் கூறுகின்றார்.

மலம் மூத்திரம் கோழை (இவை) அற்பமாதலும், உடம்பு நோயின்றி நிற்றலும் லகுவாயிருத்தலும், நல்ல நாற்றமும் நல்ல குரலும் நல்ல நிறமும் முதலாவது யோக அடையாளமாம்.

35.

நீர் என்னும் இரண்டாம் இடத்தை வெல்லுதல்வரையிலுள்ள யோகத்தின் குறிகளைக் கூறுகிறார்:

முள் நுனிகளிலே ஒட்டாமையும், நீரிலும் சேற்றிலும் அமுங்காமையும், பசி தாகம் முதலியவற்றைத் தாங்கும் தன்மையனாதலும் இரண்டாம் யோக அடையாளமாம்.

முள் நுனிகளிலே ஒட்டாமை - முட்களால் தைக்கப்படாமை. (35)

36.

தீ என்னும் மூன்றாம் இடத்தை வெல்லுதல்வரையிலுள்ள யோகத்தின் குறிகளைக் கூறுகிறார்:

அதிகமான உணவையும் பானத்தையும் உட்கொள்ளுவோனாதலும்,

दर्शनं श्रवणं दूरात् तृतीयं योगलक्षणम् ॥

37.

मण्डूकप्लवनं भूमौ मर्कटप्लवनं द्रुमे ।
आकाशगमनं चेति चतुर्थं योगलक्षणम् ॥

38.

ज्ञानं त्रिकालविषयं ऐश्वर्यमणिमादिकम् ।
अनन्तशक्तिमत्त्वं च पञ्चमं योगलक्षणम् ॥

39.

प्राणे सुषुम्नां सम्प्राप्ते नादोऽन्तः श्रूयतेऽष्टधा ।
घण्टादुन्दुभिशङ्खाब्धिवीणावेण्वादितालवत् ॥

---

வெயில் முதலியவற்றைத் தாங்கும் தன்மையனுதலும், தூரத்தினின்று பார்த்தலும் கேட்டலும் மூன்றும் யோக அடையாளமாம்.

37.

வாயு என்னும் நான்காம் இடத்தை வெல்லுதல்வரையிலுள்ள யோகத்தின் குறிகளைக் கூறுகிருர் :

பூமியிலே தவளைபோலக் குதித்தல், மரத்திலே குரங்குபோலத் தாவுதல், ஆகாசத்திலே செல்லுதல் என்பன நான்காம் யோக அடையாளமாம்.

38.

ஆகாசம் என்னும் ஐந்தாம் இடத்தை வெல்லுதல்வரையிலுள்ள யோகத்தின் குறிகளைக் கூறுகிருர் :

முக்காலத்தையும் பற்றிய அறிவும், அணிமா முதலிய ஈச்வரத்தன்மையும், எல்லையில்லாச் சக்தியுடைமையும் ஐந்தாம் யோக அடையாளமாம்.

39.

நிலம்முதலிய இடங்களை வெல்ல, அதனுலாகும் அடையாளங்கள் கூறப்பட்டன. இனி, ஸுஷும்நையினுள் ப்ராணனை அடக்கி அங்கு மனத்தை வசப்படுத்தி நிறுத்த, அப்பொழுது உண்டாகும் குறிகளைக் கூறுகிருர் :

ப்ராணன் ஸுஷும்நையைச் சென்றவளவிலே, ஓசையானது உள்ளேஎட்டு-விதமாய்க் கேட்கப்படுகின்றது ; மணி, முரசு, சங்கு, கடல், வீணை, புல்லாங்குழல், தாளம் முதலியன போல.

40.

तनूनपात्तटित्तारातारेशतपनोपमम् ।
ब्रह्मनाडीं गते प्राणे बिम्बरूपं प्रकाशते ॥

41.

श्वासाश्चरन्ति यावन्तः मनुष्यस्य दिनं प्रति ।
तावन्ति योजनान्यर्कः श्वासे श्वासे प्रधावति ॥

42.

एकविम्शतिसाहस्रं षट्छतं श्वाससङ्ख्यया ।
सोऽहमित्युच्चरत्यात्मा मन्त्रं प्रत्यहमायुषे ॥

---

" முதலியன " என்றதனுல், மிருதங்தம் முதவியவற்றைக் கொள்க. (39)

**யோகத்திலே ஈச்வரன் வெளிப்படுதல்.**

40.

அப்பொழுது,

ப்ராணன் ப்ரஹ்மநாடியை [ஸுஷும்நையை] அடைந்தவழி, ஈச்வர வடிவமானது தீபோல மின்னல்போல நக்ஷத்திரம்போல சந்திரன்போல சூரியன்போல (முறையே) விளங்குகின்றது.

**யோகத்திலே ப்ரணவம் வெளிப்படுதல்.**

41.

இப்பொழுது, அங்கு ப்ரணவம் வெளிப்படும்வகையைக் கூறுகிறார் :

மனிதனுக்கு நாள்தோறும் எத்தனை சுவாசங்கள் செல்லுகின்றனவோ, அத்தனை யோஜநதூரம் ஓரோர் சுவாஸத்திலும் சூரியன் ஓடுகின்றான்.

42.

இருபத்தோராயிரத்து அறுநூறு சுவாஸக்கணக்கின்படி ஆத்மாவானது, " ஸோஹம் [அவன் நான்] " என்னும் மந்திரத்தை ஆயுள்வளர்தற்காகத் தினந்தோறும் உச்சரிக்கின்றது.

சூரியோதயம்முதல் சூரியோதயம்வரையிலுள்ள இரவுபகலாகிய ஒருநாளைக்கு ஒருமனிதனுக்கு இருபத்தோராயிரத்து அறுநூறு சுவாஸங்கள் செல்லுகின்றன என்பது சொல்லுவோன் குறிப்பு. (42)

43.

सकारं च हकारं च लोपयित्वा प्रयोजयेत् ।
सन्धिं वै पूर्वरूपाख्यं ततोऽसौ प्रणवो भवेत् ॥

44.

अकारश्चाप्युकारश्च मकारो बिन्दुनादकौ ।
पञ्चाक्षराण्यमून्याहुः प्रणवस्थानि पण्डिताः ॥

45.

ब्रह्मा विष्णुश्च रुद्रश्चापीश्वरश्च सदाशिवः ।
तेष्वक्षरेषु तिष्ठन्ति षट्त्रिंशत्तत्त्वसंयुताः ॥

---

43.

" ஸோஹம் " என்பதிலே,

ஸகாரத்தையும் ஹகாரத்தையும் தள்ளி பூர்வரூபம் என்னும் ஸந்தியை வழங்கவேண்டும். பின்பு அது ஓங்காரமாகும்.

ஸோஹம் என்பது, ஸ் ஓ ஹ் அ ம் என்பனவற்றைக் கொண்டது. இவற்றுள், ஸ் ஹ் என்ற இரண்டடனேயும் நீக்க, ஓ அ ம் என வந்தது. இனி, ஓ அ என்ற இரண்டும் புணருங்கால், வ்யாகரணவிதிப்படி பூர்வரூபமாகிய ஓ என்னும் முந்தின வடிவம் நின்றது. நிற்கவே, அங்ஙனம் ஓ ம் என்ற இரண்டும் சேர, ஓம் என ஆயிற்று என்பதாம். (43)

44.

இந்த ஓங்காரத்தின் உறுப்புக்களைப் பகுக்கிறுர்.

அ, உ, ம், பிந்து, நாதம் என்ற இவ்வைந்து அக்ஷரங்களும் [ஒலிகளும்] ப்ரணவத்திலுள்ளனவாக ஞானிகள் கூறுகிறுர்கள்.

அ உ என்ற இரண்டும் புணருங்கால், ஓ என ஆகும். பிந்துவாவது, மூக்கினுல் உச்சரிசக்கப்படும் உயிரெழுத்துஒலி. ம் என்பதற்கு உயிரெழுத்து இன்மையால், அதனேடு பிந்துவைப் பின்னுகக் கூட்டுக. நாதம் - ஒலிப்பொது. (44)

45.

இவ்வைந்து அக்ஷரங்கட்கும் தேவதைகளைக் கூறுகின்றுர் :

ப்ரஹ்மா, விஷ்ணு, ருத்ரன், ஈச்வரன், ஸதாசிவன் (இவர்கள்) முப்பத்தாறு தத்துவங்களைப் பொருந்தியவராய் அந்த அக்ஷரங்களில் வஸிக்கிறுர்கள்.

46.

गुरुप्रसादाल्लभते योगमष्टाङ्गलक्षणम् ।
शिवप्रसादाल्लभते योगसिद्धिं च शाश्वतीम् ॥

47.

सच्चिदानन्दरूपाय बिन्दुनादान्तरात्मने ।
आदिमध्यान्तशून्याय गुरूणां गुरवे नमः ॥

48.

इति श्रीदक्षिणामूर्तिस्तोत्रार्थप्रतिपादके ।
प्रबन्धे मानसोल्लासे नवमोल्लाससंग्रहः ॥

---

ஈச்வரனுடைய அருளும், ஆசார்யனுடைய அருளும் ஆவச்யகம்.

46.

(உபாஸகனுவான்) அஷ்டாங்கமாகிய யோகத்தை ஆசார்யனுடைய அருளினுலே அடைகிருன்; சாச்வதமான யோகஸித்தியையும் சிவனுடைய அருளினுலே பெறுகிருன்.

எனவே, ஆசார்யனையும் ஈச்வரனையும் தொழுதவிடத்து யாவும் கைகூடும் எனவும், ஆதலால் அவ்விருவரையும் தொழுதல் வேண்டும் எனவும் குறிப்பிக்கப் பட்டன. யோகஸித்தியை - ஆத்மாவின் தத்துவம் வெளிப்படுதலை. (46)

47.

ஸச்சிதாநந்தவடிவினராய், பிந்துநாதங்களுடைய உள்ளேயுள்ள ஆத்மாவாய், முதல் நடு முடிவு இல்லாத ஆசார்யருடைய ஆசார்யருக்கு நமஸ்காரம்.

முதல் நடு முடிவு இல்லாத ஆசார்யருக்கு எனக்கூட்டுக. பிந்துநாதங்களுடைய - உருவம் பெயர் என்றவற்றினுடைய. ஆசார்யருடைய ஆசார்யருக்கு = ஸநகர் முதலான ஆசார்யருக்கும் ஆசார்யரான ஸ்ரீ தக்ஷிணுமூர்த்திக்கு. (47)

48.

இதனேடு, இவ்வுல்லாஸத்தை முடிக்கிருர்:

ஸ்ரீ தக்ஷிணுமூர்த்தி ஸ்தோத்திரத்தின் பொருளை உணர்த்துகின்ற மாநஸோல்லாஸம் என்னும் நூலினுள் ஒன்பதாம் உல்லாஸப் பொழிப்புரை முற்றும்.

## ஒன்பதாம் உல்லாஸம்.

பதவுரை.

1.

| | |
|---|---|
| एवम्विधा | இவ்விதமான |
| माया | மாயை |
| कथं | எப்படி |
| निवर्तेत | நீங்கக்கூடும் ? |
| इति | என்று |
| पृच्छतः | வினவுகின்றேனுக்கு |
| ईश्वरोपासनारूपः | ஈச்வரனைத்தொழுதலானது |
| तदुपायः | அதற்கு ஸாதனமாக |
| प्रकीर्त्यते | உணர்த்தப்படுகின்றது. |

2.

| | |
|---|---|
| षट्त्रिम्शत्तत्त्वरूपासु | முப்பத்தாறு தத்துவங்களான |
| परमेश्वरमूर्तिषु | பரமேச்வரனது வடிவங்களுள் |
| अष्टमूर्तयः | எட்டு வடிவங்கள் |
| सर्वैः अपि | எல்லாராலும் |
| प्रत्यक्षेण | ப்ரத்யக்ஷமாய் |
| उपलभ्यन्ते | அறியப்படுகின்றன. |

3.

| | |
|---|---|
| अमेयासु | அளவிடவொண்ணுதவற்றிலே |
| मनः | மனம் |
| क्षिप्रं | விரைவாக |
| आरोढुं | ஏற |
| न अर्हति | முடியாது. |

| | |
|---|---|
| इति | என்ற |
| अतः | இதனால் |
| गुरुः | ஆசார்யர் |
| मूर्त्यष्टकमयीं | அஷ்டமூர்த்திமயமாகிய |
| सर्वात्मभावनां | ஸர்வாத்மபாவனையை |
| ब्रूते | உரைக்கிறார். |

---

9.

| | |
|---|---|
| भूः | நிலம் |
| अम्भांसि | ஜலங்கள் |
| अनलः | நெருப்பு |
| अनिलः | காற்று |
| अम्बरं | ஆகாசம் |
| अहर्नाथः | பகலுக்கு நாதன் |
| हिमांशुः | குளிர்ந்த கிரணமுடையோன் |
| पुमान् | புருஷன் |
| इति | என |
| चराचरात्मकं | ஜங்கம ஸ்தாவர வடிவமாய் |
| (यत्) | (எது) |
| आभाति | விளங்குகின்றதோ |
| (तत्) | (அந்த) |
| इदं | இந்த |
| मूर्त्यष्टकं | எட்டு வடிவங்களும் |
| यस्य एव | எவனுக்கே |
| (भवति) | (உள்ளனவோ) |
| विमृशतां | (உண்மையினை) ஆராய்வோர்க்கு |

| | |
|---|---|
| यस्मात् | எந்த |
| विभोः | வியாபகமான |
| परस्मात् | பரம்பொருளைக்காட்டிலும் |
| अन्यत् | வேறு |
| किञ्चन | ஒன்று |
| न विद्यते | இல்லையோ ; |
| तस्मै | அந்த |
| श्रीगुरुमूर्तये | ஸ்ரீமதாசார்யஸ்வரூபமான |
| श्रीदक्षिणामूर्तये | ஸ்ரீதக்ஷிணமூர்த்திக்கு |
| इदं | இந்த |
| नमः | நமஸ்காரம். |

---

| | |
|---|---|
| अस्य | இதனுடைய |
| सिद्धान्तः | ஸித்தாந்தம் |
| एवं | இவ்வாறு |
| (स्यात्) | (ஆகும்.) |

---

4.

| | |
|---|---|
| ब्रह्माण्डे | ப்ரஹ்மாண்டமாகிய |
| विराट्छरीरे | விராட் சரீரத்திலும் |
| प्राणिनाम् | ப்ராணிகளுடைய |
| विग्रहे अपि | சரீரத்திலும் |
| षट्त्रिम्शत्तत्त्वसङ्घातः | முப்பத்தாறு தத்துவங்களின் சேர்க்கையானது |
| सर्वत्र अपि | எங்கும் |
| अनुवर्तते | தொடர்ந்துளது. |

---

5.

| | |
|---|---|
| (यस्मात्) | (எதனால்) |
| व्यष्टिरूपिणः | வ்யஷ்டி வடிவிற்றன |
| मनसः | மனம் |

| | |
|---|---|
| अस्मिन् | இந்த |
| व्यष्टिशरीरे | வ்யஷ்டியான உடம்பிலே. |
| व्याप्तिः | வியாபித்தல் |
| (अस्ति) | (உளதோ) |
| तस्मात् | அதனுல் |
| (उपासकः) | (உபாஸகன்) |
| इदं | இந்த |
| स्वशरीरं | தன் உடம்பை |
| सर्वात्मकं | எல்லாவடிவிற்ருக |
| विचिन्तयेत् | தியானிக்கவேண்டும். |

6.

| | |
|---|---|
| (सः) | (அவன்) |
| पुम्सः | ஈச்வரனை |
| व्यष्ट्युपासनया | வ்யஷ்டியாக உபாஸித்தலால் |
| समष्टिव्याप्तिं | ஸமஷ்டிவ்யாப்தியை |
| आप्नुयात् | அடைவான். |
| (श्रुतिः) | (சுருதியானது) |
| उपसङ्क्रामति | " அடைகிருன் " |
| इति | என |
| एवं | இவ்வாறு |
| दशकृत्वः | பத்து முறை |
| उपादिशत् | உபதேசித்துளது. |

7.

| | |
|---|---|
| भूरादयः | பூர்முதலான |
| सप्त | ஏழு |
| लोकाः | உலகங்கள் |
| ब्रह्माण्डस्य | ப்ரஹ்மாண்டத்தின் |
| उदरे | உள்ளே |
| स्थिताः | உள்ளன. |

| | |
|---|---|
| ते | அவை |
| मूलादिब्रह्मरन्ध्रान्तेषु | மூலாதாரம் முதலாக ப்ரஹ்மரந்திரம் ஈருகவுள்ள |
| आधारेषु | ஆதாரங்களில் |
| वसन्ति | வஸிக்கின்றன. |

---

7½.

| | |
|---|---|
| वीणादण्डः | முதுகெலும்பு |
| महामेरुः | மஹாமேரு |
| (स्यात् ) | (ஆகும்.) |
| अस्थीनि | எலும்புகள் |
| कुलपर्वताः | குலபர்வதங்கள் |
| (स्युः) | (ஆகும்.) |

---

8, 9.

| | |
|---|---|
| तु | இனி |
| पिङ्गला | பிங்கலை என்னும் |
| नाडी | நாடி |
| गङ्गा | கங்கையாக |
| प्रकीर्तिता | கூறப்பட்டுளது. |
| इडा | இடை |
| यमुना | யமுனையாக |
| (प्रकीर्तिता) | (கூறப்பட்டுளது.) |
| सुषुम्ना | ஸுஷும்னை |
| सरस्वती | ஸரஸ்வதியாக |
| उक्ता | கூறப்பட்டுளது. |
| अन्याः | மற்றைய |
| नाड्यः | நாடிகள் |

| | |
|---|---|
| (अन्याः) | (மற்றைய) |
| पुण्यनिम्नगाः | புண்ணிய நதிகளாக |
| (उक्ताः) | (கூறப்பட்டுள்ளன.) |
| सप्त | ஏழு |
| धातवः | தாதுக்கள் |
| द्वीपाः | தீவுகள் |
| स्युः | ஆகும். |
| स्वेदबाष्पादयः | வியர்வை கண்ணீர் முதலியன |
| (सप्त) | (ஏழு) |
| अब्धयः | கடல்கள் |
| (स्युः) | (ஆகும்.) |

---

10.

| | |
|---|---|
| कालाग्निः | கால நெருப்பு |
| मूले | மூலாதாரத்திலே |
| तिष्ठति | உள்ளது. |
| वाडवः च | பாடப நெருப்பும் |
| अस्थिमध्ये | எலும்புகளினுள்ளே |
| (तिष्ठति) | (உள்ளது.) |
| वैद्युतः | மின்னலுடைய |
| अग्निः | நெருப்பு |
| सुषुम्नायां | ஸுஷும்நையிலே |
| (तिष्ठति) | (உள்ளது.) |
| पार्थिवः | நிலத்தினுடைய |
| (अग्निः) | (நெருப்பு) |
| नाभिमण्डले | கொப்பூழ்வட்டத்திலே |
| (तिष्ठति) | (உள்ளது). |

---

| | |
|---|---|
| ते | அவை |
| मूलादिब्रह्मरन्ध्रान्तेषु | மூலாதாரம் முதலாக ப்ரஹ்மரந்திரம் ஈருகவுள்ள |
| आधारेषु | ஆதாரங்களில் |
| वसन्ति | வஸிக்கின்றன. |

---

7½.

| | |
|---|---|
| वीणादण्डः | முதுகெலும்பு |
| महामेरुः | மஹாமேரு |
| (स्यात् ) | (ஆகும்.) |
| अस्थीनि | எலும்புகள் |
| कुलपर्वताः | குலபர்வதங்கள் |
| (स्युः) | (ஆகும்.) |

---

8, 9.

| | |
|---|---|
| तु | இனி |
| पिङ्गला | பிங்கலை என்னும் |
| नाडी | நாடி |
| गङ्गा | கங்கையாக |
| प्रकीर्तिता | கூறப்பட்டுளது. |
| इडा | இடை |
| यमुना | யமுனையாக |
| (प्रकीर्तिता) | (கூறப்பட்டுளது.) |
| सुषुम्ना | ஸுஷும்நை |
| सरस्वती | ஸரஸ்வதியாக |
| उक्ता | கூறப்பட்டுளது. |
| अन्याः | மற்றைய |
| नाड्यः | நாடிகள் |

| | |
|---|---|
| (अन्याः) | (மற்றைய) |
| पुण्यनिम्नगाः | புண்ணிய நதிகளாக |
| (उक्ताः) | (கூறப்பட்டுள்ளன.) |
| सप्त | ஏழு |
| धातवः | தாதுக்கள் |
| द्वीपाः | தீவுகள் |
| स्युः | ஆகும். |
| स्वेदबाष्पादयः | வியர்வை கண்ணீர் முதலியன |
| (सप्त) | (ஏழு) |
| अब्धयः | கடல்கள் |
| (स्युः) | (ஆகும்.) |

---

10.

| | |
|---|---|
| कालाग्निः | கால நெருப்பு |
| मूले | மூலாதாரத்திலே |
| तिष्ठति | உள்ளது. |
| बाडबः च | பாடப நெருப்பும் |
| अस्थिमध्ये | எலும்புகளினுள்ளே |
| (तिष्ठति) | (உள்ளது.) |
| वैद्युतः | மின்னலுடைய |
| अग्निः | நெருப்பு |
| सुषुम्नायां | ஸுஷும்நையிலே |
| (तिष्ठति) | (உள்ளது.) |
| पार्थिवः | நிலத்தினுடைய |
| (अग्निः) | (நெருப்பு) |
| नाभिमण्डले | கொப்பூழ்வட்டத்திலே |
| (तिष्ठति) | (உள்ளது). |

---

11.

| | |
|---|---|
| सूर्याग्निः | சூரிய நெருப்பு |
| हृदि | ஹிருதயத்திலே |
| तिष्ठति | உள்ளது. |
| चन्द्रमण्डलं | சந்திரமண்டலம் |
| कपाले | மண்டையிலே |
| (तिष्ठति) | (உள்ளது.) |
| अपि | மேலும் |
| (योगिनः) | (யோகிகள்) |
| नेत्रादीनि | கண் முதலிய |
| इन्द्रियाणि | இந்திரியங்களை |
| अपराणि | மற்றைய |
| नक्षत्राणि | நக்ஷத்திரங்களாக |
| आहुः | கூறுகிறார்கள். |

---

12.

| | |
|---|---|
| यथा | எப்படி |
| लोकाः | உலகங்கள் |
| प्रवहणादिभिः | ப்ரவஹணன் முதலான |
| वायुभिः | வாயுக்களால் |
| धार्यन्ते | தாங்கப்படுகின்றனவோ |
| (तथा) | (அப்படி) |
| वपुः | உடம்பானது |
| प्राणादिभिः | ப்ராணன் முதலிய |
| दशविधैः | பத்து விதமான |
| वायुभिः | வாயுக்களால் |
| धार्यते | தாங்கப்படுகின்றது. |

---

| | |
|---|---|
| प्राणः | ப்ராணன் |
| मूलात् | மூலாதாரத்தினின்று |
| इडापिङ्गले | இடைபிங்கலைகளை |
| प्राप्य | அடைந்து |
| सूर्यस्वरूपतः | சூரியவடிவத்தால் |
| नासिकाभ्यां | இரண்டு மூக்குத்துவாரங்களின் வழியாக |
| बहिः | வெளியில் |
| गत्वा | சென்று |
| द्विषडङ्गुले | ஈராறு அங்குலத்திலே |
| लीयते | கரைந்திடுகின்றது. |

14.

| | |
|---|---|
| (सः) | (அது) |
| सोमात्मा | சந்திரவடிவிற்றாய் |
| अष्टाङ्गुलेन | எட்டு அங்குலத்தால் |
| नाडीभ्यां | இரண்டு நாடிகளின்வழியாக |
| अन्तः | உள்ளே |
| आविशेत् | புகுந்திடும்; |
| अपानः | அபானனாகி |
| मलमूत्र-मरुच्छुक्राणि | மலத்தையும், மூத்திரத்தையும் வாயுவையும், ரேதஸையும் |
| बहिः | வெளியில் |
| विसृजेत् | தள்ளிவிடும். |

15.

| | |
|---|---|
| (सः) | (அது) |
| अग्नीषोममयः | நெருப்புமயமாய் சந்திரமயமாய் |
| भूत्वा | ஆகி |
| सुषुम्नारन्ध्रं | ஸுஷும்னையின் துவாரத்தை |
| आश्रितः | அடைந்ததாய் |

| | |
|---|---|
| आब्रह्मरन्ध्रं | ப்ரஹ்மரந்திரம்வரை |
| उद्गच्छन् | மேலே செல்கிறதாய் |
| स्वयं | தானே |
| उदानः | உதானனாக |
| वर्धते | விரிகின்றது. |

16.

| | |
|---|---|
| (यः) | (எது) |
| भुक्तान्नरसं | உண்ட உணவின் ஸாரத்தை |
| अन्वहं | தினந்தோறும் |
| वपुषि | உடம்பினுள் |
| व्यापयेत् | வியாபிக்கச் செய்யுமோ |
| सः | (அது) |
| व्यानः | வ்யானன் |
| (स्यात्) | (ஆகும்.) |
| तु | இனி |
| (यः) | (எது) |
| कायाग्नेः | உடம்புநெருப்பை |
| सदा | எப்பொழுதும் |
| सन्धुक्षणं | எரிதலை |
| कुरुते | செய்கின்றதோ |
| (सः) | (அது) |
| समानः | ஸமானன் |
| (स्यात्) | (ஆகும்.) |

17.

| | |
|---|---|
| नागः | நாகன் |
| हिक्काकरः | விக்கலைச் செய்வதாய் |
| (भवति) | (உளது.) |

| | |
|---|---|
| कूर्मः | கூர்மன் |
| निमेषोन्मेषकारकः | கண்மூடுதலையும் திறத்தலையும் செய்வதாய் |
| (भवति) | (உளது.) |
| कृकरः | கிருகரன் |
| क्षुतं | தும்மலை |
| करोति | செய்கின்றது. |
| देवदत्तः | தேவதத்தன் |
| विजृंभणं | கொட்டாவி விடுதலை |
| (करोति) | (செய்கிறது.) |

17½.

| | |
|---|---|
| धनंजयः | தநஞ்ஜயன் |
| स्थौल्यं | ஊதலை |
| कुर्यात् | செய்யும் ; |
| मृतं च अपि | பிணத்தையும் |
| न मुञ्चति | விடுகிறதில்லை. |

18.

| | |
|---|---|
| आकाशः | ஆகாசம் |
| बहिः | வெளியிலும் |
| अन्तः अपि | உள்ளிலும் |
| अवकाशं | இடத்தை |
| प्रयच्छति | தருகின்றது. |

19.

| | |
|---|---|
| कालनेतारौ | காலத்தைச் செலுத்துகின்ற |
| चन्द्रार्कौ | சந்திரனும் சூரியனும் |
| शरीरिणां | ப்ராணிகளுடைய |
| प्राणापानौ | ப்ராணனும் அபாநனுமாக |
| (भवतः) | (உள்ளன.) |

| | |
|---|---|
| (यः) | (எது) |
| साक्षी | ஸாக்ஷியாக |
| (भवति) | (உள்ளதோ) |
| (सः) | (அது) |
| पुरुषः | புருஷன் |
| (स्यात्) | (ஆகும்.) |
| इति | என |
| एवं | இவ்வாறு |
| इदं | இந்த |
| वपुः | உடம்பு |
| मूर्त्यष्टकं | எட்டுவடிவுடைத்தாய் |
| (भवति) | (உளது.) |

---

20.

| | |
|---|---|
| समनस्कं | மனத்தோடு கூடிய |
| इदं | இந்த |
| उपासनं | தியானத்தை |
| सेवमानः | அப்யஸிக்கின்ற |
| (यः) | (எந்த) |
| योगी | யோகியானவன் |
| अष्टाङ्गयोगयुक्तः सन् | அஷ்டாங்கயோகத்தைக் கூடியவனாய் |
| (भवति) | (இருக்கின்றானோ) |
| सः | அவன் |
| अमनस्कं | அமநஸ்கத்தை |
| गच्छति | அடைகிறான். |

---

21.

| | |
|---|---|
| मनःप्रसादः | மனஅமைதி |
| सन्तोषः | திருப்தி |
| मौनं | மௌநம் |
| इन्द्रियनिग्रहः | இந்திரிய அடக்கம் |
| दया | கிருபை |
| दाक्षिण्यं | தாக்ஷிண்யம் |
| आस्तिक्यं | நம்பிக்கை |
| आर्जवं | நேர்மை |
| मार्दवं | மென்மை |
| क्षमा | பொறுமை |
| (इति) | (என்று) |
| (एते) | (இவை) |
| (यमाः) | (யமங்களாக) |
| (स्मृताः) | (கருதப்பட்டுள்ளன.) |

22.

| | |
|---|---|
| भावशुद्धिः | மனச்சுத்தம் |
| अहिंसा च | அஹிம்ஸை |
| ब्रह्मचर्यं | ப்ரஹ்மசர்யம் |
| स्मृतिः | நினைப்பு |
| धृतिः | தைர்யம் |
| इत्येवमादयः | என்பன முதலியவையும் |
| अन्ये च | பிறவும் |
| मनस्साध्याः | மனத்தினுல் சாதிக்கப்படும் |
| यमाः | யமங்களாக |
| स्मृताः | கருதப்பட்டுள்ளன. |

23, 23½.

| | |
|---|---|
| स्नानं | ஸ்நாநம் |
| शौचं | சுத்தம் |
| क्रतुः | ஈச்வரபூஜை |
| सत्यं | ஸத்யம் |
| जपः | ஜபம் |
| होमः च | ஹோமம் |
| तर्पणं | தர்ப்பணம் |
| तपः | தவம் |
| दानं | கொடை |
| तितिक्षा च | ஸஹித்தல் |
| नमस्कारः | நமஸ்காரம் |
| प्रदक्षिणं | ப்ரதக்ஷிணம் |
| व्रतोपवासाद्याः | வ்ரதம் உபவாஸம் முதலியன வும் |
| अन्ये च | பிறவும் |
| कायिकाः | உடம்பினுல் செய்யப்படும் |
| नियमाः | நியமங்களாக |
| स्मृताः | கருதப்பட்டுள்ளன. |

24, 25, 25½.

| | |
|---|---|
| स्वस्तिकं | ஸ்வஸ்திகமும் |
| गोमुखं | கோமுகமும் |
| पद्मं | பத்மமும் |
| हम्साख्यं | ஹம்ஸம் என்னும் பெயருடைய |
| (आसनं च) | (ஆஸநமும்) |
| ब्राह्मं | ப்ராஹ்மமான |
| आसनं | ஆஸநம் |
| (स्यात्) | (ஆகும்.) |
| नृसिंहं | ந்ருஸிம்ஹமும் |
| गरुडं | கருடமும் |

| | |
|---|---|
| कूर्मं | கூர்மமும் |
| नागाख्यं | நாகம் என்னும் பெயருடைய |
| (आसनं च) | (ஆஸநமும்) |
| वैष्णवासनं | வைஷ்ணவமான ஆஸநம் |
| (स्यात्) | (ஆகும்) |
| वीरं | வீரமும் |
| मयूरं | மயூரமும் |
| वज्राख्यं | வஜ்ரம் என்னும் பெயருடைய |
| (आसनं) | (ஆஸநமும்) |
| सिद्धाख्यं | ஸித்தம் என்னும் பெயருடைய |
| (आसनं च) | (ஆஸநமும்) |
| रौद्र | ரௌத்ரமான |
| आसन | ஆஸநம் |
| (स्यात्) | (ஆகும்.) |
| (योगिनः) | (யோகிகள்) |
| (योन्यासनं) | யோநி என்னும் ஆஸநத்தை |
| शाक्तं | சாக்தமான (ஆஸநமாகவும்) |
| पश्चिमदानकं | பச்சிமதாநகம் (என்னும் ஆஸநத்தை |
| शैवं | சைவமான (ஆஸநமாகவும்) |
| विदुः | அறிகிருர்கள். |

26.

| | |
|---|---|
| निरालम्बनयोगस्य | நிராலம்பநயோகத்திற்கு |
| निरालम्बनं | நிராலாம்பநம் என்னும் |
| आसनं | ஆஸநம் |
| स्यात् | (ஆகும்.) |

23, 23½.

| | |
|---|---|
| स्नानं | ஸ்நாநம் |
| शौचं | சுத்தம் |
| क्रतुः | ஈச்வரபூஜை |
| सत्यं | ஸத்யம் |
| जपः | ஜபம் |
| होमः च | ஹோமம் |
| तर्पणं | தர்ப்பணம் |
| तपः | தவம் |
| दानं | கொடை |
| तितिक्षा च | ஸஹித்தல் |
| नमस्कारः | நமஸ்காரம் |
| प्रदक्षिणं | ப்ரதக்ஷிணம் |
| व्रतोपवासाद्याः | வ்ரதம் உபவாஸம் முதலியன வும் |
| अन्ये च | பிறவும் |
| कायिकाः | உடம்பினால் செய்யப்படும் |
| नियमाः | நியமங்களாக |
| स्मृताः | கருதப்பட்டுள்ளன. |

24, 25, 25½.

| | |
|---|---|
| स्वस्तिकं | ஸ்வஸ்திகமும் |
| गोमुखं | கோமுகமும் |
| पद्मं | பத்மமும் |
| हम्साख्यं | ஹம்ஸம் என்னும் பெயருடைய |
| (आसनं च) | (ஆஸநமும்) |
| ब्राह्मं | ப்ராஹ்மமான |
| आसनं | ஆஸநம் |
| (स्यात्) | (ஆகும்.) |
| नृसिंहं | ந்ருஸிம்ஹமும் |
| गरुडं | கருடமும் |

| | |
|---|---|
| कूर्मं | கூர்மமும் |
| नागाख्यं | நாகம் என்னும் பெயருடைய |
| (आसनं च) | (ஆஸநமும்) |
| वैष्णवासनं | வைஷ்ணவமான ஆஸநம் |
| (स्यात्) | (ஆகும்) |
| वीरं | வீரமும் |
| मयूरं | மயூரமும் |
| वज्राख्यं | வஜ்ரம் என்னும் பெயருடைய |
| (आसनं) | (ஆஸநமும்) |
| सिद्धाख्यं | ஸித்தம் என்னும் பெயருடைய |
| (आसनं च) | (ஆஸநமும்) |
| रौद्र | ரௌத்ரமான |
| आसन | ஆஸநம் |
| (स्यात्) | (ஆகும்.) |
| (योगिनः) | (யோகிகள்) |
| (योन्यासनं) | யோநி என்னும் ஆஸநத்தை |
| शाक्तं | சாக்தமான (ஆஸநமாகவும்) |
| पश्चिमदानकं | பச்சிமதாநகம் (என்னும் ஆஸநத்தை |
| शैवं | சைவமான (ஆஸநமாகவும்) |
| विदुः | அறிகிறார்கள். |

26.

| | |
|---|---|
| निरालम्बनयोगस्य | நிராலம்பநயோகத்திற்கு |
| निरालम्बनं | நிராலாம்பநம் என்னும் |
| आसनं | ஆஸநம் |
| स्यात् | (ஆகும்.) |

26½.

| | |
|---|---|
| निरालम्बतया | நிராலம்பமாக |
| ध्यानं | தியானித்தல் |
| (स्यात्) | (ஆகும்.) |
| निरालम्बः | நிராலம்பன் |
| सदाशिवः | ஸதாசிவன் |
| (स्यात् ) | (ஆவான்.) |

27.

| | |
|---|---|
| प्राणसम्यमः | ப்ராணயாமம் |
| रेचकः | ரேசகமாகவும் |
| पूरकः | பூரகமாகவும் |
| कुंभकः च एव | கும்பகமாகவும் |
| (भवति) | (இருக்கின்றது.) |

28.

| | |
|---|---|
| प्रत्याहारार्थवेदिभिः | ப்ரத்யாஹாரப்பொருளை உணர்ந்தவராலே |
| समस्तानां | எல்லா |
| इन्द्रियाणां | இந்திரியங்களையும் |
| विषयेभ्यः | விஷயங்களினின்று |
| निवारणं | விலக்குதல் |
| प्रत्याहारः | ப்ராத்யாஹாரம் |
| इति | என்று |
| प्रोक्तं | சொல்லப்பட்டிருக்கின்றது. |

28½.

| | |
|---|---|
| क्व अपि | ஒரு |
| आधारे | ஆதாரத்திலே |
| मनसः | மனத்தை |
| स्थापनं | நிறுத்துதல் |

| | |
|---|---|
| धारणा | தாரணையாக |
| (योगिभिः) | (யோகிகளாலே) |
| उच्यते | சொல்லப்படுகின்றது. |

---

29.

| | |
|---|---|
| (योगिनः) | (யோகிகள்) |
| ब्रह्मविष्णुशिवादीन | ப்ரஹ்மா விஷ்ணு சிவன் முதலானோர்களை |
| चिन्ता | சிந்தித்தல் |
| ध्यानं | தியானம் |
| (स्यात्) | (ஆகும்) |
| (इति) | (என்று) |
| प्रचक्षते | கூறுகிறார்கள். |

---

29½.

| | |
|---|---|
| ध्यानात् | தியானத்தினின்று |
| बुद्धेः | புத்தி |
| अस्पन्दनं | அசையாமையானது |
| समाधिः | ஸமாதி |
| (स्यात्) | (ஆகும்) |
| (इति) | (என்று) |
| (योगिभिः) | (யோகிகளால்) |
| अभिधीयते | கூறப்படுகின்றது. |

---

30.

| | |
|---|---|
| अमनस्कसमाधिः तु | அமநஸ்கஸமாதியோ |
| सर्वचिन्ताविवर्जितं | எண்ணமெல்லாம் ஒழிந்ததாய் |
| (भवति) | (உள்ளது, |

---

31.

| | |
|---|---|
| चित्ते | மனம் |
| निश्चलतां | அசையாமையை |
| याते | அடைய |
| प्राणः | ப்ராணன் |
| निश्चलः | அசையாததாய் |
| भवति | ஆகின்றது. |
| (योगी) | (யோகியாவான்) |
| चित्तस्य | மனம் |
| निश्चलत्वाय | அசையாமைக்காக |
| योगं | யோகத்தை |
| सध्यानं | தியானத்தோடுகூட |
| अभ्यसेत् | அப்யஸிக்கவேண்டும். |

32.

| | |
|---|---|
| अपानस्य | அபானனை |
| आकुञ्चनं | சுருக்குதலும் |
| प्राणस्य | ப்ராணனை |
| निरोधनं | அடக்குதலும் |
| लम्बिकोपरि | உள்நாக்கின்மேல் |
| जिह्वायाः | நாக்கை |
| स्थापनं च | நிறுத்துதலும் |
| योगसाधनं | யோகத்திற்கு வழி |
| (स्यात्) | (ஆகும்.) |

33.

| | |
|---|---|
| चित्ते | மனம் |
| निश्चलतां | அசையாதிருத்தலை |
| याते | அடைய |

| | |
|---|---|
| प्राणे | ப்ராணன் |
| मध्यपथं | நடுவழியை |
| गते | அடைய |
| पृथक् | தனித்தனியாக |
| पञ्चभूतजयात् | ஐந்து பூதங்களையும் வெல்வதனால் |
| एतानि | இந்த |
| चिह्नानि | அடையாளங்கள் |
| जायन्ते | உண்டாகின்றன. |

34.

| | |
|---|---|
| मलमूत्रकफाल्पत्वं | மலம் மூத்திரம் கோழை அற்பமாதலும் |
| तनोः | உடம்பிற்கு |
| आरोग्यं | நோயின்மையும் |
| लघुता | லகுத்தன்மையும் |
| सुगन्धस्वरवर्णत्वं | நல்ல மணம் நல்ல குரல் நல்ல நிறம் என்றவற்றை யுடைமையும் |
| प्रथमं | முதலாவது |
| योगलक्षणं | யோகஅடையாளம் |
| (स्यात्) | (ஆகும்.) |

35.

| | |
|---|---|
| कण्टकाग्रेषु | முள் நுனிகளிலே |
| असङ्गत्वं | ஒட்டாமையும் |
| जलपङ्केषु | நீரிலும், சேற்றிலும் |
| अमज्जनं | அமுங்காமையும் |
| क्षुत्तृडादि- | பசி தாகம் முதலியவற்றைத் |
| सहिष्णुत्वं | தாங்கும் தன்மையுடைமையும் |

द्वितीयं — இரண்டாவது
योगलक्षणं — யோகஅடையாளம்
(स्यात्) — (ஆகும்.)

---

36.

बह्वन्नपानभोक्तृत्वं — அதிக உணவையும், அதிக பானத்தையும் உட்கொள்ளுவோனாதலும்
आतपादिसहिष्णुता — வெயில் முதலியவற்றைத் தாங்கும் தன்மையனாதலும்
दूरात् — தூரத்திலிருந்து
दर्शनं — பார்த்தலும்
श्रवणं — கேட்டலும்
तृतीयं — மூன்றாவது
योगलक्षणं — யோகஅடையாளம்
(स्यात्) — (ஆகும்.)

---

37.

भूमौ — பூமியின் மீது
मण्डूकप्लवनं — தவளைபோலக் குதித்தலும்
द्रुमे — மரத்தின்மீது
मर्कटप्लवनं — குரங்கு போலத் தாவுதலும்
आकाशगमनं च इति — ஆகாசத்திலே செல்லுதலும் என்பன
चतुर्थं — நாலாவது
योगलक्षणं — யோகஅடையாளம்
(स्यात्) — (ஆகும்.)

---

38.

त्रिकालविषयं — மூன்று காலத்தைப்பற்றிய
ज्ञानं — அறிவும்

| | |
|---|---|
| अणिमादिकं | அணிமா முதலிய |
| ऐश्वर्यं | ஈச்வரத்தன்மையும் |
| अनन्तशक्तिमत्त्वं च | முடிவில்லா வல்லமை யுடைமையும் |
| पञ्चमं | ஐந்தாவது |
| योगलक्षणं | யோகஅடையாளம் |
| (स्यात्) | (ஆகும்.) |

39.

| | |
|---|---|
| प्राणे | ப்ராணன் |
| सुषुम्नां | ஸுஷும்நையை |
| संप्राप्ते | அடைந்தபொழுது |
| अन्तः | உள்ளே |
| नादः | ஓசையானது |
| घण्टादुन्दुभिशङ्खाब्धि- वीणावेण्वादितालवत् | மணி, முரசு, சங்கு, கடல், வீணை, புல்லாங்குழல் முதலியன போலவும் தாளம்போலவும் |
| अष्टधा | எட்டுவிதமாக |
| श्रूयते | கேட்கப்படுகின்றது. |

40

| | |
|---|---|
| प्राणे | ப்ராணன் |
| ब्रह्मनाडीं | ஸுஷும்நையை |
| गते | அடைந்தபொழுது |
| बिम्बरूपं | ஈச்வரவடிவமானது |
| तनूनपात्तटि- त्तारातारेश- | நெருப்பு, மின்னல், நக்ஷத்திரம், நக்ஷத்திரங்கட்குத் தலைவன், |
| तपनोपमं | சூரியன் என்றவற்றை உபமையாகக் கொண்டதாய் |
| प्रकाशते | விளங்குகின்றது. |

41.

| | |
|---|---|
| मनुष्यस्य | மனிதனுக்கு |
| दिनंप्रति | நாள்தோறும் |
| यावन्तः | எத்தனை |
| श्वासाः | சுவாஸங்கள் |
| चरन्ति | செல்லுகின்றனவோ |
| तावन्ति | அத்தனை |
| योजनानि | யோஜநங்கள் |
| श्वासे श्वासे | ஒரோர் சுவாஸத்திலும் |
| अर्कः | சூரியன் |
| प्रधावति | ஓடுகின்றான். |

42.

| | |
|---|---|
| एकविंशतिसाहस्रं | இருபத்தோராயிரத்து |
| षट्छतं | அறுநூறு |
| श्वाससङ्ख्या | சுவாஸக்கணக்கின்படி |
| आत्मा | ஆத்மாவானது |
| सोऽहं | "ஸோஹம்" |
| इति | என்னும் |
| मन्त्रं | மந்திரத்தை |
| आयुषे | ஆயுளுக்காக |
| प्रत्यहं | தினந்தோறும் |
| उच्चरति | உச்சரிக்கின்றது. |

43.

| | |
|---|---|
| (बुद्धिमान्) | (அறிவுடையோன்) |
| सकारं च | ஸகாரத்தையும் |
| हकारं च | ஹகாரத்தையும் |
| लोपयित्वा | தள்ளி |
| पूर्वरूपाख्यं | பூர்வருபம் என்னும் பெயருடைய |

| | |
|---|---|
| सन्धिं वै | புணர்ச்சியையே |
| प्रयोजयेत् | வழங்கவேண்டும். |
| ततः | பின்பு |
| असौ | அது |
| प्रणवः | ஓங்காரம் |
| भवेत् | ஆகும். |

44.

| | |
|---|---|
| पण्डिताः | ஞாநிகள் |
| अकारः च | அகாரமும் |
| उकारः च | உகாரமும் |
| मकारः | மகாரமும் |
| बिन्दुनादकौ अपि | பிந்துவும் நாதமுமாகிய |
| अमूनि | இந்த |
| पञ्चाक्षराणि | ஐந்து அக்ஷரங்களும் |
| प्रणवस्थानि | ப்ரணவத்தில் உள்ளன |
| इति | (என்று) |
| आहुः | சொல்லுகிருர்கள். |

45.

| | |
|---|---|
| ब्रह्मा | ப்ரஹ்மாவும் |
| विष्णुः च | விஷ்ணுவும் |
| रुद्रः च | ருத்ரனும் |
| ईश्वरः अपि | ஈச்வரனும் |
| सदाशिवः च | ஸதாசிவனும் |
| षट्त्रिंशत्तत्त्वसंयुताः | முப்பத்தாறு தத்துவங்களை யுடையவராய் |
| तेषु | அந்த |
| अक्षरेषु | அக்ஷரங்களில் |
| तिष्ठन्ति | இருக்கிருர்கள். |

46.

| | |
|---|---|
| (उपासकः) | (உபாஸகன்) |
| अष्टाङ्गलक्षणं | அஷ்டாங்கமாகிய |
| योगं | யோகத்தை |
| गुरुप्रसादात् | குருவின் அருளினாலே |
| लभते | அடைகிறான் ; |
| शाश्वतीं | சாச்வதமான |
| योगसिद्धिं च | யோகஸித்தியையும் |
| शिवप्रसादात् | சிவனுடைய அருளினாலே |
| लभते | அடைகிறான். |

47.

| | |
|---|---|
| सच्चिदानन्दरूपाय | உண்மையும், அறிவும், ஆநந்தமுமான வடிவினராய் |
| बिन्दुनादान्तरात्मने | பிந்துநாதங்களுடைய உள்ளேயுள்ள ஆத்மாவாய் |
| आदिमध्यान्तशून्याय | முதல் நடு முடிவு இல்லாத |
| गुरूणां | குருக்களுடைய |
| गुरवे | குருவிற்கு |
| नमः | நமஸ்காரம். |

48.

| | |
|---|---|
| श्रीदक्षिणामूर्तिस्तोत्र | ஸ்ரீ தக்ஷிணமூர்த்தியினுடைய ஸ்தோத்திரத்தின் |
| अर्थप्रतिपादके | பொருளை உணர்த்துகின்ற |
| मानसोल्लासे | மாநஸோல்லாஸம் என்னும் |
| प्रबन्धे | நூலினுள் |
| नवमोल्लास- | ஒன்பதாம் உல்லாஸத்தின் |
| संग्रहः | பொழிப்புரை |
| इति | முற்றும். |

अथ

# ॥ दशमोल्लासः ॥

1.

परिच्छिन्नमहम्भावं परित्यज्यानुषङ्गिकम् ।
पूर्णाहम्भावलाभोऽस्य स्तोत्रस्य फलमुच्यते ॥

## பத்தாம் உல்லாஸம்.

ஆத்மாவாகிய பரம்பொருளை நேரே கண்டுதேறுதற்கான வழிகள் சென்ற ஒன்பதாம் உல்லாஸத்தினுள் அந்தந்த அதிகாரிக்குத் தக்கவாறு உரைக்கப்பட்டன. இப்பொழுது, இந்த ஸ்தோத்திரத்தைப் படித்தல் முதலியவற்றிலே தலைப்படுவோர்க்கு வரும் பயன்களைக் கூறுபவராய் இந்நூலை முடிக்கின்றார்:

### இந்த ஸ்தோத்திரத்தின் பயன்.

1.

தொடர்பினாலாகி அளவுபட்டு நிற்கும் நான்என்னும் நிலையைத் தள்ளி பூர்ணமான நான் என்னும் நிலையைப் பெறுதலானது இந்த ஸ்தோத்திரத்தின் பயனாகக் கூறப்படுகின்றது.

தொடர்பினாலாகி - உடம்பு முதலியவற்றிலேயுள்ள அபிமானத் தொடர்பினால் வந்த. (1)

10. सर्वात्मत्वमिति स्फुटीकृतमिदं यस्मादमुष्मिन्स्तवे
तेनास्य श्रवणात् तथाऽर्थमननात् ध्यानाच्च सङ्कीर्तनात् ।
सर्वात्मत्वमहाविभूतिसहितं स्यादीश्वरत्वं स्वतः
सिध्येत्तत्पुनरष्टधा परिणतं चैश्वर्यमव्याहतम् ॥

इति श्रीमच्छङ्करभगवत्पादाचार्यविरचितं
श्रीदक्षिणामूर्तिस्तोत्रं समाप्तम् ॥

---

1. ஸர்வாத்மாவாதலானது இந்த ஸ்தோத்திரத்தினுள்ளே இவ்வாறுநேரே தெளிவாகத் தெரிவிக்கப்பட்டது. ஆகவே, ஸர்வாத்மாவாதல் என்னும் பெரிய பெருமை பொருந்திய ஈச்வரநிலையானது இதனைக் கேட்டலாலும் அப்படியே பொருளைச் சிந்தித்தலாலும் தெளிதலாலும் சொல்லுதலாலும் தானே ஆகும்; மீண்டும், அந்த எட்டுவிதமாய்த் திரிந்த தடையுறாத ஐச்வர்யமும் அமையும்.

ஸ்ரீமத் சங்கரபகவத்பாத ஆசார்யரால் அருளிச்செய்யப்பட்ட
ஸ்ரீதக்ஷிணாமூர்த்திஸ்தோத்திரம் முற்றும்.

பெரிய பெருமையாவது காலம்முதலியவற்றால் வரையறவுபடாத மேம்பாடு அணிமாதிஸித்திகளோ அவற்றால் வரையறவுபடுதலின் ஸர்வாத்மாவாதலை நோக்க சிறிய பெருமையாம் என்க. கேட்டலாலும் - குருவினிடத்தினின்று அர்த்தத்தோடு அறிதலாலும். அப்படியே பொருளைச் சிந்தித்தாலும் - எப்படிக் கேட்கப்பட்டதோ அப்படியே [கேட்டபடியே] பொருளை ஆலோசித்து யுக்தியொடு நிலைபெறுத்திக்கொள்ளுதலாலும். தெளிதலாலும் - கேட்டுச் சிந்தித்து நிர்ணயித்து வைக்கப்பட்ட பொருளையே இடையறாது பாவித்தலாலும், சொல்லுதலாலும் - அர்த்தஞானமின்றிப் படித்தல்மாத்திரத்தினாலும்; அல்லது, பிறர்க்கு நன்கு உரைப்பதனாலும் என்க. முயற்சியினாலாவதற்கு அநித்யஇயல்பு அவச்யம் நிகழுமாதலால் "தானே ஆகும்" என்றார். எட்டுவிதமாய் - அணிமா மஹிமா கரிமா முதலாக.

இம்மைமறுமைச்செல்வத்தையேனும் மோக்ஷத்தையேனும் வேண்டுவோர் இந்த ஸ்ரீதக்ஷிணாமூர்த்திஸ்தோத்திரத்தை அர்த்தத்தொடு படித்து அதற்குத் தக நிற்கவேண்டும் என்பது பொருள்.

इदमत्राकूतम्—

2.

पुत्रपौत्रगृहक्षेत्रधनधान्यसमृद्धयः ।
अर्वाचीनाश्च सिद्ध्यन्ति स्वर्गपातालभूमिषु ॥

3.

पाके प्रवर्तमानस्य शीतादिपरिहारवत् ।
प्रासङ्गिकाश्च सिद्ध्यन्ति स्तोत्रेणानेन सर्वदा ॥

---

இங்கு இது உட்கருத்து:—

யாவற்றினும் மேலான பயன்.

2.

வேண்டுவனஎல்லாமே இந்த ஸ்தோத்திரத்தினின்று அடையப்படுகின்றன. என்றாலும், விவேகியாவான் அற்பலாபத்திற்காக இதனை உபயோகித்தல் வேண்டாம்; மற்று, மஹேச்வரநிலையான மஹாலாபத்திற்கே வேண்டும். வேண்டவே, அந்த லாபம் கைகூடியவழி கீழ்மையான பல பயன்கள் அதனது மஹிமையினாலேயே இடையே நிகழ்கின்றன என்னும் உட்கருத்தோடு இந்த இரண்டு ச்லோகங்களையும் அருளிச்செய்கிறார்:

மக்கள் மக்களின் மக்கள் என்றவர்களின் நிறைவும் வீடுகள் நிலங்கள் பொருள்கள் தான்யங்கள் என்றவற்றின் நிறைவுமாகிய கீழ்மையான பயன்களும் ஸ்வர்க்கத்திலும், பாதாலத்திலும், பூமியிலும் அமைகின்றன.

பலவகைப்பட்ட கீழ்மையான பயன்களெல்லாம் ஸ்வர்க்கத்திலாயினும் பாதாலத்திலாயினும் இவ்வுலகத்திலாயினும் அவ்வற்றிற்கு உரிய காலத்து உண்டாகின்றன என்பது பொருள்.

3.

எண்ணாத பயனும் அங்ஙனம் ஒட்டினால் அமைதலை திருஷ்டாந்தத்தினால் நிரூபிக்கிறார்:

சமையலிலே தலைப்படுவோனுக்குக் குளிர் முதலியன நீங்குதல் போல, இடையிலுள்ள (பயன்களும்) இந்த ஸ்தோத்திரத்தினாலே எப்பொழுதும் அமைகின்றன.

4.

ऐश्वर्यमीश्वरत्वं हि तस्य नास्ति पृथक्स्थितिः ।
पुरुषे धावमानेऽपि छाया तमनुधावति ॥

5.

अनन्तशक्तिरैश्वर्यं निष्यन्दाश्चाणिमादयः ।
स्वस्येश्वरत्वे सम्सिद्धे सिद्ध्यन्ति स्वयमेव हि ॥

---

4.

ஈச்வரநிலையை இன்னதென விவரிக்கிறார் :

ஈச்வரநிலையென்பது ஈச்வரனது ஸ்வரூபமேயாம். அதனது இருப்பு (ஈச்வரனுக்கு) வேறாய் இல்லை. (எங்ஙனமெனில்,—) மனிதன் ஓடுமளவிலேயும் அவனைத் தொடர்ந்து நிழல் ஓடுகின்றதன்றோ.

5.

எல்லையில்லா வல்லமை (எதுவோ, அது ஈச்வரநிலை என்னும்) ஐச்வர்யமாம். அணிமாதிகளோ (அதனது) திவலைகளாம். தனக்கு ஈச்வரநிலை நன்கு கைகூடியவழி, (அவை) தாமே அமைகின்றன.

எது நிழல்போல ஈச்வரனை விட்டு ஒருபொழுதும் நீங்காததாய் வாக்குமனங்கட்கு எட்டாததாய் ஏற்றக்குறைவில்லதாய் ஸஹஜமான ஸாமர்த்தியமோ, அது ஐச்வர்யம் என்க. அணிமாதிஸித்திகளோ அளவுபட்டனவாதலால், அந்த ஈச்வர சக்தியினுடைய திவலைகளாம் : அவ்வண்ணமே,

"एतस्यैवानन्दस्यान्यानि भूतानि मात्रामुपजीवन्ति"

"மற்றை ப்ராணிகள் இதே ஆநந்தத்தினுடைய திவலையை அடுத்து வாழ்கின்றன"—(ப்ரு-6-3-32)

எனச் சுருதி கூறுகின்றது. ஆகவே, இந்த ஸ்தோத்திரத்தை ஈச்வரநிலை கைகூடுதற்கேயன்றி அணிமாதிகைகூடுதற்கு உபயோகித்த லாகாது ; "நெல்லுக்கு இறைத்த நீர் வாய்க்கால் வழி ஓடிப் புல்லுக்குமாங்கே புசியுமா" றுபோல, இடையே அணிமாதி அமையுமாதலின். என்பது பொருள். (5)

6.

यदीयैश्वर्य विप्रुड्भिः ब्रह्मविष्णुशिवादयः ।
ऐश्वर्यवन्तो भासन्ते स एवात्मा सदाशिवः ॥

7.

पुष्पमानयता गन्धः विनेच्छामनुभूयते ।
पूर्णाहम्भावयुक्तेन परिच्छिन्ना विभूतयः ॥

8.

अणिमा महिमा चैव लघिमा गरिमा तथा ।
प्राप्तिः प्राकाम्यमीशित्वं वशित्वं चाष्टसिद्धयः ॥

---

6.

அன்றியும்,

ப்ரஹ்மா விஷ்ணு சிவன் முதலாயினோர் எவனுடைய ஐச்வர்யத் திவலைகளால் ஐச்வர்யமுடையவராய் விளங்குகின்றனரோ, அந்த ஸதாசிவனே ஆத்மாவாம்.

7.

ஆகவே, ப்ரஹ்மா முதலானோருடைய ஐச்வர்யமும் பொருளின் மாட்சிமையினாலேயே அமைகின்றது. என்பதைத் திருஷ்டாந்தத்தால் விளக்குகிறார்:

பூவைக் கொணர்கிறவனாலே நாற்றமானது வேண்டுதலில்லாது அநுபவிக்கப்படுகின்றது. (அதுபோலவே,) பூர்ணமான நான் என்னும் நிலையைப் பொருந்தியவனால் (ப்ரஹ்மாதிபருடைய) அளவுபட்ட ஐச்வர்யங்கள் அநுபவிக்கப்படுகின்றன.

எனவே, பூர்ண ஆத்மாவான ஸதாசிவன் என்னும் ப்ரஹ்மஸ்வரூபத்தையே பாவித்தல் வேண்டும்; ப்ரஹ்மாமுதலானோர்களை அன்று என்பதாயிற்று. (7)

எட்டு ஸித்திகள்.

இனி "எட்டுவிதமாய்த் திரிந்த. . .ஐச்வர்யமும்" என மூலச்லோகத்தினுள் குறிக்கப்பட்ட அணிமாமுதலான ஐச்வர்யங்களைப் பகுத்துக்காட்டத் தொடங்குகிறார்;

8.

அணிமா, மஹிமா. லகிமா, கரிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம் (அல்லது ப்ராகாச்யம்), ஈசித்வம், வசித்வம் (என்றஇவை)எட்டு ஸித்திகளாம்.

9.

अत्यन्तमणुषु प्राणिष्वात्मत्वेन प्रवेशनम् ।
अणिमासञ्ज्ञमैश्वर्यं व्याप्तस्य परमात्मनः ॥

10.

ब्रह्माण्डादिशिवान्तायाः षट्त्रिम्शत्तत्वसम्हतेः ।
बहिश्च व्याप्य वृत्तित्वं ऐश्वर्यं महिमाह्वयम् ॥

11.

महामेरुसमाङ्गस्य समुद्धरणकर्मणि ।
योगिनस्तूलतुल्यत्वं लघिमानं विदुर्बुधाः ॥

---

அணிமா என்னும் ஸித்தியைக் கூறுகிறார்:

9.

வியாபகமான பரமாத்மாவானது மிக நுண்மையான ப்ராணிகளுள்ளும் ஆத்மாவாகப் புகுதல் (எதுவோ, அது) அணிமா என்னும் பெயருடைய ஐச்வர்யமாம்.

10.

மஹிமா என்னும் ஸித்தியைக் கூறுகிறார்:

ப்ரஹ்மாண்டம் முதலாக சிவனீறாகவுள்ள முப்பத்தாறு தத்துவங்களின் சேர்க்கையானது வெளியிலே வியாபித்து நிற்றல்(எதுவோ, அது) மஹிமா என்னும் பெயருடைய ஐச்வர்யமாம்.

சிவன் - இங்கு, விராட்சரீரத்திலே வெளிப்பட்ட புருஷன். (10)

11.

லகிமா என்னும் ஸித்தியைக் கூறுகிறார்:

மஹாமேருவை ஒத்துநிற்கும் அவயவங்களையுடைய [இச்சையினால் உடம்பைப் பருக்கச்செய்துகொண்ட] யோகியானவன் (தன்னைப்பிறர்) தூக்குதலாகிய தொழிலிலே பஞ்சுக்கு ஸமமாதல் (எதுவோ, அதனை) அறிஞர்கள் லகிமாவாக அறிகிறார்கள்.

கரிமா என்னும் ஸித்தியைக் கூறுகிறார்:

12.

परमाणुसमाङ्गस्य समुद्धरणकर्मणि ।
योगिनोमेरुतुल्यत्वं गरिमाणं विदुर्बुधाः ॥

13.

पातालवासिनः पुम्सः ब्रह्मलोकावलोकनम् ।
प्राप्तिर्नाम महैश्वर्यं सुदुष्प्रापमयोगिनाम् ॥

14.

आकाशगमनादीनां अन्यासां सिद्धिसम्पदाम् ।
श्वेच्छामात्रेण सम्सिद्धिः प्राकाम्यमभिधीयते ॥

15.

स्वशरीरप्रकाशेन सर्वार्थानां प्रकाशनम् ।
प्राकाश्यमिदमैश्वर्यं इति केचित् प्रचक्षते ॥

---

12.

பரமாணுவை நிகர்த்து நிற்கும் அவயவங்களையுடைய யோகியானவன் (தன்னைப் பிறர்) தூக்குதலாகிய தொழிலிலே மேருவிற்கு ஸமமாதல் (எதுவோ அதனை) அறிஞர்கள் கரிமாவாக அறிகிருர்கள்.

13.

ப்ராப்தி என்னும் ஸித்தியைக் கூறுகிருர்:

பாதாலத்திலே வஸிக்கும் புருஷனுனவன் ப்ரஹ்மலோகத்தைப்பார்த்தல் (எதுவோ, அது) ப்ராப்தி என்னும் பெயருடைய பெரியஐச்வர்யமாம், யோகியல்லாதோர் அடைதற்கு மிக்க அரியது.

14.

ப்ராகாம்யம் என்னும் ஸித்தியைக் கூறுகிருர்:

ஆகாசத்திற் செல்லுதல் முதலியனவும் மற்றைய ஸித்திச்செல்வங்களும் தன் இச்சைமாத்திரத்தால் நன்கு கைகூடுதல் (எதுவோ அது) ப்ராகாம்யமாகச் சொல்லப்படுகின்றது.

15.

ப்ராகாச்யம் என்னும் ஸித்தியைக் கூறுகிருர்.

தன்[யோகியின்] உடம்பின் விளக்கதினுலே எல்லாப்பொருள்களும் விளங்குதல் (எதுவோ, அந்த) இவ்வைச்வர்யத்தை ப்ராகாச்யம் என்று சிலர் கூறுகிருர்கள்.

16.

स्वेच्छामात्रेण लोकानां सृष्टिस्थित्यन्तकर्तृता ।
सूर्यादीनां नियोक्तृत्वं ईशित्वमभिधीयते ॥

17.

सलोकपालाः सर्वेऽपि लोकाः स्ववशवर्तिनः ।
तदैश्वर्यं वशित्वाख्यं सुलभं शिवयोगिनाम् ॥

18.

"यस्त्वेवं ब्राह्मणो वेत्ति तस्य देवा वशे स्थिताः ।"
किं पुनः क्ष्मापतिव्याघ्रव्यालस्त्रीपुरुषादयः ॥

---

16.

ஈசித்வம் என்னும் ஸித்தியைக் கூறுகிருர்:

தன் இச்சைமாத்திரத்தால் உலகங்களைப் படைத்தல் நிலைபெறுத்தல் அழித்தல் என்றவற்றைச் செய்பவனுதலும் சூரியன்முதலானோரை நியமிப்பவனுதலும் (எதுவோ, அது) ஈசித்வமாகச் சொல்லப்படுகிறது.

ப்ரஹ் - 4 - 4 - 17 ஆம் நியாயப்படி வித்வானுக்கு உலகவிஷயத்திலே ஸ்வாதந்திரியம் விலக்கப்பட்டதாயினும், விச்வாமித்ராதியர்போல ப்ரஹ்மாண்டத்தினுள்ளேயே குளம் கிணறு பட்டணம் சோலை மலை முதலியவற்றைப் படைத்தலும் பிறவும் செய்தலாகும் என்பது சொல்லுவோன் குறிப்பு. (16)

17.

வசித்வம் என்னும் ஸித்தியைக் கூறுகிருர்:

எல்லா லோகங்களும் லோகபாலர்களும் தன்வசத்திலே இருப்பவராதல் எதுவோ அது வசித்வம் என்னும் பெயருடைய ஐச்வர்யமாம்; சிவயோகிகட்கு எளிதே அடையத்தக்கது.

ஸர்வாத்மபாவனையின் மஹிமை.

18.

இதற்கு ப்ரமாணமாக ;தைத்திரீயஆரண்யகத்தை (3-13) எடுத்துரைக்கின்ருர் ;

" எந்த ப்ராஹ்மணன் இவ்வாறு அறிகின்ருனே, அவனது வசத்திலே தேவர்கள் இருக்கிருர்கள் " அரசன் புலி, பாம்பு, பெண், ஆண் முதலானோர் மற்று என்ன? [இவரும் அவனுக்கு வசப்பட்டவ ரெனக் கூறவும் வேண்டுமோ ?—இல்லை.]

19.

सर्वात्मभावसाम्राज्यनिरन्तरितचेतसाम् ।
परिपक्वसमाधीनां किं किं नाम न सिद्ध्यति ॥

20.

स्तोत्रमेतत्पठेद्धीमान् सर्वात्मत्वं च भावयेत् ।
अर्वाचीने स्पृहां मुक्त्वा फले स्वर्गादिसम्भवे ॥

21.

स्वर्गादिराज्यं साम्राज्यं मनुते न हि पण्डितः ।
तदेव तस्य साम्राज्यं यत्तु स्वाराज्यमात्मनि ॥

---

19.

ஸர்வாத்மநிலையாகிய ஸாம்ராஜ்யத்திலே இடையறுத மனத்தினராய் ஸமாதிகனிந்தோர்க்கு எதெதுதான் கைகூடாது ?

ஸர்வாத்மபாவனையின் மஹிமையினுல் ஐச்வர்யத்தைக் கணக்கிடுதல் முடியாது. ஆகவே, எதெது வேண்டப்பட்டதோ அஃதெல்லாம் வரவேவரும் என்பது கருத்து. (19)

20.

இந்த ஸ்தோத்திரத்தின் மஹிமையே இப்படிப்பட்டது. என்ருலும், அந்த இடையிலேவரும் பயன்களைக் கருதுதல் கூடாது என இதனைப் படிப்போருக்கு ஹிதத்தை உபதேசித்தருளுகிருர்:

அறிவுடையோன் இந்த ஸ்தோத்திரத்தைப் படிக்கவேண்டும்; அன்றியும், ஸ்வர்க்கம் முதலியவற்றினின்று உண்டாகும் கீழ்மையான பயனிலே அவாவை விட்டு, ஸர்வாத்மநிலையைப் பாவிக்கவேண்டும்.

21.

ஏனெனில்,—

விவேகியாவான் ஸ்வர்க்கம்முதலான ராஜ்யத்தை ஸாம்ராஜ்யமாக மதிக்கிருனில்லையன்ரே. ஆனல், எது ஆத்மாவினிடத்துத் தன் அரசோ அதுவே அவனுக்கு ஸாம்ராஜ்யமாம்.

வினு:—விவேகியாவான் ஸ்வர்க்கம்முதலான ராஜ்யத்தை ஏன் ஸாம்ராஜ்யமாக மதிக்கிருனில்லை ? எனில்,—

விடை:—கூறுவோம் :

22.

सर्वात्मभावनावन्तं सेवन्ते सर्वसिद्धयः ।
तस्मादात्मनि साम्राज्यं कुर्यान्नियतमानसः ॥

23.

यस्य देवे परा भक्तिः यथा देवे तथा गुरौ ।
तस्यैते कथिताह्यर्थाः प्रकाशन्ते महात्मनः ॥

24.

प्रकाशात्मिकया शक्तया प्रकाशानां प्रभाकरः ।
प्रकाशयति यो विश्वं प्रकाशोऽयं प्रकाशताम् ॥

---

22.

எல்லா ஸித்திகளும் ஸர்வாத்மபாவனையுடையோனைத் தொழுகின்றன. ஆகவே, மனம் அடங்கியவன் ஆத்மாவினிடத்து ஸாம்ராஜ்யத்தைக் கொள்ளவேண்டும். (22)

தொழுகின்றன - அவனுக்கு வருகின்றன.

ஞானத்திற்கு ஈச்வரபக்தியும் குருபக்தியும் இன்றியமையாதவை.

23.

எவனுக்கு ஈச்வரன்மீது உயர்ந்த பக்தி உளதோ; எப்படி ஈச்வரன் மீது, அப்படி ஆசார்யன்மீது உளதோ; அந்த உயர்ந்தமனத்தினனுக்கே, உபதேசிக்கப்பட்ட இப்பொருள்கள் விளங்குகின்றன.” (ச்வே.6-23)

மங்களம்.

24.

எது ப்ரகாசவடிவிற்றான சக்தியினால் ப்ரகாசங்கட்கு ப்ரகாசத்தைச் செய்வதாய் ப்ரபஞ்சத்தை ப்ரகாசிக்கச் செய்கின்றதோ (அந்த) இப்பிரகாசம் ப்ரகாசிக்க.

ப்ரகாசங்கட்கு - சூரியன் முதலியவற்றிற்கு. (24)

25.

इति श्रीदक्षिणामूर्तिस्तोत्रार्थ प्रतिपादके ।
प्रबन्धे मानसोल्लासे दशमोल्लास संग्रहः ॥

इति मानसोल्लासो नाम श्रीदक्षिणामूर्ति-
स्तोत्रवार्तिकं श्रीसुरेश्वराचार्यकृतं समाप्तम् ॥

---

25.

இதனேடு இந்த உல்லாஸத்தை முடிக்கிருர் :

ஸ்ரீதக்ஷிணமூர்த்தி ஸ்தோத்திரத்தின் பொருளை உணர்த்துகின்ற மாநஸோல்லாஸம் என்னும் நூலினுள் பத்தாம் உல்லாஸப் பொழிப்புரை முற்றும்.

ஸ்ரீ ஸுரேச்வராசார்யரால் அருளிச்செய்யப்பட்ட மாநஸோல்லாஸம் என்னும் ஸ்ரீ தக்ஷிணமூர்த்திஸ்தோத்திரவார்த்திகம் முற்றுப் பெற்றது.

ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணமஸ்து.

ஓம் தத் ஸத்.

---

## பத்தாம் உல்லாஸம்.

---

பதவுரை.

1.

| | |
|---|---|
| आनुषङ्गिकं | தொடர்பினலாகிய |
| परिच्छिन्नं | அளவுபட்ட |
| अहम्भावं | நான் என்னும் நிலையை |
| परित्यज्य | தள்ளி |
| पूर्णाहम्भावलाभः | பூர்ணமான நான் என்னும் நிலையைப் பெறுதலானது |
| अस्य | இந்த |
| स्तोत्रस्य | ஸ்தோத்திரத்தின் |
| फलं | பயனுக |
| उच्यते | கூறப்படுகின்றது. |

---

10.

| | |
|---|---|
| यस्मात् | எதனுல் |
| सर्वात्मत्वं | ஸர்வாத்மாவாதலானது |
| अमुष्मिन् | இந்த |
| स्तवे | ஸ்தோத்திரத்தினுள்ளே |
| इति | இவ்வாறு |
| इदं | நேரே |
| स्फुटीकृतं | தெளிவாகச் செய்யப்பட்டதோ |
| तेन | அதனுல் |
| सर्वात्मत्वमहा- | ஸர்வாத்மாவாதல் என்னும் |
| विभूतिसहितं | பெரிய பெருமை பொருந்திய |
| ईश्वरत्वं | ஈச்வரநிலையானது |

| | |
|---|---|
| अस्य | இதனை |
| श्रवणात् | கேட்டலாலும் |
| तथाऽर्थमननात् | அப்படியே பொருளைச் சிந்தித்தலாலும் |
| ध्यानात् | தெளிதலாலும் |
| सङ्कीर्तनात् च | சொல்லுதலாலும் |
| स्वतः | தானே |
| स्यात् | ஆகும் ; |
| पुनः | மீண்டும் |
| तत् | அந்த |
| अष्टधा | எட்டுவிதமாய் |
| परिणतं | திரிந்த |
| अव्याहतं | தடைப்படாத |
| ऐश्वर्यं च | ஐச்வர்யமும் |
| सिद्ध्येत् | அமையும். |

| | |
|---|---|
| इदं | இது |
| अत्र | இங்கு |
| आकूतं (स्यात्) | உட்கருத்து (ஆகும்.) |

2.

| | |
|---|---|
| पुत्रपौत्र-गृहक्षेत्रधन-धान्यसमृद्धयः | மக்கள், பேரன்மார், வீடுகள், நிலங்கள், பொருள்கள் தான்யங்கள் என்றவர்களின் நிறைவுகளாகிய |
| अर्वाचीनाः (अर्थाः) च | கீழ்மையான (பயன்க)ளும் |
| स्वर्गपातालभूमिषु | ஸ்வர்க்கம் பாதாலம் பூமி என்றவற்றில் |
| सिद्ध्यन्ति | அமைகின்றன. |

